# ஆனந்தரங்கப் பிள்ளை நாட்குறிப்பு

தொகுதி பத்து

பதிப்பாசிரியர்
**இர. ஆலாலசுந்தரம்,** எம்.ஏ., பிஎச்.டி.,



புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
(புதுவை அரசு நிறுவனம்)

# ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு - தொகுதி X

வெளியீட்டு எண் : 17

முதற்பதிப்பு : சூன் 2005

ISBN : 81-85452-18-0 (Set) Vol.9,10,11,12
81-85452-17-2 (Vol.10)



வெளியீட்டாளர் : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
112, காமாட்சி அம்மன் கோயில் வீதி,
புதுச்சேரி – 605 001.
இந்தியா.

அச்சிட்டோர் : அரசினர் மத்திய அச்சகம்
புதுச்சேரி – 605 009.

விலை :

அதே ஆண்டில் பிள்ளையின் குத்தகைதார் பொறுப்பை அவரிடமிருந்து வாங்கி, தெவோ என்ற பிரெஞ்சுக்காரரிடம் லெறி கொடுத்தார். பிள்ளை ஆளுநரின் சொந்த வாணிபத்தில் போதிய அக்கறை காட்டவில்லை என்று லெறிக்கு எரிச்சல். ஆனால், தனியார் வியாபாரம் என்பது துய்ப்ளே காலத்திலேயே பெரும்பாலும் நின்றுவிட்டது. பிரெஞ்சுக்குக் கடல் வலிமை இல்லாததே இதற்கு முக்கிய காரணம். சீமை நிர்வாகத்தைப் பற்றிய போதிய அறிவுகூட லெறியிடம் காணப்படவில்லை. அவரும் எதிலுமே அக்கறை இல்லாதவராக இருந்ததால் கவுன்சிலர்களும் அதிகாரிகளும் தாம் இட்டதே சட்டமாக அதிகாரம் செய்யலாயினர்.

தமது கொள்கைளுக் கெல்லாம் பிள்ளை தடையாய் இருக்கிறாரென்று சில கவுன்சிலர்கள் எண்ணலாயினர்.

தெவோ திருவதி சீமைக்கும், பொயலோ செஞ்சிக்கும், கில்லார்ட் (கில்லியார்) திருக்கோவிலூர்—விருத்தாசலத்திற்கும் இவ்வாறு அனுப்பப்பட்டனர். ரங்கப் பிள்ளைக்கோ பிறருக்கோ இச்செய்தி கடைசி வரை தெரிவிக்கப்படவே யில்லை.

கவுன்சில் உறுப்பினர்களில் சின்ன துரையான பெடுத்தல்மீயும் பொயலோவும் மட்டுமே பிள்ளையின் பேரில் அன்பு வைத்து அவரது 45 ஆண்டு கால நிர்வாகத்தினைப் புகழ்ந்து பேசினர். ஆனால் இவ்விருவரும் லெறிக்கு வேண்டப்படாதவர்கள். மொரசின், துபோசேத், தெலார்ஷ் ஆகியோர் பிள்ளையின் வீழ்ச்சியை விரும்பியவர்கள். இவர்கள் அனைவருமே துய்ப்ளேவுக்கு நெருக்கமானவர்கள்; கொதே, பிள்ளை வசம் பழைய அதிகாரத்தை ஒப்படைத்ததை விரும்பாதவர்.

பிற கர்னாடக, தக்கண, வங்காளப் போர்களைப் பற்றி இத்தொகுதி நிறைய தகவல்களைத் தருகிறது. 1756 ஏப்ரல் தொடங்கி பிரெஞ்சு ஆதிக்கத்தை அழிப்பதற்காக ஆங்கிலேயப் படைகளும் கப்பல்களும் நிறைய வந்திறங்கியதையும் இத்தொகுதியில் நாம் படிக்கிறோம்.

தம்மால் எக்காரணங்களினால் ஒப்புக் கொண்ட குத்தகைப் பணத்தைக் கம்பெனிக்குச் செலுத்த முடியவில்லை என்பதைப் பிள்ளை பொயலோவுக்கு (1756 செப்டம்பர் 7 அன்று) எழுதிய ஒரு கடிதத்தில் தெளிவாக விளக்கினார். அதேபோல் அவற்றைத் தளபதி தெ சுப்பீருக்கும் 1757 நவம்பர் 17 நாளைய கடிதமொன்றில் பிள்ளை விளக்குகிறார் (தொகுதி 11). இருப்பினும் இந்நிலுவைகளைப் பிள்ளையின் பெயரில்

கும்பினிக்காரர்கள் பற்றெழுதி வைத்து, அவரைக் கடனாளி என்றே விவரித்தனர். இதனை யெல்லாம் பிள்ளையின் காலத்துக்குப் பின்பு அவரது வாரிசுகள் பாரிசுக்குப் பல கடிதங்களில் விளக்கி, எழுதினார்கள்; அவர்களது வாத நேர்மையினைப் பிரெஞ்சு அரசு ஏற்றுக் கொண்டு, அவருக்கு நேரிட்ட இழப்புகளுக்கு வாரிசுகள் ஈடுபெற்றனர்.

1757 மார்ச் 24ஆம் தேதிய பதிவில் புதுவைப் பிரெஞ்சு ஆளுநர்களின் பட்டியலையும் அவர்களில் சிலரது நடவடிக்கைகளையும் வரைந்துள்ளது குறிப்பிடத் தக்கது. அதில் பெரிய துபாசிகளின் வரலாற்றையும் பிள்ளை சிறிது குறிப்பிடுகிறார்.

கம்பெனியின் மொத்த குத்தகைதாரர் பொறுப்பினை ஆளுநர் கொதே பாப்பையப்பிள்ளையிடமிருந்து வாங்கி, மீண்டும் நம்பிள்ளையிடமே ஒப்படைத்தார். ஆனால், அவர் திரும்பிச் சென்றவுடனே வெள்ளைக்காரர்களின் சுயநல எண்ணங்கள் காரணமாகப் பிள்ளையிடமிருந்து அதனைப் பறித்து, முசே தெவோவிடம் லெறி ஒப்படைத்தார். இவர்களால் வசூலிக்கப்பட்ட குத்தகைப் பணத்தில் ஒரு சிறிய அளவே கம்பெனிக் கணக்கில் சேர்க்கப்பட்டது. லெறிக்கும் அதில் ஒரு பங்கு கிடைத்தது. கம்பெனி அன்றாடச் செலவுக்குக் கூடப் பணம் இல்லாமல் திணறியது.

இந்நிலையில் பிள்ளையிடமிருந்து பதினெட்டு லட்சம் ரூபாய் கம்பெனிக்குப் பாக்கி நிற்கிறது என்று லெறி அவரை அடிக்கடி நச்சரிக்கலானார். பிள்ளையோ தன் குத்தகைக் கணக்கு முழுவதையும், பிரதியெடுத்துக் கொண்டு லெறியிடம் கொண்டு வந்து கொடுத்துத் தனக்குச் சேரவேண்டிய நாற்பது லட்சம் ரூபாயைக் கொம்மாந்தாம்கள் கொள்ளையடித்துக் கொண்டதாகப் புகார் கூறினார். இந்தக் கணக்குப் புத்தகத்தைப் படிக்கவோ பிள்ளை சொல்வதைக் கேட்கவோ லெறிக்குப் பொறுமையில்லை. இதனால் தளபதி சுப்பீருக்கும் பொயலோவுக்கும் கணக்கின் நகல்களைக் கொடுத்து ஒரு நகலைப் பாரிசிலிருந்த கம்பெனிக்கும் பிள்ளை அனுப்பி வைத்தார்.

அக்டோபர் 1757ல் கூடுதல் துருப்புகளோடு தெ சுப்பீர் புதுச்சேரிக்கு வந்தார். ஆனால் அவரது படைகளின் சம்பளத்துக்கும் பிற செலவுகளுக்கும் பணம் கொடுக்க முடியவில்லை. லெறியை சுப்பீர் கடுமையாகத் திட்டி, உடனே அரசருக்கு இவர்களது ஊழலையெல்லாம் எழுதப் போவதாகக் கூறினார். ஆனால் சம்பந்தப்பட்ட ஊழல் கொம்மாந்தாம்கள் சுப்பீருக்கும் லஞ்சம் தந்து அவரது வாயை மூடினர்.

1758 ஏப்ரலில் அட்மிரல் தெஷே (D'Ache) தலைமையில் மன்னரின் கடற்படையும், அதில் லல்லியும் அவரது துருப்புக்களும் வந்தன. அடுத்த நாளே தேவனாம்பட்டிணத்தின் மீது படையெடுக்க லல்லியின் படைகள் புறப்பட்டன. ஜுன் 2 அன்று அவ்வூரும் கோட்டையும் பிடிபட்டன. இருந்தாலும் தனது படையினருக்குச் சம்பளமோ சாப்பாடோ கொடுப்பதற்குக்கூட முடியாமல் லல்லி லெறியோடு போராட வேண்டி இருந்தது. நிதிப் பஞ்சத்தைப் பற்றி இத்தொகுதி முழுவதிலும் நாம் நிறையப் படிக்கிறோம். பாரிசுக்குத் திரும்பிச் சென்று பணம் கொண்டு வரலாமா என்றும் லல்லி எண்ணினார்.

பிள்ளையின் மொழி நடையிலும் இத் தொகுதியில் ஒரு மாற்றத்தைக் காண்கிறோம். முன்பு போலப் பல பக்கங்கள் நீளக்கூடிய வாக்கிய அமைப்பு இதில் ஒரு சிலவே காணப்படுகின்றன. சிறு சிறு வாக்கியங்களைக் கொண்டதாக இத்தொகுதி அமைந்துள்ளது. எனினும், பிரதி செய்தோர் வழக்கமாக வரிக்கு வரி பிழை மலிந்த வார்த்தைகளை இத்தொகுதியிலும் தொடர்ந்து எழுதி வந்துள்ளனர்.

பிள்ளைக்குக் கொதே மொத்த குத்தகைதாரர் பொறுப்பை ஐந்து ஆண்டு காலத்திற்குப் பத்திரம் எழுதிக் கொடுத்திருந்தார். ஆனால், இரண்டு ஆண்டுக் காலத்திலேயே லெறி பிள்ளையிடமிருந்து அப்பொறுப்பினைப் பிடுங்கி வெள்ளைக்காரர்களிடம் விட்டுவிட்டார்.

இர. ஆலாலசுந்தரம்

# ஜனவரி 1756

*1756 வருசம், சனேரி மாசம், தேதி 1; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 21; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே யின்றைய தினம் வெள்ளைக்காரர்களுக்கு வருஷாதி சனேரி பண்டிகை யானபடியினாலே, காலத்தாலே யெழுந்திருந்து சிரஞ்சீவி அண்ணாசாமி அப்பாவு வகையிரா யெப்போதும் பிறப்படுகிற சட்டப்படிக்கி அழைச்சுக் கொண்டு, முசியே லெறி குவர்ணதோர், முசே பெடுத்தல்மீ சின்ன துரை, முசே கில்லியார் வகையிரா கோன்சேலியேர்மார்கள், மத்துமுண்டான ஒபிசியால்மார்கள், சூ மார்ஷாம்கள்[1], சன்னியாசிமார்கள் பாதிரிகளுள் பட முன்பின் போற வாடிக்கைப்படிக்கி, பூச்செண்டு எலிமிச்சம் பழம் குடுத்து சனேர் பண்டிகைக்கு முபாற்குபாதி சொல்லி, பனிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்தோம். யிந்தக் கலகங்களினாலே ராச்சியமும் பட்டணமும் சுருப்பட்டுப் போயிருக்கிறதுக்கும், அத்துடனே கூட மழையில்லாமல் க்ஷாமமும் பிறந்து யிருக்கிற படியினாலே ஊர், சுத்தியின் (காயம்பட்ட நகம்) பேரில் அம்மி விழுந்த கதையாய், நான் முப்பத்து மூணு வருஷமாய்ப் பார்த்து வந்ததுக்கு யிந்த வருஷத்துக்குக் காணும்போலே, களாயீனமாய் (மோசமாய்) ஒருக்காலும் நான் கண்டதில்லை. ஆனால் இப்படி களாயீனமா யிருக்கிறதுக்கு ராச்சியத்திலே யிருக்கிற சனங்களுக்கு ஒரு பொல்லாப்பு வராமலிருக்க வேணுமென்று சுவாமியைப் பார்த்து வேண்டிக்கொண்டேன்.

*1756 வருசம், சனேரி மாசம், தேதி 4; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 24; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யேழரை மணிக்கி கோட்டைக்குப் போனவிடத்திலே கோவர்ணதோர் முசியே லெறியைக் கண்டு ஆசாரம் பண்ணி சனேரி பண்டிகைக்கி அவரவர்கள் வந்து சந்திச்சுக் கொள்ள வருகிறார்கள் யென்று சொன்னதுக்கு, நல்லது அழைச்சுக் கொண்டு வா யென்று சொன்னார். அதின் பேரிலே அவரவர் வந்து நசர் வைத்த வயணம் :

| | | |
|---|---|---|
| கும்பினீர் வர்த்தகாள்—ரொக்கமாய் குடுத்தது | வி | 1000[2] |
| பிடவை கிறயம் | வி | 100 |
| சுங்கு சேஷாசல செட்டி | வி | 43 |

[1] Sous-marchands என்பது தமிழ்ப்பிரதியில் விட்டுள்ளது.

[2] வி—விராகன்

| | | |
|---|---|---|
| குண்டூர் கிராமம் காளவாய் குமரப்பிள்ளை | வி | 21 |
| ஒழுகரை குடிகள் | வி | 21 |
| சிந்தல (பத்மனாப) னாயக்கன் குமாரன் | வி | 25 |
| வில்லியநெல்லூர் குத்தகைக்கார குண்டூர் வெங்கிடாசல செட்டியார் | | 250 |
| பட்டு சுருட்டு | | 22 |
| சவரிமுத்து நயினார் | | 50 |
| ஆக ரொக்கம் | | 1410 |
| பிடவை விலை | | 122 |
| ஆக பிடவையுள் பட | | 1532 |

***1756 வருசம், சனேரி மாசம், தேதி 19; யுவ வருசம், தை மாசம், தேதி 9; சோமவாரம்***

இத்தனாள் காலத்தாலே ஏழரை மணிக்கி கோட்டைக்கிப் போன விடத்திலே கோவர்ணதோர் முசியே லெறி, சின்னதுரை முசியே பெடுத்தல்மீ வகையிரா கோன்சேலியோர்கள் கோன்சேல் கூடி யிருந்தார்கள். அப்போ யெனக்குக் காணுகிறதுக்குச் சமையமில்லாத படியினாலே நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன். அங்கே யிருக்கச்சே அச்சிக்கு (Aceh) யெம்பரானாரிட்டுப் (பயணமாய்) போயிருந்த கப்பல் இத்தனாள் காலமே ஒவ்வொரு பீரங்கியாய்ப் போட்டுக் கொண்டு வந்து துறை வந்து பிடிச்சுது. ஒவ்வொரு பீரங்கியாய்ப் போட்டுக் கொண்டு வந்த சேதி கப்பல் கப்பித்தான் செத்துப் போனானென்று சொன்னார்கள். கப்பல் துறை பிடித்த உடனே அந்தக் கப்பலிலே யிருந்த தெரக்குதோர் (Directeur) ஒலை யெழுதி அனுப்பினான். அந்த ஒலையிலே யெழுதி யிருந்த வயணம் யிதின் கீழே யெழுதியிருக்குது : இப்போவும் கும்பினீருக்கு யேத்தும் குதிரை நாற்பதும், மத்தக் கப்பித்தான்மாருக்குப் பத்துப் பதினஞ்சு குதிரையும் யேத்தி வந்தது. பாக்கும் யேத்தி வந்தது. மத்த சில்லரைச் சரக்குகளும் யேத்தி யிருக்கிறது. அச்சியிலேயிருந்து மார்கழி மாசம் தேதி 15 (டிசம்பர் 26) கப்பல் பாய் விரித்து, பத்தாம் நாள் யேனம் கரை பிடித்து மச்சிலிபந்தர் துறையிலே வைத்துப் பிடித்தது. அந்த துறையிலே கும்பினீர் சரக்கும் கொஞ்சம் யேத்திக் கொண்டு அச்சி விட்டு யிருபத் தஞ்சாம் நாள் புதுச்சேரி வந்து வைத்துப் பிடித்த சேதி சித்தமறியக் கட்டளை யிடவும். கப்பித்தான்மார் விளையாடப் போனவிடத்திலே அச்சிக்காரருக்கும் யிவர்களுக்கும் வாங்கலாயி, வாக்கு தற்கமாயி, அதனால் கப்பல் மூணாவது கப்பித்தான், கப்பல் கணக்கர்கள் முசியே பெரியேர் (M. Perrier) (ஆகியோர்) வெட்டுப்பட்டுப் போ(னார்கள்). மத்த சேதி யெல்லாம் முகதாவிலே (நேரில்)

வந்து கண்டு பேசிக்கொள்ளுகிறோம். சகல சேதியும் தங்கள் சித்தத்திற்குத் தெரியவரும்.

இத்தனாள் "யெரவாசநல்லூர்[1] சீமை கட்டிக்கொள்ளுகிறதுக்கு மமுதல்லிக்கான் பவுன்சு அனுப்பிவிக்கிறானென்றும் யிங்கிரேசுக்காரரும் மத்தத்துப் பண்ணி அனுப்பிவிக்கிறார்களென்றும் சேதி வந்ததென்று, திருவீதி கொம்மாந்தாம் யெழுதினான். மெய்தானா," யென்று துரை கேட்டார். "ரெண்டு மூணு நாளைக்கு முன்னே தானே உங்களுடனே யிந்தச் சேதி யெச்சரிச்சே," னென்று சொன்னேன். அதுக்கு "யினிமேல் யிங்கிரேசுக்காரர் யிருக்கிற ஸ்தானங்களுக்கும் மமுதல்லி கானிருக்கிற ஸ்தானங்களுக்கும் மனுஷரை வைச்சு அப்போதைக் கப்போது சேதி அழைப்பிச்சுச் சொல்லு" வென்று சொன்(னார்). "முன்னாலே தானே அங்கங்கே அனுப்புகிற மனுஷருக்குச் சம்பளம் கும்பினீரிலே குடுக்கச் சொல்லி உத்திரவு பண்ணினார்கள். அந்தப்படி மனுஷரை வைச்சு சேதி அழைப்பிக்கச் செய்கிறேன்," என்றேன். அவரிடம் அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1756 வருசம், சனேரி மாசம், தேதி 20; யுவ வருசம், தை மாசம், தேதி 10; செவ்வாய்*

இத்தனாள் காலத்தாலே உலகநெல்லூரிலே யிருந்து, உசேன் சாயபு தாயார் (தவறு. தஹீர்) குமாரன் மொதுபர் கானுடைய (Mutabar Khan) பவுன்சு வாலிகொண்டாபுரத்திருந்து மங்களூர் பாளையக்காரனைப் பிடிக்கத் தக்கதாக உலகநெல்லூருக்கு நாலுநாழிகை வழியிலே அன்னூறு பாறுக்கார(ருடனும்) முன்னூறு குதிரைக்காரரு(டனும்) இரண்டு மூணு பீரங்கியுடனேயும் வந்து அங்கே யிருக்கிறார்களென்று குமாந்தாமெழுதி யனுப்பினானாம். மெய்தானா வென்று கேட்டார். மெய்தான், எங்கள் அமுல்தாரனு மெழுதி யனுப்பினான் யென்று சொன்னேன். யிதுவுமல்லாமல், முன்னாலே மொதுபர் கான் யெனக் கெழுதின காகிதத்திலே, மங்களூர் பாளையக்காரன் எனக்கு அங்கவங்கைக்கு வராமல் (வழிக்கு வராமல்) குடுக்கவேண்டிய பேஷக்கஷுப் பணமும் குடாமலிக்கிறான்; அவன் உங்கள் தாலூக்கிலே யிருக்கிற மட்டுக்கும் அவனுக்குத் தாக்கீது (நீங்கள்) யெழுதி யனுப்பவேணும்," என்று எழுதினான். அந்தப்படியே (நான்) மங்களூர் பாளையக்காரனுக்கு சுதாமதுப்படிக்கி (முன் வழக்கப்படி) நடந்துகொள்ளச் சொல்லி எழுதியனுப்பி, மொதுபர் கானுக்கும் யிப்படி தாக்கீது யெழுதி யனுப்பிவிச்சோம். ... (அப்படி) எழுதி நேத்து தானே அனுப்பிவிச்சோம். அப்படியிருக்கச்சே யிப்போ (மொதுபர் கான்) பவுன்சு வந்து

[1] இன்று எலவானசூர்.

யிறங்கியிருக்கிற தென்று சேதி (வருகிறது); யிப்போவும் நான் அவனுக்கு முன்னாலே நீர் யெழுதியனுப்பின (படியே) யெழுதி அனுப்புகிறேன். "நீர் பவுன்சுடனே எங்கள் தாலூக்கிலே வந்து யிறங்கியிருக்கிறது நியாயமல்லா அந்தப் பாளையக்காரன் அங்கவங்கைக்கு வராவிட்டால் எங்களுக்கு யெழுதியனுப்பி, எங்கள் ஒடுதிப்படிக்கி நடந்துகொள்ள வேணுமே அல்லாமல், நீங்கள் பவுன்சு வந்து யிறங்கி யிருக்கிறது ஞாயமாயிருக்கயில்லை. யிப்போவும் பவுன்சு வாங்கிப் போனாலாச்சுது. இல்லாவிட்டால் நம்முடைய முகத்து தூரமாய்ப் (முகத்தை நாம் பார்க்க விரும்பாமல்) போவீர்களென்று உம்முடைய ஒடுதியாய் எழுதியனுப்பி விக்கிறேன். அதுக்குள்ளே வாங்கிப் போனாலாச்சுது. இல்லாவிட்டால் கொம்மாந்தானுக்கு யெழுதி அனுப்பி அதுக்கேத்த படிக்கிப் பார்ப்போம்," யென்று சொன்னேன். நல்லது, அந்தப்படியே யெழுதி அனுப்பென்று சொன்னார்.

### *1756 வருசம், சனேரி மாசம், தேதி 23; யுவ வருசம், தை மாசம், தேதி 13; சுக்கிரவாரம்*

இத்தனாள் காலத்தாலேயும் வெளியே போகயில்லை. ஆனால் கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால்: இத்தனாள் காலத்தாலே கோன்சேல் கூடினாப்போலேயும் முசியே தொத்தேல் (M. d' Auteuil)[1] சீர்மையிலிருந்து கொண்டு வந்த கொமுசாமிலே (ஆணையிலே) யிவருக்குத் தம்பூறு ரப்பிலே அடிக்கவும் – அந்த தம்பூறு சின்னதுரைக்கு அடிக்கிற தம்பூறு – யிப்போ கொம்மாந்தாமுகள், ஒபிசியால்மார்கள் சகலரும் தனக்குக் கீழ்ப்படியவும், தன் மனசுப் பிரகாரம் வைக்கவும் பிடுங்கவும், பாளையம் (படை) தன் மனதாம் படியே அனுப்பவும் அழைப்பித்துக் கொள்ளவும், (அதற்கு) கோவர்ணதோருடைய உத்தாரம் தேவையில்லாமல் (படிக்கு) யெழுதி யிருந்தது; ஆகவே, மனசுப்படியே பவுன்சைக் கூட்டிக்கொண்டு வெளியே போகத்தக்கதாகவும், சகல சொலுதாதுகளும் சகலருந் தன்னுடைய யெக்குத்தியாராய் (கீழ்ப்பட்டவர்களாய்) நடக்கத்தக்கதாக, கொவர்ணதோருடைய உத்திரமில்லாமல் தன்னுடைய மனதின் படியே நடக்கத் தக்கதாக, அங்கே யிருக்கிற மினிஸ்தர்மாருடைய காகிதமும் கும்பினியாருடைய கொமுசாமுலேயும் எழுதிவந்தது. கொம்மாந்தாம் முசே பிசாக்கு (M. Fessac) இவனுக்குக் கீழே பெரிய யிடமுமாய் எழுதி வந்த படியினாலே, இதைக் கோன்சேலிலே (விவாதித்தார்கள்); யிப்படி கோவர்ணதோருடைய உத்தாரமில்லாமல் சகல யெகத்தியாரும் யிவன் பாரிசமாய் யெப்படிப் பண்ணுகிறதுயென்று யோசனைப் பண்ணிக்

[1] இவர் முன்பு புதுச்சேரியிலே பணியாற்றிய பின் நாடு திரும்பி மீண்டும் வருகிறார்.
[2] தொத்தேல் துய்ப்ளேவுக்கு உறவினரான படியினாலே இப்படி எழுதி அனுப்பினார் போலும்.

கொண்டு, கோன்சேலிலே தேறுதலையில்லாமல் கிடந்து அலையுது. ஆனால் யின்றைய கோன்சேலிலே யென்ன நடந்துதோ, யின்னமாய்த் தேறுதலையாச்சுதோ தெரியாது.

இதுக்கு முன் கோன்சேலியோர் (தவறு, கொலேனல்–Colonel) முசியே லா பெறேல்[1] (M.La Farelle) முசியே லெனுவர் துரைத்தனம் பண்றச்சே, யிந்தப்படித்தான் ஒடுதி வாங்கிக் கொண்டு வந்தார். அப்போ (துரை) யோசனை பண்ணி, யிப்படி கொவர்ணமாமுலே துரைத்தனம் பண்ணுகிறவன் உத்தாரமில்லாமல் யிப்படிப்பட்ட ஒடுதி வந்தால் ஒரு காரியமும் கட்டாதென்று அங்கே யிருக்கிற மினிஸ்தருமாருக்கும் கும்பினியாருக்கும் யெழுதி அனுப்பி, யிப்படிப்பட்ட ஒடுதி வந்தால் ஒரு காரியமும் கட்டாது, இந்த ஒடுதி யினி மேல் ஒருத்தருக்குங் குடுக்கத் தேவையில்லை யென்று முசியே லா பெறேலுக்கு (M. La Farelle) வந்த ஒடுதியும் தள்ளிவிச்சுப் போட்டு, யினி மேல் (தானே) மயோர் செனறலாய் இருக்கிறதேயல்லாமல் பின்னை யொருத்தருக்குங் குடுக்கவேண்டா மென்று எழுதி அனுப்பிவிச்சபடிக்கி யிந்த மட்டும் நடந்து வந்தது.

அப்படி யிருக்க யிவருக்கு யிந்த ஒடுதி வந்த யேஷியம் யெதினாலே யென்றால், யிதாயித்து மொகதின் கானுக்கும் நாசறு சங்குவுக்கும் வழுதாவூர் அண்டையிலே சண்டை நடந்த போது முசியே தொத்தேல் அங்கே கொம்மாந்தாரிடச்சே, ஒபிசியால்மார்களும் சொலுதாதுகளும் யிவருடைய ஒடுதியிலே (வழுதாவூரிலே) நில்லாமல் வந்துவிட்ட படியினாலேயும், இந்த ஒபிசியால்மார்கள் கூடிக்கொண்டு கோவர்ணதோருடனே யெதித்துக் கொண்டு கோன்சேலிலே பித்திசா மெழுதிப் போட்டு சீர்மைக்கும் போறோம் யென்று யிப்படி யெல்லாம் சொல்லி, முசியே துப்பிளேயிக்சுடையக் கலிலே (அதிகாரத்தின் கீழே) யில்லாமல் சீர்மைக்குப் போய் விட்டார்கள். அதனாலே யிப்போ முசே தொத்தேலுக்கு வந்த ஒடுதிப்படிக்கி முன்பு முசியே லா பெறேல் வந்திருந்தபடியினாலே, அந்தப்படியே முசியே தொத்தேலுக்கும் குடுத்தனுப்பிவிக்க வேணுமென்று முசியே துப்பிளேயிக்சு மினிஸ்தருமார்களுக்கும் கும்பினியாருக்கும் யெழுதியனுப்பி[2] விச்சபடியினாலே அந்தப்படி யெழுதி வந்தது.

யிப்போ (இருக்கிற) கோவர்ணதோர் முசியே லெறி அவர்கள் யிந்தப்படி தன்னுடைய கலிலே (செல்லாமல்) ஆயிப்போனால் நமக்கென்ன யிருக்குதென்றும், மிப்படி நடப்பிக்கலாமா வென்றும், முன் முசே லெனுவார் நாளையிலே யிந்தப்படிக்கி நடந்துதே வென்றும், இப்படி யோசனையின் பேரிலே விழுந்து யிருக்குது. இன்னந் தேறுகடை யானதில்லை. இனிமேல் யென்னமாய் தேறுகடை யாகுமோ அறியவேணும்.

இத்தனாள் கோன்சேலிலே நடந்த சேதி யென்ன வென்றால்: முசியே குப்பி கொம்மாந்தாமா யிருந்தபடியினாலேயும் முசியே தொத்தேல் மேலெழுதப்பட்ட ஒடுதி வாங்கிக் கொண்டு வந்து கொம்மாந்தாமாய் இருந்த படியினாலேயும், முசியே குப்பி நாம் யிவருக்கு முன்னே பத்து வருஷமாய் கும்பினீரிலே சேவிச்சோம் (சேவை செய்தோம்), யிப்போ யிவருக்குத் தாழ நாம் யிருக்கப்போறோமா வென்று யிவருக்கும் அவருக்கும் விவாதப்பட்டு, கோன்சேலுக்கு யெழுதிப் போட்டத்தின் பேரிலே முசியே குப்பியின் பாடுத்தியாய் (ஆதரவாய்) முசியே லெறியும் முசியே லெனுவாரும் முசியே பொலோவும் மூணுபேர் பேசினார்கள்.

முசியே தொத்தேல் பாடுத்தியாய் முசியே பெடுத்தல்மீ, முசியே கில்லியார், முசியே தெலார்ஷு, முசியே தெபோசேத்து, முசியே மீரா (ஆகிய) அஞ்சு பேர் பேசினபடியினாலே, யிதிலே ரெண்டு (பேர்) அதனமானபடியினாலே, முசே தொத்தேல் வியாச்சியமே செயித்தது. ஆனால் கும்பினியாருக்கு எழுதியனுப்பவும் அங்கே யிருந்து எந்தப்படி வருகிறதோ அந்தப்படி நடந்து கொள்ளவும், (அதுவரை) கும்பினியார் யெழுதி அனுப்பினபடிக்கி முசியே தொத்தேல் தானே கும்மாந்தாரிடத்தக்க தாகவும் தீர்த்தார்கள். ஆனால் முசியே குப்பி தான் முசியே தொத்தேலுக்கு ஒபயசேரிடுகிறதில்லை (கீழிருக்கிறதில்லை) யென்று சொன்னபடி யினாலேயும், முசே லெறி அவர்களுக்கு அவர் பேரிலே பக்ஷத்தினாலேயும், முசியே தொத்தேல் பேரிலே யிருக்கிற கோபத்தை கோனேசு ஆகாத (வெளிக்காட்டமுடியாத) படியினாலேயும், முசியே குப்பி கும்பியாருடைய ஒடுதி வருகிற மட்டுக்கும் வீட்டோடேயிருந்து சம்பளம் மாத்திரம் வாங்கிக் கொண்டு சும்மாயிருக்கிறதென்று, முசே லெறி முசியே குப்பியினுடைய பாடுத்தியாயிருந்தபடி யினாலே மேலே யெழுதப்பட்டபடி தீர்ந்தது. இதுவுமல்லாமல், முசியே தொத்தேலுக்கு உத்தியோகத்துக்கு (மரியாதை) யெப்படி யென்றால், (துருப்புகளை யெல்லாம்) பெரிய வரிசை வைத்து சிவனுத்தியோகத்துக்கு வந்த காகிதத்தைப் படிச்சுப் பிரஸ்தாபம் பண்ணி, தம்பூறு அடிக்க வேணும். அப்படிச் செய்யாமல் அவன் பேரிலே யிருக்கிற கோபத்தினாலே (துரை) அவனை யேக தேசத்திலே அழைத்து, உன்னுடைய உத்தியோகத்தை நீ பார்த்துக்கோ வென்று சொல்லியனுப்பி விட்டார்.

***1756 வருசம், சனேரி மாசம், தேதி 24; யுவ வருசம், தை மாசம், தேதி 14; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே சிரஞ்சீவி தம்பி வெங்கிடாசலம்[1] செத்துப்போனபடியினாலே நான் மூணு நாளாய் வெளியே

---

[1] நம் பிள்ளையின் பெரியப்பா பெயரன் என்று ஆங்கிலப் பதிப்பில் கூறப்படுகிறான்.

பிறப்படாமலிருந்து, யித்தனாள் கோட்டைக்குப் போக வேணுமென்று பிறப்பட்டுப் போகச்சே, முன் சொல்லப்பட்ட காரியத்துக்கு மெனவுகிற நிமித்தியம் முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போய் அவருடனேயும் பேசி யிருந்து, ... "வெங்கிடாசலத்தினுடைய உத்தியோகம் யெங்களுடைய பமீலி (குடும்பம்) க்குள்ளே யிருக்கப்பட்ட உத்தியோகம், அதை தயவு பண்ணி (எங்கள் குடும்பத்திலேயே) வைக்க வேணு," மென்று சொன்னதுக்கு, "நல்லது தான், அப்படியே நீர் யாரை நேமிக்கிறீரோ அவனுக்குத் தானே குடுத்து நடப்பிக்கிறோ," மென்று சொன்னார்.

(மேலும்) பாளையக்கார நல்லதம்பி யென்கிறவன், முன்பு பாளையக்காரத் தனமாயிருந்தான், யிப்போ உத்தியோகமில்லாமல் ரொம்ப கஸ்திப்படுகிறான், அவன் வந்து யிந்த உத்தியோகம் குடுக்க வேணுமென்று கேட்டான். அவன் மெத்த சாப்பாட்டுக்கு முதலாயில்லாமல் கஸ்திப்படுகிறான், ஆனபடியினாலே அவனுக்கு யெவ்விடத்திலே யாகிலும் பாளையக்காரயிடம் குடுக்க வேணும் யென்று (நான்) சொன்னதுக்கு, (முசே லெறி) அந்தப்படியே பார்ப்போமென்று சொன்(னார்). "யிந்த உத்தியோகம் உன்னுடனே சேர்ந்தது,[1] வெகுநாளாய் நடக்குறதென்று முசே லெறி யுடனேயும் சொன்னேன். நீயும் சொல்லிக்கோள்," யென்று சொன்னார்.

நல்லதென்று அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு கோட்டைக்குப் போனவிடத்திலே, முசே லெறி கோவர்ணதோர் அவர்கள் (பலருடனே) பேசியிருந்து, உள்ளே போறதுக்கு வெகு நேரம் சென்றபடியினாலே, நான் அந்தமட்டுக்கும் காத்துக் கொண்டிருந்து, அவர்(கள்) போன உடனே நான் போய் ஆசாரம் பண்ணி, யிப்படி "சாவடி துபாசித்தனம் முசே லெனுவார் நாள் துவக்கி, 1730–ஆண்டு துவக்கி, யிருபத்து அஞ்சு வருஷமாய் யென்னுடைய தம்பிக்கி நடந்து கொண்டு வந்தது. அவனுக்குச் சரீரம் சுவஸ்தமில்லாமல் யிருக்கச்சே, யென்னுடைய அண்ணன் குமாரனை வைச்சுக் கொள்ளச் சொல்லி முசே துப்பிளேயிக்சு சொன்னார். அவனிந்த மட்டுக்கும் யிருந்தான். அவன் பேச்சு சுவாமி சங்கல்பத்தினாலே அப்படி யிருந்து போச்சுது. யிப்போவும் அந்த உத்தியோகத்துக்கு யென்னுடைய தம்பி குமாரத்தியைக் கலியாணம் பண்ணின மருமகனிருக்குறான். அவனை வைக்குறேன், தாங்கள் தயவு பண்ணி வைக்க வேணு," மென்று சொன்னதுக்கு, "நல்லது, அந்தப்படியே அந்த உத்தியோகம் உன்னைச் சேர்ந்தது. உனக்கே சேரத்தக்கதாக நம்பிப்போ," மென்று சொல்லி, "நாளை முசியே பெடுத்தல்மீ வந்தவுடனே

[1] பிள்ளையின் உறவினர் வெங்கிடாசலத்தின் உத்தியோகத்தை இது குறிக்கிறது. இதற்கு முன் சொல்லப்பட்டது நல்லத் தம்பியின் பாளையக்காரத்தனம் பற்றியது.

அவருடனே சொல்லி நேமிச்சுப் போடச் சொல்லிப் போடுவிக்குறோம்," யென்று சொன்னார். அதுக்கு நான் நன்றி அறிந்த உபசாரணை யெல்லாம் சொல்லிப் போட்டு யிருக்கச்சே, ஆற்காட்டிலே யிருந்து யென்ன சேதி வந்து தென்று கேட்டார்.

வேலூர் சப்பிதரல்லி கான் பெண்சாதி மமுதல்லி கானுக்கு யிடாய(வெற்றிலை) அனுப்பினதின் பேரிலே, அதை அவர் சாப்பிட்டதின் பேரிலே அபாயம் கண்டதாகவும், அது நிமித்தியம் சோளங்கிபுரம் சீமையிலே யிறங்கி யிருந்தவர் ஆற்காட்டிலே வந்து சொஸ்தம் பண்ணிக் கொண்டு வேலூரான் விஷம் வைத்துக் கொல்ல நினைச்சானென்று, அந்தக் கோட்டையை வாங்கிப் போட வேணுமென்று யெத்தனம் பண்ணி, ஆயிரம் பேர் சொலுதாதுகளும் ரெண்டாயிரம் பேர் சிப்பாயிகளும் யிறநூறு முன்னூறு குதிரைக்காரரும் ஆறு பீரங்கியு மிந்தப்படி முஸ்தீப்பு பண்ணி, ஆற்காட்டு விட்டு ஒரு நாழிகை வழி வேலூருக்குப் போற மார்க்கத்திலே யிறங்கினார்களென்று சேதி வந்ததென்று சொன்(னேன்). "யேன் மீறுசத்து சல்லி கான் (Murtaza Ali Khan) நம்மண்டைக்கு மனுஷர் அனுப்பவில்லையே," யென்று கேட்டார். "இவ்விடத்துக்குக் காயிதமும் மனுஷரு மனுப்பினார் களென்று சேதி ஆற்காட்டிலே யிருந்து .... யெழுதி வந்த தென்று சொன்னதுமல்லாமல். சேத்துப்பட்டுக் கோட்டையும் அத்துடனே சேர்ந்த கிராமங்களும் தன் வசம் பண்ண வேணுமென்று மீர்சத்து (மீர் அசத்) மமுதல்லி கானுக்கு யெழுதி அனுப்பி, (ஒரு) வைக்கீ(லையும் அனுப்பியிருந்தார்); மீர்சத்து ஆற்காட்டுக்கும் வந்து மமுதல்லி கானுடைய பேட்டியும் வாங்கிக் கொண்டு, மமுதல்லி கானும் வந்த (வருக்கு) மெத்த உபசாரம் பண்ணி பீரங்கியும் போட்டு, சேத்துப்பட்டு[1] கோட்டையும் அத்துடன் சேர்ந்த கிராமங்களும் அவருக்குக் கொடுக்க லக்ஷத்தன்பதினாயிரம் ரூபாயாய்த் தீத்து அவர் வசம் பண்ணினதாகவும், சேத்துப்பேட்டுக் கோட்டையிலும் அத்துடனே சேர்ந்த கிராமங்களுக்கும் மமுதல்லிகானுடைய மனுஷரும் மீர்சத்து மனுஷரும் வந்து தோரணம் கட்டுகிறார்களென்று மெழுதி வந்ததென்று சொன்னார்," களென்று சொன்னேன்.

கையற்தின் கான் (Khair-ud-din-khan) யெலவாச நெல்லூர் கோட்டையின் பேரிலே சண்டைக்கு அன்னூறு பாறுக்காரரும் யிறநூறு சொலுதாதுகளும் முன்னூறு குதிரையும் .... மத்தத்தும் போகச் சொல்லி, சென்னப்பட்டணத்துக் கோவர்ணதோருடைய காகிதம் தேவனாம்பட்டணம் கோவர்ணதோருக்கு வாங்கிக் கொண்டு, மமுதல்லி கானுடைய காகிதமும் வாங்கிக் கொண்டு, கையற்தின் கான்

---

[1] சேத்துப்பேட்டு என்றே இப்பகுதியில் எழுதப்பட்டுள்ளது.

பயணப்பட்டு, திருணாமலை வந்து சேர்ந்தானென்று யெழுதி வந்த தென்று சொன்னேன். அப்பால், மமுதல்லி கானுடைய வைப்பாட்டிப் பிள்ளைக்குக் கலியாணம் ஆச்சுதே யென்றும், யிப்போ சொந்தப் பிள்ளைக்கும் பெண்ணுக்கும் கலியாணம் பண்ணுகிறதுக்கு யெத்தனம் பண்ணுகிறானென்றும், அது முடிந்தவுடனே வேலூர் கோட்டையைச் சாதிச்சுப்போட்டு, அப்பால் திரிச்சிராப்பள்ளிக்குப் போறதாய் யெழுதி வந்தது யென்று சொன்னேன். இதல்லாமல் கூடலூரிலேயும் வேலூரின் பேரிலே சண்டைக்குப் போறதுக்கு ஆற்காட்டுக்கு ஆயிரம் பேர் சொலுதாதுகளும் மருந்து குண்டு பீரங்கிகளும் அனுப்பத் தக்கதாக யிருக்கிறார்களென்று அவ்விடத்திலே சொல்லிக் கொள்ளுகிறதாய்ச் சேதி வந்ததென்றும் சொன்னேன்.

### *1756 வருசம், சனேர் மாசம், தேதி 25; யுவ வருசம், தை மாசம், தேதி 15; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்குக் கோட்டைக்குப் போன விடத்திலே முசியே லெறி கோவர்ணதோர், முசியே பெடுத்தல்மீ, முசியே கில்லியார் வகையரா கோன்சேலியேர்களும் ஒபிசியால்மார் வகையராக்களும் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்தவுடனே நான் போயாசாரம் பண்ணி, சொல்ல வேண்டிய ஆற்காட்டு சேதி (சொல்லி), சலாபத்து சங்கு கலியாணா கலபாகி (கல்யாணி, குல்பர்கா) அண்டையிலே வந்திருக்கிறதாகவும், சா நவாசு கானை (அவர்) மமுதல்லி கானண்டைக்கு அனுப்பினதாகவும், அவர் பிறகே சலாபத்து சங்கும் வாறதாகவும், பாசி ராயன் குமாரன் நானா தம்பியினுடைய பவுன்சும் முராரி ராயனுடைய பவுன்சும் கிருஷ்ணை நதி அக்கரையிலே சண்டையாயி முராரி ராயன் பவுன்சு சிகஸ்தாய்ப் (தோற்றுப்) போனதாகவும், அப்பால் நானா தம்பி யினுடைய பவுன்சு யிப்பால் வாறதாகவும், நானாவும் லக்ஷம் சுவார்களுடனே வாறதாகவும், சேத்துப்பட்டின் பேரிலே மீர் சத்துவும் (மீர் அசத்) மமுதல்லி கானும் பவுன்சு கூட்டிக் கொண்டு வாறதாகவும், அந்த சாகீரெல்லாம் தோறணம் வைத்ததாகவும், வேலூர் முகாந்தமாய் லக்ஷம் ரூபாயாகத் தீந்ததைப் பின்னையும் யெழுபதினாயிரம் கூட்டிக் கேட்டதாகவும், அந்தப்படி ஒப்புக்கொண்டு அதுக்குச் சிறிது ரொக்கமும் சிறிதுகளுக்கு ஆனைகள் குதிரைகள் நகைகள் பிடவைகள் வகையிரா விலைகட்டிக் கொடுக்கிறோமென்று சொல்லுகிறதாகவும், அந்தப் பேச்சு வார்த்தையிலே முடிப்போமென்று யிருக்கிறாப்போலேயும், தேவனாம்பட்டணம் துரைத்தனத்துக்கு மேஸ்தர் கிளேவிசு இங்கிலீசுத்தேராவை விட்டுப் பிறப்பட்டு அச்சித் (Achin or Aceh) துறை பிடித்து வந்து யின்னமிரெண்டு மூணு நாளையிலே தேவனாம்பட்டணம் துரைத்தனத்துக்கு

வருவானென்றும், முன் தேவனாம்பட்டணம் சென்னப்பட்டணம் சீர்மையின் கீழே அல்லோ யிருந்தது, அப்படிக் கவையில்லாமல் சீர்மைக்குத் தானே பிரத்தியேகமாய் சவாபுசால் (இங்கிலாந்துடனே நேரடியாய்க் கடிதத் தொடர்பு) பண்ணிக்கொள்ளத் தக்கதாய்க் கும்பினியாருடைய ஒடுதி பெத்து வருகிறான் யென்றும், தேவனாம்பட்டணத்திலே ஆயிரஞ் சொலுதாதுகளை முஸ்தீது பண்ணி அதுக்குத் தக்க சரன்சாமியும் குடுத்து தயாராய் வேலூருக்குப் போறதாய்ச் சொல்லிக் கொள்ளுகிறார்களென்றும்—இது முதலான சேதிகள் சொன்னதுக்கு, "சென்னப்பட்டணம் துரைத்தனத்தின் கீழே தேவனாம்பட்டணம் யெப்போது மிருந்தபடி யினாலே, யிப்போ மேஸ்தர் கிளேவிசு அலாயிதாய் சீர்மைக்கு உத்திரவாதம் பண்ணிக் கொள்ளுகிறோமென்று ஒடுதி வாங்கிக் கொண்டு வருகிறதாய்ச் சொல்லுகிறது யெனக்கு மெய்யாய்க் காணவில்லை. அப்படி யொருக்காலும் கும்பினியார் சம்மதிக்கத் தக்கதில்லை, செனங்கள் சொல்லிக் கொள்ளுகிற வார்த்தையே யல்லாமல், மெய்யல்ல," வென்று துரை சொன்னார்.

அப்பால் "முறுத்தி சல்லிகான் நல்லவனல்ல, (Murtaza Ali Khan)[1] நிலையில்லாதவன், நம்பிக்கையுள்ளவனல்ல யெப்போதும் நிலையில்லாதவன். அதனாலே அவனுக்கு யெந்தக் காரியமும் கட்டுகிறதில்லை. நாம் முன்னாலே முசே திலார்ஷு மாரிபத்திலே (அவனுக்குச்) சொல்லியனுப்பினோம்.

'நீர் மமுதல்லி கானுக்கு பேஷ்கஷு குடுக்கக் கவையில்லை; அவர்கள் கேட்டால் பிரான்சுக்காரர்களைச் சேர்ந்த நாங்கள் (உமக்குக்) கொடுக்க வேண்டியதில்லை யென்று நீங்கள் சொல்லுங்கோள். அதுக்கு நாங்கள் பேசிக் கொள்ளுகிறோம்; உங்கள் பேரிலே ராசகாரியம் பண்ணுகிறதாயிருந்தால் நாங்கள் பவுன்சு அனுப்பிவிக்குறோம்' என்று சொல்லி அனுப்பியிருந்தோம். (ஆயினும் அவன்) மமுதல்லி கானண்டைக்கு வைக்கீலை யனுப்பி (யதோடு), மமுதல்லி கான் பாளையக்காரர் பேரிலே போறதுக்குக் குதிரைச் சுவார்கள் சிப்பாயிகள் பாறுக்காரர்கள் வகையிரா கும்முக்கும் அனுப்பிவிச்சான். யிப்போ பணமானால் ஒப்புக்கொண்டு கொடுக்கிறான். என்ன விவேகஸ்தன் யிவன்? நாம் சொன்னபடி கேட்டுக் கொண்டிருந்தால் ஆற்காட்டு சுபையும் பண்ணுவான்," யென்று சொன்னார்.

"மெய்தான், அதிருஷ்டம் வேண்டாமா? அப்பாலும் முன் முசியே

[1] சந்தா சாயபுக்குப் பின் இவனையே ஆற்காட்டு நவாபாக்க பிரெஞ்சுக்காரர் எண்ணினர். ஆனால் அவனுக்கு அவர்களது வலிமையிலே நம்பிக்கை யில்லை.

துப்பிளேயிக்சு துரைத்தனத்திலே ஆற்காட்டு சுபா கொடுக்கிறோமென்று (அவனை) அழைப்பிச்சு(ச் சொன்னார்). அப்போ நடந்த சங்கதிகளைத் தான் மனதிலே யெண்ணி, அவிசுவாசப் பட்டுக் கொண்டிருக்கிறான்... அவன் மனது வஞ்சனையானபடி யினாலே எல்லாரையும் அப்படித்தானே நினைக்கிறான், தானுஞ் சேதப்பட்டுப் போனான்," என்று (நான் சொன்னேன்). பின்னையும், அவன் முன் சபுதர் அல்லிகானை மோசம் பண்ணி, தன் வீட்டிலே படுத்துக் கொண்டிருக்கிறவனைக் கொன்று போட்ட சம்மதி முதலாக[1] அவன் நடத்தைகளைச் சொன்னதுக்குக் கேட்டு, "மெத்த பொல்லாத மனதுடையவன்," யென்று சொல்லி, "அப்துல் றயிமான் யிறைவாசநெல்லூர் கோட்டையிலே யிருக்கிறவன் பேரிலே கயற்தின் கான் (Khair ud din Khan) பவுன்சு கூட்டிக்கொண்டு சண்டை பண்ண வருகிறானல்லவா? அது சமாச்சாரம் திட்டமா விசாரித்தெழுது; அந்தப் பிராந்தியங்களுக்கு மனுஷர்களை அனுப்பு," யென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன்.

மறுபடி அழைத்து, முறுத்தசல்லிகான் அண்டைக்கு செகொரத்தாய் (இரகசியமாய்) மனுஷரை அனுப்பி, யவனுக் கினியாகிலும் விவேகம் வரச் சொல்லப் பேகாதா வென்று கேட்டார். அதுக்கு மார்க்கமாய்ச் சொல்ல ஞாயமுண்டென்று சொன்னேன். அதெப்படி யென்று கேட்டார். சலாபத்து சங்கு தான் அற்பிசி மாசத்திலேயே மமுதல்லி கான் பேருக்கு, 'கில்லேதார் சமீன்தார் பேஷ்கஷு உனக்கு கவையென்னயிருக்குது வாங்குறதுக்கு? அந்த சோலி நீ போக வேண்டாம். நாம் தை மாசம் பிறந்தாப் போலே வருகிறோம், வாங்கிக் கொள்ளுகிறோம். (அது) நம்மை அடையுறதான படியினாலே நீ வாங்கவேண்டா,' மென்று தாக்கீ தெழுதி அனுப்பினது மல்லாமல், வேலூர் முறுத்தி சல்லிக்கான் அண்டைக்கும் 'நீங்கள் மமுதல்லி கானுக்குப் பேஷுகஷு குடுக்க வேண்டா," மென்று யெழுதியிருக்கிறார். அதுக்கு "பதிலுமவன் (முறுத்தி சல்லிக்கான்) சலாபத் சங்கு பேருக்குக் காகிதமெழுதி (யதோடு), உங்களுக்குக் கிதாப்பும் சீரொப்பாவும் துராய் வகையிரா கொண்டு வந்த அப்துல் றயிமான் பேருக்கும் காகிதமெழுதி யிருக்கிறானே, அந்த அடியைப் பிடித்துக் கொண்டு உத்திரமெழுதி அனுப்பலா," மென்று சொன்னேன். அந்தப்படி யோசனை பண்ணி யெழுதி யனுப்பென்று சொன்னார். நல்லதென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்து, சுவ (சொந்த) காரியம் பார்த்துப் போட்டு வீட்டுக்குப் போனேன். ஆற்காட்டுச்

---

[1] இவை யெல்லாம் முதற்தொகுதியில் விவரிக்கப்பட்டுள்ளன. முர்த்தசா அலி இக்கொலையைப் புரிந்துவிட்டு (1742 அக்டோபர் 13) வேலூரைவிட்டு ஆற்காடு சென்று நவாபுவாகவும் பட்டம் கட்டிக் கொண்டான். ஆனால் மீர் அசத் போன்ற பலர் அவனை எதிர்த்து முறியடித்தனர்.

சேதிகள் வந்ததை பிரான்சிலே யெழுதிக் குடுக்கச் சொன்னார். அந்தப்படி யெழுதிக் குடுத்தேன்.

*1756 வருசம், சனேர் மாசம், தேதி 27; யுவ வருசம், தை மாசம், தேதி 17; செவ்வாய்*

இத்தனாள் காலத்தாலே சிறிது சொலுதாதுகளும் சிறிது சிப்பாயிகளும் காட்டுமேட்டிலே போயிறங்கினார்கள்.[1]

இத்தனாள் சாயங்காலம் அஞ்சு மணிக்கு முசியே லெறி கோவர்ணதோரவர்கள் அழைச்சனுப்பப் போனவிடத்திலே, "மிறுத்து சல்லிக்கான் வைக்கீல் இவ்விடத்திலே வந்திருக்கிறானாம். அவனென்னுடனே யேன் வந்து பேசயில்லை," யென்று கேட்டார். "மெய்தான், காதர் சாயபு யென்கிறவன் இரெண்டு மாதமே பிடித்து முசியே திலார்ஷு மாரிபத்திலேயும் அல்லி நக்கீ சாயபு மாரிபத்திலேயும் (மூலமாய்) தங்களுடனே பேசுகிறானென்று சேதி கேழ்விப்பட்டேன். அவர்கள் பேசுகிறார்களே யென்று நான் சும்மாயிருந்தேன்," யென்று சொன்னதுக்கு, "நல்லது, நீ அந்த காதர் சாயபு யென்கிறவனை அழைத்துக் கண்டு பேசு," யென்று சொன்னார். நல்லதென்று சொல்லி வேலூர் முறுத்தி சல்லிக்கானுக்கும் காகிதமெழுதியனுப்பச் சொன்னபடிக்கு யெழுதியனுப்பினே னென்று சொன்னதுக்கு, "வந்த வைக்கீலை அழைச்சுக் கண்டு பேசு. நாமும் முன்னுதாய் பாளையம் முஸ்தீப்பு பண்ணி காட்டுமேட்டிலே போயிறங்கச் சொல்லித் திட்டம் பண்ணுகிறோ," மென்று சொன்னார். நல்லது அந்த வைக்கீலை அழைத்துக் கண்டு பேசுகிறேனென்று சொன்னேன்.

*1756 வருசம், சனேர் மாசம், தேதி 29; யுவ வருசம், தை மாசம், தேதி 19; குருவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால் : மயிசூர் ராசாவுக்கும் தளவாய் தேவராச உடையாருக்கும் ஒன்றுக்கொன்று சமாதானமில்லாததைத் தொட்டு, மயிசூர் ராசா அந்தரங்கத்துக் குள்ளே நானாவுக்கு யெழுதி யனுப்பி பவுன்சு யழைப்பிக்கிறதாகவும், நானா தம்பி கோபா (ரகோபா) யென்கிறவர் அறுபதினாயிரம் குதிரையோடே முஸ்தீப்பு பண்ணிக்கொண்டு கிஷ்ணை நதிக் கப்பிறம் வந்த சேதி ஆற்காட்டுக்கு வந்து, அவ்விடத்திலே அவர் பயம் ரொம்ப யிருக்குதென்றும், மமுதல்லிகானுக்கும் யிங்கிலீசுக்காரரும் பவுன்சு பிறப்பட்டு வேலூரின் பேரிலே சண்டைக்கு வருகிறார்களென்று அவ்விடத்திலே யிருக்கிற பேர் சேதி கேட்டு வலசை வாங்கினார்கள் (வெளியேறினார்கள்) யென்றும்,

[1] இது புதுச்சேரிக்கருகிலுள்ள இடமாய் இருத்தல் வேண்டும்.

யிவ்விடத்திலே யிருந்து பிரான்சுக்காரருடைய பவுன்சு யிப்படி யிங்கிலீசுக்காரருக்கும் பிரான்சுக்காரருக்கும் பதினெட்டு மாதம் ஆயுத மெடுத்து சண்டை பண்ணத் தேவையில்லை யென்று திட்டம் பண்ணி யிருக்க, அவர்கள் அத்து தப்பி வேலூரின் பேரிலே சண்டைக்குப் போற மட்டுக்கும் பிரான்சுக்காரரும் அவனுக்கு மத்தத்தாய் பவுன்சு முஸ்தீப்பு பண்ணிக் காட்டு மேட்டிலே போயிறங்கி அங்கேயிருந்து சாகிப் போறதாய் சேதி கேழ்விப்பட்டுது.

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே வேலூரானுடைய கடுதாசி துரை பேருக்கு வந்துது. அதைக் கொண்டு வந்து முசியே திலார்ஷு குடுத்த விடத்திலே, அந்தக் காயிதம் படித்துப் பார்த்தவிடத்திலே, "யிங்கிலீசுக்காரரும் மமுதல்லி கானும் பிறப்பட்டு யென் கோட்டையைப் பிடிச்சுக் கொள்ளத் தக்கதாகவும் கிராமங்களெல்லாம் கொள்ளையடிக்கிறார்களென்றும்," யெழுதி யிருந்தது. அதைப் பார்த்துக் கொண்டு, "முன்னே தானே றங்கப்பனுடனே (சொல்லி) முறுத்தி சல்லிகானுக்கு யெழுதி யனுப்(பச் சொன்னேன்). அவனும் யெழுதி யனுப்பினான். (பிறகு ஏன் முர்த்தசா அலி கான் பதில் எழுதாமல் விட்டுவிட்டான்?" என்று முசே லெறி கேட்டார்.) அப்பால், முசியே தொத்தேலை அழைப்பிச்சு பவுன்சு தயார் பண்ணி அனுப்பச் சொல்லி உத்திரவு குடுத்தார். அப்படிக் கடுதாசி யெழுதி வேலூருக்கு அனுப்பினார்கள்.

### *1756 வருசம், சனேர் மாசம், தேதி 30; யுவ வருசம், தை மாசம், தேதி 20; சுக்கிரவாரம்*

இத்தனாள் யெட்டு மணிக்கி கோட்டைக்கிப் போய் துரை அவர்கள் தென்னண்டை பாரிசம் நெடுஞ்சாலையிலே ஒலாத்திக் கொண்டிருக்கச்சே நான் போயாசாரம் பண்ணினேன். அப்போ பறங்கிப்பேட்டை சின்ன கப்பித்தான் வந்து கண்டான். தான் சதிரங்கப்பட்டணத்துக்குப் போயிருந்து மறுபடியும் பறங்கிப்பேட்டைக்கிப் போறோம், யேதாகிலும் கவை காரியம் உண்டானால் சொல்ல வேணு" மென்று (அவன்) உபசாரமாய்ச் சொன்னதுக்கு, தொரை நல்லது அந்தப்படி யேதாகிலும் உண்டானால் யெழுதியனுப்புகிறோம் யென்று உபசாரமாய்ச் சொன்னதேயல்லாமல், அவனை மத்தியானமிருந்து சாப்பிட்டுப் போமென்று சொன்ன வரல்ல. யெப்போதும் யிங்கிலீசுக்காரராவது ஒலாந்தாக்காரராவது வந்தால் மத்தியானமும் சாப்பிட்டு, ராத்திரியும் சாப்பாடு பண்ணி விச்சு அனுப்புகிறது வாடிக்கை. யிவர் அந்த வாடிக்கை யில்லாமல் வந்தவர்களைச் சும்மா உபசாரம் சொல்லி அனுப்பிவிடுகிறார். அதின் பிறகு பறங்கிப்பேட்டை சின்ன கப்பித்தான் மிஞ்ஜேர் சாகோபி (Mijnheer Jacobi?) யென்கிறவர் யென்னைப் பார்த்து, "நீர் தானா

ரங்கப்பிள்ளை?" யென்று கேட்டார். ஆமென்று சொன்னேன். அதுக்கு அவர், "நீர் முன்னாலே பறங்கிப்பேட்டையிலே வந்திருந்த போது ஒலாந்தா பெத்திரி கப்பித்தான்மார்களுக்கும் உமக்கும் மெத்த சினேகமாய் நடந்தது நாம் அறிவோம். யிப்போதும் தயவு வைச்சு நடப்பிச்சுக் கொண்டு வருகிறதும் நன்றாய் அறிவேன். இனிமேலும் சினேகம் புரோவிறுத்தியாய் நடக்க வேணு," மென்று சொன்னதுக்கு, அந்தப்படியே சினேகிதம் புரோவிறுத்தியாய்.... காகித முகாந்திரத்திலே நடக்கவேணும் யென்று ரொம்ப ஒபரிகசாம் சொல்லி, அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு யிப்பறம் வந்தேன். அவரும் அவருட மகனும் பிறப்பட்டுப் போனார்கள்.

அப்பால் துரையவர்கள் அந்தண்டைப் பிறமாய்த் தானே பிறப்பட்டு, சமாச்சாரம் கேட்டுக் கொண்டே தம்முடைய காம்பிராவிலே போய் நுழைஞ்சு உள்ளே போனார். ... முசே மீரா அதுக்கு முன்னே ஒரு கடுதாசி குடுத்தார். அதைப் பார்த்து அதிலே கையெழுத்துப் போட்டு (அனுப்பச் சொல்லி என்னிடம் கொடுத்துவிட்டு), கும்மாந்துமார்கள் அங்கங்கே யிருந்த பேர்கள் பிராது யெழுதுகிறார்களென்று சொன்னார். "யிந்த மட்டுக்கும் அவர்கள் பிராது யெழுதினது தெரிஞ்சிருக்கிறது. நானும் (விளக்கம்) யெழுதிக் குடுத்ததும் தெரிஞ்சுயிருக்கிறது. யிப்போ பதினஞ்சு நாளாய் (அறுவடைக் காலமாய் இருக்கிறபடியினாலே) யிந்த வேளையிலே பத்துப் பணம் சம்பாதிக்கலாம் யென்று யில்லாத ரோஷ்ட்டுகள் (தொல்லைகள்) பண்ணுகிறார்கள். அதினாலே அங்கேயிருக்கிற நம்முடைய மனுஷர் (பிள்ளையின் அமுல்தார்கள்) பிறப்பட்டு வந்து விடுகுறோமென்று யெழுதுகிறார்கள். யிதைத் தங்களுடனே யெச்சரிச்சால் யென்னமாய்த் தோத்துமோ யென்று, பயாவாறாய்க் (விரிவாக) கடுதாசியிலே யெழுதியிருக்(கிறேன்)," யென்று யிருந்த காகிதத்தைக் குடுத்து, சொன்ன சேதி என்ன வென்றால், "நானும் வெகுதூரம் பிராதுப் பண்ணிக் கொண்டு தான் யிருக்கிறேன். தாங்களும் வெகு தரம் தாக்கீது யெழுதி அனுப்பினீர்கள். ... (இருந்தாலும்) அங்கே சரிப்போனபடி (தங்கள் இஷ்டப்படி) நடத்துகிறார்கள். உங்களுக்கு அடிக்கடி யெச்சரிச்சால் தங்கள் மனசிலே வியாசடை வரப்போகுதென்று பார்த்தால், பணம் முழுகிப் போகுது. யென் பேரிலே சீமை தலையாகுது (சீமைக்கு நான் பொறுப்பாளி). யினிமேல் பணம் செல்லாவிட்டால் அப்போ யென்னைக் கண்டிப்பீர்களென்று, யிப்போ அவர்கள் நடப்பிக்குற அங்காமெல்லாம்(?) யிந்தக் காகிதத்திலே எழுதி யிருக்கிறதைப் பார்த்துக் கொண்டால் தங்கள் சித்தத்துக்குத் தெரியவரும். யிப்போது அங்கங்கே யிருக்கிற கும்மாந்தாமுகளுக்கு யிந்த வழி வரத் தேவையில்லை யென்று யெழுதி யனுப்புகிறது; யில்லாவிட்டால் தாலூக்குத் தாலூக்கு வரவேண்டிய பணத்துக்குக் கணக்கெழுதிக் குடுக்கிறேன், அப்படிக்கி அவர்களைத் தானே அமுல் பண்ணிக் கொள்ளச் சொல்லிக் கும்பினீருக்குப் பணம்

முதலீட்டுக் கொள்ளுங்கோள் (வசூலித்துக் கொடுக்கச் சொல்லுங்கள்)," யென்று அறுவரியாய்ச் (தெளிவாய்ச்) சொன்னது மல்லாமல், சென்றதுக்கு (நான் செலுத்திய தொகைக்கு) றெசீது குடுங்கோளென்றும் சொன்னேன். "அதுக்கு யிது சமயம்.[1] ஒரு மாதம் போய் விட்டு தானால் பணம் வருகிறது பிரயாசம் (பின்னால்) குடியான பேர்கள் கையிலே பணம் வாங்கிறது அரிது. ஆனபடியினாலே யித்தனை உறுதியாய்ச் சொல்லுகி(றேன்). யிது முதலான சேதிகளெல்லாம் யிந்த மூணு கடுதாசியிலே வயணமாய் யெழுதியிருக்கிறேன். அதைப் பார்த்துக் கொண்டு தங்கள் சித்தத்துக்குச் சரிப்போனபடிப் பார்த்துக் கொள்ள வேண்டிய," தென்று (மேலும்) சொன்னேன். யிதுவுமல்லாமல், அந்தக் கடுதாசியைப் பாத்துக் கொண்டு ரெண்டிலே ஒன்று சொல்ல வேணுமென்று சொன்னேன். அதன் பிறகு அதை ரெண்டு தரம் படிச்சுப் பார்த்துக் கொண்டு ரொம்ப வியாசடைப்பட்டு, அந்தக் கடுதாசியை அங்கே யிருக்கிற கொம்மாந்தாமுகளுக்கு யெழுதுகிற கடுதாசிகளின் நகல் தஸ்ரத்திலே வைச்சு, யிதுக்கு ஒடுதி குடுக்குறேன் யென்று சொ(ன்னார்.)

"மமுதல்லி கான் தன் கோட்டையை வாங்கிக் கொள்ளுகிற சமயமானபடியினாலே, நேத்தைக்கு வேலூரான் சூத்துக்குத் தண்ணீர் வந்த பிறகு, யிப்போ யெழுதி யனுப்பிவிச்சான், பாத்தியா?" யென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "யிந்த முறுத்த சல்லிகான் மாத்திரமல்ல, துலுக்கருடைய சுபாவம் யெல்லாம் அப்படித்தான். யிந்த துலுக்கருடைய சுபாவம் அறிஞ்சு அடக்கிக் கொண்டு வருகிறது முசே துப்பிளேயிக்சுக்கு மாத்திரம் தெரியுமே அல்லாமல், பின்னை யொருத்தருக்கும் தெரியாது. ஆனால் நீங்கள் துவக்கினீர்களே, யினிமேல் துலுக்கருடைய சுபாவம் அறிஞ்சு நடத்துவீர்களென்று தோணுது," யென்று சொன்னேன். அதுக்கு அவர் சொன்னது, "மெத்த அவிசுவாசக்காரர், மெத்தவும் சத்தியமில்லாதவர்கள். யிவர்களுக்கு யென்ன உபகாரம் பண்ணினாலும் யிவர்கள் றெகோனேசமெத்தைப் (நன்றி) பாராட்டமாட்டார்கள்," யென்று சொல்லி, யிந்த துலுக்கருடைய பிறஸ்தாபமும் சந்தாசாயபு பிறஸ்தாபமும் நாசறு சங்கு பிறஸ்தாபமும் யிப்போ றசா சாயபு பிறஸ்தாபமும் அவர் சொல்ல நான் சொல்ல அரை நாழிகை தேச காலம் நடந்துது. அப்பால் நான் சொன்ன உத்திரம், "யிப்போ நீங்கள் அனுப்பின பவுன்சைத் தொட்டு வேலூர்க் கோட்டை வாங்கிறதும் தப்பித்து, சேத்துப்பட்டு சம்மதியும் தப்பித்து, யெலவானசூர் கில்லாவும் தப்பித்து, தத்க்காலம்(?) யிந்த மூணு பேரும் சுகப்பட்டதுக்கு அவர்களாய் உம்மை நன்றி தோத்திவிக்கத் தக்கதாகத் தாங்கள் ஒடுதி கொடுத்தால் பண்ணுகிறே," னென்று சொன்னேன். "ஆனாலவர்கள்

---

[1] 'இது அறுவடை மாதமானதால்.'

சின்ன மனுஷர்கள். நன்றி பாராட்ட மாட்டார்கள். நீ சொன்னதும் நியாயம் தான். அந்தப்படியே யெழுதியனுப்பு," யென்று சொன்னார். அப்பால் நான் சொன்னது, "சேத்துப்பட்டு கில்லாவின் பேரிலே போய் யிறங்கி யிருந்த பவுன்சுக்கு யெசமானாக யிருக்கிறவனுக்கு ஆற்காட்டிலே யிருந்து அறக்காறர் ஒட்டகம் வந்ததின் பேரிலே, அந்தச் சேதியைப் பார்த்துக் கொண்டு அங்கே யிருந்த பவுன்சு பிறப்பட்டுப் போகுதென்று வந்தவாசி அமுல்தாரன் யெழுதியனுப்பினான்," யென்று சொன்னேன். அதுக்கு அவர் நகைச்சு, கையற்திக் கானும் அப்படித்தான் போவானென்று சொன்னார்.

அதின் பேரிலே கலகம் சுறுக்கானால் பிடவை வருகுறது வருத்தம் (தாமதம் ஆகும்). வர்த்தகரை அழைச்சு பிடவை சுறுக்காய் அழைப்பிக்கச் சொல்லி (நீர்) கண்டிக்கயில்லை யென்று வெகு கோபமாய் உத்திரம் சொன்னார்.

## பிப்ரவரி 1756

*1756 வருசம், பிப்றயோர் மாசம், தேதி 1; யுவ வருசம், தை மாசம், தேதி 22; ஆதிவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், தேவனாம்பட்டணத்திலே நாற்பது அன்பது கூடாரம் ஆத்தங்கரை யோரத்திலே போட்டார்களென்றும், இன்னம் நாற்பதன்பது கூடாரம் முஸ்தீப்பு ஆகுதென்றும் புதுசாய் சீமையிலே யிருந்து வந்திருக்கிற சொலுதாதுகளிலே பத்து கும்பினீர் அன்னூறு பேர் முஸ்தீப்பு பண்ணி, ஒரு மோறதியும் (mortar) ரெண்டு பொம்பும் (இவை இரு வகை சிறுபீரங்கிகள்) பதினெட்டு ராத்தல் குண்டு ஒடுகிற பீரங்கி ரெண்டும், பனிரெண்டு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கி ரெண்டும், மீனுயித்துப் (minute) பீரங்கி நாலு அஞ்சும் இப்படியெல்லாம் முஸ்தீதாய்ப் பிறப்பட்டு யெலவாச நெல்லூரின் பேரிலேயும் (வேலூரின் பேரிலேயும்) போறதாகவும் சொல்லிக் கொள்ளுகிறார்களென்று யெழுதி வந்தது.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி, முசியே சொபினேயைச் செஞ்சி யண்டையிலே போகச் சொல்லிப் போகச்சே, ஒபிசியால்மார்களை யெல்லாம் குதிரைகள் பேரிலே யேறிக் கொண்டு பாறுக்கு முன்னே போகச் சொன்னதாகவும், குதிரைக ளில்லாதவர்களை நடந்து போகச் சொன்னதின் பேரிலே, ஒபிசியால்மார்களுக்கும் முசியே சொபினேயிக்கும் பேச்சு நடந்து, ஒபிசியால்மார்கள் முசியே சொபினேயைக் குத்திப்போட்டதாகவும், அவன் குத்தப்பட்டுச் செத்துப் போன சேதி முசியே லெறி கோவர்ணதோருக்கும் முசியே பெடுத்தல்மீக்கும் யெழுதி வந்ததென்று செஞ்சியி லிருக்கிற அமுல்தாரர்கள் எழுதினார்களென்று கபுறு சொன்னார்கள். ஆனாலவன் முசியே துப்பிளேயிக்கு நாளை தொட்டு யிருந்தாலும், முசியே லெறி கோவர்ணதோர் துரைத்தனத்திலே மயோர் உத்தியோகம் குடுத்ததின் பேரிலே அவன் சொலுதாதுகளை நிறுத்தாஷ்ஷண்யமாய் அடிக்கிறதும், ஒபிசியால்மார்களெல்லாரையும் சீர்மைச் சட்டமாய் அவனவன் (கடுதுகளை—guards) அவனவன் சாக்கிறதையாய் (கண்டிப்புடனே நடத்தச் சொல்கிறதும்), பவுன்சுகளையும் துலுக்கச் சிப்பாயிகளையும் பழக்கிவிக்கிற சாடையும் இவனைக் கண்டால் யெமதர்ம ராசாவைக் கண்ட பிராணிகள் நடுங்குறாப்போலே சொலுதாதுகளும் ஒபிசியால்மார்களும் நடுங்குறதும், சொலுதாதுகள் யிவன் கையடியினாலே செத்துப்போனவர்கள் அனேகம் பேர்கள், காலொடிஞ்ச பேர்கள், கை யொடிஞ்ச பேர்கள், விலாவிலே காயம்பட்டு செத்துப் போன பேர்கள் எத்தனையோ பேர்கள், யிந்தப்படிக்கி

அடிபடமாட்டாமல் சொலுதாதுகள் சிப்பாயிகள் சமேதார்கள் உத்தியோகம் விட்டு ஓடிப்போனவர்கள் எத்தனையோ பேர்கள். சிப்பாயிகளையும் சொலுதாதுகளையும் பொழுது விடிந்தால் நட்டுவன் பாத்திரங்களை ஆட்டுவிக்கிற பாவனையாய் நாட்டியமாடிவிச்சுத் தீர்ப்பான். யிப்படி ஒரு நாடகங் கட்டி ஆடிவிச்ச பாவனையாயி பத்து மாசம் ஆட்டிவிச்சு, பாறுக்கு உச்சமேத்தராயிருந்த (மேஸ்திரி) பெண்ணாத்தூர் சாமாராயன், மகாதேவய்யன், சயிது உசேன், (பின்னும்) கும்மாந்தாம் வகையிராக்களை முன் முசியே பெடுத்தல்மீ ராமனுக்குப் பத்துப்பணம் விசேஷிச்சுக் குடுத்த சாடைகள் முதலானது யெல்லாம் முசியே லெறி கொவர்ணதோருக்குச் சொல்லி, அப்பால் மூணு மாதமாய் அந்தச் சம்பளம் தான் குடுக்குறோமென்று வாங்கிக் கொண்டு, அவர்கள் கையிலே பத்துப் பணம் விசேஷிச்சு வாங்கி, கடைசியிலே அணைந்து போற தீபமானது சோபிச்சு அணைஞ்சு போன பாவனையாயி, ஒபிசியால்மார் செஞ்சிக்கிப் போனவிடத்திலே குத்திப்போடச் செத்துப் போனான் யென்று செனங்கள் சொல்லிக் கொண்டார்கள். ஆனாலிந்த மூணு மாதத்துக்குள்ளே முசியே சொபினே அன்பதினாயிரம் ரூபாய் சம்பாதிச்சானானால், முசே பெடுத்தல்மீ முசே கொதே நாள் முதற்கொண்டு சிப்பாயிகள் ஒரு ஒரு சமேத்துக்கு (சமேதாரின் கீழே) யிறநூறு பேர் யிருக்கிறதுக்கு நானூறு பேர்களாய் யெழுதி யெடுத்துக் கொண்ட சம்மதியிலேயும், குதிரைச் சுவார்களிலே மூணத்தனை நாலத்தனை யெடுத்துக்கொண்ட சம்மதியிலேயும், சம்பளத்திலேயும் பவ்வாதி (பாதி பாதி) யெடுத்துக் கொண்ட சம்மதியிலேயும், முசே கொதே நாளையிலே மூணு மாசம் நாலு மாசம் சம்பளம் முச்சூடும் சிப்பாயிகளுக்கும் சுவார்களுக்கும் குடுக்கவேண்டியது குடாமல் நிறுத்திப்போட்டு, அதை முசியே பெடுத்தல்மீ யெடுத்துக் கொண்டதின் பேரிலே, அவர்கள் சேவுகத்தையே விட்டுவிட்டுப் போன சம்மதியிலேயும், முசியே துப்பிளேயிக்சு நாளையிலே பாப்பய்யப் பிள்ளை அமுலிலே பெண்ணாத்தூர் சாமாராயன் வகையிராக்கள் சீர்மை அமுலும் பவுன்சும் வைத்துக் கொண்ட சம்மதியிலேயும், முசியே பெடுத்தல்மீ வாங்கி வாங்கிக் கொண்டு சம்பாதிச்சதானால் அஞ்சு லக்ஷம் ரூபாய்க் காணும். மேல்ப்படி(யாரின்) துபாசி ராமன் சம்பாதிச்சது லக்ஷம் ரூபாய்க்கு அதனமே யுண்டு. யிதுக்குக் கணக்கு அத்தாட்சி ருசுவுடனே யிருக்குது. ஆனால் கும்பினீருக்கு நஷ்ட்ட காலம் வந்த பிராப்த்தியானபடியினாலே முசியே துப்பிளேயிக்சு யென்கிற சிங்கம் போகவும், யிப்படி நானாவிதமாய் தலைக்குத் தலை பெரியதனமாய்க் கும்பினீர்ப் பணம் பின்னையும் அனேகவிதமாய் லக்ஷலக்ஷக் கணக்காய் அரும்பாத்தை முதலான தமிழ்க் கணக்கரும் வெள்ளைக்காரரிலே யெந்த யெந்த உத்தியோகத்திலே யிருந்தவர்கள் அந்தந்த உத்தியோகத்திலே லக்ஷலக்ஷக் கணக்காய் சம்பாதித்தார்கள். சிப்பாயிகள், குதிரைச் சுவார்கள் சம்மதியிலே

யிப்படியானால், யிப்படி யெத்தனைக் காரியமிராது. அது அதுக்கு அந்தப்படி தான் அபகரித்துக் கும்பினீரை ஓட்டாண்டியாக்கி விட்டார்கள். முசியே துப்பிளேயிக்சு தான் கொண்டு போனாரே யல்லாமல் பின்னை யொருத்தரும் கொண்டு போக வொட்டாமல் கும்பினீரை ஓட்டையாக்கி, தமிழரிலே பாப்பய்யப் பிள்ளை ஒருத்தன் கொண்டு போனான். (அவனும்) திருடிக்கொண்டு போன சாடையல்லாமல் வேறே மார்க்கமாய் (சம்பாதித்தான்). இப்படி காலானு கூலமாய் நடந்துதென்று செனங்கள் சொல்லிக் கொண்டதை, கேழ்விப்பட்டதை, யெழுதி வைத்தேன்.

முசியே சொபினேயைக் குத்தினது நேத்து 21 தேதி சனிவாரம் **1756** வருசம் பிப்றயோ் மாசம் தேதி **1** யென்று சொன்னார்கள்.

நேத்திய தினம் தானே வழுதாவூர் வாசற்படி வடவண்டையிலே யிருக்கிற செட்டித் தெருவிலே, ஒரு செட்டி வீட்டுத் தின்னையின் பேரிலே ஒரு கூலிக்காரன் படுத்துக் கொண்டிருந்தவனை சொலுதாதுகள் குத்திப்போட்டு கிணத்திலே போட்(டார்கள். அவனை) யித்தனாள் யெடுத்து முசியே தெபொசேத்து, கிறேப்பியேர்[1] முசியே தேனோதியேர் (M. des Naudieres), மேஸ்திரிகள் (தலைமை சர்ஜன்) போய்ப் பார்த்து சுட்டுப் போடச் சொல்லிச் சொன்னார்கள். யிப்போ யிப்படிப் பட்டணத்திலே நடக்கிற அக்கிரமக் கிறுத்தியத்தைத் தொட்டு யென்ன அசுபத்துக்கு யேஷியமாய் நடக்குதோ தெரியா தென்று செனங்கள் சொல்லிக் கொள்ளுகிற பேச்சைக் கேட்டெழுதி வைத்தேன். சுவாமியினுட சித்த மெந்தந்த வேளைக்கு யேதேது நடக்க வேணுமோ அது நடந்தல்லவோ தீரும். யிந்தக் காலம் யிப்படி நடக்குது. யினிமே லென்னமா நடக்குமோ, நடக்கயிருக்குதோ அறியவேண்டியது.[2]

***1756 வருசம், பிப்றயேரி மாசம், தேதி 2; யுவ வருசம், தை மாசம், தேதி 23; சோமவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசே லெறி கோவர்ணதோர் அண்டைக்குக் கோட்டைக்குப் போனவிடத்திலே, அவர் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு, சின்ன துரை முதலான கோன்சேலியேர்கள் ஒபிசியால்மார் வகையிராக்கள் மச்சிலிபந்தரிலே தொரைத்தனம் பண்ணின முசே மொற்சேன் (M. Moracin), மேற்படியார் பிறகே வந்த முசே லசேல் (M. La Selle) வகையிராக்கள் கூட கோவற்ணமாமிலே வந்தவுடனே, நானும் கும்பினீர் வர்த்தகர்களும் வந்திருந்தார்கள்.

[1] greffier–கோர்ட் ரிஜிஸ்ட்ரார்.

[2] மக்களின் இன்னல்களையும் தனிநபரின் இன்னல்களையும் இப்படிப் பலவிடங்களில் பிள்ளை விவரித்துள்ளது அவரது பண்பினை அறிந்து கொள்ள உதவுகிறது.

அவர்களும் விசயராம ராசா மனுஷருடனே கூட (வந்த) பின்னையும் அனேகம் முத்தசத்திகளுடனே (குமாஸ்தாக்கள்) போய் சந்திச்சு ஆசாரம் பண்ணின உடனே, அப்பால் அவரவர் போனவுடனே, பிறகு முசே பெடுத்தல்மீ மேல் வீட்டின் பேரிலே யென் கிட்ட வந்து, "உன் பெரிய தகப்பனார் பேரன் வெங்கிடாசலம் சாவடி பெரிய துபாசித்தனம் பண்ணினதிலே யிருந்தவன் காலம் பண்ணிப் போனானே அவனிடத்துக்கு உங்கள் உறைமுறையிலே உங்கள் வீட்டுப் பிள்ளைகளிலே ஒருத்தனை வைத்துக் கொள்ளச் சொல்லி முசே லெறி கோவர்ணதோர் உத்தாரம் குடுத்தார். அந்தப்படிக்கி நீராரை அனுப்பிவிக்கிறீரோ அனுப்பிவியு," மென்று சொன்னார். "செத்துப்போன வெங்கடாசலத்தினுடைய கருமாந்திரம் புதவாரத்தி நன்றைக்கிச் செய்யுறோம். பிறகஸ்பதி வாரத்தினன்று (வேறொருவன் பெயரை) அனுப்பிவிக்கிறேன்," யென்று சொன்னேன். "அப்படியே செய்யும் முசே லெறி கோவர்ணதோர் உத்திரம் குடுத்துத் தீந்தது. யினி மேல் நானவன் பேர் வைத்து கணக்கிலே யெழுதி மாசாமாசம் சம்பளம் குடுக்கச் சொல்லிச் சொன்னே," னென்று சொன்னார். "உங்கள் தயவும் கோவர்ணதோருடைய தயவும் யிருக்கச்சே கேழ்க்கவேண்டிய தென்ன?" வென்று அதுக்கு உபசாரம் சொன்னேன். அப்பாலவர் போன பிற்பாடு ....

### *1756 வருசம், பிப்றவரியே மாசம், தேதி 10; யுவ வருசம், மாசி மாசம், தேதி 2; செவ்வாய்*

இத்தனாள் காலத்தாலே கும்பினீர் வர்த்தகர்களுந்து யானத்துப் பிடவை பார்வையான படியினாலே, யேழு மணிக்கிக் கோட்டைக்கிப் போனவிடத்திலே முசே லெறி கோவர்ணதோரவர்கள், முசியே பெர்த்தலமீ வகையிராக்கள் பிடவை பார்வையிலே வந்திருந்தார்கள். அப்போ முசே லெறி கோவர்ணதோர் கையிலே ஆற்காட்டு வேலூரிலே யிங்கிலீசுக்காரர்கள் நடப்பிக்குறதும், மமுதல்லி கான் நடப்பிக்கிறதும் முதலான சேதிகளும், வேலூர் கோட்டையை இங்கிலீசுக்காரர்கள் சுத்தி வளைத்துக் கொண்டு மோற்சா (முற்றுகை) போடுகிறதும், நம்முடைய பிரான்சுக்காரர் பவுன்சு வராமல் வழிகட்டி யிருக்கிற சம்மதியும், அப்பால் வேலூர் கோட்டையிலே யிருக்கிற பிரசை(கள்) பிறப்பட்டு ஆற்காடு சதுரங்கப்பட்டணம் சென்னப்பட்டணம் முதலான யிடங்களுக்குப் போய்ச் சேருகிறதும், மீர் சத்து சமுசாரத்தை மாத்திரம் விடாமல் பத்திரம் பண்ணினதும், சென்னப்பட்டணம் முதலான யிடங்களில் யிருந்து சொலுதாதுகள் சண்டை சரன்சாமிகள் மருந்து குண்டுகள் வகையிரா போகுறதும், கையிற்தின் கான் (யிலவானசூர்) மீர் அப்துல் றயிமான் பேரிலே சண்டைக்குப் போய் திருவண்ணாமலையிலே யிறங்கினவன்

மறுபடி மமுதல்லி கானண்டைக்கு ஆற்காட்டுக்குப் போய்ச் சேர்ந்ததும், முறுது சல்லிக்கானை (மிர்த்துசா அலி கானை) யிங்கிலீசுக்காரர்கள் இரெண்டு லக்ஷம் ரூபாய் கேட்டதுக்கு, ரொக்கமில்லை, லக்ஷம் ரூபாய்க்குத் தினிசுகளாய் குடுக்கிறோமென்று சொ(ன்னதும்), முறுத்து சல்லிக்கான் புதுச்சேரிக்குக் கும்முக்கு சீக்கிரமத்துக்கு அனுப்பச் சொல்லி லக்ஷம் ரூபாய்க் குடுக்குறோம் யென்று உடம்படிக்கையும் யெழுதிக் கொண்டு குடுத்து, முசியே திலார்ஷு (வசம்) தறுபாறுகறுசு (துர்பார்ச் செலவு) அன்பதினாயிரம் ரூபாய் ஒப்பினதும், தவிர மத்த சம்மதி யெழுதினதும், தேவனாம்பட்டணத்திலே எழுநூறு சொலுதாதுகள் ... வேலூரின் பேரிலே சண்டைக்குப் போகவேணுமென்று பிறப்படச் சித்தமாய்ச் செம்மண்டலக் கொத்தளத்து அண்டையிலே யிறங்கினாப்போலே அப்பால் போகாமல் யிருக்கிற சம்மதியும், நம்முடைய சீர்மைகளிலே கொம்மாந்துமார்கள் பண்ணுகிற ரோஷ்ட்டுகளும், முன்னாலே அனேகந்தரம் எழுதிக் குடுத்தாப் போலே யிப்போ தற்காலம் பண்ணுகிற சோராவரியும் இப்படி நடந்தால் அறுப்பு நாளையிலே லக்ஷக் கணக்காய் முழுகிப் போய் கும்பினீர் பணஞ் செல்லாமல் (வசூலாகாமல்) போனால் என்னைக் கேட்பதில் பிரயோசன மென்னவென்று வரையாறவாய் யெழுதி கொம்மாந்தாக்கள் கையிலே அறுவிட்டுக் கொள்ளச் சொல்லி யெழுதின சம்மதிகள் முதலான காயிதங்கள் குடுத்ததுக்கு, கோவர்ணதோர் படித்துப் பார்த்துக் கொண்டு உத்தரஞ் சொல்லாமல் அவரவருடனே பேசியிருந்து மேல்வீட்டின் பேரிலே போனார்.[1]

### *1756 வருசம், பிப்ரியோர் மாசம், தேதி 11; யுவ வருசம், மாசி மாசம், தேதி 3; புதவாரம்[2]*

இத்தனாள் மால் தீவுக்குக் கப்பல் பயணமாயிப் போய் விட்டது. மால் தீவு ராசா மனுஷன் ஸ்தானாபதியாய் வந்தவனும் யேறிப் போனான். இவன் பிறகே ஆறு பேர் மால் தீவிலேயிருந்து வந்தவர்கள் செத்துப்போய், யிவன் மாத்திரம் ஒண்டியாய் மறுபடி அவர்களூருக்குப் போனான்.

### *1756 வருசம், பிப்ரியோர் மாசம், தேதி 13; யுவ வருசம், மாசி மாசம், தேதி 5; சுக்கிரவாரம்*

இத்தனாள் சாயங்காலம் வந்தக் கபுறு: வேலூரின் பேரிலே யிங்கிலீசுக்காரர் பவுன்சுலே யிருந்தும், பெரிய மனுஷரிலே வெள்ளைக்காரர் இரெண்டு பேர் மூணு பேர் மமுதல்லி கான் தரப்பிலே யிருந்தும் சிறிது துலுக்கருக்குள்ளே பெரிய மனுஷரும் போய் வேலூர்

---

[1] பிள்ளையின் இன்னுமொரு நீண்ட வாக்கியம்.

[2] இத்தலைப்பு நமது பிரதியில் விட்டுப் போயுள்ளது.

கோட்டைக்குள்ளே யிருக்கிற மிறுத்திசல்லிக்கானுடனே சமாதானம் பேசி ரெண்டு லக்ஷம் ரூபாயாப்த் தீந்து, யிங்கிலீசுக்காரர் பவுன்சு முன் மோற்சா போட்டயிடம் விட்டு இப்பால் நாலு நாழிகை வழியிலே கண்ணம்பாடி யென்கிற கிராமத் தண்டையிலே வந்து யிறங்கினதாகவும், நம்முடவர்கள் பிரான்சுக்காரர் பவுன்சு பத்தேபேட்டைக்கு அப்பிறம் திருவீதி பாலி செட்டி சத்திரத் தண்டையிலே தானே யிறங்கியிருக்குதென்றும், நம்முடையவர்கள் நம்முடைய சீர்மையைத் தானே கொள்ளையிட்டு லூட்டி பண்ணிக் கொண்டிருக்கிறார்கள் யென்றும் யெழுதி வந்தது.

தேவனாம்பட்டணம் சேதி: யெழு நூறு சொலுதாதுகளும் சரன்சாமிகளும் திருப்பாப்புலியூரண்டையிலே யிருக்கிற செம்மண்டைக் (செம்மண்டலக்) கொத்தளத்திலே யிறங்கி யிருக்கிறார்கள் யென்றும், வேலூரின் பேரிலே போகச் சண்டைச் சரன்சாமிகள் தயாறு பண்ணுகிறார்க ளென்றும் சேதி வந்து கொண்டும் யிருந்துதே, யித்தனாள் வந்த சேதி, போற பிரயாணத்தை நிறுத்திப் போட்டு சரன்சாமிக ளெல்லாம் கிட்டங்கியிலே சேர்க்கிறார்களென்றும், யெருதுகள், கூலிக்காரர்கள் சேத்து வைத்திருந்துதே அதுகளெல்லாம் கவையில்லை யென்று போகச் சொன்னார்க ளென்றும் சொன்னார்கள்.

*1756 வருசம், பிப்றேயர் மாசம், தேதி 14; யுவ வருசம், மாசி மாசம், தேதி 6; சனிவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : "வேலூரின் பேரிலே நீங்கள் சண்டைக்குப் போக வேண்டிய காரியமென்ன? உங்களுக்கும் யெங்களுக்கும் பதினெட்டு மாதம் ஆயுத மெடுத்துச் சண்டை பண்ணத் தேவையில்லை யென்று உடம்படிக்கை யாயிருக்கச்சே வேலூரார் பேரிலே சண்டைக்குப் போக வேண்டிய காரியமென்ன? பேஷ்கஷுப் பணம் கேழ்க்க வேண்டிய கவையில்லை. பின்னையும் செமிதாறர் (சமீன்தாரர்கள்) வகையிராக்களைப் பணங் கேட்டு வாங்கினதுமல்லாமல் நீங்கள் அத்து தப்பி நடத்தினால், நாங்களுங்கள் பேரிலே சண்டை பண்ணுவோ," மென்று (பிரெஞ்சுக்காரர்) எழுதியனுப்பினதுக்கு, சென்னப்பட்டணம் கோவர்ணதோர் மேஸ்தர் பிக்கட்டு (Mr. Pigot) பதிலுத்தரம் எழுதினது : "நாங்கள் பேஷ்கஷு வாங்கிறது அப்படித்தான். நீங்கள் பவுன்சு தடை பண்ண அனுப்பினால் உங்கள் புதுச்சேரியின் பேரிலே பவுன்சு அனுப்புவோ," மென்று எழுதினதாய்ச் சேதி கேட்டேன்.[1] யினி மேலவர்கள் என்ன யோசனை பண்ணுவார்களோ அறியவேண்டியது.

---

[1] ஆங்கிலேயர் தமது வலிமையையும் பிரெஞ்சுக்காரரின் பலவீனத்தையும் நன்கு உணர்ந்து விட்டனர்.

***1756 வருசம், பிப்றேயோர் மாசம், தேதி 20; யுவ வருசம், மாசி மாசம், தேதி 12; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலத்தாலே கும்பினீர் வர்த்தகர்கள் செலவா (சலவை செய்யாத) கிண்டன் வகையிரா கட்டுப் போட்டபடியினாலே, நான் கோட்டைக்கு யேழரை மணிக்குப் போனவிடத்திலே, பிடவைப் பார்க்கிற சாலையிலே முசே பெடுத்தல்மீ, முசியே கில்லியார் வகையிராக்கள் கோன்சேலியேர்கள், அனைவரும் யிருந்தார்கள். அப்பால் செல்லாப் (துணிகளின் தரம்) பார்த்துக் கொண்டிருக்கச்சே முசே பெடுத்தல்மீ, முசே லெறி கோவர்ணதோர் அவர்களண்டைக்கு மேல்வீட்டின் பேரிலே போனார். நானும் போனேன். அப்போ கோவர்ணதோர் உள்ளே காம்பிராவிலே யிருந்தவர் வெளியே வந்த உடனே முசே பெடுத்தல்மீ யென்னமோ ரெண்டு மூணு வார்த்தை சுறுக்காய்ச் சொன்னாப்போலே கண்டுது. யிவரும் கோபமாய்ப் பிறப்பட்டு பிடவைப் பார்க்கிற சாலையே வந்தார்.

கோவர்ணதோர் விசனமாய் மறுபடி காம்பிராவுக்குள்ளே போனபடியினாலே, யிது சமயமல்ல வென்று நான் பிடவை பார்க்குற சாலையே வந்தேன். முசே பெடுத்தல்மீ பிடவை பார்க்குற சாலையே வந்தவர் முசியே கில்லியார் வகையிரா கோன்சேலியேர்களுடனே யென்னமோ பேசி, கோபமாய் வீட்(டுக்குப்) போயிவிட்டார். முசே பெடுத்தல்மீ கோவர்ணதோருடனே பேசின சுறுக்கும், தாழ வந்து படபடவென்று நின்ற சாடையும், கோன்சேலியேர்களுடனே யெல்லாம் பேசிப்போட்டுக் கோபத்துடனே வீட்டுக்குப் போனது மிந்த சாடை பார்த்தால், யேதோ வொரு விசித்திரம் நடந்து யிருக்க வேணுமென்று யோசனை பண்ணி, வெள்ளைக்காரர் பெரிய மனுஷர்களைக் கேட்டதுக்கு, நேத்தய தினம் முசே பெடுத்தல்மீ ஒரு ஒபிசியால் ஒரு வர்த்தகனை நியாயந் தப்பிதமாய் அடிச்சானென்று சின்ன மயோரை அழைச்சு அந்த ஒபிசியாலைக் காவல் வைக்கச் சொன்னதாகவும், அதுக்கு ஒபிசியால்மார்களும் முசே தொத்தேல் மயோர் செனராலாயிருக்கிறவனும் கூட முசே கோவர்ணதோரண்டைக்குப் போய், ஒபிசியால்மார்களைக் காவல் வைக்குற அதிகாரம் கோவர்ணதோருதே அல்லாமல் சின்னதுரைக்குக் கவையில்லை, அப்படி யிருக்க சின்னதுரை காவல் வைக்கச் சொல்ல ஞாயமென்ன வென்று கேட்டவிடத்திலே, அவர் செய்தது தப்பிதந்தான், காவல் கவையில்லை யென்று சொல்லிப் போகச் சொன்னதாயும், அந்தச் சேதியை முசே தொத்தேல் வந்து முசே பெடுத்தல்மீக்கு நேத்து ராத்திரி சொன்னதாயும், அதின் பேரிலே அவர் காலத்தாலே வந்து கோவர்ணதோர் அவர்களைப் பார்த்து, நேத்து நீர்

யிப்படிச் சொன்னதே தென்று கேட்டாராம். "மெய்தான் சொன்னது, ஒபிசியால்மார்களை நீர் காவல் வைக்க அதிகாரமில்லை," யென்று (துரை) சொன்னதுக்கு "சுஸ்தசுக்கு[1] நான் கர்த்தனானபடியினாலே வெள்ளைக்காரர்க ளெல்லாரையும் காவல் வைக்கலாம், தெண்டிக்கலா," மென்று சொன்னதுக்கு, ஒருக்காலும் நீர் செய்யக்கூடாதென்று முசே லெறி சொன்னதுக்கு, "யென் பிறதேசேசியோராயிருந்த (முன்னிருந்த?) சின்னதுரைமார் யெல்லாரும் நாளது வரைக்கும் யிந்த அதிகாரம் நடத்தியிருக்கிறார்கள், நானும் யின்றை வரைக்கும் நடத்தியிருக்கிறே," னென்று சொன்னதுக்கு, "முன் நடந்தாலும் யிப்போ நடக்க அறியா (கூடாது) தென்று, கோவர்ணதோர் சொல்ல, "அப்படியானால் யிந்த சுஸ்தசுனுடைய உத்தியோகம் யெனக்குக் கவை(யில்லை)" யென்று சொன்னதுக்கு, முசே லெறி குவர்ணதோர் "மெத்தவும் சந்தோஷமாச்சுது. அந்த சுஸ்தசுனுடைய உத்தியோகத்துக்கு வேறே நான் நேமிக்குறே," னென்று சொன்னார். அந்த மட்டுக்கும் அவர் கோபிச்சுக் கொண்டு பிடவை பார்க்குற சாலையே வந்து மத்த கோன்சேலியேர்களுடனே அவ்விடத்திலே நடந்த நியாயமும் சொல்லி, "முன்னாலே யெல்லாம் ஒபிசியால்மார்களுக்குக் கோன்சேலியேர்கள் பெரியவர்களா யிருந்தார்களே, யிப்போ முசே லெறி அவர்கள் நாளையிலே ஒபிசியால்மார்களுக்குக் கோன்சேலியேர்களைத் தாழ்த்தியாய்ப் பண்ணிப் போட்டா," ரென்று அவர்களுக்கெல்லாம் ரோசம் வரத் தக்கதாய்ச் சொல்லிப்போட்டு வீட்டுக்குப் போனார். யிந்தப்படி யெல்லாம் அவ்விடத்திலே யிருக்கிற பெரிய மனுஷர் சொல்லக் கேழ்விப்பட்டேன்.

அப்பால் பிடவைக் கட்டுப்போட்டார்கள். யிருபத்து மூணுகட்டு விழுந்தது. அப்பால் கோன்சேலியேர்களெல்லாரும் வீட்டுக்குப் போனார்கள். முன் கையிருப்புக்கட்டு 1032, நாளது கட்டுப்போட்டது 23. ஆக கட்டு 1055. யிந்தக் கட்டு சீமைக்கப்பலுக்கு முஸ்தீது பண்ணினது. யிப்போ கப்பலுக்கு 1000 கட்டு சரியாய் யேத்தப்பட்டது. குறை அன்பத்தஞ்சு கட்டு கிடங்கிலேயிருக்குது. யின்னம் நாலு மூணு நாளையிலே சேருகிற கட்டும் பாத்துக் கொண்டு சரியாய் 1200 கட்டு யேத்த வேணுமென்று துரை சொல்லிக் கொண்டிருக்கிறார்.

அப்பால் தொரை அவர்கள் யென்னை அழைக்க நான் போனவிடத்திலே அவர் யென்னைக் கண்டவுடனே, அவர் முசே ஷெவிரோ காம்பிராவிலே போய், சிதம்பரத்துக் கொம்மாந்தாம் அஞ்சாரு கடுதாசி யெழுதி அனுப்பினதையும் யெடுத்துக் கொண்டு, தன்னுடைய காம்பிராவிலே போய் உளுக்காந்து, யென்னை அழைத்து, "சிதம்பரம் கொம்மாந்தாம் திருவீதி அமுல்தாரனுக்கு முட்டலூர் பக்கிரி நிமித்தியம்

[1] முய்ஸ்தீஸ் – Justice. சின்னதுரை சாவடி நீதிமன்றத்தில் நீதிபதியாகவும் இருந்தார்.

யெழுதி அனுப்பினதுக்கு, அந்த காகிதத்தை படிச்சுப் பார்த்து சால்சவாபு பண்ண வேணுமே யல்லாமல், வந்த கடுதாசியை யெறிஞ்சுப்போட்டு அவமரியாதை பண்ணி(னான்). அதன் பேரிலே (கொம்மாந்தாம்) சொலுதாதுகளையும் சிப்பாயிகளையும் அனுப்பி (அமுல்தாரனைப்) பிடிச்சுவரச் சொன்(னேன்) யென்று யெழுதினான். அப்படி அந்த அமுல்தாரன் அவமரியாதை பண்ணலாமா?" யென்று கேட்டார்.

அதுக்கு நான் "அப்படி யிராது. முட்டலூர் பக்கிரி யென்கிறவன் அந்தக் கிராமம் தனக்கு யினாம் நடந்தது யென்று சொன்னதின் பேரிலே, அந்தக் கிராமத்தை ஒப்பிடிப் பண்ணச் சொல்லி அமுல்தாரனுக்கு யெழுதினபடியினாலே அந்த கிராமத்தை அமுல்தாரன் ஒப்பிடி பண்ணப் போறானென்று முசே ஒமோ (M. Aumont) வுக்குப் பாதி தருகுறோமென்று சொல்லி போன வருஷம் கல்லல் பண்ணினான். யிப்போ கொம்மாந்தானுக்கு அந்த ஆசை வார்த்தை சொல்லி, அந்த கிராமத்தை விட்டு விடச் சொல்லி யெழுதினதுக்கு, அமுல்தாரன் விடாததினாலே சிப்பாயிகளை அனுப்பி கட்டிக்கொண்டு வரச்சொல்லி கசோத்திலே போட்டு அஞ்சு ரூபாய் அபராதமும் வாங்கிக் கொண்டு விட்டான். யிந்தப் பிராது நான் தங்களுடனே சொல்லப்போறேனென்று, அதுக்கு முன்னே தானே அமுல்தாரனுக்குக் கடுதாசி யெழுதினதாயும், அதை (அவன்) தள்ளிப் போட்டதாயும், தான் பண்ணின குத்தத்தைப் பரிகரிச்சுக் கொள்ளுகிற நிமித்தியம் யெழுதினா," னென்று சொன்னேன். "போ போ நீர் அப்படிச் சொல்லக்கூடாது. கொம்மாந்தாம் நமக்குப் பொய் யெழுதுவானா?" யென்று அதைத் தானே பிடிச்சுப் பேசினார். "கொம்மாந்தாம் (தாம்) பிரயோசனப்படுகிற நிமித்தியம் அமுல்தாரனுக்குக் கடுதாசி யெழுதி அனுப்பிவிச்சான். அதைத் தள்ளிப்போட்டானென்று தங்களுக்குச் சும்மாவாகிலும் யெழுதினால் அதைத் தாங்கள் மெய்யென்று நம்பி யிப்படிப்பட்ட உத்திரம் சொன்னால் யெப்படி? முதலாவது, கொம்மாந்தாமுகள் பேர் சொன்னால் அமுல்தாரர் நடுங்கச்சே கடுதாசியைத் தள்ளிப்போடுவானா? அவனுக்கு யென்ன குத்தது (அதிகாரம் அல்லது தைரியம்) யிருக்குது? யிப்படித் தாங்கள் உத்திரம் சொன்னால் நான் யென்ன செய்யப்போறேன். முன்னாலேயும் அவர்கள் பண்ணுகிற ரோஷ்ட்டுகளை யெல்லாம் எழுதிக் குடுத்திருக்கிற தெல்லாம் தாங்கள் அறிஞ்சுயிருக்க, யிப்படிச் சொல்லுகிறது யென்னுடைய கிரகசாரத்துடய மகிமை, அப்படி கிரகசாரம் சாமான்னியமாயிருக்கச்சே, நான் யெப்படி கும்பினீருக்குப் பணம் செலுத்தப் போறேன்? நான் முகத் தாஷ்ஷனியமாயிருந்தால் நாளைக்கு நான் தொந்தரைப்படுவேன். ஆனபடியினாலே நான் அறுவரியாய்ச் (தெளிவாய்ச்) சொல்லுகிறது யென்னவென்றால், சீமையை அவர்கள் வசத்திலே விட்டுப் பணத்தைக் கும்பினீருக்கு வரப்படுத்திக் கொள்ளுகிறதே அல்லாமல், யிந்த ரோஷ்ட்டுவினாலே (தொல்லையினாலே) பணம் யென்னாலே

கும்பினீருக்குச் செலுத்தமுடியாது," யென்று அறுவரியாய்ச் சொன்(னேன்). (நான்) யெழுதினது கொஞ்சம், சொன்னது ரொம்ப.

(அப்படிச்) சொன்னதின் பேரிலே யென் பேரிலே வேசடையாய் முகத்தைத் திருப்பிக்கொண்டு முட்டலூர் பக்கிரி காரியத்துக்கு யென்ன சொல்லுகுறாய் யென்று கேட்டார். அதுக்கு "முட்டலூர் பக்கிரிக்குக் கிராமமே யில்லை. சாதா சாயபு நாளையிலே சன்னது எழுதிக் குடுத்தானென்று, அந்தப் பக்கிரி யென் கிட்ட வந்து அந்தக் கிராமத்தை அலாதி பண்ணிக் (பிரித்து) குடுத்தால் அப்பணம் செலுத்திப் போடுகிறேன், குத்தகைக்காரன் யேன் கொண்டு போகவேணு மென்று சொன்னான். அதின் பேரிலே அந்தக் கிராமத்தை அலாதி பண்ணி தீத்துக் குடுத்து, சன்னதும் பண்ணி அனுப்பினதுக்கு, யிவர்களுக்கு [1]தமாமும் (முழுமையும் ஏன்) குடுக்க வேண்டுமென்று கொம்மாந்தாமுக்குப் பாதியும் தனக்குப் பாதியும் யென்று ஆசைப்பாடு சொல்லி ரெண்டு லக்ஷம் ரூபாய்க்குப் பண்ணுகிற அமுல்தாரனை அவமரியாதை பண்ணி, அமுல் கல்லல் பண்ணினால் பணம் யெப்படி வந்து சேரும்? கொம்மாந்தாமுகளுடைய பிரயோசன நிமித்தியம் ரெண்டு லக்ஷம் ரூபாய்க்கு மோகத்தமாவை முழுகடிக்கத் தக்கதாக அவர்கள் பொய்க் கடுதாசி யெழுதினதை மெய்யென்று நம்பினால் ரெண்டு லக்ஷம் ரூபாய் முழுகிப் போகுதே? யிதை நன்றாய் விசாரியாமல் ஒரு பக்கிரி நிமித்தியம் யிப்படித் தோணாமல் போனால் யென்னுடைய பொல்லாத வேளை யென்று நான் நன்றாய் யெண்ணியிருக்கிறேன்," யென்று சொன்னேன். இதல்லாமல், "யிப்படிப் பணம் முழுகிப் போற காரியமா யிருக்கிறதே யென்று அந்த வழி கொம்மாந்தாமுகளைப் போகவாண்டாமென்று தாக்கீது யெழுதாதபடியினாலே, நான் யென்ன உத்திரம் சொல்லப் போறேன்? அவர்கள் பண்ணுகிற ரோஷ்ட்டுகளெல்லாம் அனேகம் விசை சொன்னேன். அனேகம் விசை யெழுதிக் குடுத்தேன். தாங்கள் அனேகம் விசை தாக்கீது யெழுதி அனுப்பினீர்கள். யினிமேல் நான் சொல்லுகிறபோது தங்களுக்குக் கோபம் வருகுது, ஆனபடியினாலே நான் சொல்லத்தக்கதில்லை. தங்கள் சித்தத்திற்கு சரிப்போனபடி நடக்க வேண்டிய," தென்றும் சொன்னேன்.

அதன் பிறகு "சிதம்பரம் சீமையிலே அக்கா (Agha) சாயபுக்கு ஒரு கிராமம் யினாம் நடந்ததாம். அது யேன் விடயில்லை," யென்று கேட்டார். "யிப்படி அவரவர்களுக்கு கிராமத்தை விட்டு விட்டால் கும்பினீருக்குப் பணம் யெப்படிக் கட்டுவேன்? மத்தப்படிக்கு நான் குத்தகை வாங்கின பால்லுவிலே (ஒப்பந்தப் பத்திரம்) யிதுகள் யெல்லாம்

---

[1] இப்படி ஏராளமான அரபி, பார்சிச் சொற்கள் அன்று வழக்கிலிருந்தன.

சேத்துத் தானே வாங்கியிருக்கிறேன்? அப்படி யிருக்க, அவர்களுக்கு கிராமங்களை யினாமாய் விட்டுவிட்டால் யெப்படிப் பணம் வந்து சேரும்? நான் யெழுதிக் குடுத்திருக்கிற பால்லிவு கடுதாசிலே யிதுகள் தள்ளி யெழுதிக் குடுத்திருந்தால், அவரவர்களுக்குக் கிராமம் விடலாம். யிதுகளெல்லாம் சேத்துத் தான் பால்லிவுக் கடுதாசியிலே யெழுதி குடுத்திருக்கிறேன். யிதுவுமல்லாமல் பாப்பய்ய(ப் பிள்ளை) நாளில் மான்னியம் பரிச்சேதமாய் விடவில்லை. நம்முடைய நாளையிலே அப்படி யேன் பண்ணவேணும் மென்று, கீர்த்தி வருகுறதுக்காகவும் புண்ணியத்துக்கும் பிட்சையாய் ஒரு காணி மான்னியமாய் விட்டுக் கொண்டு வந்தேன். அதுவும் நான் குடுக்கத்தக்கதில்லை.... நான் யெழுதிக் குடுத்திருக்கிற பால்லிவு கடுதாசின்படி நொத்தேர் கையிலே ஒன்றுயிருக்குது. கோன்சேல் திபேரிசி யோமிலேயும் யிருக்குறது. யென் கையிலேயும் கோன்சேல் காகிதம் யிருக்குறது. அதைப் பார்த்துக் கொண்டால் தெரியும்," யென்று சொன்னேன். "நீ யெழுதிக் குடுத்திருக்கிற காகிதத்திலே யிதுகளெல்லாம் சேத்து யெழுதியிருக்குதா?" யென்று கேட்டார். அதுக்கு நான் அந்தக் காகிதத்தைப் பார்த்தால் தெரியும் யென்று சொன்னேன். "நல்லது. யினிமேல் கொம்மாந்தாமுகளுக்குப் பக்கிரி காரியத்துடனே சேர்ந்தது தங்களுக்குத் தேவையில்லை. அது ரங்கப்பன் விசாரிச்சுக் கொள்ளுவான். அந்த வழி போகத் தேவையில்லை யென்று யெழுதி அனுப்பி விக்குறேன்," யென்று (சொன்னார்) ....

(பின்) மமுதல்லி கான் சேதி யென்ன வென்று கேட்டார். கில்பாத்ரிக்கைத் (Mr. Killpatrick) தகீர் பண்ணி (திருப்பியழைத்து) மேஸ்தர் ஆர்ம்[1] (Mr. Orme) யென்கிறவனை வேலூருக்கு அனுப்பினவிடத்திலே, முன் அன்பதினாயிரம் வராகனாயிருந்ததை லக்ஷம் விராகனாகத் தீத்துக் கொண்டு விருந்து பண்ணி யிருபத்தோரு பீரங்கி போட்டும், வெகுமதி பண்ணி அனுப்பிவிக்கச்சே யிருபத்தோரு வேட்டு போட்டும் அனுப்பிவிச்சதாகவும், சித்துப்பட்டு (தவறு. துத்திப்பட்டு), அகரம் (இரண்டும்), சித்தூர் கில்லாவுக்கும் சாகீருக்கும் பதிலாய்க் குடுத்ததுக்கு, சென்னப்பட்டணம் கோவர்ணதோர் மேஸ்தர் சாந்தரேசு கையெழுத்தும் அப்துல் வகாபு கான் கையெழுத்தும், மமுதல்லி கான் தாயாரும் அப்துல் வகாபு கான் சத்தியமும் பண்ணிக் குடுத்ததுக்குச் சாதகங்கள் சொன்னதாகவும், அதுக்கு மேஸ்தர் ஆலன் (ஆர்ம்) என்கிறவன் அதுயெல்லாம் கவையில்லை யென்று சண்டைக்கு யெத்தனம் பண்ணுகிறதாகவும், யிவனும் (முர்த்தசா அலியும்) சண்டைக்கு முஸ்தீப்பு

---

[1] ராபர்ட் ஆர்ம் (Robert Orme) தனது நூலில் இவை பற்றி எல்லாம் எழுதியுள்ளதும் படிக்கத்தக்கது.

பண்ணித் தங்களுக்கு யெழுதி அனுப்பிவிச்சானென்று ஒரு சேதி பிறக்குதென்று சொன்னதுக்கு, "அவன் (முர்த்தசா அலி) நல்ல மனசுள்ளவன் அல்ல; நாம் கோட்டை நம்முது, பணம் குடுக்கத் தேவையில்லை, நம்முடைய பவுன்சும் அனுப்பிவிச்சோ மென்று யெழுதியனுப்பியிருக்க, யெப்படி பணம் தீத்துக் கொள்ளுவான்? அவனொருக்காலும் நிறுவகிக்கமாட்டான்? எப்படியும் மோசம் போவா," னென்று சொன்னார். அதுக்கு நானிருந்து கொண்டு "தனது சித்தப்பன் மகனாயிருக்கிற சபிதரல்லிகான் (Safdar-Ali-Khan) யென்கிறவன், தன் பெண்சாதி அவனுக்கு உடம்பிறந்தாளாயிருக்க, யிவனுக்கு சகல யோகமும் குடுத்திருக்க, அவன் தன் வீட்டிலே ராத்திரி படுத்திருக்கச்சே, சதி பண்ணி வெட்டிப் போட்டவனுக்குச் சத்தியமேது? அவனுக்கு தெய்வம் சகாயமாயிருக்குமா? அவனாரையும் நம்புகிறதில்லை. அந்தப்படியே தங்களையும் நம்பாமல் மோசம் பண்ணினா," னென்று சொன்னதுக்கு, "நீ சொல்லுகிறது மெய்தான். யிவன் குணம் முன்னே தானே அறிஞ்சால் நம்முடைய அறுமாது அங்கே அனுப்பத்தக்கதில்லை. ... யிவன் எப்போதும் கோட்டையைப் போக்கடித்துக் கொள்ளுவா," னென்று (சொன்னார்).

அப்பால் பாசி ராயன் சேதி யென்ன வென்று கேட்டார். "பாசி ராயன் அன்பதினாயிரம் அறுபதினாயிரம் குதிரையுடனே கிருஷ்ணை தாண்டி சாவனூர் பங்காபுரம் வந்து சேர்ந்தானென்றும், முன் பாசி ராயன் குமாரனண்டையிலே நம்முடைய முசபர் கான் சேந்து யிருந்தவனிப்போ முராரி ராயனுடனே சேர்ந்து கொண்டு பாசி ராயன் குமாரன் பேரிலே சண்டை பண்ணுகிறதுக்கு முஸ்தீது பண்ணுகிறதாகவும், சாதராவிலே ராசாராம் சத்திரபதியுடைய பெண்சாதி தாராபாய் யென்கிறவள் முராரி ராயனுக்குச் சொல்லி யனுப்பி, யெப்படியாகிலும் நாணாவைச் சண்டையிலே மோசம் பண்ணச் சொல்லி முப்பதினாயிரம் குதிரை அனுப்பிவிக்குறேன் யென்றும், செல்லுமான சிலவுக்கு முப்பது லக்ஷம் நாற்பது லக்ஷம் குடுத்தனுப்புகிறோமென்றும், எந்தப்படியாகிலும் பவுன்சு அனுப்பிவைக்குறோமென்றும், எப்படியாகிலும் நாணாவைக் கைப்பிடியாய்ப் பிடிக்க வேணுமென்று சொல்லி முராரி ராயனுக்கு யனுப்பி(னாளாம்); அதுக்கு (முராரி ராயன்) பவுன்சு அனுப்பச் சொல்லி (பதில்) எழுதினதாகவும், யிப்படியெல்லாம் சண்டைக்கு முஸ்தீதாயிருக்(குது); நானா யிருக்கிற பவுன்சுக்கும் முராரி ராயனிருக்கிற பவுன்சுக்கும் முக்காத வழி வித்தியாசமாயிருக்(குது); சலாபத்து சங்கு குல்பர்க்குக்கு வந்து சேர்ந்து கர்னாட்டகத்துக்கு வருகிறதாகவும், கோசா நாமதுல்லாகானுடைய நிஷேபம் (செல்வத்தை) எடுக்கத்தக்கதாய் (அவன் கவர்ந்து கொள்ள) வந்தானென்றும், இப்படியெல்லாம் ஆற்காட்டுக்கு யெழுதி வந்து, அங்கேயிருந்து எனக்கு யெழுதி வந்ததாய்ச் சொன்(னேன்). யிதுகளெல்லாம் கலகத்துக்கு (போருக்கு) யேஷியமாய்க்

காணுதே யென்று (துரை) சொன்னார். கலகத்துக்குக் காலம் வந்தால் விட்டுப்போமா யென்று (நான் சொன்னேன்).

"இங்கிலீசுக்காரருக்கும் நம்முடைய பிரான்சுக்காரருக்கும் வாயிதா யிருக்கச்சே, முதலாய் வேலூர் காரியத்திலேயும் மதுராந்தகம் காரியத்திலேயும் கலகப்பட்டிருக்கச்சே, யினிமேல் காலத்தைத் தள்ளிப்போடப்போமா? கலகம் வருகிற காலம் வந்தால் வந்தல்லோ தீரவேணும்." யென்று சொன்னதுக்கு நகைத்து, யிங்கிலீசுக்காரர்க ளெப்போதும் சண்டை குடுக்க முஸ்தீதாயிருக்கிறார்கள் யென்று சொன்னார். அதின் பேரிலே சென்னப்பட்டணத்திலேயும் தேவனாம்பட்டணத்திலேயும் சண்டை சரன்சாமி பண்ணுகுறது முதலானதுகளெல்லாம் சொல்(லியபின்), சென்னப்பட்டணம் நரசப்பனாயக்கன் குமாரன் தொண்ணூத்தி நாலு மஞ்சாடி ஈய மாதிரியைக் கொண்டு வந்ததை (நான் காண்பிச்சதுக்கு), அத்துடனே சேர்ந்தது உன் மனதுக்கெப்படி ராசியாயிருக்குதோ அப்படிப் பார்த்துக் கோவென்று உத்திரவு குடுத்தார்.

அதின் பிறகு முசபர் கானுடைய சீரொப்பா தங்களுக்கு வந்திருக்குதென்று சொன்னதுக்கு, உசேன் மாவுத்தனுடைய மொகதாமா (விவகாரம்) தீந்தாலே யல்லாமல் நானிந்த சீரொப்பாவை யெடுக்கத் தக்கதில்லை யென்று சொன்னார். அந்த மட்டிலே அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.[1]

### *1756 வருசம், பிப்ரேயி மாசம், தேதி 29; யுவ வருசம், மாசி மாசம், தேதி 21; ஆதிவாரம்*

இத்தனாள் வேலூரின் பேரிலே போயிருந்த (இங்கிலீசுக்காரர்) பவுன்சு, அவர்களுக்கும் (முர்த்தசா அலிகானுக்கும்) யிங்கிலீசுக்காரருக்கும் சமாதானமாய் அப்பாலே போயி விட்டதாகவும், நம்முடைய பிரான்சுக்காரருடைய பவுன்சு வேலூரான் சொல்லியிருந்த பணம் குடுக்காதபடியினாலே, அது குடுத்தாலாச்சுது, யில்லாவிட்டால் சண்டை பண்ணுவோ மென்று பிரான்சுக்காரருடைய பவுன்சு பத்தே பேட்டைக்கு அப்பிறம் பாலுசெட்டி சத்திரமிருக்கிறதிலே அதிலே போயிறங்கி யிருக்கிறதாகவும், அதுக்கு சரன்சாமி யிவடத்திலேயிருந்து அனுப்பிவிக்கிறதா(யும்) சேதி கேழ்க்கப்பட்டுது. இங்கிலீசுக்காரருடைய பவுன்சு யிங்கியிருக்கிற கண்ணம்பாடிக்கும் வேலூருக்கும் ஆறு நாழிகை வழியுண்டு. அந்த பவுன்சு அப்பால் சாகிப் போனதாகவும் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

---

[1] இது வரையிலான பிப்ரவரி 20 தேதி பதிவில் பத்து கையெழுத்துப் பக்கங்கள் ஒரே வாக்கியமாக எழுதப்பட்டுள்ளன!

## மார்ச் 1756

*1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 2; யுவ வருசம், மாசி மாசம், தேதி 23; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலத்தாலே வெளியே போகவில்லை. விசேஷிச்சு சேதிகளும் கேழ்விப்படவில்லை.

இத்தனாள் ஆற்காட்டிலே மமுதல்லி கான் தண்டிலேயிருக்கிற அகுபாறனிவிசு (அன்றாடக் குறிப்பு எழுதுவோன்) கோவிந்தராயன் யெழுதின சேதியென்ன வென்றால், டில்லியிலே யிருந்து பாதுசா மகன் ஷா சாதா (Shah Zada) யென்கிறவர் விஸ்தாரமாய்ப் பவுன்சுடனே கூட ஆக்ராவுக்கு வந்து சேர்ந்தானென்றும், முன்னாலே லாகூர்[1] கில்லேதாரன் பேரிலே பவுன்சுப் போகவேணும் யென்று யெத்தனம் பண்ணின விடத்திலே, அந்தக் கில்லேதாரன் வந்து சமாதானம் பண்ணிக் கொண்டபடியினாலேயும் அவ்விடத்திலே போறதை நிறுத்தி, தெக்ஷண தேசத்துக்கு வருகிறதாயிருக்கிறானென்றும் யெழுதியிருந்தது.

சலாபத்து சங்கு சேதி யென்ன வென்றால் : சலாபத்து சங்குக்கும் பாசி ராயனுக்கும் சமாதானமாயி, சலாபத்து சங்கு பாலக்கி சாடுகோபுக்கு (Palaki Shadukopu) வந்து யிறங்கி யிருக்கிறார்; பாசி ராயர் முராரிராயனுடனே சண்டை பண்ணுகிற நிமித்தியம் துங்கபத்திரை நதியைத் தாண்டி தன் தம்பி சதாசிவராயனை முப்பதுனாயிரங் குதிரை தோப்புக்கானா வகையிரா சரண்சாமி யுடனே சாவனூர் பங்காபுரம் சீமைகளுக்கு அனுப்பிவிச்சார்; முராரி ராயன் பன்னீராயிரங் குதிரையும் எண்ணாயிரம் பாறும்[2] பதினாயிரம் ஸ்தோமமும்[3] தோப்புக்கானா வகையரா சரன்சாமியுடனே கூட சாவனூரண்டையிலே வந்து யிறங்கியிருந்தான்; சாவனூர் சுபேதாரன் நாலாயிரங் குதிரை, யெண்ணாயிரம் ராணுவும் முராரி ராயனுடனே கூட யேகத்துக்கு பாசி ராயன் பேரிலே சண்டை பண்ணவேணுமென்று யிருக்கச்சே, பாசி ராயன் யிந்தச் சேதியைக் கேட்டு தான் பாகூர் (Bagur) கோட்டையிலே யிருந்து பிறப்பட்டு பவுன்சுடனே கூடத் தன் தம்பியை கூடச் சேர்த்துக் கொண்டு முராரி ராயன் பேரிலே சண்டை பண்ணவேணும் யென்று வந்தவிடத்திலே, யிருவருக்கும் சண்டை சுத்திக்கொண்டு சண்டை பண்ணச்சே யிருவரிலேயும் சேதமாச்சுது. அப்பால் பாசி ராயன் முராரி ராயனுடைய தண்டுக்கும்

---

[1] வாகூர் என்று பிரதியில் உள்ளது.

[2] பாறு—காலாட்கள்;

[3] ஸ்தோமம்—படை; ராணுவு—சிப்பாயிகள்.

சாவனூர் கில்லாவுக்கும் முத்திக்கைப் போட்டுக் கொண்டிருக்கிறார். முராரி ராயன் தண்டிலே ரூபாய்க்கு மூணு சேர் அரிசி முதலாய் அகப்படாதபடிக்கி ரொம்ப நிறுவாகமில்லாம லிருக்குது. இதுவுமல்லாமல் பாசி ராயன் சாவனூர் கில்லேதாரனுக்குச் சொல்லி யனுப்பின சேதி யென்னவென்றால், முராரி ராயனையும் அவனைச் சேர்ந்த சறுதார்களையும் பிராணத்தோடே ஒப்பிவிச்சாலாச்சுது. யில்லாவிட்டால் கில்லாவை உடாயிச்சுப் (நாசம் செய்து) போடுவோமென்று சொல்லி அனுப்பிவிச்சாரென்று, யிந்த மட்டுக்கும் யிப்படி நடந்தது. யினிமேல் என்னமாய் நடக்குமோ வென்றறிய வேண்டிய தென்றெழுதி யிருந்தது.

கடப்பை அப்துல் மசீது கான் சேதி யென்ன வென்றால், (அவன்) ஆறாயிரம் குதிரையுடனே ஒசக்கோடடை (uskottai) கில்லாவுக்கு முத்திக்கை போட்டுக் கொண்டு யிருக்கிறான். அந்தக் கில்லாவிலே யிருக்கிற சிப்பாயிகள் தங்களுடைய சம்பள (பாக்கியைக்) குடுத்தால் அந்தக் கில்லாவைத் தங்கள் வசத்திலே ஒப்பித்துப் போடுகிறோமென்று சொல்லி அனுப்பினதுக்கு, கடப்பை அப்துல் சீது (மஜீத்) கான் சம்மதிக்காத படியினாலே அந்தக் கில்லா யின்னம் கைவசம் ஆகவில்லை யென்று எழுதியிருந்தது.

வேலூர் சேதி யென்னவென்றால் : கீல்பாதிரி (கில்பாட்ரிக்) யெழுநூறு சொலுதாதுகளுடனேயும் சிப்பாயிகள் இரண்டாயிரம் பேரும், அதுக்கு சர்தார் சயிது யிசுபு (சயிது யூசுப்) யோடேயும் மமுதல்லி கானுடைய பகிஷி (பக்ஷி–சம்பள அதிகாரி) மகம்மது அபறாது (அபரார்) யென்கிறவன் ஆயிரங் குதிரையுடனே கூட வேலூர் கில்லையின் பேரிலே யிறங்கியிருந்த விடத்திலே, மமுதல்லி கான் வேலூர் கில்லேதாரன் முற்திசல்லிக்கானுக்கு நாலு லக்ஷம் ரூபா குடுத்தனுப்பச் சொல்லி அனுப்பினதுக்கு, அவன் தன்கிட்ட ஒரு காசியில்லை யென்று அறுவரியாய்ச் சொல்லி, தன்னுடைய வக்கீலை சென்னப்பட்டணத்துக்கு அனுப்பிவிச்சு சவாபுசால் பண்ணினதின் பேரிலே, அங்கேயிருந்து சென்னப்பட்டனம் கோவர்ணதோர் மேஸ்தர் பிக்கட்டு யென்கிறவரை கொம்மாந்தானாய் அனுப்பிவிச்சதின் பேரிலே, மேஸ்தர் ஆர்ம் (Orme)[1] ஆற்காட்டுக்கு வந்து மமுதல்லி கானைக் கண்டுபேசி அங்கேயிருந்து வேலூர் கில்லாவுக்குள்ளே போய், முற்திசல்லிக்கானைக் கண்டு பேசிக்

[1] ராபர்ட் ஆர்ம் சென்னைக் கவுன்சிலின் உறுப்பினரா யிருந்தவர். இவர் தெற்கில் பிரிட்டிஷ் காரர்களின் போர்களைத் தனது History of Military Transactions of to British nation in Indostan from 1745 என்ற நூலாகத் தொகுத்தார். அது 1764 இல் அச்சிடப்பட்டது. மேலும் Country Correspondence என்ற பெயரில் தென் இந்திய மன்னர்கள், பாளையக்காரர்கள் ஆகியோருடன் ஆங்கிலேயர் நடத்திய கடிதப்போக்குவரத்தும் ஒரு நூலாகத் திரட்டப்பட்டுள்ளது.

கொண்டு அனுப்பிவிச்சுக் கொண்டு வரச்சே, முறுதிசல்லிக்கான் மேஸ்தர் ஆரனுக்குச் சீரொப்பா குதிரை வகையிரா இரண்டாயிரம் ரூபாய்க்கி வெகுமதி பண்ணி அனுப்பிவிச்சான். அதின் பேரிலே மேஸ்தர் ஆரன் சென்னப்பட்டணத்துக்குப் போய் கொடுத்த பெகுமானம் யெல்லாம் சென்னப்பட்டணம் கோவர்ணதோருக்குக் காண்பிச்சு, கண்டு பேசின சேதி யெல்லாம் சொன்னதின் பேரிலே, கோவர்ணதோர் கீல்பாதிரிக்கி ஒரு காகிதமெழுதி அனுப்பினதின் பேரிலே, அங்கேயிருக்கப்பட்ட பவுன்செல்லாம் பிறப்பட்டு ஆற்காட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். வேலூர் முகத்துமா சென்னப்பட்டணத்திலே தீந்தபடியினாலே துகை யிவ்வளவென்று வெளியாகவில்லை. சொல்லிக்கொள்ளுகிற விசேஷம் இரண்டும் லக்ஷம் ஆகத் தீந்துதென்றும் லக்ஷத் தன்பதினாயிரமாய்த் தீந்ததென்றும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். இன்னம் நன்றாய் விசாரித்துப் பின்னாலே யெழுதி அனுப்பிவிக்கிறேனென்று யெழுதியிருந்தது.

### *1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 3; யுவ வருசம், மாசி மாசம், தேதி 24; புதவாரம்*

இத்தனாள் மகம்மதாக்கல் (Muhamud Tavakkal) மகன் யெழுதியனுப்பின சேதி யென்னவென்றால் : வேலூரின் பேரிலே போயிறங்கியிருந்த பவுன்சு யெதினாலே ஆற்காட்டுக்குப் போச்சுது என்றால், பிரான்சுக்காரருடைய பவுன்சு வேலூரானுக்கு மத்தத்தாய் வந்தபடியினாலேயும், பிரான்சுக்காரர் சென்னப்பட்டணத்துக்கு எழுதினதின் பேரினாலேயும் அவர்களுடைய பவுன்சு ஆற்காட்டுக்கு வந்து சேர்ந்தது; வேலூரான் பிரான்சுக்காரருடைய மத்தத்திலே யிருந்துகொண்டு தங்களுக்குப் பணம் கொடுக்கவில்லை யென்று அந்த அகசு பேரிலே மமுதல்லி கான் வேலூர் சாகீர் ஆற்காட்டு சமீபத்திலே யிருக்கிற கிராமங்களைச் சப்த்தி பண்ணி (விட்டான்); பத்துப்பட்டு[1], அகர மிந்த விரெண்டு பற்கனா சப்த்தி பண்ணுகிற நிமித்தியம் பறக்கதுல்லா கானை (Barakkat-ul-lah-khan) நேமிக்கு(றான்); முறுத்த சல்லிக்கான் யிந்தச் சேதி கேட்டு அந்த இரண்டு பற்கானாவுக்கும் ரெண்டாயிரம் ராணுவும் சிறிது பாறுவும் டாணா வைத்திருக்கி(றான்); இனிமேல் என்ன நடக்குமோ அது அறியவேணு மென்று யெழுதியிருந்தது. பாசி ராயன் சேதி யென்னவென்றால்: சாவனூர் கில்லாவை (அவன்) முத்திக்கைப் போட்டுக் கொண்டு யிருக்கிறானென்றும், முராரி ராயன் தண்டிலே நிறுவாகமில்லை (குழப்பம் நிலவுகிறது) யென்றும், இன்னை நாளைக்கி உள்ளே அவ்விடத்து மொகத்தமா தீத்துக்கொண்டு யிந்த பிராந்தியத்துக்கு (அவன்) வருகிறதாய் ஆற்காட்டிலே அவரவருக்கு எழுதிவந்தது. துருசாய்ச் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

---

[1] துத்திப்பட்டு என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

*1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 7; யுவ வருசம், மாசி மாசம், தேதி 28; ஆதிவாரம்*

இத்தனாள் சாயங்காலம் முசியே கில்லியார் சொல்லி அனுப்பின வயண மென்ன வென்றால், "முசியே லெறி கோவர்ணதோர் நீர் பதினஞ்சு நாளாய்க் கோட்டைக்கு வராமல் சரீரம் சுவஸ்தமில்லை யென்று உளுக்காந்து கொண்டிருக்கிறீரென்று ரொம்ப குறையாய்ச் சொல்லி யிருக்கிறார். அப்படி வீட்டிலே யிராமல் பிறப்பட்டு வந்து அவரைக் காண்பித்துக் கொண்டு காரியங்கள் கவைகள் பார்க்கச் சொல்"லென்று சொல்லி அனுப்பினார். அந்தச் சேதி நம்முடைய சிதம்பரம் முதலி கேட்டு வந்து சொன்னார். நல்லது புதவாரம் போவோமென்று சொல்லி யனுப்பிவித்தேன். யேன் போகாமல் யிருக்கிறீரென்றால், யிவரிடத்திலே சின்ன மனுஷரெல்லாம் சேர்ந்து கொண்டு சரிப்போனவன் சரிப்போனாப் போலே பேசுகிறதும் அல்லாமல், நான் அவ்விடத்திலே யிருக்கச்சே தானே அவரவர் மேல் வீட்டைப் பார்க்கிறதுக்குக் கூட யோக்கியதை யில்லாதவர்கள் கூட பிரபுவினிடத்திலே வந்து பேச, அவர்களை அழைத்து அந்தரங்கம் பேச, நாம் யிப்பறம் காத்திருக்க யிருக்கிற சாடை சகியாமல் போறதுக்கு மனது யில்லாமல் வியாதி யென்று பேரிட்டுக் கொண்டு வீட்டிலே யிருந்ததே யல்லாமல் மைத்தப்படி வேறே யென்ன யிருக்குது? ஆனாலிந்தக் காரியத்துக்கு அனேகம் யேஷியம் யெழுத வேண்டியதுண்டு. அது பங்குனி மாதம் கடைசியிலே யெழுதுவோ மென்று சங்கல்ப்பிச்சோம்.

*1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 9; யுவ வருசம், மாசி மாசம், தேதி 30; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலத்தாலே முசே லெறி கோவர்ணதோர் அழைக்குறாரென்று சேவுகன் வந்து அழைக்க அப்பாவை அனுப்பிவிச்ச விடத்திலே, அப்பாவு போய் கோவர்ணதோரைக் கண்டு பேசினவிடத்திலே அவர் சொன்னது : "தேவனாம்பட்டணம் கோவர்ணதோர் நமக்கு யெழுதி அனுப்பி விச்சார். அதிலே யெழுதி யிருந்த வயணம் யென்ன யென்றால், திருவீதி சீமையிலே பாலூர் யென்கிற கிராமத் தண்டையிலே யிருக்கிற ஆத்து தண்ணீர் திருவந்திபுரம் கிராமத்துக்குப் பாயுறதாம். அது யிப்போ திருவீதி[1] சீமையார் அடைச்சுப் போட்டார் களென்று தேவனாம்பட்டணம் கோவர்ணதோர் யெழுதி அனுப்பி விச்சார். அது முன் பின் நடந்தபடிக்கி நடக்க வேணுமோ, தேவையில்லையோ? அது யென்ன அப்படிச் செய்தது?" யென்று கேட்டார். அதுக்கு அப்பாவு சொன்னது, "திருவந்திபுரம் சீமையும் திருவீதி சீமையும் யேகமாயிருந்தபடியினாலே

[1] இது இன்றைய திருவதிகை.

அப்போ யிருந்த அமுல்தாரர் சரிப்போனபடி நடப்பிச்சார்கள். யிப்போ அந்த திருவந்திபுரம் சீமை யிங்கிலீசுக்காரர்களுக்குச் சேர்ந்தது ஆச்சுதே, ஆனபடியினாலே யிந்த தண்ணீர் அந்த சீமைக்குப் போகவே கவையில்லை. அதுக்கு ஞாய மெப்படியோ அப்படி நடப்பிப்பார்களே யல்லாமல் நம்முடயவர்கள் யெத்தாட்சியாய் நடப்பிக்கத் தக்கதில்லை. ஆனாலும் நீங்களும் சொன்னீர்களல்லவா? நாங்களும் திருவீதி சீமை அமுல்தாரனுக்கு யெழுதி அனுப்பி அவ்விடத்திலே நடந்த சம்மதியும் முன்பின் நடக்கிற சட்டமும் விசாரிச்சு யெழுதி அனுப்பச் சொல்லி யெழுதியனுப்பிவிக்குரோ," மென்று சொன்னதுமல்லாமல், "எங்கள் தகப்பனார் நாளை வந்து கண்டு பேசுவார்.[1] அப்போ வயணமாய் சொல்லச்சே சித்தத்துக்குச் சரிவரு," மென்று சொன்னத்துக்கு, "நல்லது, அப்படியே யெழுதியனுப்பி சீக்கிரத்துக்கு பதிலுத்தரவு அழைப்பி வை," யென்று (துரை) சொன்னார். அதன்பிறகு, "யிங்கிலீசுக்காரருது பிடவை மூட்டை உடையார்பாளையத்திலேயிருந்து வரச்சே திருவீதியிலே ராத்திரி போட்டு யிருக்கச்சே, கள்ளர் வந்து யேழு பிடவை திருடிக்கொண்டு போனார்களென்று தேவனாம்பட்டணம் கோவர்ணதோர் எழுதி அனுப்பினார். அது நன்றாய் விசாரிச்சுச் சொல்லி ரங்கப் பிள்ளையுடனே சொல்லியிருந்தோம்; அதுயென்ன விசாரிச்சாரா?" யென்று கேட்டதுக்கு, யெல்லாத்துக்கும் நாளை வந்து கண்டு பேசிக் கொள்ளுவாரென்று சொன்னேனென்று சொன்னான்.

### *1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 11; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 2; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவர்ணதோர் ஒபிசியால்மார் வகையிராக்களோடே கிழக்கு மேற்காக யிருக்கிற வடவண்டையிலே யிருக்கிற நெடுஞ்சாலையிலே யிருக்கச்சே போய் சந்திச்சு ஆசாரம் பண்ணினவிடத்திலே, அவர் ஒபிசியால் மாருடனே பேசியிருந்து அப்பால் காம்பிராவிலே போனவுடனே முன் அற்பிசி மாசம் 20 தேதி சலாபத்து சங்கு அண்டையிலிருந்து அசுமுத்தவுலா பாதுர் என்கிற (Azim-ud-daulah Bahadur) கித்தாப்பும் ரத்தினமிழைத்த துராய் சிறுபேஷ் வகையிரா நகைகளும் சரிகை சீரொப்பாவும் கொண்டு வந்த ஷேக்கு அப்துல் ரயிமான் யென்கிற குருசுபுறதாருக்கு (இது ஒரு பதவி) பெகுமதி குடுக்க நானூறு வராகன் ரொக்கமும் இரெண்டு சிப்பம் சிகப்பு சகலாத்தும் இரண்டு பட்டுச் சுருட்டியும் ஒரு ரெட்டைக்குழல் துப்பாக்கியும் இரண்டு பிஸ்தோலும்

---

[1] இது ஆங்கிலப் பதிப்பில் இல்லை. தனது பெரியப்பாவின் நிர்வாகப் பொறுப்புகளை அப்பாவு பகிர்ந்து கொள்ளத் துவங்கிவிட்டார் என்பதை இது உணர்த்துகிறது. பிள்ளையின் இரு பையன்களும் சிறுவர்கள்.

குடுத்து, பதில் காயிதங்களும் சலாபத்து சங்கு, சாநவாசுகான், அயிதர் சங்கு, முசியே புசி வகையிராக்களுக்குக் காயிதமும் யெழுதிக் கொடுத்து போகச் சொன்னார். அவனும் அனுப்பிவிச்சுக் கொண்டு போனான். அவனை அனுப்புகிற நிமித்தியம் முசியே திலார்சை அழைப்பிச்சு அவன் மாரிபத்திலே யாங்காட்டும் பேசி பெகுமானம் பண்ணி அனுப்பிவிச்சது. சேக்கு அப்துல் ரயிமான் அனுப்பிவிச்சுக் கொண்டு போனவுடனே, முசியே திலார்ஷும் அனுப்பிவிச்சுக் கொண்டு போனார். அப்பால் முசபர் கான் மகன் உசேன் மாவுத்தனுக்கு அசனுதி கான் கொடுக்க வேண்டிய கடன் சம்மதிக்காக சந்தா சாயபு யெழுதிக் குடுத்த சாதகமும் (சான்றுகள்) சிறிது கணக்கும் கொண்டு வந்து முசியே கோவர்ணதோருடனே பேசினதுக்கு நாலு நாழிகை தேசகாலம் பேசியிருந்து கேட்டு, கடைசியிலே (அசனுதீன் கானை) கோட்டையிலே மணிக்கூண்டின் மேலே் கொண்டு போய் காவல்வைக்கச் சொல்லி உத்தாரங் கொடுத்தார். அந்த மட்டுக்கும் பதினோருமணி ஆச்சுது. நான் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து வீட்டுக்கு வந்தேன்.

***1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 13; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 4; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே தொரையவர்கள் அழைத்துச் சொன்ன சேதி யென்னவென்றால் : சிதம்பரத்திலே காசியா யிருக்கிறவனுக்கு நூத்திப் பதினாலு காணி நடக்குதாம். யிதல்லாமல் மசீதுக்கு (மசூதி) நடக்குறது வேறேயாம். அந்தப்படிக்கி முன் முசே துப்பிளேயிக்சு கோவர்ணமாமுலே முசே தெறுஷே சிதம்பரத்திலே யிருக்கச்சே அந்த மானியம் விட்டுவிடச்சொல்லி யெழுதி யிருக்கிற பிரெஞ்சுக் காகிதத்தை முசியே் நொயால் (Nouel)– நொத்தேர்–கொண்டு வந்து காண்பிச்சான். அந்தப் படிக்கி நீர் விடாமல் அறிக்கீது பண்ணுகிறீராம். அதை விட்டுவிட வேணுமென்று சொன்னவிடத்திலே, முசே நொயாலும் அந்த சிதம்பரம் பக்கீரும் வந்தா(ர்கள்). அவர்களும் சொல்ல வேண்டிய பேச்சு சொன்னதுக்கு, நான் சொன்ன உத்திரம், "அப்போ சப்த்தி மாமூலா நடந்தபடியினாலே அப்போ முசே தெறுஷே பேருக்கு யெழுதினார். அப்பால் பாப்பய்யப் பிள்ளை வசமாய் அமுல் நடந்துதே அப்போ விட்டார்களா? அப்போ விடயில்லை. அப்பாலும் கணக்கு ரங்கப் பிள்ளை சந்தாயித்தமாய் (சிறிது காலம்) விசாரித்தார் (பொறுப்பிலிருந்தார்), அப்போ விடயில்லை. அதல்லாமலும் நான் அஞ்சு வருஷத்துக்குக் குத்தகையாய் வாங்கினேன். அதிலே யிதுகளெல்லாம் விடுகிறதில்லை யென்று பேசிக்கொண்டு நான் யேகத்துக்கு குத்தகையாய் வாங்கிக் கொண்டேன். அது வேணுமென்றால் யென் கோந்திராத்து யிருக்குதே அதைப் பார்த்தால் தெரியு," மென்று

சொன்(னேன்). "அது யென்ன பேச்சு? விடவேணு," மென்று, நான் யென்ன ஞாயம் சொன்னாலும் கேளாமல் விடவேணுமென்று (துரை) சொன்னதுக்கு, "நான் உம்முடைய உத்தாரத்தின் பேரிலே விடுகிறேன். யிதுக்குள்ளது கும்பினீர் பத்திலே (பற்று) யெழுதி நான் செலுத்திருக்கிற குத்தகைப் பணத்திலே ஒத்துக்கொள்ளுகிறேன்," என்று சொன்(னேன்). அப்துல் நபி கான் முதலான பேர்களையும் அவர்கள் வமுசமெல்லாம் பொதைச்சு யிருக்கிற மசீதான படியினாலே அப்துல் மசீது கானாகிற கடப்பை நபாபு யெழுதி அனுப்பினானென்று (துரை) சொன்னார். "அப்படி யெழுதி அனுப்பினால் யெனக்குக் குத்தகையிலே (எனது குத்தகையிலே குறைத்துக் கொள்ள வேண்டும்)," மென்று சொன்னதுக்கு, "அப்படிக் குடுக்கிறதில்லை,[1] நீ விடவேணு," மென்று கோபமாய்ச் சொன்னார். யிந்த வேளைக்கு விட்டுப் பிடிப்போமென்று அந்தப் பக்கிரியைப் பார்த்து (என்) வீட்டை வா யென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு போனேன்.

அந்த பக்கீரும் நொத்தேரும் பிறப்பட்டுப் போனார்கள். (அப்பால்) யென்னைப் பார்த்து, "விக்கிரவாண்டிச் செட்டிகள் யிந்த வூரிலே ஒரு கோயில் கட்டினார்களாம், மெய்தானா?" வென்று கேட்டார். "யிருக்கிற கோயிலை நடப்பிக்குறதுக்குப் பட்டணத்திலே யிருக்கிற குடிகளுக்கு புஷ்ட்டித் தப்பிப் போயிருக்கிறதே, புதுசாய் யெங்கே கட்டப்போறார்கள்? செட்டிகளுடைய பண்டாரங்கள் யிருக்கிற வீடுகளுண்டு. அது யேதாகிலும் சிறிது யிடிஞ்சு போயிருந்து கட்டிக் கொண்டார்களோ யென்னமோ தெரியாது. அதுவே யல்லாமல் கோயில் கட்டுகிறதுக்கு யிடம் யில்லை?" யென்று சொன்னதுக்கு, "கோயில் கட்டியிருக்குது மெய்தான். நன்றாய் விசாரி," யென்று சொன்னார். "நீங்கள் விசாரியென்று சொல்லுகிறீர்களென்று விசாரிக்கிறேன். யில்லாவிட்டால் முன் சொன்ன உத்தாரப்படிக்கி நடந்திருந்தால் நடந்திருக்குமே யல்லாமல், கோயில் கட்டியிறாது. அதுக்கு அங்கம் வேறே நடக்குற தாச்சே? யிவ்வளவு (ம் எனக்குத்) தெரியாதா?" யென்று சொல்லத்தக்க சாடை யென்ன சொன்னாலும், விசாரியென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் செட்டியாவது யென்ன வென்று கேட்டார். செட்டி, தச்சர்; கொல்லர் வகையிரா ஜாதியாளெல்லாம் யிடங்கையென்று சொன்னேன். இடங்கை யென்று சொல்லுகிற தென்னவென்று கேட்டார். யிடது கையையும் வலது கையையும் காண்பிச்சு, செட்டி ஜாதி, கம்மாளர் கொல்லர் சக்கிலி ஜாதி வகையிரா யிடங்கை யென்று பேர், கோமுட்டி வகையிரா சாதிகளெல்லாம் வலங்கை யென்று பேர். பிராமணர், யிடையர் பொது ஜாதி யென்று பேர் (என்றேன்). சொன்னதுக்கு யெடயர் மாத்திரம்

---

[1] தமிழில் இந்த இடம் எதிர்மறையாகக் "கூட்டிக் குடுக்க வேணும்" என்று பிரதி செய்யப்பட்டுள்ளது.

பொதுவாயிருக்கிற தென்ன வென்று கேட்டார். அதுக்கு சுவாமி மனுஷர் அவதாரம் பண்ணினது அவர்கள் வீட்டிலே ஆனபடியினாலே, அந்த மகிமையினாலே பொது யென்று சொல்லி, யிந்த பிரஸ்தாபம் ரெண்டு நாழிகை தேசகாலம் பேசிக் கொண்டிருந்து அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

***1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 19; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 10; சுக்கிறவாரம்***

இத்தனாள் நம்முடைய சாதகத்துக்கு மீன பிறகஸ்பதி துலாஸ்தானத்தில் இருக்கிறாரென்றும், புது கும்பினீர் வர்த்தகரைத் தள்ளிப்போட்டு பழய வர்த்தகர்கள் கும்பினீரிலே தொழில் விஸ்தாரமாய் நடக்கப் போகுதென்றும் வூரிலே விஸ்தாரமாய் தொனிக்கப்படுது. யிதல்லாமல் துறையூர் யிப்போ வெங்கிடாசல ரெட்டிக்கி அல்லவோ யிருக்குது; அவரைத் தகீர் பண்ணி, முன்னிருந்த பாப்பு ரெட்டிக்குத் தானே பகரி பண்ணத்தக்கதாக (மறுபடியும் பதவியிலமர்ந்த) விட்டல் பண்டிதன் குமாரன் அப்பாசி பண்டிதனும் அவன் தம்பி கிருஷ்ணாசி பண்டிதனும் வந்து முசியே தொத்தேல் மாரிபத்தாக யெத்தனம் பண்ணிக் கொண்டிருக்கிறதாக அது வொன்று வூரிலே விஸ்தாரமாய் தொனிக்கப்படுது.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : வேலூர் மிறுத்திசல்லி கான் கோட்டையின் பேரிலே முன் இங்கிலீசுக்காரர் இறங்கினதுக்கு நீங்கள் மத்தத்து பவுன்சு அனுப்பினால் லக்ஷம் ரூபாய் கும்பினீருக்கும், அன்பதினாயிரம் ரூபாயி துரை, முசியே திலார்ஷு முதலான பேர்களுக்குங் கொடுக்கிறோமென்று யெழுதின சம்மதிக்கி முசியே திலார்ஷு அண்டைக்கு ரசா சாயபு, அல்லி நக்கிம் சாயபு மாரிபத்திலே கும்பினீருக்கு யிருபத்தையாயிரமும் முசியே திலார்ஷுக்கு அய்யாயிரமும் வந்துதென்றும், மத்ததும் பிறகாலே வருதென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 21; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 12; ஆதிவாரம்***

இத்தனாள் ஆற்காட்டிலே யிருந்து மகம்மது ஆக்கல் (குவக்கல்) மகன் யெழுதியனுப்பின சேதியென்ன வென்றால், மமுதல்லி கான் இப்போ நூதனமாய் குதிரைக்காரர் பாறுக்காரர் வைச்சு மதுரை திருநெல்வேலிக்கு அனுப்பிவிக்கிறதாகவும், யிதல்லாமல் வேலூர் மிறுத்திசல்லி கான் சாகீர் படவேடும் மூலக்காடும் சப்த்தி பண்ணுகிற நிமித்தியம் முன்னாலே மமுதல்லி கான் தாலூக்கு பாறுக்காரர் நானூறு பேர் போயிருந்தார்கள். அவர்களுக்கும் யிவர்களுக்கும் சண்டை சுத்திக்கொண்டு சண்டை பண்ணச்சே உபயத்திரவர்களிலேயும் பத்துப் பேர் சேதமாச்சுது யென்று

மமுதல்லி கானுக்கு (சேதி) வந்து, அவர் யின்னம் குமுக்கு அனுப்பி முற்திசல்லி கான் சாகீரெல்லாம் சப்த்தி பண்ணத்தக்கதாக அனுப்பிவிக்கிறாரென்றும், யின்னும் அந்த மொகத்துமாவுடனே சேர்ந்தது தீர்ந்ததுமில்லை, கல்லப்பட்டுக் கொண்டு தானேயிருக்குதென்றும் (சேதி வந்தது).

சென்னப்பட்டணத்திலே யிருந்து சேதி வந்தது யென்ன வென்றால் : மேஸ்தர் கிலேசு சீர்மைக்குப் போயிருந்து, அவ்விடத்திலிருந்து வரச்சே பொம்பாயிலே வந்து யிறங்கி, அவ்விடத்திலே பிரதானமான கில்லா ரெண்டு வாங்கினதாகவும், அந்தக் கில்லாவிலே அஞ்சு லக்ஷம் ரூபா மட்டுக்கும் அகப்பட்டதாகவும், யிந்தச் சேதி ஆற்காட்டுக்கு வந்தவுடனே கில்லா பேரிலேயும் தண்டிலேயும் அறுபது பீரங்கி போட்டு சந்தோஷங் கொண்டாடினார்களென்றும், அப்பால் பாசி ராயன் தண்டு யின்னம் சாவனூரிலே தானே யிருக்கிறதென்று, சலாபத்து சங்குக்கும் பாசி ராயனுக்கும் யின்னம் பேட்டி ஆனதில்லை (என்றும்), இரண்டு பேருக்கும் பேட்டியா(ன பின்) இவருடைய தண்டு யெங்கே போகுதோ அறியவேணும் யென்று மிப்படியாக யெழுதியிருந்ததைத் தினசரியிலே யெழுதி வைத்தேன்.

அப்பால் மறுபடி தொரையவர்கள் அழைச்சு அனுப்பப் போனவிடத்திலே முசே மொர்சேத்து (M. Mauricet) தனக்குப் பதினோராயிரம் ரூபா வரவேணும் (என்று) கேட்டதுக்குக் குடுக்கிறதாயிருக்கயில்லை (கொடுக்கப் படவில்லை) யென்று துரையுடனே சொல்லிக்கொண்டதின் பேரிலே, அவர் யென்னை அழைத்து, அது யென்ன வென்று கேட்டார். அதுக்கு நான், "அது நிதித்தியம் அப்பு (Abu) மகம்மது கான் யென்கிறவனையும் குருமூர்த்தி அய்யனையும் வரச்சொல்லி யெழுதி அனுப்பியிருக்கிறேன். அவர்களும் விழுப்புரம் வந்து சேர்ந்தார்கள். ரெண்டு நாளையிலே யிவ்விடத்துக்கு வருவார்கள். வந்தவுடனே கணக்குப் பார்த்து தீத்துப் போடுகிறே,"னென்று சொன்னேன். "சீக்கிரத்துக்கு நான் கணக்குப் பார்த்தால் யெனக்கு வரவேண்டியிருக்குமே அல்லாமல், அவர்களுக்குக் குடுக்கவேண்டியிராது. அதுவும் கணக்குப் பார்த்தால் தங்கள் சித்தத்திற்கு தெரியும்," யென்று சொன்னேன். அந்த மட்டிலே முசே மொர்சேத்து போய்விட்டான்.

அதின் பிற்பாடு புவனகிரிப் பட்டணம் சீமைக் குடிகள் யெழுதிக் குடுத்தார்கள் யென்று பித்திசாத்தை[1] யெடுத்துக் காண்பித்தார். யிதுக்கு யென்ன சொல்லுகிறாய் யென்று கேட்டதுக்கு, "அவர்கள் அந்தச் சீமையை நான் குத்தகை பண்ணிக் குடுத்திருக்கிறவன் கையிலே நாலு கிராமமும்

[1] இரண்டு பெட்டிஷன் என்று ஆங்கிலத்தில் உள்ளது.

அஞ்சு கிராமமும் சேர்ந்து குத்தகை வாங்கியிருக்கிறார்கள். போன வருசம் குத்தகைக்கு யிவ்வருஷம் அதனமாய் சீமைக்கு டராயிச்சு (கூடி) யிருக்கிறபடியினாலே, அந்தப் படிக்கி யிவர்களுக்கும் சுதாமத்துப்படி (முறைப்படி) வாரம் வரிசை நடப்பிக்கிறோம், குத்தகை யெழுதிக் குடுத்தபடிக்கி பணம் சம்மதி பண்ணுங்கோளென்று கண்டிச்சதின் பேரிலே, அவர்கள் ராவுக்கு ராவே கிராமத்திலே அம்பாரத்திலே (அறுத்துக் குவித்த தானியம்) ... கொள்ளையிட்டும், மத்ததை (க் குடிகள்) அறுக்க வொட்டாமலும் சிலாறு பண்ணிக்கொண்டு யிங்கிலீசுக்காரருடைய சீமையாகிய திருவேந்திபுரத்திலே வந்திருக்கிறார்கள். யிதுவுமல்லால் அரண்மனைக்கு முடிப்பு (தலைமையிடத்துக்குப் பணம்) வருகிறதைக்கூட வழிக்கட்டிப் பிடிங்கிக் கொண்டு போறதும், யிப்படி யெல்லாம் சிலாறாய் நடத்தினபடி யினாலே, நானங்கே மனுஷரை வைச்சு பந்துபஸ்து பண்ணி, அவர்கள் கொள்ளையிட்டுக் கொண்டு போனது போக மத்தது போக வொட்டாமல் திட்டம் பண்ணினேன். அப்படியிருக்கச்சே யிவர்கள் திருவேந்திபுரத்திலே யிருந்துகொண்டு யிங்கேயிருக்கிற சினயோர்மார்கள் (பிரெஞ்சுப் பெரிய மனிதர்கள்), கோன்சேலியேர் களாயிருக்கிறவர்களுக்கு ராசவட்டம் விட்டவிடத்திலே, யிவ்விடத்திலே, சினயோர்மார்கள் அந்தக் குடிகளுக்கு ஆசாரா (இடம்) குடுத்து யிவ்வடத்துக்கு அழைத்து, பித்திசாமெழுதித் தங்கள் கையிலே குடுப்பிச்சார்கள். அதைத் தாங்கள் பார்த்துக்கொண்டு யிப்படி யெல்லாம் சொன்னால் நான் என்னமாய் ஞாயம் சொல்லப் போறேன்? யிப்படிப்பட்ட கும்பினீர் துரோகிகளைச் சின்ன சின்ன கண்டமாய்ப் பிளந்து அதுக்குத் தக்க ஆக்கினை பண்ணினால் அல்லவோ வெளியே யெனக்குக் கட்டிவரும். அவர்கள் கும்பினீருக்குத் துரோகம் பண்ணி யிருக்க, யெதிராளிகளாயிருக்கிற யிங்கிரேசுக்காரருடைய சீமையிலே போயிருக்க, யிப்படிப்பட்ட குத்தம் பண்ணி யிருக்குறோமே, யென்ன ஆக்கினை யிடுவார்களோ (என்று) சத்தாகிலும் பயமில்லாமல் அவர்களிங்கே வந்தால், அவர்களுக்கு யேத்த தண்டனை பண்ணாமல், யிவ்விடத்திலே யிருக்கிற சினயோர் ஆசரா குடுத்து, அவர்கள் விசேஷத்தை (சொல்வதை) நீங்கள் கேட்டால் நான் செய்யலாவதென்ன?" யென்று சொன்னதின்பேரிலே, அவர் "அந்தக் குடிகளைக் காவல் வைத்தாயாம், உனக்கு காவல் வைக்க யென்ன அதிகாரம்?" யென்று கேட்டதுக்கு, நான் "நன்றாயிரு(க்கிறது). பிரான்சு கும்பினீர் தோணின நாள் முதல் கொண்டு கோவர்ணதோர், சின்னதுரை, கும்பினீர் குடுத்தியோர் யிந்த மூணு பேருக்கும் காவல் வைக்கவும் வாங்கவும் அதிகாரம் நடந்ததாச்சுதே! யிதல்லாமல் சீமா மூலம் கிராம காரியத்திலே ... (இந்த) கர்த்துவம் யில்லாவிட்டால் யெனக்கு யெப்படிக் கட்டி வரும்? யிப்படி முசே கொதேயை (நான்) கேட்டுக் கொண்டதுக்கு, அவர் "முன்னாலே துலுக்கர் நாளையிலே யெத்தப்படி நடந்ததோ

அந்தப்படி என் மனசுப்படி நடந்து கொள்ளச்சொல்லி நிருத்திரவாய்க் குடுத்ததுமல்லாமல், யெனக்கு யெழுதிக் குடுத்த பாலியே (குத்தகைக்) காகிதத்திலே யெழுதி யிருந்தது. முன்னாலே முசே துப்பிளேயிக்கு நாளையிலே சீமா மூலம் சம்மதி யெப்படி நடந்ததென்று விசாரிச்சால் தெரியவரும்," என்று பின்னையும் யெப்படி புஷ்ட்டிகரிச்சுச் சொல்லவேணுமோ, அந்தப்படி யெல்லாம் சொன்னதின் பேரிலே, அவர், "உன் மனசும்படியே நடப்பிச்சுக்கோ. முன்னாலே வெள்ளைக்காரர் சாமீனைத் தொட்டு உன் மனசும்படியே அவர்கள் நடக்க ஒட்டார்களென்று தானே அவர்களை வேண்டாமென்று தள்ளி உன் மனசும்படியே பண்ணிக்கொள்ளச் சொல்லி உத்தாரம் குடுத்தது? யிப்போதும் நிருத்தரவாய்க் குடுத்தோம்," யென்று சொன்னதுமல்லாமல், "ஒகந்தாச்சிப் பிள்ளை யென்கிறவன் ஒரு பித்திசாமெழுதிக் குடுத்தான். அதுயென்ன?" வென்று கேட்(டார்). அவன் தீர்த்தநகரி சீமையைப் பதினாலாயிரம் ரூபாயாய்க் குத்தகை வாங்கிக் கொண்டான். யிவ்வருஷம் பேரீசு ஒசத்தியாச்சுதே, யெழுதிக் குடுத்தபடிக்கிப் பணம் சம்மதி பண்ணச் சொல்லியும் சுதாமதுப்படிக்கி வாரம் வரிசை மானியம் நடப்பிக் கிறோமென்றும் சொன்னதுக்குக் கேளாமல், யிவ்விடத்திலே யிருக்கிற சினயோர்மார்களை ஆசாரா பண்ணிக்கொண்டு யிப்படி நடத்தினால் நானெப்படிப் பணம் செலுத்தப் போறேன்? யென்னாலே ஆகாது. சரிப்போனவர்களுக்கு சீமா மூலத்தைக் குடுத்துக்கொள்ளுங்கோள்," என்று அறுவரியாய்ச் சொன்னதுக்கு, முன் சொன்னபடிக்கித் தானே சொன்னார்.

அதன் பிறகு முசே லெறி கோவர்ணதோர் தம்முடைய காசா சம்மதி என்ன வென்று கேட்டார். வெகு நாளாய் மறந்துவிட்டாயென்று சொல்லி, கடப்பை நவாபு ஒரு பதக்கம் அனுப்பினதைக் காண்பிச்சார். அதைப் பார்த்ததுக்கு நடுவிலே பச்சை(க் கல்) யிழைச்சி, அதிலே கொரான் யெழுதியிருந்தது.

அதுக்கு, "அவர்கள் கையிலே கட்டுகிறது (அது); பச்சை(க் கல்) மெத்த விலை முப்பது விராகன் பொறும்," என்று (சொன்னேன்). பின்னையும் தம்முடைய கையிலே யிருக்கிற ... ரெண்டு மூணு (வச்சிரத்தை) காண்பிச்சார். அதைப் பார்த்து (அதன் மதிப்பைச்) சொன்ன பிற்பாடு, "யென்னை மறந்து போனாய். யிப்போ சென்னப்பட்டணத்திலேயிருந்து வச்சிரம் வந்திருக்குதே. அதை வாங்கித் தரவேணு," மென்று மெத்த நயிச்சியமாய்த்தானே சொன்(னார்). நான் நல்லதென்று, அதுக்கு யெப்படி புஷ்ட்டியாய்ச் சொல்ல வேணுமோ அந்தப்படிக்கி அவர் மனசு வரச் சொல்லிப் போட்டு அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

***1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 23; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 14; செவ்வாய்***

இத்தனாள் காலத்தாலே யேழரை மணிக்கி கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி கோவர்ணதோரவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அப்பால் பிடவை பார்க்குற சாலையிலே சீனா தினிசுகள் யேலம் போடச்சே அவரும் வந்திருந்தார். நானும் போயிருந்தேன். அப்போ பின்னையும் கும்பினீர் வர்த்தகரும் வந்திருந்தார்கள். அப்பால் முசே லெறி கோவர்ணதோர் மேல்வீட்டின் பேரிலே போனார்.

அதன் பிறகு யென்னை அழைக்க, நான் போன உடனே அவர், "நீ முன்னாலே முசே கொதேக்குக் குடுத்தது, முசே பெடுத்தல்மீக்குக் குடுத்தது யிதுகளெல்லாம் சீமையிலே வரிப்போட்டுத் தண்டிக்கிறாயா?[1] அந்தப் படிக்கி அந்த அந்த அமுல்தாரர் வெள்ளைக்காரர் வீட்டிலே கணக்கு யெழுதிக் குடுத்திருக்கிறார்களாம். யிப்படி சீமையிலே வரிப்போட்டு தெண்டுகிறது ஞாயமா?" யென்று கேட்டார். அதுக்கு, "யிப்படிப்பட்ட காரியம் ஒரு மிருகம் (கூடச்) செய்யாது. மனுஷர் செய்வார்களென்று சொல்ல(லாமா?) அப்படி யிருக்கச்சே லோகத்திலே அப்படிக் குத்தத்தை ... (யாரும் செய்யவில்லையா) யென்று கேட்டால், நல்ல பமீல் (குடும்பங்) களாயிருக்கிறவர்களும் பாரம்பரியமும் அயிசுவரியமும் யுள்ளவர்களா யிருக்கிறவர்களும் மானமே பிரதான மாயிருப்பார்களே அல்லாமல் யிப்படிப்பட்ட காரியம் செய்யமாட்டார்கள். ஆனால் சின்ன மனுஷியனாயிருக்கிற பேர் யெந்த சாதியிலேயும் உண்டு. அப்படி ஒருத்தன் செய்ய யெல்லாருக்கும் பேர் வருமே யல்லாமல், பெரிய மனுஷியனாயிருக்கிற வனிடத்திலே அப்படி யொருக்காலும் நடவாது. ஆனால் யெங்கள் வங்கு (வமு) சத்திலே ஒருத்தரும் அப்படி நடவார்கள். ஆனாலும் ஒருத்தன் அப்படி நடந்தால் நம்முட வமுசத்திலே யில்லாத காரியம் நடத்தினானென்று ஒருத்தனில்லாவிட்டால் ஒருத்தன் (கத்தியால்) குத்திப் போடுவான். அப்படி நான் செய்ததுக்கும் சீமையிலே வரிப்போட்டு வாங்கினதுக்கும் ருசு அத்தாட்சியுடனே சொன்னால் அதுக்குத் தாங்கள் தெண்டிக்கக் கவையில்லை. நான் தானே அந்தக் குத்தத்துக்கு யென்னை ஆக்கினை பண்ணிக் கொள்ளுவேன். அப்போ தங்களுக்குத் தெரியும்... ஒருமாச (மாய்) முசே தெபொசேத்து, முசே தெலார்சு, முசே மொற்சேன் யிவர்கள் யேகோபவிச்சு ஒரு அபாண்டமான காரியத்தைக் கட்டி உமக்குப் பிறப்பிச்சு அதின் பேரிலே யென்னிடத்திலே அசூசை

[1] இதன் பொருள், "கொதேயிக்கும் பெடுத்தல்மீயுக்கும் பெற்றுத் தந்ததைப் போல எனக்குத் தரவேண்டுமென்று நீ குடிகளை வற்புறுத்துகிறாயா?" என்பது.

தோத்தி விக்கவேணுமென்று யெத்தனம் பண்ணிக் கொண்டிருக்கச்சே, நான் (அதைக்) கேழ்விப்பட்டிருந்தாலும் யென்னிடத்திலே அப்படிப்பட்ட காரியமில்லாததைத் தொட்டும் களங்கமில்லாததைத் தொட்டும் அவர்கள் பண்ணிக் கொண்டு போனால் போகட்டுமென்றுமிருந்தேன். யென்னிடத்திலே களங்கமிருந்தாலல்லோ பயம் தோத்தப் போகுது. அது யில்லாதபடியினாலே நமக்கென்ன போ யென்று யிருந்ததுமல்லாமல், முன்னாலே யிப்படி லக்ஷக் காரியமுண்டு அவர்கள் பண்ணினது, யிதிலே யென்ன நடந்தது? அப்படித்தான் யிது வொன்று யென்று பரவாயில்லாமல் யிருந்தேன். யிந்த மட்டுக்கும் யெண்ணிக்கொண்டு வந்தது மப்படித்தான். யினிமேலு மிப்படித்தான் தோத்துமே யல்லாமல் வேறுயில்லை," யென்று சொன்னேன். "யெவனுக்கும் குத்தம் செய்தால் மனசிலே களங்கம் தோத்தும். அது யில்லாதவனுக்கு ஒன்றுமில்லை யென்று லோக வாடிக்கை யாச்சுதே," என்றும் சொன்னேன்.

அதன் பிறகு, "நீ மமுதல்லி கானுக்கு உள்க்கையாயிருந்து யிவடத்திலே நடக்குற சேதியை யெழுதி அனுப்பிக் கொண்டு யிருக்கிறயாம். அது யென்ன? வென்று (கேட்டார்). அதுக்கும் முன் சொன்ன உத்தாரம் தா னென்று சொன்னது மல்லாமல், "யிப்படி முசே துப்பிளேயிக்சு நாளையிலேயும் முசே துப்பிளேயிக்சு பெண்சாதியும் பாப்பய்யப் பிள்ளை பின்னையும் யிப்போ கூடி யிருக்கிற பேரிலே சிறிது பேர்களுமாய்க் கூடி யென்னேரமும் அவருக்குப் போதிப்பார்கள். அவருக்கு யென்னுடைய மனது தெரிஞ்சு யிருக்கிறபடியினாலேயும், அவரும் நாலாறு காரியத்திலே பரிஷ்சிச்சு அதிலே ஒன்றுமில்லாமல், அவர்களுக்கு முகத்திலே கரியைத் தடவிப் போட்டு யிருக்கிறதிலே ... அவர்கள் சும்மா யிராமல் மறுபடியும் சொன்னபடியினாலே அவர் நம்பாமல் விட்டுவிட்டது மல்லாமல், "யிப்படிப்பட்ட காரியம் யென்னுடனே சொன்னால் உங்களுக்கு யேத்தபடி பண்ணுவோ'மென்று (அவர்களிடம்) நாலாறு தரம் கண்டிச்சார். அதன்பிறகு அவர்களிப்படி யெல்லாம் சொன்னால் அவர் கேழ்க்கயில்லையே யென்று, யிதுக்கு வேறே உபாயமெடுத்துச் சொன்னது யென்ன வென்றால், யிப்படி உம்மைப் போல் ஒரு பாவையும் உம்முடைய பெண்சாதியைப் போலே ஒரு பாவையும் பண்ணி ரெண்டு பேரையும் கொன்று போடத் தக்கதாக (பிள்ளை) சூன்னியம் வைக்குறானென்று சொன்னார்கள். அப்படி அவர் பெண்சாதி கூட சொன்னதுக்கு அவர் அவனப்படிக்கி செய்யத்தக்கதில்லை யென்று, சொன்னவர்களை திக்கரிச்சுச் சொல்லிவிட்டார். அந்தக் காலத்தில் அப்படி யிருந்ததே, அது போய் விட்டு தென்று யெண்ணிக் கொண்டிருந்தேன். யிப்போ யென் பங்குக்கு அந்தக் காலம் வந்தாப்போலே யிருக்குது," என்று சொன்னதுக்கு (முசே லெறி) ஒன்றும் பேசாமலிருந்து (விட்டார்).

அப்பால், "புவனகிரிப் பட்டணத்துக் குடிகள் நான் பிறப்படச்சே திரும்ப வந்து நிற்குறார்கள்," என்று சொன்னார். நான் அன்றைக்குத் தானே சொன்னேனே யென்று சொன்னதுக்கு, "அவர் சீமையிலே நீர் அதனமாய்ப் பணம் வாங்குறயாம், அப்படிப் பண்ணவாண்டாம்," என்று சொன்னதுக்கு, நான், "உமக்கு முன்னாலே யெழுதிக் குடுத்தார்களே, அந்தப்படி ஒப்புக் கொள்ளச் சொல்லி, யெனக்கு வருஷத்திலே லக்ஷம் ரூபாய் குடுக்கச் சொல்லுங்கோள், வரவு சிலவு எழுதிவிச்சுப் போடுகிறேன். அப்படிச் செய்து போடுங்கோள்," என்று அறுவரியாய்ச் சொன்னேன். அதுக்கு சீமை உத்தரவு வேணுமே யல்லாமல் யென்னாலே செய்யக் கூடாதென்று சொன்(னார்).

செய்யூர் பெரியண்ண முதலிக்கி சோத்திரியமாய் (ஸ்ரோத்திரியமாய்) நடந்துதாம், அதுக்கு சந்தா சாயபு பர்வானாயிருக்குது யென்று நூதனமாய் சந்தா சாயபு மோகறு பண்ணின பற்வானா ஒன்றும் பிரான்சுலே யெழுதின பித்திசாமொன்றும் காண்பிச்சார். அதுக்கு நான் சொன்னது, "யிது நடந்தது யில்லை யென்று சொல்ல (மாட்டேன்); நூதனமாய் யென்றும் சொல்(லவு மாட்டேன்). புராதனமென்று சொல்(லவு மாட்டேன்). யெனக்கு யெழுதிக் குடுத்திருக்கிற குத்தகைப் பட்டயத்தில் அதுகூடச் சேர்த்துக் குடுத்திருக்கிறபடியினாலே குத்தகைப் படிக்கி ரசீது குடுத்துவிட்டால் கிராமத்தை அவன் வசம் பண்ணுகுறேனென்று சொன்னதுக்கு, உன் பாலியுலிலே (குத்தகைப் பத்திரத்திலேயே) அந்தப்படி செய்யூரென்று யெழுதியிருக்குதா யென்று கேட்டார். அந்தப்படி யென் குத்தகைப் பட்டயத்திலே செய்யூரென்று யெழுதியிருக்குது, அதுவும் பார்க்கலாமென்று சொன்(னேன்). பாப்பய்யப் பிள்ளைக்கு நஞ்சைக்கி நூத்துக்கு அறுபது வாரமும் புஞ்சைக்கு நூறு குழிக்கி முப்பது பணம் தீர்வையும் யிப்படி ஒரு உடம்படிக்கையாய் நடந்து கொண்டு வந்ததுக்கு முசே துப்பிளேயிக்சுனுடைய காகிதம் யிருக்கு தென்று அவர்கள் யெழுதிக் குடுத்த பித்திசாமைக் காண்பிச்சு, "அப்படி யேன் நீ நடப்பிக்கயில்லை," யென்று கேட்(டார்). நான் சொன்னது, "அவனுடைய அமுலிலே சரிப்போனபடி நடப்பிச்சுக் கொண்டான். யிப்போ சீமைகளெல்லாம் குத்தகை குடுத்திருக்குது. குடித்தனம் பண்ணுகுற குடியானவன் வாரம் வரிசை குத்தகைக்காரனைக் கேட்டு வாங்கிக் கொள்ளுகிறது. அப்படி யிருக்க அவர்கள் யென்னுடனே சொல்லிக் கொண்டதுக்கு ஒரு தாக்கீது யெழுதிக் குடுத்தேன். யிப்போவும் தாக்கீது யெழுதிக் குடுக்கிறேன்," யென்று சொன்னேன்.

யிப்படி பேசிக் கொண்டிருக்கச்சே முசே தெலார்ஷு வந்தார். வந்தவுடனே யென்னை போயென்று சொன்னார். அந்த மட்டிலே அனுப்பிவிச்சுக் கொண்டு யேலம் போடுகிறவிடத்திலே வந்தேன்.

மறுபடியும் அழைப்பாரேயென்று பதினொன்றரை மணிக்கி மட்டும் காத்துக் கொண்டிருந்தும் அவர் அழைச்சு அனுப்பாததைத் தொட்டு நான் யென் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்...

*1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 25; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 16; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் முன்னாலே யிவ்விடத்திலே யிருந்து சேத்துப்பட்டு மட்டுக்கும் போயிருந்த பவுன்சு அப்பிறம் போகாமல் மறுபடி திருப்பிக் கொண்டு காட்டுமேட்டுலே வந்து யிறங்கி யிருந்தபடியினாலே, அவ்விடத்திலே முசியே குப்பி, துரை முதலான பேருக்கு விருந்து பண்ணவேணுமென்று சொல்லியிருந்த படியினாலே துரை முதலாகிய வெள்ளைக்காரர் சந்தா சாயபு மகன், அல்லி நக்கீம் முதலான பேர்களும் பிறப்பட்டு பிரம்பைக்குப்[1] போயிருந்து விருந்து சாப்பிட்டு ராத்திரி பதினோரு மணிக்கி மறுபடி வந்தார்கள்.

*1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 28; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 19; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே காட்டுமேட்டிலே யிறங்கி யிருந்த தண்டெல்லாம் கோட்டைக்குள்ளே வந்து விட்டது.

*1756 வருசம், மார்ச்சு மாசம், தேதி 30; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 21; செவ்வாய்*

இத்தனாள் காலத்தாலேயு மெனக்கு சரீரம் சுவஸ்தமில்லாதபடி யினாலே வெளியே போகயில்லை.[2]

இத்தனாள் ஆற்காட்டிலே யிருந்து மகம்மது ஆக்கல் (துவக்கல்) மகன் யெழுதியனப்பின வயணம் யென்னவென்றால்: வடக்கே யிருந்து சலாபத்து சங்கு அண்டையிலேயிருந்தும் பாசி ராயன் அண்டையிலே யிருந்தும் ஏழு அறக்காறு சோடா மமுதல்லி கான் பேருக்குக் காகிதங் கொண்டு ஆற்காட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அதிலே யிருந்த வயணம், இப்போவும் நாமந்தப் பிராந்தியத்திலே வாறோமென்றும், இவ்விடத்திலே பட்டாணர் (பட்டாணியர்) வகையிராக்கள் நம்முடைய பேட்டி வாங்கிக் கொண்டு, நமக்கு ருசுவா (நண்பர்களா?) யிருக்கிறார்கள்; நீர் நம்மைச் சேர்ந்த மனுஷனானால் நம்முடைய அண்டையிலே வந்து பேட்டி வாங்கிக் கொண்டு நமக்கு ருசுவாயிருக்கவும். அல்லவென்று சண்டை பண்ணவேணுமென்று மனசுண்டானால் சண்டை சரன்சாமிகளுடனே

[1] காட்டுமேடு என்ற இந்தப் பகுதி பிரம்பைக் கருகிலே இருந்திருக்க வேண்டும்.

[2] இது தொடங்கி பிள்ளை அடிக்கடி நோய்வாய்ப்படலானார்.

தயாராயிருக்கவும், அதுவு மில்லாவிட்டால் தன்னுடைய (உம்முடைய) வசத்திலே நம்முடைய சீமை யிருக்கிறதை விட்டு விட்டு, தனக்குச் சரிப்போன விடத்திலே போகவும், யென்று யிந்த மூணு காரியத்திலே ஒரு காரியம் (தேர்ந்தெடுத்து) அதை (தெரியப்படுத்தவும்) யென்றும் (இருந்தது)... சலாபத்து சங்கும் பாசி ராயனும் இரண்டு பேரும் (சேர்ந்து) கொண்டு கூட யிருக்கிறார்கள். சாவனூரிலே யிருந்து முசபர் கானும் முராரி ராயனும் வந்து பேட்டி வாங்கினார்கள். சாவனூர் முகத்தமா தீந்துதென்றும், சலாபத்து சங்குத் தண்டு, பாசி ராயன் தண்டு மிரண்டும் யேகோபிச்சு மயிசூருக்கு வரவேணுமென்று ரெண்டு (காதம்) பயண(ப் பட்டு) யிப்பால் வந்தார்களென்றும், கடப்பை முதலான பட்டாணியரும் யோசனை பண்ணிக்கொண்டு பேட்டிக்கு வரவேணுமென்று யிருக்குறார்களென்றும், யிந்தச் சேதி யெல்லாம் மமுதல்லி கான் கேட்டவுடனே ரொம்ப மனதிலே வியாகுலமாயி ருக்கிறானென்றும், இதுவுமல்லாமல் வந்த காகிதத்துக்கு உத்திரம் யெழுதி பத்தே அல்லி கானையும் மகம்மது அசலம் கானையும் சவாபுசால் நிமித்தியம் சலாபத்து சங்கு, பாசி ராயன் அண்டைக்கு அனுப்பி வைக்கவேணுமென்று யோசனை பண்ணியிருக்கிறார்களென்றும் யெழுதியிருந்தது.

திருநெல்வேலி சமாசார மெழுதி யிருந்தது யென்ன வென்றால்: ஆலமு (Alam) கான் மருமகன் மந்துமியா[1] வென்கிறவன் அவ்விடத்துப் பாளையக்காரருடனே சேர்ந்து கொண்டு திருநெல்வேலி சீமையிலே பாதி சீர்மை கட்டிக் கொண்டான். அது நிமித்தியத்திலே மாபூசு கானுக்கும் அவனுக்குஞ் சண்டை யாச்சுது. மாபூசு கான் நிற்கமாட்டாமல் மதுரை வந்து சேர்ந்தான். அந்த சமாச்சாரம் மமுதல்லி கானுக்கு வந்த மாத்திரத்திலே அவர் ரொம்ப யோசனை யாயிருந்து தினந்தினங் குதிரைக்காரர், பாறுக்காரர் வைத்து அவ்விடத்துக்குக் குமுக்கு அனுப்பி விக்குறாரென்று யெழுதியிருந்தது.

ஆற்காட்டு சேதி யெழுதி யிருந்த தென்னவென்றால் : மேஸ்தர் மென்சோர் (அல்ல, Mr. Maskeylyne)[2] என்கிறவன் மமுதல்லி கானை ஆற்காட்டு கில்லா புறுசு (மதில்) மேலே அழைத்துக் கொண்டுப் போய், அந்த கில்லாவுக்கு யெதிரே இரண்டாயிரம் சொலுதாதுகளை முஸ்தீது பண்ணி, அதிலே ஆயிரஞ் சொலுதாதுகளைப் பிரித்து யெதிரிகள் சண்டை பண்ணுகிற பாவனையாய்த் திட்டம் பண்ணிச் சண்டை பண்ணச் சொன்னவிடத்திலே, அந்தப்படி (ஒரு) சாம[3] தேசகாலம் சண்டை பண்ணிவிச்சு, அந்த வேடிக்கையும் தங்கள் வெள்ளைக்காரருடைய

---

[1] முதாமியா வென்று ஆங்கிலத்தில் உள்ளது தவறு.

[2] இவர் ஆற்காட்டுக்குக் கோட்டையில் படைத்தளபதியாயிருந்தார்.

[3] ஜாமம் – மூன்று மணி.

சண்டை சாமர்த்தியமும் காண்பித்தவிடத்திலே, அந்த சண்டையிலே மூணு பேர் சொலுதாதுகள் விழுந்து போனார்கள். இதையெல்லாம் மமுதல்லி கான் பார்த்து அத்தியந்தமுமாச்சிரியப்பட்டு, மேஸ்தர் மேஞ்சோர் (அல்ல, மெஸ்கிலின்) என்கிறவனுக்கு அய்யாயிரம் ரூபா யினாம் குடுத்தானென்று யெழுதியிருந்தது.

அப்பால் வேலூர் சேதி யெழுதி வந்தது யென்ன வென்றால் வேலூர் மொகத்தாமாவுடனே சேர்ந்தது (விவகாரம்) யெப்போதையும் போலே யிருக்குது, யின்னந் தீந்ததில்லை யென்றும், மமுதல்லி கான் வேலூர் சாகீரத்து (ஜாகீர்) கிராமங்களை சப்த்தி பண்ணுகிறதுக்கு மனுஷரை அனுப்பிக் கொண்டிருக்கிறானென்றும், வேலூரான் (கில்லேதாரன்) பாசி ராயனுக்கு தனக்கு (உதவியாக) பதினாயிரம் குதிரை (அனுப்புவதாகச் சொல்லி யிருந்ததை அனுப்பச் சொல்லி) எழுதி யிருக்கிறான், அந்தக் குதிரைக்காரர் யெந்த வேளையிலே வருவார்களோ அறிய வேண்டியதென் றெழுதி யிருந்தது.

மேஸ்தர் கிளேசு (கிளைவ்) யென்கிறவன் சீர்மையிலிருந்து வரச்சே போன வருசம் மட்டுக்கும் கோவை–பொம்பாய் அந்த வட்டங்க ளிளெல்லாமிருக்கிற அங்கரிக்காரர்கள் (அங்கிரியாக்கள்) யிங்கிலீசுக்காரர்கள் கப்பல்களைப் பிடிச்சபடியினாலே, மேஸ்தர் கிலேசு[1] வந்தவன் சண்டைக் கப்பலிலே வந்து, சண்டை சரன்சாமிகள் கூட பிலப்பாய் வந்தபடியினாலே, அங்கிரியான் என்கிற மராட்டியர் பேரிலே சண்டைபோட்டு இரண்டு கோட்டையும் பிடித்துக்கொண்டு லக்ஷக்கணக்காய் திரவியம் அகப்பட்டதென்று சென்னப்பட்டத்துக்குச் சமாசாரம் வந்ததென்றும், அவ்விடத்திலே செய பீரங்கிகள் சுட்டுப் பண்டிகை கொண்டாடினபடிக்கி ஆற்காட்டுக் கோட்டையிலேயும் யிருபத்தோரு பீரங்கிசுட்டுப் பண்டிகை கொண்டாடினார்களென்று சேதி யெழுதி வந்தது.

---

[1] கிளேசு, கிலேசு, அங்கரிக்காரர்–அங்கிரியான் என்றெல்லாம் ஒரே வாக்கியத்தில் இருவிதமாய் எழுதி யுள்ளதைக் காண்க.

## ஏப்ரல் 1756

***1756 வருசம், ஏப்றல் மாசம், தேதி 5; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 27; சோமவாரம்***

இத்தனாள் பகலைக்கு மேலாக, தொரையவர்கள் செஞ்சிக்கு நாளைக் காலமே பயணமா(கிற) படியினாலே கூடப்போற சாமான், வெள்ளி அம்பாரி வைச்சு ஆனை குதிரைகள் பயிராக்கு கொடிகள் யீட்டிக்கத்திகள் கழிகள் நாகசுரம் மேளம் முதலான வாத்தியங்கள், நவபொத்து நீசான் வகையிரா சரன்சாமிகள் யெல்லாம் தாம் பார்க்கவேணும் யென்று நேத்து சொல்லியிருந்தபடியினாலே, யித்த நாள் நாலு மணிக்கு மேலே யெழுதினபடிக்கி முஸ்தீது பண்ணி அப்பாவும் கூடப்போய் தொரைக்குக் காண்பிச்சவிடத்திலே அவர் யெல்லாம் பார்த்து, யிப்போதானே யிதுகள் யெல்லாம் வழுதாவூர் சேரத்தக்கதாக அனுப்பிவியுங்கோள், நாளைக் காலமே நாமும் பிறப்படுகிறோமென்று சொன்னார். அப்பால் அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு வந்து சரன்சாமி களெல்லாம் வழுதாவூர் போய்ச் சேரத் தக்கதாக அனுப்பிவிட்டோம். நாளைய தினம் துரையுடனே கூட நானும் செஞ்சிக்குப் போறபடியினாலே, யிவடத்துக் காரியங்கள் பார்க்குறதுக்கு ஒடுதி ஒன்று யெழுதி தஸ்தது பண்ணி அப்பாவை விசாரிக்கச் சொல்லிக் குடுத்தோம்.

***1756 வருசம், ஏப்றல் மாசம், தேதி 6; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 28; செவ்வாய்***

இத்தனாள் காலத்தாலே முசே லெறி கோவர்ணதோர் அவர்கள் செஞ்சி பார்க்கப் பயணம் போனார்கள். நானும் கூடப் போனேன். யினிமேல் அவர் பிறகே போனவர்களை யெல்லாம் விசிதமாயறிந்து யெழுதுகிறேன். மத்தியானம் (துங்குவது) வழுதாவூர் யென்று நிஷ்கருஷை பண்ணிப் பிறப்பட்டார்கள். யினிமேல் நடந்த சேதி பிறகாலே யெழுதுவேன்.

இத்தனாள் காலமே செஞ்சி பார்க்கிற நிமித்தியமாய் முசியே லெறி கோவர்ணதோர், முசியே லெனுவார் கோன்சேலியேரும், முசியே தொத்தேல், முசியே ஷெவிரோ, முசியே மொற்சேத்து மத்துமுண்டான பேர்களும் நானும் கூடத்தானே பிறப்பட்டு மத்தியானம் வழுதாவூருக்குப் போயி சேரச்சே, அவர்கள் நட நாடகசாலையுடனே யெதிர்கொண்டு வந்து அழைத்துப் போய்க் கோட்டையிலே நுழையச்சே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். மத்தியானம் சாப்பிடச்சேயும் சாந்தே[1] சொல்லி

[1] Toast or drinking to ones health வேறிடங்களில் சாந்தே எனவும் எழுதப்பட்டுள்ளது.

இருபத்தோரு பீரங்கி சுட்டார்கள். அது முசியே துப்பிளேயிக்சு வினுடைய சாகீரானபடியினாலே நசர் மைத்தது வைக்கவில்லை. விருந்துச் சிலவு மாத்திரமேயல்லாமல், பின்னை யொன்றுமில்லை. மத்ததெல்லாம் யிவடத்திலே யிருந்து போச்சுது. மத்தியானம் சாப்பிட்டவுடனே ராத்திரிக்குப் பாதுரா(பாதிரா)ப்புலியூருக்குப் போகத்தக்கதாக ஆனை குதிரை அம்பாரி நட்டுமுட்டு நடநாடகசாலை வகையிரா முன்னுதாய் பாதுரா(பாதிரா)ப்புலியூருக்குப் போய்ச் சேரத்தக்கதாக அனுப்பிப் போட்டு, இத்தனாள் அஞ்சு மணிக்கி வழுதாவூர் விட்டுப் பிறப்பட்டு பாதுராப்புலியூருக்குப் போகச்சே முத்துமல்லா ரெட்டி வகையிராக்கள் நடநாடகசாலைகளுடனே எதிர்கொண்டு வந்து அழைத்துப் போய் டேராவிலே வைத்து, முத்துமல்லா ரெட்டி அன்னூறு ரூபாய் நசர் வைத்து துரையைக் கண்டான். எனக்கும் நூறு ரூபாய் வைத்துக் கண்டான்.

அப்பால் ராத்திரி தீனிக்கு ஆடு கோழி பன்றி வகையிரா, பழவகைகள் சகலமும் முஸ்தீது பண்ணிவிச்சு விருந்துஞ் சம்பிரமமாய்த் தானே நடந்தது. அப்போதானே செஞ்சி கொம்மாந்தானுக்கு நாளைய மத்தியானம் செஞ்சி வந்து சேருகிறோம் யென்று யெழுதியனுப்பிவிச்சுப் போட்டார்கள். நானும் செஞ்சி அமுல் நாராயண சாஸ்திரிக்கி சரன்சாமியும் முஸ்தீது பண்ணிவிக்கச் சொல்லிக் கண்டிச்சு ... எழுதியனுப்பிப் போட்டு ராத்திரி யங்கே யிருந்தோம்.

### *1756 வருசம், ஏப்றல் மாசம், தேதி 7; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 29; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே பாதுராப்புலியூர் விட்டுப் பிறப்பட்டு, சாமத்துக்கு மருதூர் மண்டபம் முன்னாலே தானே பந்தல் மத்தது திட்டம் பண்ணியிருந்ததிலே போயிறங்கி, அங்கே பழவகைகளைக் கொண்டு வந்து வைத்தது மல்லாமல், அவ்விடத்து விசாரிப்பாயிருந்த ஆதி வீரராகவ முதலி கொண்டு வந்து அன்னூறு ரூபா நசர் வைத்துக் கண்டான். அங்கே சவரி சங்கு (ஒரு வகை பீரங்கி) வந்திருந்ததை யிருபத்தோரு பீரங்கி வேட்டு சுட்டு சம்பிறமம் பண்ணிவிச்சோம். அப்பாலவ்விடம் விட்டுப் பிறப்பட்டு செஞ்சிக்கு யிப்பறம் செயங்கொண்டான் என்கிற பனந் தோப்பிலே பந்தல் போட்டு முஸ்தீப்பாயிருந்ததிலே கூட யிராமல் பிறப்பட்டு போகச்சே அவ்விடத்துக் கொம்மாந்தாம் முசியே லெகிரி (Legri) வகையிரா, நம்முடைய அமுல்தாரன் நாராண சாஸ்திரி ... நடநாடகசாலை வகையிராக்களுடனே யெதிர் கொண்டு வந்து அழைத்துக் கொண்டு போகச்சே அந்தப் பணிரெண்டு மணி வெய்யலிலே அவஸ்தைப் பட்டு கோட்டைக்குள்ளே போகச்சே யிருபத்தோரு வேட்டுப் போட்டார்கள். முசியே லெறி கோவர்ணதோர் முன்னே போக, முசியே லெனுவாருடைய போயண்டர் . . . இரண்டு நான் கடும் பயணமாய் அடிச்சபடியினாலே

நடக்கமாட்டாதே போனார்கள் யென்றறிஞ்சு மனம் பொறுத்துக் கொண்டு வந்தார். முசியே லசேத்து மாத்திரம் மனம் போறாமல் தன் போயண்டர் நடக்கவில்லையே யென்று ஒரு போயண்டனைக் குத்தினான். அவனுக்கு விலாப் பக்கத்திலே ஒரு விரல் கடை உருவிப்போய், அப்பாலவர் களெல்லாம் தலைவிரித்துக் கொண்டு அழுது வாயிலிலே அடித்துக் கொண்டு, அதிலே யொரு போயண்டன் முசியே லசேத்து முன்னே போயி யிப்படி அடிக்கலாமா அய்யா யென்று முறையிட்டபடியினாலே, அவனைக் குத்துகிறதுக்குப் போகச்சே அந்தக் குத்து தப்பி காதிலே பட்டு காது அறுந்துபோச்சுது. யிதுகளெல்லாம் துரையவர்கள் பார்த்துக் கொண்டு சும்மாய்த்தானே யிருந்து, யிப்படிப் பட்ட திவ்விய குணத்துடனே உள்ளே போய் கொம்மாந்தாம் விடுதி முஸ்தீப்பு பண்ணி யிருந்த விடத்திலே கூட வந்த வெள்ளைக்காரருடனேயும் மேளதாளம் நவபோத்து சகல சம்பிறமங்களுடனேயும் போயிறங்கி நானும் பிறகே தானே போயி அவரை விடுதி சேத்துப் போட்டு நானனுப்பி விச்சுக் கொண்டு, நம்முடைய ஆலிம்வாலி (ஆட்கள்) சகல சம்பிறமத்துடனே நம்முடைய விடுதியான அய்யண் சாஸ்திரி அண்ணன் சாமி சாஸ்திரியை அழைத்து, அவருடைய வீட்டுக்கு யெதிர் கச்சேரி முஸ்தீப்பு பண்ணியிருந்த விடத்திலே போயிறங்கினவுடனே, நம்முடைய அமுல்தாரன் ஆலிம்வாலிகள் (அமுல்தாரனுடைய ஆட்கள்) யெல்லாம் வந்து நசர் வைத்துக் கண்டார்கள். அவரவர்களுக்குப் பாக்கு வெத்திலை குடுத்து அனுப்பிப் போட்டு, நமக்கு சாமி சாஸ்திரி வீட்டிலே விருந்து ஆனபடியினாலே மத்தியானம் இரண்டு மணிக்கி விருந்து சாப்பிட்டுப் போட்டு ஆசுதாவாய் நம்முடைய விடுதியிலே யிருந்தோம்.

இத்தனாள் சாயங்கால மானவுடனே ராசகெடி துர்க்கத்தின் பேரிலேயும் கி(ரு)ஷ்ணை கெடி துர்க்கம், சென்னகிரி துர்க்கம் யிந்த துர்க்கத்தின் பேரிலே யெல்லாம் விளக்குகள் வைத்து, பந்தல் மைத்தது வெகுவேடிக்கை பண்ணி, அங்கே ராத்திரி தீனிக்கி முஸ்தீப்பு பண்ணி யிருந்தது. இதுக்கு முன் அஞ்சு மணிக்கு துரை வகையிராக்கள் வெளியே போயங்கே வாணவேடிக்கை ஏழு மணி மட்டுக்கும் பார்த்து அப்பால் செட்டிக் குளத்துக்கு வந்து அங்கே யிருக்கச்சே, ராச கெடி துர்க்கத்தின் பேரிலே வாணவித்தை வெகுவேடிக்கையாய் (நடந்ததை) யெல்லாம் பார்த்து வெகு சந்தோஷப்படத் துவக்கினார்கள். அப்போ மூணு விடத்திலே யிருபத்தோரு பீரங்கி விழுக்காடு சுட்டார்கள். அந்த மட்டுக்கும் நானுங்கூடத் தானே யிருந்து அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு, நம்முடைய விடுதியிலே வந்து ராத்திரி இரண்டு மணி வரைக்கும் கச்சேரி பண்ணி நடநாடகசாலை களுடனே வேடிக்கையாயிருந்தது. சாமி சாஸ்திரி வீட்டிலே விருந்தான படியினாலே விருந்து சாப்பிட்டுப்போட்டு யிருந்தோம்.

***1756 வருசம், ஏப்றல் மாசம், தேதி 8; யுவ வருசம், பங்குனி மாசம், தேதி 30; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசியே லெறி கோவர்ணதோர் அவர்கள் ராச செடி தூர்க்கம் பார்க்கிறதற்கு ஆறு மணிக்குப் பிறப்பட்டுப் போய், அவ்விடத்திலிருக்கிற விந்தைகள் யெல்லாம் சுத்திப் பார்த்து ஆச்சரியப்பட்டு ஏழரை மணிக்கி யிறங்கினார்கள். அப்பாலவர் விடுதியில் வந்தவுடனே நம்முடைய அமுல்தாரன் நாராயண சாஸ்திரி அன்னூறு விராகன் நதீர் வைத்துக் கண்டான். மைத்த ஆலம்வாலி பல பட்டடைக ளெல்லாரையும் அழைத்துக் கொண்டு வந்து துரை (க்குப்) பேட்டி பண்ணி வைத்தோம். அப்போ நசர் வைத்துக் கண்ட வயணம்: பலபட்டடை ரூபா 200; சிப்பாயிகள், கொம்மாந்தாம், ரானோசி விராகன் 75; மைத்த பேரெல்லாரும் சுருட்டிகள்அவரவர் மரியாதைக்குத் தக்கதாய் வைத்துக் கண்டார்கள். அப்பால் அவரவர்க ளெல்லாரும் துரையை அனுப்பிவித்துக் கொண்டு நம்முடைய பிறகே வந்து கையிலே கொண்டு வந்த மேளதாளத்துடனே கொண்டு வந்து விட்டு விட்டு, அப்பாலவர்கள் அனுப்பிவிச்சுக்கொண்டு போனார்கள். இத்தனாள் ராத்திரியும் நேத்தய தினத்தைப் பார்க்க இரெட்டிப்பு அதிகமாயி தூர்க்கத்தின் பேரிலே எல்லாம் விளக்குகள் கொளுத்தி பாணவித்தையும் சம்பிறமமாய்ப் பண்ணிவைத்தோம்.

***1756 வருசம், அப்றில் மாசம், தேதி 10; தாது வருசம், சிந்திரை மாசம், தேதி 2; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே செஞ்சி விட்டுப் பிறப்பட்டு விழுப்புரத்து வழியிலே, பந்தல் போட்டு முஸ்தீப்பு பண்ணி யிருந்த ஒரு சாவடியிலே போயிறங்கி, அங்கே பழவகைகள் சாப்பிட்டுப் போட்டு, அவ்விடமிருந்து பிறப்படச்சே விழுப்புரம் அமுல் நாராயணப் பிள்ளை நடநாடகசாலைகளுடனே எதிர் கொண்டு வந்து அழைத்துப்போய் விழுப்புரத்திலே விடுதி சோடிச்சு யிருந்த விடத்திலே போய் யிறங்கினவுடனே, நாராயணப் பிள்ளை முன்னூத்து இருபத்தோரு விராகன் நசர் வைத்துக் கண்டான். அப்பால் ராத்திரி பாணவித்தை சகலமும் முஸ்தீப்பு பண்ணி வைத்து அதை எல்லாஞ் சுடச்சொல்லி வேடிக்கை பார்த்துக் கொண்டு ராத்திரி அங்கே யிருந்தோம்.

***1756 வருசம், ஏப்றல் மாசம், தேதி 11; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 3; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே விழுப்புரம் விட்டுப் பிறப்பட்டுத் திருவீதி, பண்ணுருட்டிக்கி வரவேணுமென்று இராப்பட்டு (புறப்பட்டு?) வரச்சே,

திருவீதி சமீபத்திலே வருகிறபோது கொம்மாந்தாம் வகையிரா அமுல் சிரஞ்சீவி சிதம்பர நாதப் பிள்ளையும் நட்டுமுட்டு நடநாடகசாலைகளுடனே எதிர் கொண்டு வந்து அழைத்துக் கொண்டு வந்து விடுதியிலே யிறங்கின உடனே இருபத்தோரு வேட்டுத் தீத்தார்கள். சிரஞ்சீவி[1] சிதம்பரநாதப் பிள்ளை அன்னூரு விராகன் நசர் வைத்துக்கண்டார். மத்தியானம் விருந்தும் மத்தது மாயி அப்போ இருபத்தோரு வேட்டு விழுக்காடு சுட்டார்கள். நானும் நம்முடைய விடுதியிலே வந்து விருந்து சாப்பிட்டுப் போட்டு ஆசுதாவாயிருந்தோம்.

இத்தனாள் ராத்திரி பாணவித்தை சகல முஸ்தீப்புப் பண்ணி விச்சு ....[2] சம்பிரமமாய்ப் பண்ணிவிச்சு ராத்திரி அங்கேதானே இருந்தோம்.

***1756 வருசம், அவ்றீல் மாசம், தேதி 14; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 6; புதவாரம்***

இத்தனாள் எனக்கு நேத்து துவக்கி ரெத்தக் கழிச்சல் கண்டுகொண்டு வருகிறபடியினாலே, வெளியே போகாமல் அப்பாவைப் போகச் சொன்னவிடத்திலே, அவன் போய் துரையைக் கண்டு ஆசாரம் பண்ணி நின்றவிடத்திலே, அவர் நெல்லுங் கூலிக்காரரும் வெகு சுறுக்காய் வரவேணுமென்று நேத்து சொன்னபடியினாலே, அப்படித்தானே சொன்னதாய் அப்பாவு வந்து சொன்னான். சண்டை துவக்கி ஷிட்டபடியினாலே[3] தொரைச் சண்டை சாமான்கள் முஸ்தீப்பு பண்ணுகிற அலுவலிலே யிருந்து ஊரிலே யிருக்கிற தச்சர், கொலுத்துக்காரர், கருமாரர் சமஸ்தமான பேர்களும் கும்பினீரிலே வேலை செய்யுறதே அல்லாமல் மைத்த யிடத்திலே வேலை செய்யக் கவையில்லை யென்று தாக்கீது பண்ணி, வடக்குக் கெவுனி வாசலுக்கு அப்பால் சண்டை பண்ணுகிறதுக்கு ஒரு கொம்மாந்தாம் கொத்தளம் போடுகிறதுக்கு முஸ்தீப்பு பண்ணி அந்த வேலையிலே சுறுக்காயிருக்குறார் யென்றும் சொன்னார்கள்.

இத்தனாள் சலாபத்து சங்கு அண்டையிலே யிருந்து அவருக்குப் பிள்ளை பிறந்த தென்று இவ்விடத்திலே பண்டிகை கொண்டாடச் சொல்லி முசியே புசியே யெழுதி அனுப்பினதாயும் சலாபத்து சங்கு காகிதமும் வந்ததாயும் சொன்னார்கள்.

---

[1] சிதம்பரநாதப் பிள்ளை நம்பிள்ளையின் மருமகன்.

[2] முன்பு எழுதிதையே திரும்பவும் வருகிற விடங்களிலும், விளங்காதபடி எழுதியுள்ள விடங்களிலும் ... எனப் புள்ளிகள் வைத்துள்ளேன்.

[3] ஏழாண்டுப் போர். தென்னிந்தியாவில் கடைசி கர்னாடகப் போர்.

***1756 வருசம், அவ்றில் மாசம், தேதி 18; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 10; ஆதிவாரம்***

இத்தனாள் சித்திரை மாசம் தேதி 10 ஆதி வாரம் சவு(துர்)த்தி 39½[1] நாழிகை, கேட்டை நக்ஷத்திரம் 51¾ நாழிகை, வரியான்னாம யோகம் 15 7/16, பாலவக்கரணம் 12½, திவி 9 3/8–க்கு மேல்தியாச்சியம் இப்படிப் பட்ட சுபதினத்தில், சாயங்காலமான நாலு நாழிகைக்கு விறுச்சிக லக்கனத்தில் மகாராசராசஸ்ரீ லச்சுமி சமானமாயிருக்கப்பட்ட மங்கத்தாயம்மாள்[2] அவர்கள் சரீரத்தை விட்டுத் திவ்வியமானதுகள் கந்தாறுடராய லட்சுமி பாதாரவிந்தத்தைப் போய்ச் சேர்ந்தாள். தற்காலக் கிரக நிலை : அசுவனி மூணாம் காலில் சந்திரன்; புனர்பூசம் 4 காலில் செவ்வாய்; ரேவதி முதல் காலில் புதன்; சித்திரை முதல் காலில் குரு; ரோகணி 4–ம் காலில் சுக்கிரன்; அதன் பேரில் திருவோணம் 2 காலில் சனி; பூரம் மூணாம் காலில் ராகு; பூரட்டாதி முதல் காலில் கேது.[3]

***1756 வருசம், அவ்றில் மாசம், தேதி 19; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 11; சோமவாரம்***

இத்தனாள் தகனதின மானபடியினாலே பஞ்சமி 33½, மூல நக்ஷத்திரம் 47¾, பரிகனாம யோகம் 7¾, கவுலவா கிரணம் 6½, திவிய நாழிகைக்கு மேல் தியாச்சியம், ராத்திரி 13க்கு மேல் தியாச்சியம். இந்தச் சுபதினத்தில் வுதிச்ச ஆறு நாழிகைக்கு தந்தப் பல்லக்கும் பேரிலே, நவப்போத்து சங்கீதம் மேளம் சகல வாத்தியங்களுடனே, சபாசேங்கு வேட்டுப் பட்டடை, லேடியிடி கோம்பு, பகல் தீவட்டி யுடனே,[4] பட்டணத்திலுண்டான சகலசெனங்களும் சூழ்ந்துகொண்டு வர நடைப் பாவாடையுடனே மஞ்சள் பொடி குங்குமம் கெந்தப் பொடி புஷ்பங்கள் சாம்பிராணி தூபங்கள் இத்தியாதி திவ்வியப் பரிமளங்களெல்லாம் வீசத்தக்கதாகச் சகலச் சம்பிறமங்களுடனே ஆறு நாழிகைக்குப் பிறப்பட்டு எட்டு நாழிகைக்கு (மேற்குக்) கெவனி வாசற்படிக்கிப் போகச்சே, மகாராசஸ்ரீ கோவர்ணதோர் முசியே லெறி அவர்கள் தாங்களிந்த சமாச்சாரம் கேட்டு வுத்தாரம் அனுப்பி விச்சுப் போட்டபடிக்கி கெவுனி வாசற்படியிலே தம்பூறு அடிச்சு, பாறு வரிசை வைச்சு, மேன் வரிசையாய் மரியாதை பண்ணி விச்சார்கள். அப்பிறம் கெவனி தாண்டிப் பத்து

---

[1] ஆங்கிலத்தில் இது விடுபட்டு உள்ளது.
[2] நம் பிள்ளையின் மனைவி.
[3] தமிழ்ப் பிரதியில் இது விளங்காதபடி எழுதப்பட்டுள்ளது.
[4] guns, crackers with their stands, horns and torches–என ஆங்கிலத்தில் உள்ளது.

நாழிகைக்கி நம்முடய தோட்டம் மகாராசராச ஸ்ரீ பெரிய பிள்ளை[1] அவர்கள் சம்பாதிச்ச பெரிய தோட்டத்திலே சந்தனக்கட்டைச் சிதையின் பேரிலே பனிரெண்டு நாழிகைக்கு சகல மேளவாத்தியங்கள் முழங்க, மகராச ராசஸ்ரீ அண்ணாசாமி அவர்கள் கையில் தெர்ப்பை வாங்கிக்கொண்டு, மகாராச ராச ஸ்ரீ அப்பாவு அவர்கள் சகல சமஸ்தமாகிச் செய்யவேண்டிய கர்மங்கள் குறைகளின்றியே பூர்த்தியாய் நடத்தி (விச்சார்கள்)... (பெருந்திரளான) செனங்கள் (வந்திருந்ததைப் பார்த்து) காஞ்சிபுரம் வைசாக கெருட சேர்வை மகோற்சவத்துக்கு வந்தாப் போலே (இருந்தது என்று) வந்த செனங்கள் சொல்லிக் கொண்டார்கள்.[2] அதுவுமில்லாமல், மகா பதிவிரதா சிரோன் மணி என்றும், மகா பகவதி என்றும் மகா புண்ணியசாலி என்றும், யேம (இமய) சேது பரியந்திரம் மகாகீர்த்தி பெத்த யோகசாலி என்றும் சகலமான சனங்களும் கூட்டங்கூடி யிப்படியாகக் கீர்த்தி சொல்லிக் கொண்டார்கள். யிப்படி, சகல கீர்த்தியும் பூமியில் பிரகாசிக்கத்தக்கதாக வைகுண்டத்தில் ஸ்ரீமன் நாராயண சுவாமி யினுடைய பாதாரவிந்தத்(தை) அடைந்தார்கள்.

***1756 வருசம், அப்றில் மாசம், தேதி 22; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 14; குருவாரம்***

இத்தனாள் காலமே ஒன்பது மணிக்கி முசியே லெரி (லெறி) கோவர்ணதோர் அண்டையிலிருந்து, அழைச்சுக் கொண்டு வரச் சொன்னாரென்று ரெண்டு சோபுதாரனும் மதனாந்த பண்டிதரும் வினாயகப் பிள்ளையும் மைத்துமுண்டான கும்பினீர் உத்தியோகஸ்தர்களும் அழைக்க வந்தார்கள் ... சிரஞ்சீவி அண்ணாசாமி, அப்பாவு வகையிராக்களையும் கூடக் கூட்டிக் கொண்டு, சீனயோர் கோவர்ணதோண்டையிலேப் போனவிடத்திலே, அவர் கோவர்ணமாம் நடுசாலையிலே கோன்சேலியேர் ஒப்பிசியால்மார்களுடனே யிருக்கச்சே, தாம் பெரிய மனுஷருக்குப் பண்ணுகிற மரியாதைப்போலே ரெஸ்ப்பிரேரிட்டு (மரியாதையோடு) தொப்பிப் போட்டுக் கொண்டு, கத்தி கட்டிக்கொண்டு, லேர்மார்க் (கழி, தடி) கையிலே பிடிச்சுக்கொண்டு பெரியவர்களையும் சமானஸ்தாரையும் ரெசப்பிரேரிட்டு அழைக்கிற மரியாதைப் படிக்கி நம்மையும் அப்படித்தானே ரிசப்பிரேரிட்டு எதிரே வாசற்படிக்கி மட்டுக்கும் வந்து உள்ளே அழைச்சுக்கொண்டுப் போய், பெண்சாதி செத்துப் போனதுக்கு மேவுதலையான வார்த்தைகளைச் சொன்னதுமல்லாமல், சமுசார ... பாரமும் வுமக்கு (இப்போ) சுவாமி

---

[1] நம் பிள்ளையின் தகப்பனார்.

[2] மிகவும் எளிய சொற்களையும் கூடத் தவறாகப் பிரதி செய்துள்ளார். பெரிய என்பதைப் 'பேரியே' என்று படி எடுத்துள்ளதை என்ன சொல்வது? இந்த வாக்கியம் முழுவதுமே படிக்க முடியாமல் உள்ளது.

குடுத்திருக்கிறபடியினாலே அந்தப்படி எபுறோவிருத்தியாய் நடக்கும் யென்று சொன்னதுக்கு, நான் நன்றி அறிந்த வுபசாரஞ்சொல்லி ஆனவுடனே, அவர் தானே பன்னீர் தெளிச்சு, நாயகம் கெம்புக்கல்லு பொதைச்சு சுத்திலும் வைரம் யிழைச்ச ஆறு பேட்டை (பட்டை) சரப்பள்ளியிலே கோத்து யிருந்தப் பதக்கமும் போட்டு, மகத்தாபிச் சரிகை சீரோப்பாவுங் குடுத்துப் போட்டார். அப்பால் சிரஞ்சீவி அண்ணாசாமிக்கி ஒரு சீரொப்பாவும் அப்பாவுக்கு ஒரு சரிகை சீரொப்பாவும் அய்யா சாமிக்கிச் சரிகை சீரொப்பாவும் குடுத்தது மல்லாமல், சிரஞ்சீவி அண்ணாசாமிக்குப் பதிநாலு பட்டை சரப்பள்ளிப் போட்டு, பதினஞ்சு வேட்டுப் பீரங்கியும் போட்டார்கள். அப்பால் துரையவர்கள் நயினாரை அழைப்பிக்க, சிரஞ்சீவி அண்ணாசாமியை வெள்ளி அம்பாரி வைச்சுயிருக்கிற ஆனையின் பேரிலே வைச்சுக் கொண்டு, நவபோத்து முதலான வாத்தியங்களுடனேயும் பயிராக்கு முதலான பிருதுகளுடனேயும் அழைச்சுக் கொண்டு வீட்டு மட்டுக்கும் போய் விடுங்கோளென்று உத்தாரங் குடுத்தார். அப்பால் அவரை அனுப்பிவிச்சுக்கொண்டு வெளியே வந்து சிரஞ்சீவி அண்ணாசாமியை வெள்ளி அம்பாரி வைச்ச ஆனையின் பேரிலே வைச்சுக் கொண்டு, சகலமான வாத்தியங்களடனே முசியே பெடுத்தல்மீ சின்னதுரை வீட்டுக்கு வந்து, அங்கேயும் வெகுமதி வாங்கிக்கொண்டு, அவரை அனுப்பிவிச்சுக்கொண்டு வீட்டுக்கு வந்து, சதிர்ப்பண்ணி சதிரிலே யிருந்த எல்லாருஞ் சிரஞ்சீவி அண்ணாசாமிக்கி நதிர் வைச்சுக் கண்டவுடனே, பாக்கு வெத்திலை குடுத்து அனுப்பிவைச்சோம்.

***1756 வருசம், அப்றில் மாசம், தேதி 23; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 15; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலத்தாலே ஏழரை மணிக்கிக் கோட்டையிலே போனவிடத்திலே முசியே லெறி[1] கோவர்ணதோருடைய செண் சோறு (செயின்ட் ஜார்ஜ்) சனவரிப் பேர் பண்டிகையானபடியினாலே, நேத்து ராத்திரி தானே கும்பினீர் வர்த்தகர், தங்காசாலையாரை நசர் வைச்சுக் கொண்டு வரச் சொன்னபடிக்கி அவரவர்கள் வந்திருந்தவர்களைக் கூட அழைத்துக் கொண்டு மேல் வீட்டின் பேரிலே போயிருக்கச்சே, முசியே லெறி கோவர்ணதோர், சின்னதுரை முசியே பெடுத்தல்மீ வகையிரா கோன்சேலியேர்கள், முசியே தொத்தேல் மயோர் சனரால் (Major General) வகையிரா ஒப்பிசியேல்மார்களெல்லாரும், மதாம் பெடுத்தல்மீ வகையிராப் பெண்டுகளும் கோட்டையிலிருக்கிற சொல்தாதுகளை யெல்லாம் வரிசையாய்ப் பாறுவைச்சு யிருக்கிற

[1] லெரி, லெறி என இருவிதமாக எழுதப்பட்டுள்ளது.

வரிசையிலே பிறப்பட்டுக் கோட்டைக் கோயிலுக்குள்ளே பூசையிலே போய் வுள்க்காந்து கொண்டார்கள். உடனே பூசை ஆரம்பத்திலே ஒரு தரமும், பாதி பூசை ஆனவுடனே ரெண்டாந் தரமும், பூசை ஆக்கீரிலே (முடிவில்) மூணாந்தரமும், ஆக மூணு தரம் துப்பாக்கிகளை யெல்லாம் சுட்டவுடனே கோட்டையிலே இருபத்தோரு பீரங்கி போடுகிறது. அந்தப்படிக்கிக் கப்பலுக ளெல்லாம் போடுகிறதாயிருந்தது. யிந்தப்படிக்கி மூணு தரமானவுடனே கோயிலிலிருந்து கோவர்ணதோர் பிறப்படச்சே, பாறுலே யிருக்கிற ஒப்பிசியால்மார்களெல்லாரும் யீட்டியினாலே ஆசாரம் பண்ணின வழக்கப்படிக்கி ஆனவுடனே, அதை யெல்லாம் பார்த்துக் கொண்டு மேல் வீட்டின் பேரிலே முன் சொல்லப்பட்ட கோன்சேல்காரர்கள், ஒப்பிசியால்மார்கள், பெண்டுகள் வகையிராக்கள் வந்தவுடனே மறுபடி எல்லாரும் ஆசாரம் பண்ணிக் கொண்டார்கள். அப்போ நானும் கும்பினீர் வர்த்தகர்கள் வகையிராக்களும் கூட யிருந்து, மல்லிகைப் பூச்செண்டு கையிலே குடுத்துப் பண்டிகைக்கு உபசாரஞ் சொன்னதுக்கு, அவரும் உபசாரஞ் சொன்னார். அப்பால் அப்பாவுவை சீமா மூலத்துக்கு அன்னூறு பறங்கி (பறங்கிப்பேட்டை) விராகன் நசர் வைக்கச் சொல்லிப் பேட்டி பண்ணிவைச்சேன். அப்பால் கும்பினீர் வர்த்தகர்களுக்கு வராகனில்லாததைத் தொட்டு நம்மைக் கடன் கேட்டபடியினாலே, நாம் அன்னூறு பாங்கி (பறங்கி) விராகன் குடுக்க அவர்களும் நசர் வைச்சார்கள். அப்பால் டங்கா சாலையார் சரப்பள்ளி வாடிக்கைப் படிக்கி யிருபத்தோரு விராகனிடை கொண்டு வந்தார்கள். இதை மறுபடிக்குக் குடுத்துவிட்டு ரெண்டாயிரம் ரூபாய் வாங்கிக் கொள்ளுகிறது. அப்பால் துறையூர் வைக்கீல் பாளாசி (பாலாசி) பண்டிதன் யிருபத்தோரு விராகன் நசர் வைத்துக் கண்டான். அந்த மட்டுக்கும் அவர்கள் சாப்பிட வுள்க்காந்தார்கள். மூணு தரம் சாந்தே குடிச்சு அப்போது இருபத்தோரு பீரங்கி விழுக்காடு வேட்டு போட்டார்கள். கப்பல்களிலேயும் அப்படித்தான் போட்டார்கள்.

அப்பாலவர்களை அனுப்பிவிச்ச சாடையிலே நானும் அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வரச்சே, வர்த்தகர்கள், டங்காசாலையார் வகையிராக்களை வீட்டுக்குப் போகச் சொல்லி அனுப்பிவிச்சுப்போட்டு வீட்டுக்கு வந்த பிற்பாடு, முசியே திலார்சு மாரிபத்திலே சந்தா சாயபு மகன் ரசா சாயபு யென்கிறவன் (துரைக்கு) மகத்தாவாகிற சூபி (ஜிகினா போட்ட) சீரொப்பா வொன்று கொண்டு போய் வைத்து பேட்டி வாங்கிக் கொண்டு, உடனே இருபத்தோரு பீரங்கி சுட்டார்கள். அப்பாலவன் அனுப்பிவிச்சுக் கொண்டு போன பிற்பாடு சோறு கான் (சுகூர் கான்) மகன் ஒரு சீரொப்பா கொண்டு வந்து வைத்து பேட்டி கண்டானாம். அப்பாலவரவர்கள் வீட்டுக்குப் போனார்களென்று கபுறு வந்து சொன்னார்கள்.

இனிமேல் மத்தியானம் பழய வர்த்தகர்கள் புதுசாய் ஒப்பந்தம் வாங்கிறதுக்கு ஓடித்திரிகிற பேர் பேட்டி பண்ணிக் கொண்டு வரப்போறார்களென்று சொன்னார்கள். பழய வர்த்தகர்களில் ஆராரென்று கேட்டால், ராமகிருஷ்ண செட்டி, மாத்து சிதம்பரஞ் செட்டி மகன் பொன்னப்பச் செட்டி, தெய்வனாயகச் செட்டி, அருணாசலச் செட்டி, பாப்பய்யப் பிள்ளை மகன் அலங்காரம், நெய்க்கார பொன்னப்பச் செட்டி யென்று சொன்னார்கள்.

பனிரெண்டு மணி வேளைக்கி வினாயகப் பிள்ளை நூறு விராகனும், மேற்படி (யார்) அண்ணன் பெரிய பரசுராமப் பிள்ளை மகன் இருபத்தோரு விராகனும் வைத்துக் கண்டு, தன் வீட்டிலே கலியாணம் வருகுது, மரமட்டுகளுக்கு (மராமத்துகளுக்கு?) கடற்கரையார்க்கு உத்தாரங் கொடுக்க வேண்டு மென்று கேட்டுக்கொண்டதாய்ச் சேதி வந்து சொன்னார்கள். வெத்திலை புகையிலைக் கிடங்கு பாப்புராயன் யிருபத்தோரு விராகன் நசர் வைத்துக் கண்டதாகவும், அப்பால் முசியே லெறி (யின்) காசா (சொந்த) வேலைக்காரன் கந்தனுக்கு பாப்புராயன் நல்ல வெத்திலையாய்க் குடுக்க வில்லையென்று ஒருத்தருக் கொருத்தர் நாய்க்கடியாய்க் கடிச்சு, சண்டை போட்டதாயும் அங்கே யிருந்தவர்கள் ரெண்டு பேரையும் விலக்கி விட்டதாயும் சேதி சொன்னார்கள்.

அப்பால் வினாயகப் பிள்ளை (நம்) வீட்டுக்கு வந்து, முன் மேலெழுதப்பட்ட படிக்கி நம்முடனேயும் சொல்லி, தங்களுக்கு யிருக்கிற விசனத்தினாலே யெனக்குச் சொல்ல மனசு யிருக்கவில்லை, அதுவும் யென் (துர) துருஷ்ட்டந்தானென்று சொல்லி, யிவ்வருஷம் ஆறு கலியாணம் பண்ண வேணுமென்று யெத்தனம் பண்ணுகிறேன், தாங்கள் முகூர்த்தத்துக்கு வந்திருந்து நிறைவேத்தி வைக்க வேணுமென்று ரொம்பவும் மனஸ்கரிச்சுச் சொன்னபடியினாலே, நல்லது, நடக்க வேண்டிய காரியம் நடக்க வேணுமே, அந்தப்படியே ஆகட்டுமென்று சொல்லி அனுப்பிவிச்சேன்.

***1756 வருசம், அவ்றீல் மாசம், தேதி 26; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 18; சோமவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசியே லெறி கோவர்ணதோர் என்னை அழைச்சனுப்பின விடத்திலே அப்பாவு போய்க் கண்டு பேசி வந்து சொன்ன சேதி யென்ன யென்றால் : முசியே கொர்ணே வந்து சீமா மூலத்திலேயிருந்து ஆள் வந்தவர்களெல்லாரும் ஓடிப் போய்விட்டார்கள் யென்று (சொல்லி), முசே லெறி செஞ்சிக் கோட்டைக்கு நெல் வரயில்லை யென்று (சொல்லி), "நீங்கள் சொல்லுறது மாத்திரமே யல்லாமல்

சொன்னபடி செய்கிறதில்லை," யென்று அப்பாவுவைப் பார்த்து கோவிச்சுக் கொண்டதின் பேரிலே, அப்பாவு யிருந்து கொண்டு "நாங்கள் அறுநூறு கூலிக்காரர் சேகரம் பண்ணிக்கொடுத்திருக்க அவர்கள் ஓடிப்போய் விட்டால் நாங்கள் செய்ய வேண்டியதென்ன? நெல்லுச் சம்மதி சேர்ந்ததுக்கு செஞ்சிக் கோட்டையிலே நெல்லு போடுகிறதுக்கு யில்லாமல், நீர் வருகிறீரென்று ரெண்டாயிரம் கூலிக்காரரைக் கோட்டையிலே அடைச்சு வைச்சுக் கொண்டு, அறுப்பு அறுக்கிறதுக்கு முதலாயில்லாமல், நெல்லு கொண்டு வந்து சேர்க்கிறதுக்கு முதலாயில்லாமல் கொம்மாந்துகளிப்படி ரோஷ்டு பண்ணுகி(றார்கள். அப்பால்) தாங்கள் சொன்னதின் பிற்பாடு அங்கங்கே நெல்லு கொண்டு வந்து போடச் சொல்லி எழுதியிருக்கிறோம், நெல்லு வருகுது," என்று யெத்தனையாயிச் சொன்னாலும், உறுட்டுப் பிறட்டுமாய்த்தானே சொன்(னார்). அது அல்லாமல், கொடுவாளுக்கும் மண்வெட்டிக்கும் கோடாலிக்கும் சொல்லி நாலஞ்சு நாளாச்சுது, யின்னம் வந்து சேரவில்லை யென்று சொன்னதுக்கு, "இதுவரையிலே எங்களுடனே சொன்னதில்லை, ஆருடனே சொன்னீரோ தெரியாது," யென்று சொன்னதுக்கு, உங்களுடனே தான் சொன்னோம் என்று சத்து கடுகடுப்பாய் உத்திரஞ் சொன்(னார்). துரையானவன் சரிப்போனாப் போலே நியாயமில்லாமல் உத்தாரஞ் சொன்னால், என்ன பதிலுத்தாரஞ் சொல்லப் போறோம் யென்று எண்ணிக் கொண்டு வீட்டுக்கு வந்து, என்னுடனே இந்த வயணங்க ளெல்லாம் சொன்னான். சண்டை யென்று சொன்னாப்போலே யிப்படி புத்தி சலிச்சு உத்திரஞ் சொன்னவர், இனிமேல் சண்டை துவக்கினால் என்னமாய்ப் புத்தி சலிச்சுப் போகுமோ அறியவேண்டியது ...

***1756 வருசம், அவிறில் மாசம், தேதி 26; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 18; சோமவாரம்[1]***

இத்தனாள் பிரான்சு ராச்சியத்திலே இங்கிலீசுக்காரருக்கும் பிரான்சுக்காரருக்கும் சண்டை துவக்கின வர்த்தமானம் அவ்விடத்திலே யிருந்து பிரான்சு யெழுத்திலே யெழுதி வந்தப்படி, கீழே யெழுதியிருக்குது.

பிரான்சு எழுத்தில் மூணு பக்கம் எழுதியிருக்குது. அதை யெழுதவில்லை.[2]

---

[1] இது தேவையில்லை. முந்திய தேதியின் தொடர்ச்சிதான் பின்னுள்ளது.

[2] இது படியெடுத்தோர் எழுதியுள்ளது. ஆங்கிலப் பதிப்பில் இந்தப் பிரெஞ்சுக் கடிதம் ஐந்து பக்கம் தரப்பட்டுள்ளது. இந்தப் பிரெஞ்சுப் பதிவு முழுக்க முழுக்கக் கானடாவில் இவ்விரு தேசத்தாருக்கும் நடந்த சண்டையை விளக்குகிறது. இந்தியச் செய்தி ஏதுமில்லை.

***1756 வருசம், அவ்றில் மாசம், தேதி 27; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 19; செவ்வாய்***

இத்தனாள் காலத்தாலே பத்து நாழிகைக்கி வேலூர் முறுத்த சல்லிக்கான் (வசமிருந்து) முசியே லெறி கோவர்ணதோருக்கு அஞ்சாறு நாளைக்கு முன்னேதானே சிறிது வெகுமதியும் கொண்டு அயிதரி யார் கான் (Haidar Yar Khan) வந்திருந்தான். அவன் யின்றைய தினம் முசியே திலார்ஷு மாரிபத்திலே (துரையைப்) பேட்டி பண்ணிக்கொண்டான். அப்போ பதினஞ்சு பீரங்கி போட்டார்கள். அந்த அயிதரியார் கானுக்கு அஞ்சாறு நாள் சிதா உலுப்பைக் (உணவுப்பொருட்கள்) கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். அவன் வெகுமதி கொண்டு வந்து வைச்ச வயணம் : பொன் பன்னீர்ச் சொம்பு–1, பன்னீர்ச் சொம்பு வைக்கும் தட்டு–1, பாக்கு (வைக்கும்) தட்டு–1, பாக்குப் பெட்டி–1, துராய்–1, பதக்கம்–1, மகதாபி சீரோப்பா–2, சாலுவை–4. இந்தப்படிக் கொண்டு வந்து வைச்சுக் கண்டான். இந்தப் பெகுமானம் வந்த வயணம் : முன்னாலே பவுன்சு அனுப்புகுறதுக்கு லக்ஷம் ரூபாய்க் குடுக்கவும், தர்பாறு கறுசு (காசு) அன்பதினாயிரம் குடுக்க(வும்) என்று தீர்ந்து யிருந்துதே, அதன் பிறகு இங்கிலீசுக்காரருக்கும் வேலூர் ராணுவுக்கும் சமாதானமாய்த் தீந்து போயிருக்க, அதின் பிறகு இவர்கள் பவுன்சும் பிறப்பட்டு வந்துவிட்டு யிருக்கச்சே, ஒன்று இங்கிலீசுக்காரர் மறுபடியும் வேலூரின் பேரிலே வரத்தக்க தாயிருந்து, அதன் பேரிலே பவுன்சுக்கூட்டி அனுப்பச் சொல்லி வந்த பெகுமானமோ, அல்லது லக்ஷம் ரூபாய் ஒடம்படிக்கைத் தீர்ந்து யிருந்துதே அதிலே எவ்வளவாகிலும் குறைச்சுப் பண்ணவேணுமென்று அனுப்பின வெகுமானமோ தெரியவில்லை. இனிமேல் விசாரிச்சு யெழுதவேணும். இத்தனாள் அப்பாவு கோட்டைக்கிப் போய் வந்தான். அவன் (முன்னே) யெழுதப்பட்ட சேதி சொன்னதே யல்லாமல் வேறே விந்தைகளாய்ச் சொல்லவில்லை.

## மே 1756

***1756 வருசம், மாயு மாசம், தேதி 2; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 24; ஆதிவாரம்***

இத்தனாள் காத்தாலே முசியே லெறி கோவர்ணதோர் எட்டு மணிக்குக் கோயிலுக்குப் போய்ப் பூசை கேட்டுக் கொவர்ணமா மேலே கோன்சேலியோர் வகையிராக்கள், ஒப்பிசியால் வகையிராக்களுடனே வந்தவுடனே, ஆசாரம் பண்ணினேன். அப்பால் முசே பெடுத்தல்மீ, முசியே மொர்சேன் வகையிராக்கள் பேசியிருந்தார்கள். அப்போ அழகிய மணவாளச் செட்டி தன் குமாரன், தன் தமையன் குமாரன் வகையிராக்களுக்குக் கலியாணமென்று பாக்கு வெத்திலை வாழப்பழம் வகையிராப் பழவகைத் தினிசுகளும் கொண்டு வந்து வைத்துக் கலியாண (த்துக்கு அழைத்தான்). நாளை சோமவாரம் கோன்சேல் கூடப்போறோம், வர்த்தகர்களை வரச் சொல்லு. கோந்துராத்துப் பேசுவோம்," (என்று துரை என்னிடம்) சொன்னதுக்கு, "நாளையத் தினம் என் பெண்சாதி யினுடய கருமாந்திரத்திரமான படியினாலே எனக்குத்தான் வரக்கூடாதே. வர்த்தகர்களும் அங்கே வருவார்கள். பட்டணத்திலேயிருக்கிற ஆலிம்வாலி யெல்லாம் யேகத்துக்குக் கருமாந்திரம் பண்ணுகிற யிடத்துக்கு வரு(வார்கள்); கெவுனி வாசலிலே பட்டணத்துச் சனங்களெல்லாம் ஏகமாய்த் திரண்டு பல்லக்கும் ... பேரிலேயும் குதிரையின் பேரிலே, ஆனை வகையிரா வாகனங்கள் பேரிலே வரத்துப் போக்கும் உண்டாயிருக்(கும்); ஒப்பிசியால் தடை பண்ணாமல் வுத்தாரம் குடுக்க வேணு," மென்று கேட்டதுக்கு, அந்தப்படிக்கி முசியே தொத்தேலுக்கும் முசியே சொபினேக்கும் உத்தாரம் குடுத்ததுமல்லாமல், "கும்பினீர் வர்த்தகர்களை நாளை நன்றையாகிய செவ்வாய்க் கிழமைக்கி வரச் சொல்லு," யென்று சொல்லி, அழகிய மணவாளச் செட்டியுடனே கூட வந்த கும்பினீர் வர்த்தகர்களுடனே சொல்லிப் போகச் சொ(ன்னார்).

அப்பால் பாளாசி (பாலாசி) ராயன் லசுக்கரிலிருந்து வந்த சமாசாரம்: முசியே புசி சலபத்து சங்கு லசுக்கரிலே யிருந்து வந்து பாளாசி ராயனைக் கண்டு, "சாவனூர் கோட்டையிலிருக்கிற முராரி ராயன், முசபர் கான், பட்டாணிகள், அப்துல் மசீது கான் வகையராக்களைப் பிடிக்கவும், கோட்டை வாங்கவும் யித்தனை நாள் வேணுமோ? நான் வாங்கிப்போடுகிறேன்," யென்று மோர்சாப் போட்டு மோப்புக் (கொத்தளங்கள் எழுப்பி, பீரங்கி வைத்து) கோட்டைக்குள்ளே குண்டு போட்டவிடத்திலே, நிறுவாகம் யில்லாமல் முராரி ராயன், முசபர் கான், பட்டாணிகள் வகையிரா பிறப்பட்டு (வெளியே வந்த) விடத்திலே நல்ல

சண்டை நடந்தது. முராரி ராயன், முசபர் கான், பட்டாணி வகையிரா (மிகவும்) சேதப்பட்டுப் போய் விட்டதின் பேரிலே, பட்டாணியர் பெண்டுகளை வீட்டுக்குள்ளே துப்பாக்கி மருந்து போட்டுக் கொளுத்திக் கொண்டதாகவும், அதின் பேரிலே வெகு பேருக்குச் சேதம் வந்தாப் போலேயும், முசே புசிக்குச் சாவு காயப்பட்டு ஆயிப்போச்சு தென்றும், சந்தேகமாய் வேலூர் முறுத்தசல்லிகானுக்கும் ஆற்காட்டுக்கும் மமுதல்லிகானுக்கும் அறுக்காறர்கள் சேதி வந்து சொன்னதாய் அவ்விடத்திலே யிருந்து யெழுதி வந்த தென்று முசியே லெறி கோவர்ணதோர் யவர்களுடனே சொன்(னேன்). இப்போதான் முசியே திலார்ஷும் வேலூரிலிருந்து சந்தா சாயபு மகனுக்குச் சேதி வந்ததாய்ச் சொன்னானென்று சொன்னான். பரமய்யன் என்கிறவன் ஆர், அவனை யேன் வுத்தியோகம் வாங்கிப் போட்டார் முசியே துப்பிளேயிக்சு என்று கேட்டதுக்கு, "முசியே பத்தே னென்கிறவன் (M. Petain) சூரப்பனும் பரமய்யனும் செவ்வையாய் வந்து சேருகிறதில்லை என்று காயம் காரத்தின் (கோபத்தின்) பேரிலே சொல்லி, உத்தியோகம் வாங்கிப் போட்ட பிற்பாடு, சூரப்பன் சிபார்சின் பேரிலே மறுபடி வைக்கப்பட்டுது. யிவனுக்கு சிபார்சில்லாமல் நின்று போச்சுது," என்று சொன்(னேன்). இயாதொரு சமையம் பார்ப்போமென்று முசியே லெனுவார் சிபார்சு பண்ணினதுக்கு அவருக்குச் சொன்னார். அதுக்கு, "இவன் குத்தஞ் செய்தவனல்ல, (கெட்ட) மனுஷனுமல்ல, சாபு (சாது) மனுஷன்," யென்று சொன்னதுக்கு, சமையம் பார்க்கவேணுமென்று (முசியே லெறி) போக்கு மேலே விட்டார். அந்த மட்டுக்கும் நான் சாடையாய் நின்றேன். அவர் காம்பிராவிலே போனார். நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் சாயங்காலம் வந்த சமாசாரத்திலே பாளாசி ராயன், முசியே புசி யிவர்களுக்குண்டான சேதி எழுதப்பட்டது. பொய் யென்று சொன்னபடியினாலே அந்தச் சேதியும் துரையுடனே எச்சரிச்சுப் போட்டேன்.[1]

### *1756 வருசம், மாயு மாசம், தேதி 3; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 25; சோமவாரம்*

இத்தனாள் சௌபாக்கியவதி மங்கத்தாய் சீவன் விட்ட பதினாறாம் நாள் கருமாந்திரமானபடியினாலே, பெருமாள் நாயக்கன் சாவடியிலே

[1] மிகவும் அவசரமாகவும் பிழைகள் நிறைந்தும் பிரதி எழுதியுள்ளார். இவருக்குத் தமிழ் எழுத்தறிவும் பொறுமையும் பொறுப்பும் இல்லை எனத் தெளிவாகப் பல பக்கங்களிலும் தெரிகிறது. வாக்கிய அமைப்பையும் வார்த்தைகளையும் பெயர்களையும் நினைத்த வாறெல்லாம் எழுதியிருப்பதும் பிரித்திருப்பதும் பிரதி யெங்கும் தெளிவாகிறது. எழுத்துப் பிழைகளுக்கு அளவே இல்லை.

இடஞ் சவுக்கியமா யிருக்கிறதைத் தொட்டு, அங்கே சூரிய உதயத்துக்குப் போய்ச் சேர்ந்து, அவ்விடத்திலே நடக்க வேண்டிய கர்மம் விதிப்படிக்கி ராசாக்கள் வீட்டிலே நடக்கிற மேய் வரிசைப்படிக்கி அய்யாயிரம் வராகன் சிலவுடனே சகலமும் நடந்து, சாயங்காலம் தலைக்கட்டிக் கொண்டு சகல சுபாகரத்துடனே நவபோத்து, பயிராக்குகள், ஆனையின் பேரிலே முன் பெரிய கொடி நடக்க, நடநாடகசாலைகளுடனே பட்டணத்துச் சனங்களெல்லாம் வேதாரணியம் ஆதி வேலூர், ஆர்க்காடும் மேற்க்காக, நெல்லூர் வடக்கு அத்தாக அங்கங்கே இருந்து சனங்கள், அமுல்தாரர், நாட்டார், குடிகள் வந்தார்கள். சமேதாரர்கள், யிசாராதார் வகையிராகள் நானா வருணங்களிலேயும் வந்து நதீர் வைத்துக் காண, அவரவர் தாரதம்மியப்படியே அவரவரை அழைத்து தகுரீத்தியாய் சமஸ்தமான பேருக்கும் பாக்கு வெத்திலை குடுத்து, புத்திர இனங்கள், பந்துக்கள் வகையிராக்களுடனே பிறப்பட்டு, தீவட்டிகள் மத்தாப்புகள் முதலானப் பிரகாசத்துடனேயும் சிரஞ்சீவி அண்ணாசாமி அய்யாசாமி அம்பாரியின் பேரிலேயும், அப்பாவு குதிரையின் பேரிலேயும், கந்தப் பிள்ளை, சிதம்பரநாதப்பிள்ளை, சாமி வகையிரா மருமக்கள் பல்லக்கின் பேரிலேயும், கூடவந்த பேர் அவரவர்கள் வாகனங்களின் பேரிலேயும் சுகமாய் அரமனை வந்து, சங்கீதம் நடநாடகசாலை வகையிரா கேட்டு, ராத்திரி பத்து நாழிகைக்கி அவரவர்களை அனுப்பி, சாப்பாடு மத்ததும் விசாரிக்கத்தக்கதாக மரியாதையாய் அவர்களை விசாரிக்கச் சொல்லிக் கட்டளைப்பண்ணி, அப்பால் நடக்க வேண்டிய கிருகையாம்படியாய் நடக்க வேண்டியதெல்லாம் நடந்தது.[1]

### *1756 வருசம், மோயு மாசம், தேதி 7; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 29; சுக்கிறவாரம்*

இத்தனாள் காத்தாலே யேழரை மணிக்கிக் கோட்டைக்குப் போய் முசியே லெறி குவர்ணதோர் அவர்களைக் கண்டு சந்திச்சுப் போட்டு யிருக்கச்சே, இங்கிலீசுக்காரர்களுடைய ராசாவினுடைய மனுஷன் ஒரு வெள்ளைக்காரனும் பின்னை ஒரு வெள்ளைக்காரனும் வருகுறார்களென்று முசியே சொபினே எதிர்கொண்டு போய் அழைத்துக் கொண்டு வந்து, கோட்டைக்குள்ளே வந்து நுழையச்சே, வரிசை வைச்சு பெரிய துரைக்கு அடிக்கிற தம்பூறு அடிச்சு, உள்ளே நுழைஞ்சவுடனே யிருபத்தோரு பீரங்கி போட்(டார்கள்). யேது பீரங்கி போடுகிறதென்று (தொரை) பீரங்கி மேஸ்திரியை அழைக்கச் சொன்னார். அவன் வருகிறதுக்குள்ளே, முன் சொல்லப்பட்ட ராசாவினுடைய மனுஷன்

[1] மரணமாகிய துக்க நிகழ்ச்சியையும் கோலாகலத்துடன் கொண்டாடும் 'நற்' பழக்கம் தமிழரிடை என்று துவங்கியது எனத் தெரியவில்லை.

வந்தான். அவனுக்கு ஆசாரம் பண்ணி நெடுஞ்சாலையிலே யிருக்கச்சே பீரங்கி மேஸ்திரி வந்தான்.

அவனைக் கேட்டதுக்கு முசியே சொபினே சொன்னாரென்று சொன்னான். முசியே சொபினேயை அழைத்துக் கேட்டதுக்கு, அவர் "முன்னாலே உம்முடனே சொல்லியிருந்தேனே. நீர் மறந்து போனீ," ரென்று சொன்னதின் பேரிலே, கியாபகம் பண்ணிக்கொண்டு மெய்தானென்று சொல்லி அனுப்பிப்போட்டு, வந்தவர்களுடனே பேசியிருந்து கோன்சேல் காம்பிராவிலே அலுமுசு சாப்பிட்டு ஆன பிற்பாடு, வந்தவ(ர்கள்) அனுப்பிவிச்சுக்கொண்டு முசியே தொத்தெல் வீட்டுக்குப் போனார்கள். நான் அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

அப்பால் மத்தியானந் தீனி சாப்பிட்டுக் கொண்டிருக்கச்சேயும் யிருபத்தோரு பீரங்கி வேட்டுப் போட்டார்கள். மரியாதை பெரிய துரைக்கிப் பண்ணுகிற மரியாதையாய்ப் பண்ணினதுக்கு முசியே சொபினே முன்னாலே கூடலூருக்குப் போனவிடத்திலே வெகு மரியாதை தனக்கு நடந்து தென்று தொரைக்குச் சொல்லிப் பண்ணி வைச்சான்.

***1756 வருசம், மாயு மாசம், தேதி 8; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 30; சனிவாரம்***

இத்தனாள் காலமே ஏழரை மணிக்கி கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவர்ணதோரைக் கண்டு ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அப்பால் முசியே புசியும் முசபர் கானும் விழுந்து போனார்களென்கிறதாய்ச் சொன்னீரே, அது பொய் என்கிறதாய் கபுறு வந்தது என்று சொன்னார். மெய்தான் எனக்கும் வேலூரிலேயிருந்து சேதி வந்துதென்று சொன்னேன்.

அதன் பிறகு, "ஸ்ரீரங்கத்துக்கு முசியே புறுணியேவும் முசியே லெறியும் (வெறியும்) போயிருக்கிறார்களே அவர்கள் போனபோது திருவீதி வழியாய்ப் போனார்களாம். அந்த வழி வெகு காடு மூடிக்கிடக்குதாம். அதை நன்றாய்ப் பாட்டசாரியாய்ப் பண்ணி வைக்கச் சொல்லி எழுதி அனுப்பினார்கள். அந்தப்படிச் செய்துப் போடு", என்றும் சொன்னார். அதுக்கு நான் சொ(ன்னது) : "நீங்கள் சொல்லுகுறதுக்கு நான் (மறுப்பு) சொல்லயில்லை. ஆனாலந்த வழி வந்து பாட்டசாரி யல்ல. முன் பின் போற வழி(யான) திருவண்ணாமலை போகாமல் யிப்படிக் காட்டு வழியாய்ப் போனபடியினாலே யெழுதி அனுப்பினார்கள். அந்த வழிப் பாட்ட சாரிப் பண்ண வெகுபணம் செல்லும். ஆனாலும் அங்கேயிருக்குற பேருக்கு எழுதியனுப்பிச் சேதி சொல்லுகுறேன்," என்று சொன்னதுக்கு நல்லதென்று சொன்னார்.

*1756 வருசம், மாயு மாசம், தேதி 9; தாது வருசம், சித்திரை மாசம், தேதி 31; ஆதிவாரம்*

இத்தனாள் மத்தியானத்துக்கு மேலே துரை அழைச்சனுப்பிப் போனவிடத்திலே, கூலிக்காரர் யேன் வரவில்லை யென்று கேட்டார். காலமே சிறிது பேர் வந்தார்கள். ராத்திரிக்கி சிறிது பேர் வருவார்களென்று சொன்னதுமல்லாமல், "விழுப்புரத்திலே இங்கிலீசுக்காரருடைய சொலுதாது ஒருத்தன் தேவனாம்பட்டணத்திலிருந்து ஓடி வந்திருந்தவனைப் பிடிச்சுக் காவல் பண்ணி யிருக்குறார்கள். அவனை இங்கே அனுப்பிவைக்கச் சொல்லுகிறதா?" வென்று கேட்டதுக்கு, யிவ்விடத்துக்குத் தானே அனுப்பென்று சொல்லி எழுதியனுப்பென்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவிச்சுக் கொண்டு வந்துவிட்டேன்.

*1756 வருசம், மாயு மாசம், தேதி 10; தாது வருசம், வையாசி மாசம், தேதி 1; சோமவாரம்*

இத்தனாள் கோட்டைக்குப் போனவிடத்திலே தொரையவர்கள் பேதிக்கி வாங்கிக் கொண்டார்களென்று சொன்னபடியினாலே, ரெண்டு நாழிகை பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருந்து, அப்பால் முசியே மொர்சேன் அழைச்சனுப்பின படியினாலே அங்கே போகவேணுமென்று பிறப்படச்சே, யிதுக்குள்ளே குண்டூர் வெங்கிடாசல செட்டி வந்து சொன்ன சேதி என்ன வென்றால் : தானும் முசியே போலோ வீட்டுக்குப் போனதாகவும், (அவர்) நாலைஞ்சு நாளைக்கு முன்னே தொரையண்டைக்குத் தாம் போனதாயும், அப்போ "ரங்கப்பனுடைய சேர்ந்த சம்மதி அவரவர்கள் வந்து உம்முடனே சொல்லுகிறதைக் கேட்டுக்கொண்டு (நீர்) வித்தியாசமாய் நடந்துகிறீர்? அப்படிப் பண்ணினால் அவன் கும்பினீருக்கு எப்படிப் பணம் செலுத்துவான்? யெவன் வந்து என்னத்தைச் சொன்னாலும் நீர் இடங் குடுக்கிறபடியினாலே கும்பினீருக்கு லொகுசான் (நஷ்டம்) வருகுது. அது யெதுனாலே என்(றால்) அவர்கள் கையிலே சீர்மைக் குத்தகைக் குடுத்திருக்கிறோம். அவருக்கு எந்தெந்தப்படிக்கி மைத்தது (உதவி) பண்ண வேணுமோ அந்தப்படிக்கி மத்தத்துப் பண்ணினால் அல்லவோ நமக்குப் பணம் வரும்? அந்தப் பணம் வந்து ரங்கப்பனுது அல்லவே, கும்பினீர்ப் பணமல்லவா? நாலைஞ்சு லட்சம் ரூபா நிலுவை நின்றால் எப்படி வந்து சேரும்? சீமையிலே அவரவர் பேரிலே நிலுவை நிற்குதென்று அல்லவா சொல்லுவார்? அப்பால் என்ன செய்கிறது? நீரிதுகளை யெல்லாம் யோசனைப் பண்ணி நடத்தயில்லை. நான் சொல்ல வேண்டிய உபகரிசாமான (கடமையான) படியினாலே சொன்னேன். அப்பால் சரிப்போனபடி செய்யுங்கள்," என்று (முசியே பொலோ தொரையிடம்)

சொன்னதாய்க் குண்டூர் வெங்கிடாசல செட்டியார் வந்து சொன்னார். இதை யோசனை பண்ணிப் பார்த்தால், நான் முசியே போலோவுடனே சொல்லச் சொல்லிவிச்சதாய்த் துரை மனசிலே தோ(ணும்); நாமானால் முசியே போலோவுடனே ஒன்றுஞ் சொன்னதில்லை. இதுவுமல்லாமல், குண்டூர் வெங்கிடாசல செட்டியார் சொன்னது, தொரை எப்படி நடப்பிச்சாலும் ரங்கப்பனைக் கட்டிக்கார்த்துக் கொண்டிருக்கச் சொல்லு என்று சொல்லச் சொன்னதாய்ச் சொன்னான்.

அதைக் கேட்டுக் கொண்டு முசியே மோர்சேன் வீட்டுக்குப் போனேன். போனவுடனே அவன் அலுமுசு பண்ணி அப்பால் சம்பாவுலுக் கோயில் சுப்பீரியேருடனே பேசியிருந்து அவரை அனுப்பிப் போட்டு, கோந்துவாரே போய் உளுக்கார்ந்து, என்னை வரச் சொல்ல நான் கோந்துவாரைப் போய் ஆசாரம் பண்ணினவுடனே, எதிரே சமீபத்திலே ஒரு நாற்காலி (எடுத்துப்) போட்டு வைக்கச் சொன்னதின் பேரிலே என்னை உளுக்காரச் சொன்னார்.

உளுக்கார்ந்தவுடனே, "நான் ரெண்டு வருஷத்திற்கு முன்னாலே வந்திருந்து மச்சிலிபந்தருக்குப் போற போது உம்முடைய பேரிலே வெள்ளைக்காரச் சாதி யெத்தனை பேருண்டோ அத்தனை பேர்களும், தமிழ்ச் சாதிகளிலே யெத்தனை பேருண்டோ அத்தனை பேர்களும், மயே முதலான யிந்த கோஸ்த் (Coast) வெல்லாம் உன்னைச் சந்தோஷப்படாதவர்களில்லை. வியாபாரத்திலே உன் சமத்து யிந்த யிந்தியா ராச்சியத்திலே ஒருத்தருக்கும் வராது, கோடி கோடி லக்ஷம் வராகன் உன் வசத்திலே குடுத்தாலும் எந்த எந்த ரேவுக்கு யென்ன யென்ன சரக்குகள் எந்தெந்த தேசத்துக்கு எப்படி எப்படி அனுப்பவேணுமோ அப்படி அனுப்பி கணக்குகளுடனே சேர்ந்ததும் கப்பலுகளுக்கும் எழுதிவிச்சு தீத்துப் போடுகிற சமத்து யிந்த சீமா மூலத்திலே (எவரிடமும் காணாது என்று சொல்வார்கள். ஆனால் இப்போ) சகல சனங்களும் விரோதமாய்ப் பேசுகிறது யெனக்கு மெத்த ஆச்சரியமாயிருக்குது. அது உன்னாலே வந்ததல்ல; தமிழரிலே ஒரு வாடிக்கை பிராமணனைத் தேவதையாய்ப் பார்க்கிறபடியினாலே சீமா மூல சம்மதி உனக்கு நூதனமா யிருக்கிறபடியிணாலே பாப்பார் வசத்திலே ஒப்பிச்சுப் போ(ட்ட) படியினாலே யிந்த விரோதம் வந்ததாய் நான் எண்ணினேன். முசியே லெறி கோவர்ணதோருடனே நான் உன் பிரஸ்தாபம் பேசின போது எல்லாம் யிப்படியே சொன்னேன். நீர் அப்புப் பேச்சிலே மெத்த அனி(நி)யாயமாய்ப் பண்ணினாய்," என்று, அதை விஸ்தரிச்சு ஒரு நாழிகை தேசகாலம் பேசினார்.

அதுக்கு நான் சொல்லத்தக்க உத்(தாரமெ)ல்லாம் சொன்னதுக்கு, அதை விட்டு, "பெத்துநாயக்கன் மகன் பிரிசுதாசுவை முசியே

கோதே(வுக்குப்) பேட்டி செய்விச்சு நான் அஞ்சாறு லக்ஷம் ரூபாய்ச் சம்பாதிச்சே னென்று கணக்குக் கூட எழுதிக் குடுப்பிக்க யில்லையா? ... உமக்கும் நமக்கும் எத்தனை சினேகிதம்? நீர் எனக்கு என்ன காரியத்துக்கு எழுதினாலும் நானும் அந்தக் காரியமெல்லாம் செய்து அனுப்பயில்லையா?" (என்று) அந்தப் பிரஸ்தாபத்தை எடுத்து அரை நாழிகை தேசகாலம் பேசினார். "அவர்கள் என் வழியிலே வந்து பேசினதுக்கு நான் அட்டி பண்ணினேன். (அப்பால்) முசியே குலுவேத்து யிவர்கள் போய்ச் சொல்லிப்[1] பேட்டி பண்ணிவிச்சுக் கொண்டபோது, முசே கொதே என் பேரிலே கோபம் பண்ணினார்." "உங்களுக்கு (அதற்கான) சாதகமெல்லாம் (சான்றுகள்) கொண்டு வந்து காட்டுகுறேன்," என்று (நான்) சொன்னேன். யிது வரைக்கும் அவர்கள் பிரசங்கமே (நான்) அறியேனென்று சொன்னதின் பேரிலே, (மொராசின்) கோபம் தணிஞ்சு, மூணு வருஷத்திலே யென் பேரிலே எந்த சினேகத்துடனேயும் அதப்புடனேயும் பேசினாரோ அந்தச் சாடையிலே பேசிக் கொண்டு வந்தார். நானும் அதுக்குச் சவுத்தாவுகளாய்ச் சொல்லிக் கொண்டு வந்ததின் பேரிலே, "நான் மச்சிலிபந்தரிலே அமுல் பண்ணு(கிற போது) வெகு நியாயமாய் நடப்பிச்சேன். என்ன நடப்பிச்சாலும் சின்ன மனுஷர், குடியானவர்களுடைய சுபாபம் தாறுமாறாய்ச் சொல்லுவார்கள்," யென்று சொன்னார். "மெய்தான், நான் சீமா மூலம் அமுல் பண்ணதிலே அப்படித்தான் அவரவர்கள் உம்முடனே சொல்லிக் கொண்டார்கள். இப்போ நீர் தானே சொன்னீர்" அனுபவமானால் தெரியு மென்று சொன்(னேன்). அதுவுமல்லாமல், "ரெண்டு பேர் வியாச்சியப்பட்டுப் போனால் ஒருத்தர் தோற்கிறது நிசம், கெலிச்சவன் தாரிப்பு பண்ணிக்கொண்டு போவான். தோத்தவன் தாறுமாறாய்ச் சொல்லிக் கொண்டு போவானர். யிது வந்து லோக வாடிக்கையாச்சுதே. யிப்படி யிருக்க நீர் தானே ரெண்டு மூணு வருஷத்துக்கு முன்னே அவரவர்கள் என்னைத் தாரிப்பு பண்ணினது முதலானது சொன்னீர்களே. இப்ப என் வசத்திலே தோண்டச் (அதிகச்) சீமையிருக்கிறதை என்னமாய் நடத்த வேணும் (என்பதை நீர் தான் சொல்லவேணும்). அப்படி அனீதமாய் நான் ஒன்றும் பண்ணினதில்லை. வெள்ளைக்காரரிலே நாலத்து ரெண்டு பேர் மாத்திரம் என் பேரிலே வித்தியாசமாய்ச் சொல்லிக் கொண்டதே அல்லாமல், பின்னை ஆறாகிலுஞ் சொல்ல நீங்கள் கேழ்விப்பட்டதுண்டா?" என்று (நான் கேட்டேன்). "மெய்தான், அப்பு சம்மதி விசாரிச்சேன். அதிலே மாத்திரம் அநீதம் பண்ணியிருக்கிறீரென்று (சொன்னான்)" என்றார். நான் வந்து "அவன் சொன்னதைக் கேட்டுக் கொண்டு சொல்லுகிறீர். நான்

---

[1] 'பொய் சொல்லி' என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது. இது எது பற்றியது என்பது விளங்கவில்லை.

சொல்லுகிறதை விசிதமாய் சாவகாசமாய்க் கேட்டால் அப்போ தெரியவரும்," யென்று சொன்னேன்.

மெய்தானென்று (அவர்) சொன்னதுமல்லாமல், "முன்னாலே பத்மனாத நாயக்கன் மகன் சின்னியனைக் காவல் பண்ணி விலங்குப்போட்டு அனுப்பினேன். இப்போ பிரஞ்சு (பிரிஞ்சு) தாசு என்கிறவன் முசியே மீரா வழியிலே ஒட்டி தில்லும் பில்லுமாய் முசியே லெறியுடனே சொல்லி விச்சான். பிறிஞ்சு[1] தாசுவை சின்னியனைப் பண்ணி அனுப்பி வைச்சாப் போலே விலங்கு போட்டு அனுப்ப வேணுமென்று திட்டம் பண்ணியிருந்தேன். ஆனால் அவன் தகப்பன் சாமுதாசு என்கிறவன் கோவர்த்தனதாசுக்கு குமாஸ்தா வாயிருந்தான். அவன் வெகு நல்லவன். அவனைத் தெர்ட்டு மனம் பொறுத்தேன். முசியே மீராச் சின்ன மனுஷன். ஒரு நாயிக்குச் சமானம். அவனாலே என்(ன செய்யமுடியும்?)" என்று சொன்னார். அப்பால், "வெகுநேரம் ஆச்சுது வந்து. இன்னம் ஒரு வேளையிலே சவகாசமாய்ப் பேசிக் கொள்ளலா," மென்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவைச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1756 வருசம், மாயு மாசம், தேதி 11; தாது வருசம், வையாசி மாசம், தேதி 2; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் காலத்தாலே ஏழரை மணிக்கி கோட்டைக்குப் போனவிடத்திலே முசியே லெறி கோவர்ணதோர் கீழண்டைச்சாலையிலே யிருக்கச்சே நான் போய் ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அப்பால் கோன்சேல் கூடுகிறதுக்கு கோன்சேல்காரரெல்லாம் வந்திருந்தபடியினாலே, யிவர் கோன்சேலுக்குப் போறதுக்குப் பிறப்படச்சே என்னை பார்த்துக் கூலிக்காரர் வரவில்லையா வென்று கேட்டார். அதுக்கு கொரவர் சனம் 90, கூலிக்காரர் சனம் 288, ஆக சனம் 378 பேர் வந்திருக்கிறார்கள், யின்னம் ரெண்டு மூன்று நாளையிலே வேண்டிய பேர் வருவார்களென்று சொன்னது மல்லாமல், செஞ்சிக்கி பீரங்கி யிழுக்கிற சனம் 170 என்று சொன்னேன்.

அதைக் கேட்டுக்கொண்டு கோன்சேலுக்குப் போனார். அப்பால் கோன்சேல் கூடி அவரவர் கலைஞ்சு போய் விட்டார்கள். கோன்சேல் கூடின சம்மதி என்னவென்று விசாரிக்குமிடத்திலே, முசே லீகு (Legou) வீட்டு வேலைக்காரப்பய்யனும் அவன் பெண்சாதியும் ஒருத்தருக் கொருத்தர் சண்டை போட்டு, பெண்சாதியைப் புருஷன் அடிச்சதாயும், அவள் புருஷனை அழைச்சுக் கொண்டு முசே லீகுவுடனே சொன்னதுக்கு, அவர் எல்லாம் காலமே விசாரிப்போமென்று யிருவரையும் போகச் சொன்னதுக்கு, அவன் பெண்சாதி புருஷன் கூடவந்தால் ராத்திரிக்கு

[1] முன்பு பிரஞ்சு, அடுத்து பிறிஞ்சு!

என்னைக் கொன்று போடுவானென்று சொன்னதுக்கு, அவளைப் போகச் சொல்லி அந்தப் பய்யனை வீட்டிலே ஒரு அறையிலே அடைச்சு வைச்சதின் பேரிலே, அந்தப் பய்யன் வந்து சொல்லிக் கொண்டால் நியாயம் விசாரிக்காமல் அடைக்கலாமா யென்று நாணுக் (நாணிக்) கொண்டு செத்தான். அதின் நிமித்தியம் கோன்சேல் கூடித் தீர்ந்த வயணம், முசியே லீகு (கையிலே ஒரு அறிக்கை) வாங்கி சீமைக்கி அனுப்பி, அவ்விடத்திலே யிருந்து என்னமாய் வருகுதோ அதுக்கு (உடன்படுகிறேன்) என்று கையெழுத்து வாங்கினார்களென்றும், பின்னையும் என்ன என்ன காரியத்துக்குக் கூடினார்களோ தெரியாது யென்றும் சொல்லிக் கொண்டார்கள். அப்பா லந்தப் பய்யனை நோவாளிக் கிடங்கிலே (மருத்துவமனை) கொண்டு போய் ... (அவனது) யீரல் வகையிரா எடுத்துக் கொண்டு, அப்பால் அவனை வண்டிக் காலிலே கட்டி, யிப்படி ஆராகிலும் பண்ணினால் இந்த ஆக்கினைப் பண்ணுவோமென்றுத் தமுக்குப் போட்டு, ... யிழுத்துப் போட்டார்களென்று நயினார் வந்து கபுறு சொன்னார். அப்பால் நானிந்தச் சேதி எல்லாங் கேட்டுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்து அப்பால் பனிரெண்டு மணி அடிச்சவுடனே வீட்டுக்கு வந்தேன்.

***1756 வருசம், மாயு மாசம், தேதி 13; தாது வருசம், வையாசி மாசம், தேதி 4; குருவாரம்***

இத்தனாள் தனக்கு வினாயகன் அகம்படியச் சாதிக் கெல்லாம் நாட்டாண்மைத் தன(ம் கொடுத்ததுக்கு சின்ன துரைக்கு) வெகுமதி பண்ணினார்; தங்களண்டைக்கும் வருகுறேன் யென்று மேலுகிரி செட்டியுடனே சொல்லி அனுப்பினதுக்கு, நான் "முன் பின் வாடிக்கை(ப்படி) அகம்படியச் சாதியிலே நாட்டாண்மைத் தனம் நேமிக்க வேணுமானால் நாலு பேர் கூடிவந்து நம்முடனே சொல்லுவார்கள்... அப்பால் நாம் தொரை அவரகளண்டைக்கு அழைத்துப் போய் வெகுமதி பண்ணிவிப்போம். அப்படியில்லாமல் இப்போ நூதனமாய்த் தான் தானே தொரைகளுடனே பேசிக்கொண்டு நாட்டாண்மைத்தனம் வாங்கிக் கொண்டு நமக்குச் சொல்லி அனுப்பினால் நம் அண்டையில் அவர் என்ன காரியமிருக்குது?" என்று சொல்லி அனுப்பினேன்.

***1756 வருசம், மாயு மாசம், தேதி 14; தாது வருசம், வையாசி மாசம், தேதி 5; சுக்கிரவாரம்***

இத்தனாள் எனக்கு சரீரம் சொஸ்த மில்லாதபடியினாலே வீட்டிலேயே யிருந்தேன். விழுப்புரத்திலே அகப்பட்டிருந்த இங்கிலீசுக்கார சொலுதாது ஒருத்தன் ஓடிவந்திருந்தவனை இவ்விடத்திலே கொண்டு வந்து ஒப்பிச்சோமென்று மாசிப் (மாஜிப்) பண்டிதன் துரையுடனே கபுறு சொன்னோமென்று நமக்கு வந்து கபுறு சொன்னான்.

அப்பால், குருவப்பச் செட்டி கோட்டைக்குப் போனவிடத்திலே தேவனாம்பட்டணத்து ரேவுலே நாலு கப்பல் சீமைக் கப்பல் வந்ததாயும், அதினாலே உதய காலத்திலே பீரங்கி போட்டார்களென்றும் அந்த கப்பலுக்குள்ளே பொம்பாயிலே சண்டைபோட்ட கப்பல் ஒன்று வந்திருக்குதென்றும், யிப்படி யெல்லாம் வெள்ளைக்காரர் சொல்லிக் கொண்டதாய்க் குருவப்பச் செட்டி வந்து சொன்னான்.[1] அப்பால் மதனாந்த பண்டிதன், பாளாசிப் (பாலாஜிப்) பண்டிதன் வகையிராக்கள் துரையைச் சந்திச்சிப் போட்டு சத்து நேரம் யிருந்து பிறப்பட்டுப் போனார்களென்று சொன்னான்.

***1756 வருசம், மாயு மாசம், தேதி 15; தாது வருசம், வையாசி மாசம், தேதி 6; சனிவாரம்***

இத்தனாளும் சரீரம் சுவஸ்தமில்லாதபடியினாலே வெளியே போகயில்லை.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி என்னவென்றால்: நேத்து வந்த கப்பல் எல்லாம் பொம்பாயிலே யிருந்து வந்ததே அல்லாமல் சீமையிலிருந்து வரயில்லை. ஆனா லந்தக் கப்பலிலே மேஸ்தர் கிளேவிசு (வரவில்லை), பின் கப்பலிலே வருகுறாரென்று இப்போ வந்தக் கப்பலுக்குள்ளே சேதி வந்தபடியினாலே, தேவனாம்பட்டிணம் கோவர்ணதோர் தீவுக் கோட்டைக்கு அந்த மேஸ்தர் கிளேவிசுக் கப்பலைக் கண்டவுடனே விஸ்தாரமாய்ப் பீரங்கிகள் சுடச் சொல்லி எழுதி அனுப்பினாரென்று மிந்தப்படி தேவனாம்பட்டணத்திலே யிருந்து வந்த சேவுகர் சொல்லிக்கொண்டார்கள். முன்னாலே பாசி ராயன் முசபர் கானை வெட்டிப்போட்டதாயும், அந்தச் சண்டையிலே முசே புசி செத்துப்போனதாயும், முராரி ராயனை வெட்டிப் போட்டதாயும் பிறந்த விசேஷம் பொய்யாய்ப் போய், இத்தனாள் பிறக்கிற சேதி என்ன வென்றால், பாசி ராயன் சாவனூர் பங்காபுரம் கில்லேதாரன் அப்துல் மசீது கான் வகையிரா துலுக்கர்களைக் கொன்றுபோட்டு, முசபர் கானையும் முராரி ராயனையும் கைப்பிடியாய்ப் பிடிச்சுச் சேர விலங்கு போட்டதாயும், முசே புசி(யும்) சலபத்து சங்கும் பாசி ராயனுடனே சேர்ந்து, சயோத்தியமாய் மயிசூரின் பேரிலே வருகிறதாயும் சேதி சொல்லிக் கொள்ளுகிறார்கள்.[2]

தஞ்சாவூர் மானோசியப்பா சுனைக்கட்டு (அணைக்கட்டு?) நிமித்தியம் நம்முடைய பிரான்சுக்காரர் (நதிக்) கரை யிடியாமல் நாணல்

---

[1] இப்படி ஆங்கிலேயருக்குத் தம் நாட்டிலேயிருந்து போர்க்கப்பல்களும் துருப்புகளும் வந்து குவிந்தன. பிரெஞ்சுக்காரருக்கு அப்படி எதுவும் வரவில்லை.

[2] இதுவும் ஒரு வதந்தியே.

வைச்சு இருந்ததை தஞ்சாவூரார் வெட்டிப்போட்டார்கள் என்கிற படியினாலே, அது நிமித்தியம் நம்முடைய பிரான்சுக்காரர் சிறிது சொலுதாதுமார்களும் பீரங்கியும் கொண்டு போய் சண்டை பண்ணதின் பேரிலே, மானோசியப்பா அந்தச் சேதியைக் கேட்டுப் பவுன்சு கூட்டிக்கொண்டு அவனைக் (அணைக்) கரைக்குப் போறதாய்ச் சேதி கேழ்விப்பட்டுது.

### *1756 வருசம், மாயு மாசம், தேதி 18; தாது வருசம், வையாசி மாசம், தேதி 9; செவ்வாய்*

இத்தனாள் காலத்துலே நான் பத்தியம் வாங்கிக் கொண்டபடியினாலே வெளியே போகயில்லை.

தொரை அழைச்சனுப்பின விடத்திலே எனக்கு லகுவில்லாதபடியினாலே குருவப்பச் செட்டியை அனுப்(பு விச்சேன்). அவனுடனே தொரை ... "இன்னங் கிராமத்திலே யிருந்து கூலிக்காரர்கள் எத்தனை பேர் வந்தார்கள் யென்று ஏன் கணக்கு யெழுதி வைக்கயில்லை?" யென்று கேட்டதுக்கு, இந்த மட்டுக்கும் அன்னுத்திப் பத்து பேர் வந்திருக்கிறார்கள், பின்னையும் யிரநூறு பேர் வந்தவர்களை வாண்டாமென்று சொன்னபடியினாலே போய் விட்டார்களென்று சொன்னதுக்கு, "அப்படியல்ல பர்கனாவுக்கு பர்கனா யெத்தனை பேர் வந்தார்க ளென்று எழுதிவைக்கச் சொன்னால் நீங்களெழுதி வைக்கவில்லை, அல்லவா? நான் சொன்னால் எழுதி வைக்கிறதுக்கு என்ன? நல்லது ஆகட்டும்," என்று சொன்னார். அதுக்கு குருவப்பச் செட்டி உத்தரஞ் சொல்லாமலிருந்தான்.

அப்பால் முசியே லெறி குவர்ணதோர், "பறங்கிப்பேட்டையிலே ஒரு வர்த்தகனைக் காவலில் வைச்சிருக்குதே, அவனை விட்டுவிடச் சொல்லிச் சொன்னோமே, யின்னம் என் விடயில்லை?" யென்று கேட்டதுக்கு, அவன் பேரிலே பணம் வரவேணுமதினாலே காவல் வைத்திருக்குது யென்று சொன்னதுக்கு, அவனை விட்டால் ஆச்சுது யில்லாவிட்டால் பறங்கிப்பேட்டை அமுல்தாரனை அழைப்பிச்சுக் கட்டி யடிப்பேனென்று சொன்னார். தாங்கள் அப்படிப் பண்ணினால் பணமுழுகிப் போமே, நாங்கள் கும்பினீருக்குப் பண மெப்படி செல்லுத்துவோ மென்று (குருவப்பச் செட்டி) சொன்னதுமல்லாமல், அவ்விடத்துக் கொம்மாந்தான் அந்த வர்த்தகன் கையிலே லஞ்சம் வாங்கிக்கொண்டு அவன் அகப்பட்டபடி யெழுதினால், அதைக் கேட்டுக் கொண்டு யிப்படிச் சொன்னால் எங்களாலே கும்பினீருக்குப் பணஞ் செலுத்தி வைக்க முடியாது யென்று சொன்னதுக்கு, அந்த வர்த்தகன் பேரிலே யெவ்வளவு பணம் வரவேணு மென்று (துரை) கேட்டார். அதுக்கு கணக்குப் பார்த்து வந்து சொல்லுகிறே னென்று சொன்னதுக்கு, செஞ்சி கில்லாவுக்கு

வந்தவாசி அமுல்தாரன் எம்மாத்திரம் நெல் போடுகிறது யென்று வயணமாய் இரண்டு கடுதாசி கொம்மாந்தானுக்கு யெழுதி அனுப்புயென்று சொன்னதாகவும் ... குருவப்பச் செட்டி வந்து சொன்னான். அப்பால் கொம்மாந்தானுக்கு யெழுதி யனுப்பிவிச்சோம்.

*1756 வருசம், மாயு மாசம், தேதி 19; தாது வருசம், வையாசி மாசம், தேதி 10; புதவாரம்*

இத்தனாள் இராத்திரி பதினோரு மணிக்கி நடந்த சமாச்சாரத்துக்கு இரண்டு மாசத்திற்கு முன்னே சுப்பா சோசியர் சீனிவாசராயர் கூடயிருக்கச்சே, சொன்ன வயணமென்ன வென்றால்: (எனது) நாற்பத் தெட்டாம் வருஷம் கண்ட காலத்துக்குச் சித்திரை மாசம் தேதி 10 யிலே சுக்கிரனுக்கு நிசமார்க்கண்ட மாயிருக்குது. அன்றைய தினம் தப்பினால் வையாசி மாசம் தேதி 10 யிலே சூரியனுக்கு நிசமார்க்கம் காணும், யிது தப்பாது.[1] பிர்மலபி (பிரம்மலிபி) யென்று சொன்னபடியினாலே அந்தப்படி சித்திரைமாசம் 10 தேதியிலே சுக்கிரனுக்கு நிசமார்க்கம் கண்டபடியினாலே சூரியனுக்குக் கண்டம் தப்பித்ததென்று நிசமானுயேற் பட்டுது. அப்படி யேற்பட்டிருந்தாலும் வையாசி மாசம் 10 மட்டுக்கும் அங்குச் சனிப் பாச்ச லிருக்கிறபடியினாலே பக்கம் நோக்கி குரூரம் கண்டு மேற்கு முகமாய் நீங்கிப்போமென்று சொன்னபடி யினாலே எனக்கும் திருஷ்ட்டாந்திரமாய் சுப்பா சோசியர் சொன்னபடிக்கி அந்த சித்திரை மாசம் 10 தேதி கெடுவிலே சுக்கிரனுக்கு நிசமார்க்கம் வந்தபடியினாலேயும், முன் பெரிய பிள்ளை அவர்களுக்கு வையாசி மாசத்திலே அங்கு சனிப் பாச்சலிலே நிசமார்க்கம் கண்டபடியினாலேயும், இந்த வையாசி மாசம் தேதி 10 யிலே நமக்கு அங்கு சனிப் பாச்சலுக்கு என்ன கெண்டம் காணுதோ வென்று யோசனை பண்ணிக் கொண்டிருந்ததுக்கு, 9 தேதி மத்தியானம் சுப்பா சோசியர், நாகரி (நுகரி) சோசியர் யிவர்களிருவரும் நம் கோபாலசுவாமி சீனிவாசராயர் முன்பாகச் சொன்ன வயணம், இந்தக் குரூரம் ஒன்பதாம் தேதி மட்டுக்கும் பார்க்கவேண்டியது. ஆனாலும் பத்தாந் தேதி மட்டுக்கும் நாள் கூறு யிருக்கிறபடியினாலே, அந்த மிருத்திவு பத்தாந் தேதியிலே பக்கம் நோக்கி வாசற்படிக்கு மேற்கே பிடிச்சுப் போய் விடுமென்று சுப்பா சோசியர் சொன்(னார்). ரெண்டு பேரை அடுத்தாப் (செத்துப் போவார்) போலே காணுது. அவர்களார் யென்று நகரி சோசியர் கேட்டதுக்கு, சுப்பா சோசியர் "சூரியனை விட்டுப்போட்டு பக்கம் நோக்கி மேற்கே பிடிச்சுப் போகச்சே

[1] 48ஆம் பிராயம் தொடங்கியது முதல் தனது கெட்ட தசை ஆரம்பமாகிறது என்று பிள்ளை கருதலானார். மனைவி மங்கத்தாய் இறந்த நாள், நட்சத்திரம் இவற்றைப் பார்க்கும்போது அப்பொழுது முதல் பிள்ளையின் இறங்கு தசை ஆரம்பமாகும் என்று ஒரு சோதிட வல்லுநர் சொல்கிறார்.

ஆரைப் பிடிச்சால் யென்ன, யெவர்களானாலென்ன, அதை விசாரிக்க நமக்கு யென்ன காரியம்? நம்முடைய சந்தோஷத்தை நாம் பார்த்துக் கொள்ள வேண்டியதே யல்லாமல் மத்ததெல்லாம் நமக்கென்ன கவை? இரண்டு அடுத்தாப் போலே காணுது யென்று நீர் சொன்னது மெய்தான். வாசற்படிக்கி மேற்கே ஆராகிலும் பிடிச்சுப் போறதாயிருக்கச்சே அப்படித் தானே போகட்டும்," மென்று இந்தப்படி பேச்சு வார்த்தை நடந்திருந்தது.

யிப்படி யிருக்கையிலே, பத்தாந் தேதி ராத்திரி யெப்போதையும் போலே கச்சேரியாயி, பத்தரை மணி வரைக்கும் யிருந்து சாப்பிடுகிறதுக்கு எழுந்திருந்த படியினாலே, அவரவர்கள் அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்குப் போனார்கள். அதன் பிறகு நான் சாப்பிட்டு எழுந்திருக்கிற சமையத்திலே, தெருவிலே செரீபு உசேன் என்கிறவன் நாலைஞ்சு நாளைக்கு முன்னே கிராமாந்திரங்களிலேப் பயணம் போய் வந்திருக்கையிலே, "நீ வெகு நாள் போய் வந்திருக்கிறாய். நம்முடய உத்தாரமில்லாமல் போயிருந்தாய். நீ விவேகியல்ல. யிதல்லாமல் ரெண்டு ரூபாய் திருடிக்கொண்டு வந்தாய். இப்படிக் கொத்தவனந்த தறுபாறுக்கு லாயக்கல்ல. உன்னை பறதற்பு (பதவி நீக்கம்) பண்ணினோம்," யென்று சொல்லி சவுகினி விசுசிவரும்? பண்டிதரை அழைப்பிச்சு, "யிவனை நாம் பறதாப்பு பண்ணினோம். நிராசரியிலே (தினக்கூலிக் கணக்கில்) யெழுதிக் கொள்ளத் தேவையில்லை," யென்று சொல்லி நரசிங்குராயர் அவனை பறதற்பு பண்ணிப் போட்டார்.

அப்படி யிருக்கச்சே (அவன்) நித்தம் வாசற்படியே வரப்போக யிருந்தபடிக்கி அன்றைய தினத்திலே சேக்கு அல்லி தாவு பாயையும் (ஷேக் அலியும் தாவூத் பாயும்) வாசற்படிக்கு மேற்கே நிற்கச்சே சரிபு உசேன் என்கிறவன் யெப்போதும் வருகிற சாடையாம்படியே வந்து நின்றாப்போல, கத்தியை உருவி சேக்கு அல்லி யென்கிறவனைக் கழுத்திலே வெட்டினான். குறவளை அறுந்து போச்சுது. ஏதுரா வெட்டுகிறா யென்று தாவு பாய் கையை நீட்டினதின் பேரிலே, கையின் பேரிலே வெட்டினான். அவனுக்கு ஒரு கணுக்கை மட்டுக்கும் அறுந்துபோய் பின்னை ஒரு கையிலே காயம்பட்டுது. இதுக்குள்ளே வாசலிலே யிருக்கிற பேர் காபிராப்பட்டு வாசற்படிக்குள்ளே எல்லாரும் நுழைச்சார்கள். யிந்தக் காபிராவிலே யெல்லாரும் ஓடிப் போனார்கள். என்னமோ வாசலிலே சந்தடி யாயிருக்கு தென்று நான் சீனிவாசராயனை அனுப்பிப் பார்க்கச் சொன்னேன். அவர் போய் யெல்லாரையும் வகு (வைது) வெளியே போகச் சொல்லியிருக்கச்சே, நானும் வெளியே பிறப்பட்டுப் போனேன். அப்பால் தீவட்டி முஸ்தீப்பு பண்ணி வெட்டினவ னெங்கே யென்று விசாரிக்க வேணுமென்று நயினாரை அந்தச் சனம் (ஷணம்) அழைப்பிச்சு, அவர்கள் சேவுகரையும் நம்முடைய சேவுகரையும்

கூடக்கூட்டிப் பட்டணத்திலே திக்கு திக்குக்குத் தேடவேணுமென்று அனுப்பிவிச்சோம். வாசற்படிக்கு வாசற்படிக்குச் சொல்லச் சொல்லியும் அனுப்பிவிச்சோம். அவர்கள் தேடப்போனார்கள். அப்பால் இரண்டு மணி வேளைக்கி வெட்டினவன் முராரி ராயன் வைக்கீல் கிருஷ்ணய்யன் யென்கிறவ னண்டைக்குப் போய், நான் தப்புக் காரியம் பண்ணினேன், யென்னைத் தப்பித்து விடவேணும் யென்று கேட்டதாகவும், நல்லது யென்று கத்தியைக் கீழே வைத்துவிடச் சொல்லி, அவனைப் பத்திரப்படுத்திக் கொண்டு எனக்குச் சொல்லியனுப்பினார். அந்தச் சிணம் (ஷணம்) மனுஷியரை அனுப்பி பிடிச்சு வரச்சொல்லி, நயினார் சேவுகர் வசம்பண்ணி, சாவடியிலே காவல் வைக்கச் சொன்னோம். அந்தப்படியே கொண்டுபோய்க் காவலில் வைத்தார்கள். வெட்டுப்பட்டுப் போனவனை அவன் சாகையிலே போகச் சொன்னோம். கை போனவனை அவன் சாகைக்கு போகச்சொல்லி அனுப்பிப் போட்டிருந்தோம்.

*1756 வருசம், மாயு மாசம், தேதி 20; தாது வருசம், வையாசி மாசம், தேதி 11; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே பாளையக்காரர் (நயினார்) போய் நேத்து ராத்திரி வெட்டுப் பட்டுப்போன சம்மதிகளை முசியே லெறி கோவர்ணதோரவர்களுடனே சொன்னதுக்கு, அவர் ராசாவினுடைய பெருக்குரேதோராயிருக்கிற (Procureur) முசே தெ பொசேத்துடனேயும், செக்கிரத்தோராயிருக்கிற முசியே தநோத்தியேவு(ரு)டனேயும் (M. des Naudieres) சிறுமயோராயிருக்கிற முசியே லயேயுடனேயும்[1] போய்ச் சொல்லச் சொன்னார். அவர்களுடனே போய்ச் சொன்னதுக்கு அவர்கள் பிறப்பட்டு வெட்டுப்பட்டவனையும் (சோதித்து) கை வெட்டுப் பட்டிருக்கிற தாவு(து) பாயியையும் பார்த்து, அவர்கள் வாடிக்கைப்படிக்கு யெழுதிக்கொண்டு துரையுடனே போய்ச் சொன்னார்கள். அவர் கேட்டு முசே திலார்ஷுவையும் ... பின்னை யொரு பேர் விளங்கனையும் விசாரிக்கச் சொன்னபடியினாலே அவர்கள் விசாரிச்சு வெட்டுப்பட்டு (இறந்து போனவனை) புதைச்சுப் போடச் சொன்னதாயும், வெட்டுப்பட்டிருக்கிறவனைக் காயங்கட்டச் சொல்லி நோவாளிக் கிடங்குக்கு உத்தாரங் குடுத்தார்கள். இதுகளுக்கு அவர்கள் வாடிக்கைப்படிக்கி ஆரார் கையிலே கையெழுத்து வாங்கவேணுமோ அவர்கள் கையிலே கையெழுத்து வாங்கிக் கொண்டார்கள். அப்பால் வெட்டின டலாயித்தனை, சாவடியிலே காவல் வைத்திருந்தவனை, அழைச்சுக் கேட்டதுக்கு அவன் சொன்னது : "அவர்களென்னைப் பரியாசம் பண்ணிக் கொண்டேயிருந்தார்கள்; வெட்டிப் போட்டே," னென்று

[1] La Haye, the Surgeon-major என ஆங்கிலத்தில் உள்ளது.

சொன்னான். அந்தபடிக்கு அவன் கையெழுத்து வாங்கிக் கொண்டு அவனைத் தூக்கிப் போடுகிற சாடையாய்த் தானே கசோத்திலே போட்டு, கும்பினீர் தீனிபோட்டுக் கொண்டுவரச் சொல்லி உத்தரவு குடுத்தார்கள் என்று நயினார் வந்து கபுறு சொன்னார்.

இதல்லாமல் முசியே தெபொசேத்து ராசகோபால நாயக்கனை அழைத்து, வெட்டினவன் வேறே யிருக்கிறானாம், அவனை ஒளித்து வைத்து யிவனை வெட்டினவ னென்று யெண்பிச்சார்களென்று, சத்து உருட்டிக் கேட்டதுக்கு, அவன் சொன்னது : "யிவன் தான் வெட்டினவன். ஓடிப்போய் முராரி வைக்கீல் கிஷ்ணப்பன்[1] வீட்டிலே போய் அங்கே கூடி சிலாறு (குறும்பு) பண்ணியிருக்கச்சே, அத்தாட்சி ஒருத்தரைக் கேழ்க்கத் தேவையில்லையே. வெட்டினவனை ஒளித்து வைத்து மெத்த நேரமாச்சுது. அப்படியில்லை," யென்று சொன்னதுக்கு, மறுபடியும் முசியே தெபொசேத்து பெரியண்ணன் பேச்சைக் கேட்டுக் கொண்டு இதனாலே தான் நினைத்த காரியம் முடியுமாக்கு மென்று யான மட்டுக்கும் பிரயாசைப்பட்டான். நடவாதே போச்சுது.

### *1756 வருசம், மாயு மாசம், தேதி 25; தாது வருசம், வையாசி மாசம், தேதி 16; செவ்வாய்வாரம்*

இத்தனாள் சாயங்காலம் வினாயகப் பிள்ளை வீட்டிலே கலியாணமானபடியினாலேயும், இன்றைய தினம் ஊர்கோல மானபடியினாலேயும் சந்தா சாயபு மகன் ரசாசாயபும் அல்லி நக்கியும் வந்தபடியினாலே, இரெண்டு பேருக்கும் இரண்டு சீரொப்பா மகதாபியுங் (விலை யுயர்ந்தது) குடுத்து, சபற்சங்கு (பீரங்கி வேட்டு) பதினஞ்சு விழுக்காடு இரண்டு தரம் தீந்தார்கள். அப்பால் பாணக்காரப் பரசுராமனை அழைச்சு, "ஆருத்தாரத்து மேலே சுட்டாய்? முன்னாலே முசியே துப்பிளேயிக்சு நாளையிலே அவர் தம்முடைய வுத்தார மன்னியிலே சுடக்கூடாதென்று திட்டம் பண்ணினது நீயறியாயா?" வென்று கேட்டதுக்கு, அவன் சொன்னது : "சின்ன துரை பீரங்கி மேஸ்திரியை அழைப்பித்து யோசனை பண்ணிக்கொண்டு யென்னை வினாயகப் பிள்ளை சொன்னபடிக்கிக் கேழ்விக்கச் சொல்லி உத்தாரங் குடுத்தார்கள். ஆனபடியினாலே சுட்டேன்," என்று சொன்னேன் (சொன்னான்).

இத்தனாள் இராத்திரி வினாயகப் பிள்ளை வீட்டிலே ஊர்கோல மானபடியினாலே மத்தியானம் கெந்தப்படி (எடுத்து) ஊர் கோலம் வந்து நம்முடைய வீட்டிலே (அவர் வந்து) அண்ணாசாமியை ஆனையின் பேரிலே சோடிச்சு வைச்சு சகல சம்பிறமத்துடனே முஸ்தீது பண்ணி அனுப்ப

---

[1] முன்பு கிருஷ்ணய்யன் என்றுள்ளது.

வேணுமென்று ரொம்பவும் பிரார்த்திச்சுக் கேட்டார். ஆனபடியினாலே நல்லதென்று சொல்லி அனுப்பிப்போட்டு, ராத்திரி அண்ணாசாமிக்கி வெள்ளி அம்பாரி முஸ்தீது பண்ணி, பயிராக்கு (கொடிகள்) முதலான விருதுகள் வகையிரா சகல சம்பிரமத்துடனே ஊர்வலயத்துக்கு அனுப்பிவிச்சோம். அவர்கள் ஊர்வளையம் (?) வரச்சே, கோட்டைக்குப் போனபோது வினாயகன் ஒரு சீரொப்பாவும் சரப்பள்ளியும் முன்னுதாய் அனுப்பி, துரை குடுத்த பாவனையாய்ப் பண்ணவேணும் யென்று அனுப்பிவிச்சு, கும்பல் ரொம்ப யிருந்தால் துரை கோபம் பண்ணப் போறாரென்று, தெருவுக்குத் தெருவு கலைச்சுவிட்டு, பெரிய பரசுராமப் பிள்ளை மகனை மாத்திரங் கோட்டைக்குள்ளே அழைத்துப் போய் துரை கையினாலே அந்த சீரொப்பாவையும் சரப்பள்ளியையும் குடுப்பிச்சு, அப்பாலழைச்சுக் கொண்டு ஊர் வளையம் வந்து இரெண்டு மணிக்கு வீடுவந்து சேர்ந்தார்கள். ஆனால் ஊர் வளயத்திலே[1] நம்முட சிரஞ்சீவி அண்ணாசாமி வந்த சம்பிரமத்தை செனங்கள் கொண்டாடி சொல்லிக் கொண்டதே யல்லாமல், அவர்கள் ஊர் வளையம் வந்ததை ஒருத்தராகிலும் சொல்லுவாரைக் காணோம் யென்று வந்து சொன்னதை யெழுதி வைத்தேன்.[2]

### *1756 வருசம், மாயு மாசம், தேதி 26; தாது வருசம், வையாசி மாசம், தேதி 17; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே எனக்கு சரீரம் சுவஸ்தமில்லாததினாலே, குருவப்பச் செட்டியைக் கோட்டைக்குப் போகச் சொன்னவிடத்திலே, அவன் வந்து கபுறு சொன்ன வயணம் : முசியே லெறி கோவர்ணதோர் வகையிரா கோன்சேலியேர்கள் முன் 10 தேதிக்கி இராத்திரி வெட்டின டலாயித்தனைத் தூக்கிப் போட உத்திரவு கொடுக்கிற நிமித்தியம், வெள்ளைக்காரருடைய வாடிக்கைப் படிக்கி எல்லாரும் கறுப்பு உடுப்பு போட்டுக் கொண்டு கோவிலுக்குப் போய் பூசை கேட்டு அப்பால் மேல்வீட்டின் பேரிலே கோன்சேல் கூடி அந்த டலாயித்தனை[3] இத்தனாள் நாலு மணிக்கிக் கடைத் தெருவிலே யிருக்கிற தூக்கு மரத்திலே தூக்குறதுக்குக் கோன்சேல் சக்கிரத்தோராகிய முசியே தினோத்தியேருக்கு (das Naudieres) உத்திரவு கொடுத்தார்கள் யென்று கபுறு வந்து சொன்னான்.

இத்தனாள் பகலைக்கு மேலாக அஞ்சு மணிக்கி முன் சொல்லப்பட்ட டலாயித்தனைக் கடைத் தெருவிலே யிருக்கிற தூக்கு மரத்திலே தூக்குறத்துக்குப் பாறு வைத்து, அதுக்கு நடுவிலே

[1] இப்படி யெல்லாம் வேண்டுமென்றே பிழையாக எழுதியுள்ளார் போலும்.
[2] வினாயகன் பிள்ளைக்கும் நமது பிள்ளைக்கும் நெடுநாட்களாகவே மனக்கசப்பு உண்டு.
[3] டகாயத் – தாக்குதல் (இந்துஸ்தானி)

டலாயித்தனைப் பிங்கட்டு (கைகளைப் பின்புறம் கட்டி) முறையாய் கட்டிக்கொண்டு போய் தூக்கு மரத்திலே கொண்டு போய்த் தூக்குப் போட்டுவிட்டார்கள்.

***1756 வருசம், மாயு மாசம், தேதி 28; தாது வருசம், வையாசி மாசம், தேதி 19; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலத்தாலே எனக்கு சரீரம் சுவஸ்தமில்லாததினாலே வெளியே போகவில்லை. ஆனால் யேனடபல்லி கிருஷ்ணாசி பண்டிதன் வந்து சொன்ன சேதி யென்ன வென்றால் : முசியே லெறி கோவர்ணதோரவர்கள் காலமே யெழுந்திருந்து இரெண்டு பல்லக்கு வெள்ளைக்காரரை முஸ்தீப்பு பண்ணி, சிப்பாயிகளையும் முஸ்தீப்பு பண்ணி, கூடக்கூட்டி சென்னபட்டணத்துக்கு ஒருத்தனையும் சதுரங்கப்பட்டணத்துக்கு ஒருத்தனையும் அனுப்பிப் போட்(டார்); அப்பால் தென்னண்டை மூலக் கொத்தளத்திலேயும் அங்கே சமுத்திரத்திலே பீரங்கிக் குண்டு யெத்தனை தூரம் போகுதோ யென்று பார்க்கிற நிமித்தியம் பீரங்கி மேஸ்திரி முசியே காலாரை (M. Clare) ஆறு வேட்டு சுடச் சொல்லி வேடிக்கை பார்த்துப்போட்டு அப்பால் முசியே தெலோ (தெசவோ) வீட்டுக்கு வந்து, அங்கே சத்து நேரமிருந்துப்போட்டு, அப்பால் கோவர்ணமாமுக்கு வந்தார்.

இத்தனாள் சாயங்காலம் முசியே கில்லியார் சொல்லி யனுப்பிவிச்சது, (அவரது) துபாசி வந்து சொன்னது : "நீங்கள் குத்தகை வாங்கின நாள் முதலாக சீமா (அமுலுக்கு அல்லது மூலத்திற்கு) மூலுக்குச் செலுத்தின பணத்துக்கு நாம் குடுத்த ரசீதுக ளெல்லாம் அனுப்பிவிச்சால், கணக்கரும் (கணக்கையும்) அந்த ரசீதுகளும் சரிப்பார்த்து மறுபடி குடுத்தனுப்புகிறோம்," யென்று சொல்லி அனுப்பி(னார்). நல்லது, அதெல்லாம் நாளைய தினம் சரிப் பார்த்து யெடுத்துப் பாத்து வைத்து, நாளைய நன்றைக்குக் காலத்தாலே சிதம்பரம் முதலி கையிலே கொடுத்தனுப்புகிறோமென்று பதிலுத்தரஞ் சொல்லி அனுப்பி, ராமாசி பண்டிதனையும் சிதம்பரம் முதலியை(யும்) அழைத்துக் கணக்கிலே பிசகில்லாமல் பார்த்து ரசீதுக ளெல்லாம் முசியே கில்லியாருக்குக் கொண்டு போய்க் காண்பிச்சு வரச் சொல்லிச் சொன்னேன். அப்பால் முசியே தெனோத்தியேர் வந்து சரீரம் எப்படி யிருக்குதென்று விசாரித்து, "சென்னப்பட்டணத்துக்குச் சீர்மைக் கப்ப லொன்று வந்தது. அதில் முசியே பொலோவுக்குக் காகிதம் வந்தது. ... (கெசட்டும் வந்தது. அதிலே யுள்ள) சமாச்சாரம், முசியே துப்பிளேயிக்சு பிரான்சு ராசாவிடம் பேட்டி பண்ணிக் கொண்டவிடத்திலே, ரொம்பவும் தயவு பண்ணினார். ஆனாலினிமேல் யிந்தியாவுக்கு வருகிறதில்லை யென்றும் (சொன்னார்). அந்தச் சேதி முசியே பொலோ உமக்குச் சொல்லியிருப்பார். முசியே கோதே பேச்சுதான்

உமக்கு நன்றாய்த் தெரியுமே," என்றுச் சொல்லி, அப்பால் லோகாப் பிறமமாய்ப் பேசியிருந்துப் போட்டுப் போனான். அவனை விஸ்தரிச்சு நாம் கேழ்க்கிறதல்லவென்று, அவன் சொன்னமட்டுக்குங் கேட்டுப்போட்டு அவனை அனுப்பிச்சு அதின் பிற்பாடு சேதி விசாரித்தால் ... முசியே துப்பிளேயிக்சு கோவர்ணதோராயிருந்து சகல சயமும் கொண்டு யிருக்கப்பட்ட கோவர்ணதோர் ஆதியிலே முசியே லெனுவார் கட்டிவைச்ச கோவர்ணமாமிலே (குடியிருந்தார்). முசே கொதே (கோட்டையின்) மேல் வீட்டின் பேரிலே (குடி) வந்த பிற்பாடு, அதிலே (யிருந்த) கும்பினீர்த் தட்டுமுட்டு (சரக்கு) எல்லாம் பத்துக் கிடங்கிலே (அறைகளிலே போட்டு வைத்தார்). அதெல்லாம் அப்பிறத்திலே யிடம் பார்த்து ஒழிச்சு, அந்த வீட்டைப் பெகு சுறுக்கிலே காலி பண்ணச் சொல்லி, முசியே லெரி(றி) கோவர்ணதோர் அஞ்சாரு நாளாய் மெத்த சுறுக்காய்ச் சொல்லி முஸ்தீப்பு பண்ணிக் கொள்ளுகிறார் என்று (கேழ்விப்பட்டேன்). ... முசியே கொதேயாவது பின்னை வேறே ஆராகிலும் அவர் மாரிபத்திலே துரைத்தனம் பண்ணுகிறதுக்காவது, முசியே (கொதே) எப்படி கொம்மாந்தாம் ஜெனராலாய், கொமுசாயிருதே ரூபா (Commissaire du Roi) என்கிற அதிகாரம் பேரும் (மதார்–உல்–முல்க் என்ற கிதாப்பும் பெற்று, யாரையும் அதிகாரத்தில்) வைக்கவும், வாங்கவும், கோடிக்கணக்காய் மனதின்படி சிலவழி (க்கவும்) ... உத்தாரம் பெத்து, ராசா பர்வானாவுடனே வந்தாரோ, (அதே போல்) அந்த அதிகாரமாய் ஒருத்தன் (வந்து) முசியே லெறி குவர்ணதோரிட(த்தில்) யிருக்க (வருகிறார் என்று கேழ்க்கப்படுகிறது). (இப்படி) யேஷியமில்லாமல் அந்த வீடு முஸ்தீப்பு பண்ணக் காரியமில்லை யென்று சனங்கள்ச் சொல்லிக் கொள்ளுகிற சேதியை எழுதிவைத்தேன். சோசியாள் ஆடி மாசம் கேட்டம் (கேட்டை–கெட்டகாலம் என்று) சொன்னதுக்குத் தாக்கலாயிருக்குதென்று யோசனை பண்ணிக் கொண்டேன். என்னமாய் நடக்குதோ அறியவேண்டியது. ஆனால் ... முசியே பிராவித்தியோர் (M. Prevostiere's)[1] துரைத்தன முதல் கொண்டு ... இந்த துரைத்தனத்து அபந்தரையும், பட்டணத்திலே அசத்திட்டமும் அனீதியும், கும்பினீர் வுடமை என்கிற அத்து(கூட) யில்லாமல், பறையன் கூடத் தனி மன்ன(னைப் போல) நடந்து கொள்ளுகிற வேடிக்கை (யைக் கண்டோம்). என்ன விந்தை பட்டணத்துக்கும் கும்பினீருக்கும் நடக்க யிருக்குதோ என்று சனங்கள் சொல்லிக் கொள்ளுகிறது எழுதி முடியாது.

***1756 வருசம், மாயு மாசம், தேதி 31; தாது வருசம், வையாசி மாசம், தேதி 22; சோமவாரம்***

இத்தனாள் கோட்டைக்கு முசியே லெறி கோவர்ணதோர்

---

[1] இவர் ஆளுநராயிருந்த காலம் 1718–1721.

அண்டைக்கி கண்டால் குருவப்பச் செட்டி போய் பதினோரு மணிக்கிக் கபுறு வந்து சொன்னதென்ன வென்றால்: இந்தனாள் காலமே எட்டு மணிக்குக் கோன்சேல் கூடி மச்சிலிபந்தரிலே (ஒரு) மனுஷரைக் கொன்று போட்ட ... துலுக்கன் ஒருத்தன், வடுகன் ரெண்டு பேர், பெண் ஒருத்தி யிவர்களை, அவ்விடத்திலிருந்து அனுப்பியிருந்து சாவடிக் கிட்டங்கியிலே போட்டிருந்து; அவர்களை விசாரித்துத் துலுக்கனையும் (ஒரு) வடுகனையும் கசோத்திலே மறுபடி போடச் சொல்லியும், ஒரு வடுகனையும் பெண்ணையும் குண்டுக்கு அப்பிறத்திலே விட்டு விட்டார்கள். இப்போ கோட்டைக் கிட்டங்கியிலே (போட்ட) ரெண்டு பேர் ... பேச்சு யினிமேல் என்னமாய்த் தீருமோ? ... இந்தக் கோன்சேல் கலைய பதினோரு மணி அடிச்சுப் பூட்டபடியினாலே அவரவர் வீட்டைப் போனார்கள். வேறே பிரஸ்தாபம் யில்லை என்று சொல்லிப் போட்டுப் போனான்.

சிதம்பர முதலியார் வந்து, முசியே கில்லியார் கோன்சேலுக்குப் போயிருந்து, யிப்பத்தான் வந்து, நாளைக்காவுது யென்று சொன்னார். (ஆகவே) நாளையக் காலமே போகவேணும் யென்று சொல்லிப்போட்டுப் போனான். மைத்தப்படி சாயங்காலம் துவக்கி ராத்திரி மட்டுக்கும் நல்ல மழை பெஞ்சுது.

# ஜூன் 1756

***1756 வருசம், சூன் மாசம், தேதி 1; தாது வருசம், வையாசி மாசம், தேதி 23; செவ்வாய்வாரம்***

இத்தனாள் ராத்திரி வினாயகன் வீட்டிலே ஒருத்தன் கிணத்திலே விழுந்து செத்துப் போனதையும், அதை வெளிப்படுத்தாமல் முசியே பெடுத்தல்மீ யுடனே குருடன் பயித்தியக்காரன் கிணத்திலே விழுந்துச் செத்துப் போனானென்று பரிகரிச்சாப்போலே (மறைத்துச்) சொன்னதுக்கு, துரையுடனே யெச்சரிச்சுப் போட்டு அவனை அடக்கிப் போடுகிறதுக்கு உத்தாரங் குடுத்ததாயும் அந்தப்படியே ... அவனை அடக்கிப் போட்டதாயும் கேழ்விப்பட்டேன்.

இத்தனாள் மத்தியானத்துக்கு யிருபத்தி ரெண்டு நாழிகைக்கி சவுபாக்கியவதி நன்னாச்சி[1] அனுப்பி வைச்சுக்கொண்டு வெங்கட்டம்மாள் பேட்டைக்குப் போனாள்.

***1756 வருசம், சூன் மாசம், தேதி 3; தாது வருசம், வையாசி மாசம், தேதி 25; குருவாரம்***

இத்தனாள் காலமே குருவப்பச் செட்டி கோட்டைக்கிப் போய் வந்து சொன்ன சேதி என்ன வென்றால், இன்றைய தினம் கோன்சேல் கூடினார்கள். மதுராந்தகத்திலே இங்கிலீசுக்காரர் மனுஷர் மேஸ்தர் கோப்பு (Mr. Gaupp) என்கிறவன் கருங்குழிச் சீமையிலே, பிரான்சுக்காரருக்கும் இங்கிலீசுக்காரருக்கும் கல்லல்ப்பட்டிருக்கிற (தகராறாயிருக்கிற) சீமையிலே, முசியே தெருஷே ஒரு ரெட்டியைப் பிடிச்சுக் கொண்டு வந்து ஆலம்பரையிலே போட்டான்; (கைகலப்பிலே) ஒருத்தன் செத்துப் போனான். ரெண்டு பேருக்குக் காயம் பட்டது. (இதற்கு) பதிலுக்குப் பண்ணச் சொல்லி இங்கிலீசுக்காரர் கொம்மாந்தாமாகிய மேஸ்தர் கோப்புக்கு எழுதிவந்ததாயும், அவன் தமுக்குப் போட்டு பிரஸ்தாபம் பண்ணினதாயும், யிப்படியானால் அவர்கள் சண்டைக்கு எத்தனமா யிருக்கிறார்களென்று முசியே தெருஷே எழுதினத்துக்கு, கோன்சேல் கூடி அவனுக்குப் பதிலுத்தரம் எழுதி அனுப்பி வைக்கிற சாடையாகக் கண்டுது. பின்னையும் கோன்சேல் கூடியிருந்தார்கள். யின்னக் காரியமென்று தெரியாதென்று வந்து கபுறு சொன்னான்.

---

[1] பிள்ளையின் மகள்

***1756 வருசம், சூன் மாசம், தேதி 4; தாது வருசம், வையாசி மாசம், தேதி 26; சுக்கிரவாரம்***

இத்தனாள் குருவப்பச் செட்டியைக் கோட்டைக்குப் போய் வரச் சொன்னேன். அதுக்கு "அங்கே என்ன யிருக்குது? (ஒருவருமில்லை). விசாரிக்க சனமுமில்லை. அழைச்சனுப்பினால் அப்போ போவோ," மென்று சொன்னான்.

இத்தனாள் கேள்விப்பட்ட சேதியென்ன வென்றால் : ரெண்டு பேர் ஒப்பிசியால்மார் குண்டு சாலை அண்டையிலே ஒருத்தருக்கொருத்தர் ரோஷத்திலே கத்தியுருவிச் சண்டை பண்ணச்சே, ஒரு ஒப்பிசியால் ஒரு ஒய்பிசியாலைக் குத்திப் போட்டதாகவும், அதைப் பாளையக்காரனுடைய மனுஷன் வந்து தொரையுடனே சொன்னதுக்கு, அதைப் பார்க்கிற நிமித்தியம் முசியே தொத்தேல் வகையிராக்கள் போனார்கள். அவன் குத்திப்போட்டு, அவனைப் புதைக்கிற அவசரமாயிருக்கச்சே, இந்தப் பல்லக்குகளைக் கண்டு அவன் தப்பிப் போனதாயும், இவர்கள் போய்ப் பார்த்து அவனை எடுப்பிச்சுக் கொண்டு வந்து நோவாளிக் கிடங்கிலே பொதைச்சுப் போட்டதாயும், குத்தினவ னிந்தப் பட்டணத்துக்குள்ளே வந்திருக்கிறானென்று அவனை ரெண்டொருத்தர் வெள்ளைக் காரருக்குள்ளே அறிஞ்சிருந்திருந்தாலும் அடங்கிப் போட்டார்க ளென்றும் கேழ்விப்பட்டோம். யினிமேல் அதுக்கு என்ன நடக்குமோ அறியவேண்டியது. அல்லாமல் செத்துப்போன ஒப்பிசியால் பேரும் விசாரித்து யெழுத வேணும்...

***1756 வருசம், சூன் மாசம், தேதி 11; தாது வருசம், ஆனி மாசம், தேதி 1; சுக்கிரவாரம்***

இத்தனாள் மத்தியானத்து மேலே முன் சித்திரை மாசம் முதல் (நாள்) வந்தக் கப்பல்களுடனே பிறப்பட்ட கப்பல், காத்து யில்லாமல் அச்சைப் (Aceh) பிடிச்சு, அவ்விடம் விட்டுப் பிறப்பட்டு முப்பத்திரண்டாம் நாள் புதுச்சேரித் துரை வந்து பிடிச்சான். அப்போது பீரங்கிகளும் போட்டு, கப்பல் கம்பித்தான் முசியே வீஞு (M. La Vigne) யெறங்கி வந்து, காகிதங்கள் கொண்டு வந்து குடுத்தான். கப்பல் பேர் சேம் கோன்தேசு (St. Contest) என்றும் செம் பிரியேர் (பியேர்–St. Pierre) என்றும் சொன்னார்கள். யிந்தக் கப்பலிலே யிருபதினாயிரம் மாற்கு வெள்ளி[1] வருதென்று முன்னமே தானே கணக்கு யெழுதி வந்தபடியினாலே அந்தப்படிக்கி வந்திருக்கும். சாராயம் வந்திருக்கும், மத்தத் தீனி யொன்றும் வரயில்லை யென்று சொன்னார்கள்.

---

[1] புதுச்சேரியில் நிதி நெருக்கடி மிகுந்து விட்டதால் மீண்டும் பிரான்சிலிருந்து வெள்ளிக் கட்டிகள் வரத் தொடங்கிவிட்டன.

***1756 வருசம், சூன் மாசம், தேதி 15; தாது வருசம், ஆனி மாசம், தேதி 5; செவ்வாய்க்கிழமை***

இத்தனாள் காலத்தாலே ... நான் கோட்டைக்கிப் போய் முசியே லெறி கோவர்ணதோரை சந்திச்சு, நேத்தய தினம் கோன்சேலிலே தீர்ந்த பேச்சு, முசியே கில்லியார் சொன்ன பேச்சின் பேரிலே, நானூகிச்சு யெழுதினது சரியாய் யென்ன மாயிருக்குதென்று அறிவோமென்று யோசனை பண்ணிக் கொண்டு, பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருக்கச்சே முசே பிளாக்கூர், சீரங்கம் கோயில் சீமை தவிர உபய காவேரி தீரம் சீமையைக் குத்தகை வாங்கி யிருக்கிறவன், வந்து என்னைக் கண்டு, "உன் சீர்மைக்கு முசியே பொலோவும் முசியே தெவோவும் (M. Desvoeux) போறதாயும், சீரங்கம் துறையூர் விசாரிக்க முசியே கில்லியார் போறாரென்றும் கேழ்விப்பட்டேன். யிவர்கள் யெந்த நியாயத்தைக் குறித்துப் போறார்கள்? யிவர்கள் போனா லென்ன கணக்கு வெளியாகும்? ஆனி வரையில் சமாபந்தி ஆய்க்(ஆகி) கணக்குத் தீர்க்குற வேளையிலே, பாக்கிப் பணம் அறுவாகிற வேளையிலே, கோன்சேலியோர்கள் சீமைக் கணக்கு விளங்க வருகுறார்களென்று (கேள்விப்பட்டால் குத்தகைதாரர்கள்) குடுக்கிற பணத்தையும் யெடுத்துப் (நிறுத்திப்) போட்டு, மீதி (த்தொகைக்கு) வியாச்சியம் பேசுவார்கள். அமுல் கல்லல் படு(வதால்) வசூலாகிற பணமும் முழுகிப் போறதுமல்லாமல், சீமையிலே ஆனி (மாதக்) கார் அறுப்பு, கம்பு முதலாகியதுகள் விரைப்பு நாள் என்கிறதுகளெல்லாம் கெட்டுப்போம். சாகுபடி பூச்சியமாய்ப்போம். தெரியாமல், யின்னம் வுமக்கு மூணு வருஷமிருக்க யேதாகிலும் பணங்காசு வரயில்லை என்று கேழ்க்க வேணுமானால், நீர் ரூபுரூபிலே யிருக்கச்சே வும்மைக் கேழ்க்க வேணுமே அல்லாமல், யிப்படி சீமைகளுக்கு மனுஷரை அனுப்பி கல்லல் பண்ணுகிறதென்கிறது புத்தி (அல்ல) என்று நீர் பேச யில்லையா? எனக்கு நிறுவாகமில்லை (அதாவது இனிமேல் நான் குத்தகைதாரரில்லை) என்று கோன்சேலிலே திக்கிளோரிசம் (declaration–அறிவிப்பு) பண்ணாலல்லலோ அப்பால் அவர்கள் ... (கீழ்க்) குத்தகைக்காரன் சொல்லுகு(றதை) பொய் மெய் விளங்க (தெரிந்து கொள்ள) வேணுமென்று பிறப்படவேணுமே அல்லாமல் என்ன நியாயத்தைக் குறிச்சுப் பிறப்பட்டார்கள்? ... யிதினாலே வரப்பட்ட (வரக்கூடிய) சீமை நஷ்ட மிவர்களல்லவோ உத்தரவாதம் பண்ணவேணும்? யிவர்களுக்குப் பணம் பாத்தியமே அல்லாமல், குத்தகைக்காரன் கணக்கு விளங்கக் காரியமென்ன? ... இவர்களுக்கு புலமும் (நிலம் பற்றியும்) தெரியாது; சீமா சம்மதிகள் யின்ன விதமென்றும் அறியார்கள். (தாங்கள் நடத்தும்) வர்த்தக சம்மதியும் இவர்கள் அறியார்கள். ... (அதைவிட) சீர்மைகளுடனே சேர்ந்த சம்மதியும் அறியார்களே. அவர்களுக்கு ஆரெட்டி சொன்னால் அதைப் பிடிச்சுக்கொண்டு கூத்தாடுகிறார்கள்," என்று

சொல்லி, பின்னையும் சீமா மூலத்து (வேறு) சம்மதிகளும் பேசி, கொம்மாந்தாமுகள் பண்ணுகிற ரோஷ்டுகளும், இவர்கள் (துரை) கண்டிப்பில்லை அதனால் அவர்கள் கொள்ளையிடுகிறதை(யும்), குடியானவர்களுக்கு ஆசறுக் (பாதுகாப்பு) கொடுத்து அமுல்தாரனுக்கு அமுல் நடக்க வொட்டாமல் பண்ணுகிற(தையும்) யெல்லாம் என்னுடனே (சொன்னார்). "நீரேன் கோன்சேலுக்கு கேசாரிட (மனு கொடுக்க) யில்லையா?" வென்று (நான்) கேட்டதுக்கு, "நான் ஏதாகிலும் அறிஞ்சல்லோ கேசாரிடலாம். நேத்திய தினம் போறோமென்று சொல்லி நேமிக்கப்பட்ட கோன்சேலியேர்கள் என்னைக் கண்டால் பேசக் கூடயில்லை. ஒருத்தரை ரெண்டு பேரை நீங்கள் சீமைக் கணக்குக் காரியம் விளங்கப் போறீர்களா என்று கேட்டால், "ஆர் உனக்குச் சொன்னது? அபத்தம். நாங்கள் விளையாடப் போறோ," மென்று சொல்லச்சே நானெப்படி கேசாரிடுகிறதென்று சொன்(னார்). அப்பால், "யெல்லாருக்கு மிது காரியத்திலே புத்தி மயங்கிப் போச்சுது. நானும் முசே லெறி, முசியே பெடுத்தல்மீ, முசே லெனுவாருடனே சொல்லுகுறேன். நீரும் குவர்ணதோருடனே பேசி எப்படியுந் திருப்பவேணு," மென்று (அவர்) சொன்னதுக்கு, "நல்லது நீரும் அவர்களுடனே கண்டு பேசும், நானுங் கண்டு பேசுகுறேன்," என்று சொல்லி அவனைப் பூசுத்தி தலையாட்டவிட்டு விட்டேன்.

இவனுக்கு முசியே பெடுத்தல்மீ ஆப்த்தமானபடியினாலே, முசியே திலார்ஷுக்கும் முசியே தெபொசேத்துக்கும் ... நம்முடைய பேரிலே இருக்கிற துவேஷத்தினாலே அல்லவா, முசியே தெபொசேத்தும் தெலார்ஷு மிதை வருத்தி (ஏற்பாடு செய்து) வைச்சார்கள். சீரங்கத்துக்கு நிமித்தியம் யிவன் மதத்தாய்ப் பேசுகிறதே நமக்கும் சிபார்சியாய் நிற்கும்; அல்லாவிட்டாலும், இவன் வெள்ளைக்காரனான படியினாலே யிவனும் வெள்ளைக்காரருடனே எல்லாஞ் சொல்லுகிறதிலே எல்லாருக்கும் யிப்படிச் செய்கிறது நியாய மத்தது என்றாகிலும் அறியப்படும். அப்பால் நடக்கவேண்டிய பிறக்கறணமென்னமோ அப்படி நடக்கப் போகுது, யென்று அவனைப் போய்ச் சொல்லச் சொல்லி அனுப்பி விட்டு நான் அப்பிறம் பூந்தோட்டக் கச்சேரியே வந்து, சீமா மூலத்துக் கெல்லாம் கணக்குத் தயாறு பண்ணி வைக்கச் சொல்லி, காகிதங்க ளெழுதிக் கொண்டிருக்கிற அலுவலிலே யிருந்து அப்பால் பனிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்தேன்.

***1756 வருசம், சூன் மாசம், தேதி 22; தாது வருசம், ஆனி மாசம், தேதி 12; செவ்வாய்வாரம்***

இத்தனாள் காலத்தாலே எட்டு மணிக்கு கோட்டைக்குப் போய் கோவர்ணமாவிலே யிருக்கச்சே கும்பினீர் வற்த்தகர்களும் வந்தார்கள்.

அதன் பிற்பாடு முசியே லெரி கொவர்ணதோர் ஒன்பது மணிக்கி காம்பிராவிலே யிருந்து வெளியே பிறப்பட்டார். அங்கே யிருந்த ஒப்பிசியால்மார் கோன்சேலியோர்கள் வகையராக்கள் எல்லாரும் சந்திச்சு ஆசாரம் பண்ணினார்கள். நானும் கும்பினீர் வர்த்தகாளும் ஆசாரம் பண்ணினோம். அப்பால் நான் மல்லிகைப் பூச்செண்டு கையிலே குடுத்து, தேவனாம்பட்டணத்துக்குக் கோவர்ணதோராய் சென்னப்பட்டணத்திலே யிருந்து மேஸ்தர் கிளேவிசு நேத்து ராத்திரி கூனிமேட்டுலே யிருந்து, இத்த நாள் நேசல், அபிராமி பட்டு[1] மேலே பிறப்பட்டு, வில்லியநெல்லூருக்கு மேலாக தேவனாம்பட்டணத்துக்குப் பயணம் போனானென்கிற சேதி கூனிமேட்டிலே யிருந்து வந்தது. இவன் போனவுடனே இவனுக்கு முன்னேயிருந்த மேஸ்தர் இஷ்ட்டார்க்கு சென்னப்பட்டணத்து சின்ன துரையாய்ப் போக, அவன் சாமான்கள், அவன் துபாசி, வேலைக்காரர் சமஸ்தமான பேர்களும் சென்னப்பட்டணத்துக்கு எட்டு நாளைக்கு முன்னமே போய்ச் சேர்ந்தார்கள். இவன் (கிளைவ்) போனவுடனே துரைத்தனச் சாவியை ஒப்பிச்சுப் போட்டு, ரெண்டு நாளைக்குள்ளே எல்லாம் (ஸ்டார்க்) சென்னப்பட்டணத்துக்குப் பயணமாய்ப் போவா னென்று சேதி சொன்னார்கள். திரிச்சிராப்பள்ளியிலிருந்து வந்த முன்னூறு சொலுதாதுகள், அறுநூறு சிப்பாயிகள் கூட, யிவ்விடத்திலே ராசா மனுஷர்களாய்[2] ஆயிரஞ் சொலுதாதுகள் மட்டுக்கும் யிருந்து, அதிலே சிறிது பேர்களையுங் கூடச் சேகரிச்சு முன் ஆங்கிரியர்கள் பேரிலே போய்ச் சண்டைபண்ணி மேஸ்தர் கிளேவிசு செயம் பண்ணிக்கொண்டு வந்த யிடத்திலே, மறுபடியும் அவர்கள் பெலத்து இவர்களது டாணாவை யெல்லாம் ஒடைச்சுவிட்டாப் போலேயும், அவ்விடத்துக்கு மறுபடி யிந்தப் பெலனை அனுப்புகுறார்களென்றும், யிது நிமித்தியம் கிளாசு (கிளைவ்) வகையிராகள் பிடியாளுகளையும்[3] பிடிச்சு அனுப்புகிறதிலே கூடலூர் தேவனாம்பட்டணம் வகையிரா கிராமங்களெல்லாம் தட்டுக் கெட்டுப் போய் யிருக்கிறதாய் செனங்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

மேஸ்தர் கிளேவிசு வந்த கப்பலுடனே கூட நாலுக் கப்பல்கள் வந்தது. மறுபடி பொம்பாயி யிந்த வட்டங்களுக்குப் போறதாய்ச் சொல்லிக் கொள்ளுகிறார்கள் யென்று (நான் துரையிடம்) சொன்னதுக்கு (அவர்) கேட்டுக் கொண்டிருந்தது, "மேஸ்தர் கிளேவிசு யின்று ராத்திரி போய்க்

---

[1] அபிராம்பட்டு. எத்தனை பெயர்கள் பிரதியில் தவறாக எழுதப்பட்டுள்ளன!

[2] இரு தரப்பிலும் கம்பெனித் துருப்புகள் என்றும், அவர்களுக்கு உதவியாக அவர்களின் அரசின் துருப்புகள் என்றும் இரு வகையினர் இருந்தனர்.

[3] ஐரோப்பியர்கள் எல்லா நாடுகளிலும் ஏழைக் குடிமக்களை வலியப் பிடித்து லஸ்கர் போன்ற எடுபிடிவேலைக்கு அனுப்புவது வழக்கம். இது impressment எனப்பட்டது.

கூடலூர் சேருவானா?" வென்று கேட்டார். சேருவான் என்று சொன்னேன். அப்பால் பீரங்கி மேஸ்திரி முதலான கபுறுக்காரர்கள் கபுறு சொன்ன மாத்திரத்திலே உள்ளே போய் காகித மெழுதத் துவக்கினார். நானும் வர்த்தகாளும் பிறப்பட்டுப் பிடவைப் பார்க்கிற சாலையே வந்து பத்தரை மணி மட்டுக்கு மிருந்து அப்பால் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

ஏழெட்டு நாளாய் ஆற்காட்டு வேலூரிலே யிருந்து அக்கப்பாறு பறத்திலே(?) யெழுதி வருகிற சேதி யென்ன வென்றால் : முசியே புசிக்கும் சலாபத்து சங்குக்கும் ஒருத்தருக் கொருத்தர் பிகாடிச்சு, அவரிருந்த மட்டுக்கும் (புசி) சம்பளக் கணக்குகள் கூடத் தீத்துக் கொண்டு, அது நிமித்தியம் முசியே புசியும் சலாபத்து சங்குவும் சண்டைக்குக் கூட எத்தனம் நடந்து, அப்பால் சமாதானமாய் முசியே புசியும் அவர் பவுன்சும் மச்சிலிபந்தருக்குப் போனதாயும், அவருக்குக் குடுக்க வேண்டிய பாக்கிப் பணத்துக்குச் சம்மதி பண்ணவும் (சரிக்கட்ட) வேலூர் (எல்லூர்), ராசமகேந்திரம், ஸ்ரீகாகுளம் வகையிரா சீமைகளெல்லாம் கட்டவும் (கொடுக்கவும்), (ஏற்பாடாயிற்று). பதினாயிரம் சுவாரோடு சானோசி நிம்பாள்க்கரும் போனானென்றும், பாசி ராயன் குமாரன் பாளாசி (பாலாஜி) ராயன் போனாவுக்குப் (புனாவுக்குப்) போனானென்றும், சலாபத்து சங்கும் அயிதராபாத்துக்குப் போறாரென்றும், மமுதல்லி கான் பேருக்கு சலாபத்து சங்கு(வின்) பர்வானாவும் சால்தார் (மூடு) பல்லக்கும் துராய் வகையிரா சுவாரியும் (வாள்) சீரொப்பாவும் வருகுதென்றும், மமுதல்லி கானுக்கு ... அப்துல் பாப்புக்(வகாபு) கான், மீர் சத்து (அசத்) வகையிரா அவனைச் சேர்ந்தவர்களெல்லாரும் நதிர் வைத்து முபார்க்கு பாதி சொன்னார்க ளென்றும், வேலூர் முகத்தமா லக்ஷம் விராகனுக்கு மீர் சத்து மாரிபத்திலே தீர்ந்து, அவரிந்த மட்டுக்கும் சிப்பந்தி வைத்ததைத் தள்ளி (விட்டார்). துத்திப்பேட்டு (பட்டு), அகரம் வேலூர் மிருத்தசல்லிகான் பாரிசந்தானே யிருக்கத் தீந்து மமுதல்லி கானும் நாளது வரைக்கும் வைத்த சிப்பந்தியும் தள்ளிப்போட்டார் களென்றும் சேதி எழுதிவருகிறதை எழுதி வைத்தேன். யிப்பால் முசியே புசிக்கும் சலாபத்து சங்குக்கும் யென்ன நடந்துதோ, என்ன நடக்குமோ அறிய வேண்டியது.

***1756 வருசம், சூன் மாசம், தேதி 23; தாது வருசம், ஆனி மாசம், தேதி 13; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசியே கோவர்ணதோர் லெறி அவர்கள் அண்டைக்கு கோவர்ணமா மேலே போய்க் கண்டு பேசவேணுமென்று கும்பினீர் வர்த்தகாளைக் கூட்டிக் கொண்டு போனவிடத்திலே, முசே அபேல் (M. Abeille) வகையிராக்களுடனே பேசியிருந்தவர், என்னுடனே பேச வேணுமென்று அவர்களை அனுப்பி விட்டு, உள்க் காம்பிராவிலே போய் என்னை அழைத்து, முந்தாம் நாள் பதினாயிரம் ரூபாய் தனக்கு

அனுப்பின சம்மதி யென்ன வென்று கேட்டார். "போன கோந்திராத்துக்கு உமக்கு நூத்துக்கு மூணு அல்லோ குடுத்தது. யிந்த கோந்திராத்துக்கு நூத்துக்கு அஞ்சு விழுக்காடு தீத்துப் போட்டேன்," என்று சொன்னதுக்கு, "லக்ஷம் ரூபாய் அல்லோ குடுத்தது. அய்யாயிரம் தானே உண்டு. பதினாயிரம் வந்ததென்ன?" வென்று கேட்டதுக்கு, "யின்னம் பணங் குடுக்க இருக்கிறதல்லவா? அதிலே ஒத்துக் கொள்ளலாமென்று வர்த்தகாளுக்குச் சொல்லி வாங்கிக் கொண்டு வந்து செலுத்தப் பண்ணினேன். யிது வேளை எப்படியோ அப்படிப் பார்த்துக் கொள்ளுவோ," மென்று சொன்னதுக்கு, "உனக்கு எப்படி சம்மதியோ அப்படிச் செய்," யென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது : "(நீர் எம்மை) நம்புதலில்லையே. தேவரீர் யித்தனை நாள் யென் பேரிலே அவரவர் சொன்னதுவும் நீங்கள் கேட்டதுவுமே அல்லாமல், அவர்களைத் தொட்டுப் பணத் தளவிலே ஒரு பிரயோசனமில்லா விட்டாலும் என் பேரிலே கோபம் வருத்திவிச்சுது மாத்திரமே ஆதாயமல்லாமல் மைத்தப்படி பின்னை ஒன்றுமில்லை. தாங்கள் யித்தனை தூரம் தள்ளிவிட்டுக் கோபம் பண்ணினாலும் என்னைத் தொட்டு உங்களுக்கு வந்த பிரயோசனம் உங்கள் மனசுக்கு நன்றாய்த் தெரிந்தாலும், என் பொல்லாத வேளை தங்கள் தயவு என் பேரிலே சேர வொட்டாமல் பண்ணிப் போட்டதுக்கு நான் நொந்து கொள்ள வேண்டியது தான்," என்று சொன்னதுக்கு, பதிலுத்தரம் சொல்லாமல் சும்மா அங்கே சேஷ்ட்டை செய்யுற சாடையாய்ச் செய்து கொண்டுத் தலையை வளைத்துக் (குனிந்து) கொண்டிருந்தார். அந்த மட்டுக்கும் நான் யோசனைப் பண்ணினது, மிந்த மட்டுக்கும் பிரஸ்தாபம் போதும், யினி ஒரு வேளை ஆகட்டுமென்று (நிறுத்திவிட்டேன்).

"துறையூரிலே யிருக்கிற கொம்மாந்தாம் பண்ணுகிற ரோஷ்ட்டுனாலே துறையூர் ரெட்டி தனக்கு நிறுவாகமில்லை யென்று ஒரு காகிதம் எழுதி உங்களுக்குக் குடுக்கச் சொல்லி, அவன் வைக்கீல் பாளாசி பண்டிதன் பேருக்கு யெழுதி வந்தது. அவனும் பிரான்சுலே யெழுதி வைத்து, யின்றைக்கு (அல்லது) நாளைக்கிக் கொண்டு வந்து குடுப்பான். நாளைக்கானால் நாளை நன்றைக்குக் கொண்டு வந்து குடுப்பான்," என்று சொ(ன்னேன்). உமக்கு அய்யாயிரம் ரூபாய் நன்கொடை குடுக்கப் பேசின சம்மதிக்கு, இப்போ இரண்டாயிரத்து அன்னூறு ரூபாய்ச் சேர்ந்து இருக்கிறது. மைத்த ரூபாய் எட்டு நாளையிலேயாவது அல்லது பத்து நாளைச் செல்லும் (என்று பாலாஜி பண்டிதன் சொன்னான்). தயாராயிருக்கிற பணத்தைக் கொண்டு வா, நாளைக்கு மைத்தப்பணம் அப்படியே செலுத்துவா, யென்று சொன்னேன். நல்லதென்று அந்த அலுவலிலே யிருக்கிறா" னென்று சொன்னவுடனே, சென்னப்பட்டணத்திலே யாவது கும்பினீர் கோந்திராத்து கொடுத்தார்களா

வென்று கேட்(டார்). நான் சொன்னது, "தேவனாப்பட்டணத்திலே இதுவரைக்கும் சோந்திராத்து கொடுத்ததில்லை. நேத்து ராத்திரி மேஸ்தர் கிலேசு தேவனாம்பட்டணம் போய்ச் சேர்ந்தானே, யின்றைக்கு குவர்னு ரோச பேரிடுவானோ (பதவி ஏற்பானோ?) நாளையத் தினம் ரோச பேரிடுவானோ தெரியா," தென்று சொன்(னேன்.)

ஆற்காட்டு சேதி யென்ன வென்று கேட்டார். சலாபத்து சங்கு அண்டையிலே யிருந்து மமுதல்லி கானுக்கு சவர்தார் (மூடு) பல்லக்கு, சமுசேர் கத்தியும்[1], துராய், சிறுபேசு, சிரொப்பா வகையிராவும், கர்னாடகம் சுபாவுக்குப் பர்வனாவும் பெகுமானமாய்ப் பாலி பண்ணி அனுப்பினதாகவும், அது வந்து கடப்பை வந்து சேர்ந்தாப் போலேயும், முன்னுதாகவே சேதி வந்ததின் பேரிலே யெல்லாரும் நசர் வைத்தார்கள் யென்றும் மீர் சத்து திவான்கிரி பண்ணுகிறானென்றும் (நான்) சொன்னதுக்கு, இங்கிரேசுக்காரர்களுக்குக் கூட பெகுமானம் (அனுப்பி), மமுதல்லி கானுக்கு மத்தத்து (உதவி) பண்ணச் சொல்லி சிபார்சு யெழுதி வந்ததாகவும் நான் கேழ்விப்பட்டேனென்று துரை சொன்னார். இந்த சேதி யெனக் கெழுதி வந்ததிலே காணோம்.

உங்களுக்கு வந்த சேதியே நிசமாயிருக்குமென்று சொல்லி, சலாபத்து சங்கும் மழைக் காலத்துக்குச் சாவணி பண்ண (தங்க) அபரங்கா பாத்துக்குப் போறவனாயிருக்கிறானென்றும், நானா பவுன்சுடனே பொன்னா (புனா) வுக்குப் போனானென்றும், யிப்படி சேதியாயிருக்கு தென்று சொன்னேன்.

"சீமா மூலத்திலிருக்கும் அமுல்தாரர், குத்தகைக்காரர்க ளெல்லாரும் பணம் அறுவிடுகிற அலுவலை விட்டுவிட்டு, இங்கே யிருந்து கணக்குகள் விசாரிக்கப் போன கோன்சேலியோர்மார்கள் அண்டைக்குப் போய் யிருந்து கணக்குகள் சேர்மானம் பண்ணிக்குடுக்கிற அலுவலிலே யிருக்கிறார்கள். அவர்கள் அப்படி யிருக்கச்சேயும் நானும் பணம் அனுப்பச் சொல்லி தாக்கீது எழுதுகிறேன். வந்தப் பணத்தைச் செலுத்தி விச்சுப் போடுகிறேன்," என்று லகுவிலே சொன்னதுக்கு உத்தாஞ் செல்லாமல், குளுந்த முகமாய்த் தானே வந்த பணத்தை செலுத்திவிய்யுமென்று சொல்லிப் போகச் சொன்னார். அந்த மட்டுக்கும் அனுப்பிவிச்சுக் கொண்டு, யிப்பறம் நெடுஞ்சாலையிலே வந்து கும்பினீர் வர்த்தகர்களுடனே துரையவர்களுடனே சொன்ன சாடையாய்ச் சொல்லாமல், "இப்போ பதினாயிரம் ரூபாயும் நன்கொடைக்கு ஆச்சுதே. நூத்துக்கு அஞ்சு விழுக்காடு அய்யாயிரம் ரூபா வுண்டே, யெங்கே

[1] A sword and dagger என ஆங்கிலத்தில் உள்ளது.

யென்று கேட்டார். அதுக்கு இன்னமொரு தண்டகம் (முன்பணம்) பணம் வாங்கச்சே இந்தச் சம்மதி கூடச் சேர்த்துக் குடுத்து விடுகுறோ," மென்று சொல்லிப் போட்(டேன்). அவர்களுடனே அப்பால் துலைகளுக்குப் பணம் சுறுக்கிலே அனுப்பி சரக்கு சுறுக்கிலே அழைப்பிக்கச் சொன்னாரென்று வெகு கண்டிப்பிலே சொல்லி யனுப்பிப்போட்டு, நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் சாயங்காலம் நாலு மணிக்கி முசியே லெறி குவர்ணதோர் அண்டையிலே யிருந்து சோபுதாரர் மகம்மது சேன் (உசேன்) யென்கிறவன் வந்து, திருவீதி விசாரிக்கப் போயிருக்கிற முசியே தெவோ யென்கிறவர், தீர்த்தநகரி சீர்மை நாட்டான் ஒகந்தாச்சிப் பிள்ளையை அனுப்பிவிக்கச் சொல்லி நாலு பேர் சேவுகரையும் அனுப்பி, காகிதமும் அனுப்பினார். அதைத் துரை பார்த்துக் கொண்டவுடனே பதில் காகிதமும் யெழுதி, என் பிறகே வந்த நாலு பேர் சேவுகரையுங் கூடக்கூட்டி சாவடியிலே வைத்திருக்கிற ஒகந்தாசிப் பிள்ளையை அனுப்பிவிடுமென்று அனுப்பினார். நான் வந்து சாவடியிலே பார்த்தேன், யில்லையென்று சொன்னார்கள். அதைத் துரையுடனே சொன்னேன். அப்பால் துரையிருந்து கொண்டு, "ரங்கப்பன் வசத்திலே யிருப்பான், அழைச்சு வா," யென்று சொன்னாரென்று சேவுகர் நாலு பேரையும் அழைச்சுக் கொண்டு வந்தபடியினாலே, அந்தப்படியே ஒகந்தாச்சிப் பிள்ளை, குப்பய்யப் பிள்ளை, வில்லியநெல்லூர் வாணா படையாச்சி மூணு பேரையும் அழைச்சு வரச் சொல்லி இந்த நாலு பேர் சேவுகர் முன்பாகவும் பின்னையும் நாலத்து ரெண்டு கிரகஸ்தாள் முன்பாகவும் சொல்லியனுப்பிவிச்சோம்.

### *1756 வருசம், சூன் மாசம், தேதி 24; தாது வருசம், ஆனி மாசம், தேதி 14; குருவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே, யின்றைக்கு சஞ்சிலியாம் (St. John) பண்டிகையானபடியினாலே, துரை வகையிராக்கள் பூசை கேழ்க்குறதுக்குக் கோவிலுக்குப் போய் பூசை கேழ்க்கச்சே, வரிசை வைத்து பூசைக்கு ஒரு விசை துப்பாக்கி சுடுகிறதும் பீரங்கி சுடுகிறதும், யிப்படி மூணு தரம் சுடுகிற வாடிக்கையானபடியினாலே அந்தப்படியே வெள்ளைக்காரர்கள் வந்தார்கள். அவர்களைக் கூட வரிசை வையாமல் அனுப்பிவிட்டார். அதென்ன சாடையோ தெரிஞ்சு யெழுத வேணும். அப்பால் துரை பூசை கேட்டு மேல்வீட்டின் பேரிலே வந்தார்கள். அப்போ நான் பூச்செண்டு கொடுத்து ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அப்பாலவர் ஒருத்தருடனேயும் பேசாமல் முசே தெலார்சுடனே எட்டு மணிக்கிப் பேசத் துவக்கினவர் பத்தரை மணி மட்டுக்கும் பேசிக் கொண்டிருந்தார். முசே திலார்சு ஒரு கடுதாசு கொண்டு வந்த சாடை பார்த்தால் ஆற்காட்டிலே யிருந்து மமுதல்லி

கான் சேதி வந்ததைச் சொன்ன சாடையாய்க் காணுது. ஆனால் சின்ன துரை முதலான பேர் பேச வேணுமென்று வந்த பேரெல்லாரும் பத்து மணி மட்டுக்கும் யிருந்து, அப்பாலவரவர் போய்விட்டார்கள். நானும் யிருந்து பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

***1756 வருசம், சூன் மாசம், தேதி 25; தாது வருசம், ஆனி மாசம், தேதி 15; சுக்கிரவாரம்***

இத்தனாள் காத்தாலே எட்டு மணிக்கி கொவர்ணதோர் முசியே லெறி அவர்களண்டைக்குப் போய் ஆசாரம் பண்ணி பூச்செண்டு குடுத்தேன். அவரும் முக மலர்ந்து வாங்கிக்கொண்டு, அவரவருடனே பேசியிருந்து முசியே லெனுவாரும் அவரும் உள்ளே காம்பிராவிலே பிரவேசிச்சவுடனே, (பின்) கொவர்ணமாவிலே நடுச்சாலையிலே வந்து யிருக்கச்சே, மதனாந்த பண்டிதன் வந்து (என்னுடனே), "விசையராம ராசாவினுடைய மனுஷர் சமால் (ஜமால்) மகம்மதுக்கு விசையராம ராசா துரைக்கி அனுப்பின காகிதத்துக்குப் பதில் காகிதம் அனுப்பி விச்சுக் குடுக்(க வேணும்); சலாபத்து சங்குவுக்கும் முசே புசிக்கும் வேலூர் (எல்லூர்), ராசமகேந்திரம், ஸ்ரீகாகுளம் பர்காணாக்கள் (குத்தகைப் பணம் சம்பந்தமாகக் கூட இவனைச் சிபார்சு செய்து கடிதம் கொடுக்கவேணும்)[1]. (முன்பு குத்தகைப் பணம்) கேட்டதுக்கு, சிப்பந்தி பேர் கணக்குப் பார்த்தால் எங்களுக்குப் (பணம் வர வேண்டியிருக்கும்) என்று சொன்னதின் பேரிலே, பேச்சு வார்த்தை நடந்து பதினெட்டு லக்ஷம் ரூபாய் குடுக்கத் தீர்ந்து கொண்டு, முசேயே புசி ஒரு மன்சுபாதாரனையும் சிறிது குதிரைக்காரர் களையும் கூடக் கூட்டிக்கொண்டு கோபமாய் மச்சிலிபந்தருக்கு நடந்து விட்டான். அப்பால், சலாபத்து சங்கு நீர் துறுசாய் (அவசரப்பட்டுப்) போக வேண்டாம், நாமும் அயிதராபாத்துக்குப் போறோம், கூடிக்கொண்டு போவோ மென்று காகிதமெழுதி வந்திருக்குது. இப்பால் என்ன நடந்துதோ தெரியவில்லை. யிந்த மகநாவைச்(?) சொல்லி இப்போ எழுதக்கூடாதென்று சொல்லுகுறானோ தெரியாது," யென்று சொல்லவந்தார். "எல்லாத்துக்கும் நாளையத் தினம் சால் சவாபு பண்ணுவோ மென்று சொல்லி, இவரை (விசயராம ராசாவைத்) தொட்டு ஒருத்தருக்கும் ஒரு காரியமும் ஆனதில்லை. யேதாகிலும் குடுக்கிறதை மாத்திரம் தடையில்லாமலே வாங்கிக் கொள்ளுகிறார்," யென்று இப்படி எகத்தாளியாய்ப் பின்னையும் நாலு ரெண்டு வார்த்தை சொன்னான். நாமொன்றும் சொல்லுகிற வேலையல்ல (யுக்தமாகாது;) பிரபுவினுடைய விசாரணையில்லாததைத் தொட்டு, முன்பின் பெரிய துபாசி மாரிபத்திலே

[1] இது விளங்கவில்லை. மேலே சொல்லப்பட்ட மூன்று பர்கனாக்களும் 'சர்க்கார் பிரதேசம்' எனப்பட்டன. அவற்றின் ஒரு வருடக் குத்தகை வருவாய், புசியின் செலவுக்காகத் தரப்பட்டது.

நடந்தபடிக்கு நடப்பியாததைத் தொட்டு, இப்படிக்குக் கொழுத்துப் போய். சரீர சுமாரனை யில்லாமல் பேச்சுப் பிறக்குதென்று யோசனை பண்ணிக் கொண்டு யிருந்து ... நாளைக்கித் துரையுடனே சால்சவாபுப் பண்ணுவோமென்று சொல்லிப் போட்டு, நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

*1756 வருசம், சூன் மாசம், தேதி 27; தாது வருசம், ஆனி மாசம், தேதி 17; ஆதிவாரம்*

இத்தனாள் காத்தாலே முசியே லெறி கோவர்ணதோர் கோயிலுக்குப் போய் பூசை கேட்டுப் போட்டு மேல் வீட்டின் பேரிலே தொரை, சின்னதுரை, முசியே பெடுத்தல்மீ வகையிரா கோன்சேலியேர்கள், ஒப்பிசியால்மார்கள் கோவர்ணமாமே வந்தார்கள். அப்போ நானுங் கும்பினீர் வர்த்தகர்களும் போய் சந்திச்சோம். முந்தாம் நாள் சாவடி ஞாயத்திலே சின்ன துரை வெளியிலே திருடினானென்று ஒரு பிராமணனையும் கும்பினீர் சிறையாக்கிப் போட்டதை, இத்தனை நாள் வீரா நாயக்கன் மகன் ராசகோபால நாயக்கன் கும்பினீர் வர்த்தகாளை அழைத்துப்போய் முசியே பெடுத்தல்மீயையும் முசியே தெலார்ஷூவையும் மனு கேழ்க்கப் பண்ணின விடத்திலே, முன்னூறு ரூபாய் அபராதம் குடுக்க விட்டுவிடலாம் என்று தீர்ந்து வந்தார்கள். பணமும் ஒப்பிக் குடுத்து நபரையும் விடுவிச்சார்கள். அப்பால் முசியே பெடுத்தல்மீ வெகுநேரம் பத்தரை மணி மட்டுக்கும் பேசியிருந்தான். நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

*1756 வருசம், சூன் மாசம், தேதி 28; தாது வருசம், ஆனி மாசம், தேதி 18; சோமவாரம்*

இத்தனாள் ராத்திரியும் யேழு மணிக்குத் துவக்கி நல்ல மழை பேஞ்சுது.

இத்தனாள் காலமே எட்டு மணிக்குப் போனவிடத்திலே முசே லொரி (லெறி) குவர்ணதோர் அவர்களும் ஒப்பிசியால்மார்களும் உத்திரநெல்லூரிலே (ஒரு) சொலுதாது (சில) சிப்பாயிகளைக் கொன்று போட்ட நிமித்தியம், அந்தச் சொலுதாதுவைத் தூக்கிலே போடுகிற நிமித்தியம் கோன்சேல் கூடி, மறுபடியும் பூசை கேட்டு வந்து, கோவர்ணமா மேலே போகச்சே, முசே சின்ன துரை பெடுத்தல்மீ பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருந்தவர், அவருங் கூட வந்து துரையுடனே கூட கொவர்ணமா மேலே போய் கோன்சேல் வீட்டுக்குப் போகச்சே, நாமும் கிட்டப்போய்க் கண்டு பூச்செண்டும் மாதளம்பழமும் குடுத்து ஆசாரம் பண்ணினவிடத்திலே, தொரையும் அதை வாங்கிக் கொண்டு சத்து நேரம் நின்று தாமும் ஆசாரம் பண்ணிப் போட்டுக் கோன்சேல் வீட்டுக்குப்

போனார்கள். அப்பால் நானும் கும்பினீர் வர்த்தகாளும் பிடவைப் பார்க்கிற சாலையிலே போயிருந்(தோம்). கும்பினீர் வர்த்தகருடனே, பிடவைக்கி (நீங்கள்) பணம் வாங்கிக் கொண்டு வெகுநாளாச்சுது; துலைகளுக்கு நீங்கள் யின்னம் பணம் கட்டாம (அனுப்பாம) லிருந்தால் பிடவை மெப்படி (வந்து சேரும்) என்று சுறுக்கிலே சொன்னோம். அதுக்கு அவர்கள், "ரூபாயை விராகனாக மாத்துகிறோம், ஆனபடியினாலே அட்டிப்பட்டுது. ரெண்டு மூணு நாளையிலே மாத்தி வராகனெல்லாம் சாடாவாய் அனுப்பிவைக்குறோ," மென்று சொல்லி அதின் பேரிலே யிருபத்து நாலு பங்குக் கணக்குலே[1] எண்ணாயிரம் வராகன் வரவேணுமென்று சொல்லி முசியே கொற் னேத்து (M. Cornet) போராடிக் கொண்டிருக்கிறானென்று சொன்னார்கள். அதுக்கு நாம் சொன்னது. "நூத்துக்கு ஒன்பது விராகன் (கமிஷன்) சம்மதியிலே ரெண்டாயிரத்து எழுநூத்திச் சிலுவானம் வராகனும், வெகுமான சம்மதியிலே அறுநூத்தெழுபது வராகனும், லாலாப்பேட்டை[2] சம்மதியிலே நூத்திருபது சிலுவானம் வராகனாக மூவ்வாயிரத்தி எழுநூத்தி சிலுவானம் வராகனா(க உ) ங்களுக்குத் தள்ளிக் குடுத்துத் தீரவேணுமே இல்லாமல், வண்ணாந்துறை(யில்) அதிகக்கூலி ரெண்டாயிரத்திச் சிலுவானம் விராகன் வரவேணுமென்று நீங்கள் கணக்கெழுதிக் கொண்டு யிருக்கிற சம்மதி முன்னாலே முசியே துப்பிளேயிக்சு அவர்களுடனே சொன்னதுக்கு, நல்லது நாமும் முசியே கொற்னேத்துக்கு உத்தாரங் குடுத்து எழுதி வைச்சுப் போடுகிறோ," மென்று சொன்னார். அதுக்குச் சமையம் வராமல் தப்பிப் போச்சுதே, இப்போதும் அந்தச் சம்மதி தொரை அவர்களுடனே சொல்லுவோம். அவர்கள் யெப்படிப் பார்த்துத் தீர்க்குறார்களோ அப்படி நடப்போம், ... இது முசியேக் கொற்னேத்தாலே கூடாது, துரைகள் தீர்க்க வேண்டியது" என்று சொல்லி, யிப்படி பேசிக் கொண்டிருக்கச்சே கோன்சேல் கலைஞ்சு சொலுதாதுவைத் தூக்கிப் போடத்தக்கதாகத் தீத்து தூக்கு மரத்தையும் தெற்கே கொண்டு போய் போடச்சொல்லி, அவனையும் கோயிலுக்குப் போகத் தக்கதாக அனுப்பிவைச்சு எல்லாரும் வீட்டுக்குப் போனார்கள்.

அதின்பேரிலே தொரையும் சின்ன துரையும் துரையினுடைய காம்பிராவிலே யிருக்கிறார்கள், அழைக்கச் சொன்னார்கள் யென்று அழைச்சான். உடனே நான் போறபோது அதுக்கு முன்னே வினாயகப் பிள்ளை போய்ப் பேசிக் கொண்டிருந்து வெளியே பிறப்படச்சே, நானும் அவனைப் பார்த்துக் கொண்டு காம்பிராவிலே துரைகிட்டப் போனோம். அப்போது துரையும் சின்ன துரையும் யிருந்துகொண்டு சொன்ன சேதி: யிது வரைக்கும் சிதம்பரம், விறுத்தாசலம், தரு(திரு)வதி, செஞ்சி,

---

[1] 24 வெள்ளையரும் பிறரும் சேர்ந்து செய்கிற கூட்டு வியாபாரம். கம்பெனி வியாபாரத்தை விடத் தமது சொந்த வியாபாரத்துக்கே வெள்ளையர் அதிக முக்கியத்துவம் தந்தனர்.

[2] ஆற்காடு–வேலூருக்கு அப்பால் உள்ள ஒரு துணி வாணிகத்தலம்.

உலகனூர், உத்திரமநெல்லூர் யிதுகளிலே யிருக்கிற கொமாந்தாமுகள் சொலுதாதுகள் சிப்பாயிக ளிவர்களுக் கெல்லாம் அரிசி, கட்டக்குச்சி (விறகு) வகையிரா சாமக்கிறுகைகள் இதுவரைக்கும் குடுத்திருந்தீர்களே, இனிமேல் சூலை மாத முதற் கொண்டு நீங்களிது ஒன்றும் குடுக்கக் கவையில்லை. அதெல்லாம் அரும்பாத்தை மனுஷரைக் குடுக்கச் சொல்லித் திட்டம் பண்ணினோம். அவர்கள் ரொக்க விலைக்கி வாங்(குவார்கள்). ரொக்க விலைக்கி வாங்கிறதுக்குக் கிடையாமல் போனால் வுங்கள் மனுஷர் கையிலேப் பணம் ரொக்கங் குடுத்துக் கேழ்ப்பார்கள். அதுக்கு உண்டான விலை ரொக்கத்திலே பணத்தை வாங்கிக் கொண்டு விக்கிற காலக் கிறயப்படிக்கு வாங்கிக் குடுங்கள். மைத்தப்படி நீங்கள் குடுக்கவும் கவையில்லை. வுங்கள் மனுஷர் கொம்மாந்தாம் அண்டைக்கிப் போகவும் கவையில்லை. கொம்மாந்தாம் மனுஷர் வுங்கள் அண்டைக்குப் பரிச்சேதம் வராமல் தீத்துப் போட்டோம். ஆகையால் கொம்மாந்தாங்கள் உங்கள் மனுஷரை அழைப்பிச்சாலும் நீங்கள் போகக் கவையில்லை. அரும்பாத்தை மனுஷர் வந்து ரொக்கம் குடுத்துக் கேட்ட தினிசுகள் காலக் கிறயப்படிக்கி உங்கள் மனுஷர் வாங்கிக் குடுக்கிறதே யல்லாமல் மைத்தப்படிக் கவையில்லை. ஆகையினாலே யிந்தப்படிக்கி உங்கள் மனுஷருக்கெல்லாம் சாகாசாகவுக்கு? எழுதி அனுப்பிவிடு," மென்று சொன்னார்கள். "யிது வரைக்கும் அந்தந்தத் தாவுகளிலே குடுத்ததுக் கெல்லாம் பயாவாரியாய் (விவரமாக) கணக்கு அழைப்பியும்," என்றும் சொன்னார்கள். நல்லதய்யா வென்று சொல்லிப்போட்டு, நானும் அனுப்பிவிச்சுக் கொண்டு நடுச்சாலையிலே யிருந்தேன்.

அப்பால் சின்ன துரையும் பெரிய துரையும் ரெண்டு நாழிகை மட்டுக்கும் பேசிக்கொண்டு யிருந்து சின்ன துரை அனுப்பிவிச்சுக்கொண்டு வீட்டுக்குப் போனான். அப்போ முசியே சொற்னே அழைச்சு என்னுடன் சொன்ன சேதி, "நீ முக்கால் பணம் விழுக்காடு குடுக்கிறோம் என்றல்லவா குறவரை அழைப்பிச்சு, இங்கே குறவருக்கு கெசத்துக்கு அரையே அரைக்கால் பணம் விழுக்காடு அல்லவோ குடுத்து வந்தது. இந்தச் சேதி தொரையுடனே சொன்னதுக்கு (அவர்) கெசத்துக்கு நாலு காசு கூட்டி அரையே மூன்று வீசம் (நாலு காசு)[1] விழுக்காடு குடுக்கச் சொல்லி உத்தாரம் குடுத்தார். ஆகையால் இனிமேல் அவர்கள் வந்து சொன்னாலும், அந்தப்படிக்கி கெசத்துக்கு அரையே மூணு வீதம் விழுக்காடு துரை தீத்து யிருக்குறார் யென்று கெட்டியாய்ச் சொல்லு," மென்று சொன்னான்.

---

[1] இந்தக் கணக்குப்படி ஒரு புதுச்சேரிக் காசு என்பது 64 பணம் ஆகிறது. சென்னையில் 80 பணம் (See English Vol. X 112)

நல்லதென்று சொல்லிப் போட்டு, நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்து யிருக்கச்சே சின்ன துரை சொல்லச் சொன்னாரென்று மகாதேவய்யன் வந்து சொன்னது[1], "காலமே சின்ன துரை கோட்டைக்கிப் போனவிடத்திலே பெரிய துரையிருந்து கொண்டு முசியே தெவோ திருவதிச் சீமைக் கணக்குப் பார்க்கச்சே, சீமையிலே வெகு பணம் வசூல் பண்ணியிருக்கிறார்களென்றும் பாக்கி கொஞ்சம் தான் என்றும் எழுதி அனுப்பி வைச்சான். குத்தகை அவர்கள் வசமே யிருக்கட்டும், அமுலும் அவர்கள் பண்ணிக்கொள்ளுவார்கள், வசூ(லாகிற)ப் பண மாத்திரம் நம்முடைய வசத்திலே வந்து செல்லுகிறதென்று எழுதி அனுப்பிவைச்சோம் யென்று பெரிய துரை தம்முடனே சொன்னதாகவும், அதுக்குத் தாம் "அப்படியே செய்வார்களா? அமுலுங் குத்தகையும் அவர்களுதாயிருக்கப் (பிள்ளையுடையதாயிருக்க) பணம் நம்முடைய மனுஷரிருந்து வாங்குவதானால் அமுல் கல்லல்பட்டுப் போமே, ஆகையாலே அப்படிச் செய்யலாகாது. இப்போ சீனயோர்கள் பார்த்து எவ்வளவு சீமையிலே பாக்கியிருக்குதென்று யெழுதிக்கொண்டு வருகுறார்களோ, அந்தப் பட்டணத்துக்கு (தவறு. பணத்துக்கு) நாலு மாதம் ஆறு மாதம் ஒரு வாயிதாப் பண்ணிக்கொண்டு அப்படிவிட்டு நடத்த வேணுமேயல்லாமல், நாம் தாசீல் வைக்கிறது யுகத்தமல்ல. அவர் (பிள்ளை) நாற்பத்தஞ்சு வருஷமா யிந்தப் பட்டணத்திலே யிருந்து மகாமகா காரியங்க ளெல்லாம் நிறுவாகம் பண்ணின பேர், அவர்களை விட நம்பிக்கையான மனுஷர்கள் வேறே யிருக்குறார்களா? அதுக்கெல்லாம் எனக்கு நன்றாய்த் தெரியுமே. அவர்களைத் தொட்டு யோசனை பண்ணத் தேவையில்லை. கெட்டியாக அவர்கள் வசமே நடத்த வேண்டியது. அதுக்கு நீர் சமுசயம் பண்ணத் தேவையில்லை," என்று தாம் கெட்டியாய்ச் சொன்னதாகவும், "அந்தப் படிக்கே நடப்பிக்குறோம் யென்று சொல்லி, உமக்குச் சம்மதியா? வென்று கேட்டதாகவும், பதினாயிரத்துக்கு (தாம்) எனக்குச் சம்மதி என்று சொன்னதாகவும், யிப்போவும் (உம்மை) அழைப்பிப்பார். நீரும் அந்தப்படிக்கே வாயிதாவுக்கு சம்மதிச்சுக் கொண்டு உத்தாரஞ் சொல்லு," மென்று சொல்லி அனுப்பிவைச்சார்.

அதுக்கு நான் சொல்லி அனுப்பினது : "நல்லது தங்களுக்கு என் பேரிலே யிருக்கிற பரிபூரணத் தயவுனாலே நானாச் சொல்லிக் கொள்ளாமல்ப் போனாலும் நீங்கள் சமையம் வந்தவிடத்திலே என் பேரிலே தயவு வைச்சுச் சொல்ல வேண்டிய சங்கதிகள் சொன்னீர்கள். அந்தப்படிக்கி நான் நிலுவைகளுக்கு வாயிதாப்படிக்கிக் குடுத்து விடுகுறதானால், சீனயோர்கள் அங்கே போய் குடிக்

[1] சொனன்து (சொன்னது), கேடட் (கேட்ட), சொலல் (சொல்ல), பார்கக் (பார்க்க). எபப்டி (எப்படி) என இதுபோல் பிரதி முழுவதும் எழுதப்பட்டுள்ளது.

கணக்கப்பிள்ளைகளைக் காபிரா பண்ணுகிறதினாலே சாதகமென்ன? முன்னுக்குச் சாகுபடி நஷ்டம் ... (காரணமாக) அறுவாகிறப் பணமும் (போயிற்று). அவர்களுக்கு யிருக்கிற அச்சமும் பயமும் எடுத்து(ச் சொல்லமுடியாது). ஆகையால் நீங்களதுவும் தெரியப்படச் சொல்லி, சீனயோர்கள் கொம்மாந்தாமார்கள் ரோஷ்ட்டு யில்லாமல் நன்றாய் தீத்துப் போட்டு வரச்சொல்லிப் பண்ணவேண்டியது. முன்னுக்கு யிவ்விடத்திலே யிருக்கிற சீனயோர்கள் எவனாகிலும் குடியானவன், நாட்டான் யென்று பேரிட்டுக் கொண்டு தலைமாசினவன் வந்து பொய்களைச் சொன்னால், அதைக் கேட்டு அவர்களுக்கு இடங்குடுத்து, ரோஷ்ட்டுப் பண்ணாமல், அதுவும் பத்திரப்படுத்தி, சீமையுடனே கூடினதுக்குத் தண்டனை, கண்டனையும் நமக்குள்ளே நடக்கத் தக்கதாகவும் நிருத்தாரமாய்ச் சிலவுக் குடுத்து நடத்தத் தக்கதாகவும் பண்ணிவிக்க வேண்டியது. யிதுக்கெல்லாம் தாங்கள் பெரிய துரையை யின்னம் நன்றாய்க் கண்டு பேசி நடக்க வேண்டிய சம்மதிகளையும் நன்றாய்த் தெரியச் சொல்லிக் கூடியிருந்து நடப்பிச்சுக் குடுக்க வேண்டிய," தென்று சொல்லி அனுப்பிவைச்சோம்.

அதன் பேரிலே நல்லம்மான் வீரராகவப் பிள்ளை குமாரன் ரொம்ப ஆபத்தாய்க் கிடக்குறாரென்று அவர்களை வீட்டுக்குப் போய்ப் பார்த்துப் போட்டு வீட்டுக்கு வந்தோம். அவரும் மூணாஞ் சாமத்துக்கு வைகுண்டப் பிராப்த்தியாய் சாயங்காலத்துக்குள்ளே தகனமாச்சுது. யிது சேதி நாமும் சாயங்காலம் அவர்கள் வீட்டுக்குப் போய் வந்தோம்.

இத்தனாள் சாயங்காலம் தேவனாம்பட்டணம் தொரைத் தனத்துக்கு (முன்னாலிருந்த) மேஸ்தர் யிஷ்ட்டார்க்கு என்பவரை மாத்தி மேஸ்தர் கிளெவிசு (Mr. Clive) போனபடியினாலே, மேஸ்தர் இஷ்ட்டார்க்கு தகீராய்ப் பிறப்பட்டு யிவ்வடத்துக்கு வந்து, முசியே கார்வல்லொ (Mr. Carvallho) வீட்டிலே யிறங்கியிருக்கிறார்.[1] ஆனால் அவர் வந்த சேதி யினிமேல் விசாரிச்சு எழுதவேணும்....

### *1756 வருசம், சூன் மாசம், தேதி 29; தாது வருசம், ஆனி மாசம், தேதி 19; செவ்வாய்கிழமை*

இத்தனாள் சூதகத்தைத் தொட்டு வெளியே போகாததினாலே, குருவப்பச் செட்டியைக் கோட்டைக்குப் போகச் சொல்லி அனுப்பி(னேன்). அவன் போய்க் கொவர்ணமாமுலே தொரையைக் காண்பிச்சுக் கொண்டு அங்கே யிருந்து பதினோரு மணிக்கி வந்து சொன்ன சேதி யென்ன

[1] வெள்ளையர் தலைவர்கள் தம்மிடை சண்டை நடந்த காலத்தில் கூட இவ்வளவு பரஸ்பர மரியாதையுடன் நடந்து கொண்டது அறியத்தக்கது.

வென்றால்: "தேவனாம்பட்டணத் தொரைத்தனத் துரையாய் (இருந்த பின்) போற மேஸ்தர் இஷ்ட்டார்க்கு நேத்து ராத்திரியே கறவாலி (முன்பு, கார்வல்லோ) வீட்டுக்கு வந்து யிறங்கி யிருந்தவர், இத்தை நாள் உதையத்திலே தொரை அவர்களண்டைக்கு வந்த போது, கோட்டை வாசற்படி மட்டுக்கும் ரெண்டு பேர் ஒப்பிசியால்மார் எதிர்கொண்டு அழைச்சு வருகிறபோது கோட்டை வாசலிலே சின்ன துரைக்கு அடிக்கிற தம்பூறுவும் அடிச்சு, பாறும் வைச்சு, அழைச்சு வந்தார்கள். கொவர்ணமாமுடைய தாழ்வரையிலே ரெண்டு பேர்க் கோன்சேல் காரர் போய் அழைச்சு வர, அப்பால் மேல்ப்படி அண்டையிலே சின்ன துரை, பெரியதுரை மைத்துமுண்டான கோன்சேல்காரர் சகலமான பேரும் வந்திருந்து அழைச்சுக் கொண்டு, கோன்சேல் காம்பிராவிலே போகாமல் நடுச்சாலையிலே யிருந்தவுடனே பதினேழு பீரங்கிபோட்டார்கள். அப்பால் ஒருத்தருக் கொருத்தர் க்ஷேமம் விசாரிச்சுக் கொண்டு லோகாப்பிறமமாய்ப் பேசியிருந்து, மறுபடி அனுப்பிவிச்சுக் கொண்டு அவர் யிறங்கி யிருந்த முசியே கற்வாலி வீட்டுக்குப் போனார்," என்று குருவப்பச் செட்டி சொன்னான்.

அப்பால் மகதேவராயன்[1] வந்து சின்ன துரை சொன்னார் யென்று சொன்னது : நாம் குடுத்தனுப்பின (கடிதம்) சீமா மூலக் காரியம் நிமித்தியம் துரைக்குக் குடுக்க எழுதிவைச்சதை, முன்னாலே மகதேவராயன் கையிலே அனுப்பி "சின்ன துரை வாசித்துப் பார்த்து, யிது யுக்த மாயிருந்தால் குடுக்கிறோம் யென்று குடுத்தீர்களே, அந்தக் காகிதஞ் சின்ன துரை கையிலே குடுத்தேன். அவர் நன்றாய்ப் பார்த்துக் கொண்டு 'நன்றாய் விபரமாய் யெழுதி யிருக்கிறது. இது குடுக்கலாம். யிப்பதானே கொண்டு குடுக்கச் சொல்லு' என்று ரொம்ப சந்தோஷத்துடனே சொல்லி, 'இதைக் கொண்டு போய் இப்போ தானே துரையவர்கள் கையிலே குடுத்துக் கண்டு பேசச் சொல்லு,' என்று சொன்னார். அதுக்கு யின்றைக்கு சூதகத்தினால் போகக் கூடாதென்று சொன்னேன். இதுக்கு 'நாளை உதயத்திலேயாகிலுங் கொண்டு போய்க் குடுத்துக் கண்டு பேசச் சொல்லு, நாமும் பெரிய துரை அவர்களும் யோகோபவிச்சு நடத்தினால் மைத்த பேராலே என்ன ஆகவேண்டியிருக்குது? இதுக் காரியம் நம்முடைய பேரிலே பொறுப்பு யிருக்குது. நாம் ஆறு மாதம் கெடுவும் நிலவரம் பண்ணிக்குடுத்து, சீனயோர்களையும் இவ்விடத்துக்கு அழைப்பிச்சுக் கொள்ளுகிற காரியம் நம்முடைய வேலை.' (இதைக்) கெட்டியாய், உங்களுடனே சின்ன துரை சொல்லச் சொன்னார் யென்று மகதேவராயன் வந்து சொன்னார். நாம் துரை பேருக்கு எழுதின காகிதம், சின்ன துரைக்குப் படிச்சுக்

[1] எல்லாவிடங்களிலும் மகதேவன் என்றே எழுதப்பட்டுள்ளது.

காண்பிக்கிறதுக்காகக் குடுத்தனுப்பின காகிதம், (அதனையும்) திரும்பிக்கொண்டு வந்து நம்முடைய கையிலே குடுத்தார். ஆனாலிதுகளை யெல்லாம் யீசுரக் கடாக்ஷம் ஆதியிலே பிறக்கிற (காலத்திலே) அமைச்சபடிக்கி நடக்குமே அல்லாமல், மனுஷர் பிலத்திலே யில்லை என்று நாம் நிலவரமா யெண்ணி யிருக்கிறோம்.

இத்தனாள் காலமே பெரிய துரை அவர்களுக்கு எழுதியனுப்பின காகிதமும், விசயராமராசா என் பேருக்கு எழுதி அனுப்பின காகிதமும் ரெண்டும் எடுத்துக்கொண்டு கோட்டைக்கிப் போனவிடத்திலே தொரை அவர்கள் ஒடம்பு குளிச்சு வெளியே வந்தவுடனே முசியே லெனுவாரும் கோன்சேலியேரும் மைத்த ஒப்பிசியால்மார்களும் யிருபது பேர்கள் மாத்திரம் காண்பிச்சுக் கொண்டார்கள். அதின் பிற்பாடு மங்கள மேஸ்திரியும் (சர்ஜன்) கடற்கரை ஓரத்து (மனுஷர்களும்) அவரவர்கள் தங்கள் தங்கள் கபுறு சொன்னார்கள். அப்போ நானும் போய் பூச்செண்டு கையிலே குடுத்து ஆசாரம் பண்ணி நின்றேன். அவரதை வெகு பிரீதியுடனே வாங்கி நாலு தரம் முகந்து பார்த்து சட்டையிலே சொருகிக்கொண்டு யோசனையின் பேரிலே சும்மாயிருந்து, அப்பால் தென்னண்டை நெடுஞ்சாலையிலே போய் வுலாத்திப் போட்டு திரும்ப வருகிறதிலே எல்லாரும் போய் விட்டார்கள். அதன் பேரிலே தம்முடைய காம்பிராவிலே போனார். போனவுடனே என்னை அழைத்து அனுப்பினாரென்று கந்தப்ப முதலியார் வந்து அழைச்சவுடனே நான் காம்பிராவிலே போய்க் கண்டவுடனே, விசையராம ராசனுக்குப் பதில் காகித மெழுதவில்லையா வென்று கேட்டார். அதுக்கு "அவர்கள் முசியே புசி பேருக்கு ஒரு சிபார்சிக் காகிதமும், சலாபத்து சங்கு பேருக்கு ஒரு சிபார்சுக் காகிதமும், சிறிது மருந்தும் கடுதாசியும் துப்பாக்கிக் கல்லும் (ரவையும்) ரெண்டு பீரங்கியும் (muskets)[1] யிது வேணுமென்றல்லவா யெழுதி அனுப்பி வைச்சார்கள்," என்று சொ(ன்னேன்). என் பேருக்கு அவர்கள் யெழுதி அனுப்பின கடுதாசி பிரான்சுப் படுத்தி யிருந்ததை வுடனே எடுத்துக் கையிலே குடுத்தேன். அதைப் படிச்சுப் பார்த்துக் கொண்டு அதின் பேரிலே, "சலாபத்து சங்குக்கும் முசியே புசிக்கு மிடைஞ்சு போயிருக்கிறபடியினாலே, நாம் சலாபத்து சங்குக்கு யெழுதி என்ன? முசியே புசிக்கு எழுதினாலும் அதிலே சாரம் என்ன? நாம் எழுதினப்படிக்கி நடத்தப் போறார்களா? யிப்போ எழுதுகிற வேளையுமல்ல. இந்த வேளையிலே விசையராம ராசாவுக்கு பீரங்கி மருந்துக் குண்டுகள் குடுத்தனுப்புகுறதும் (சரியல்ல). யெதனாலே என்றால், சீமை பூமி

---

[1] பெரிய பீரங்கிகளை ஒரு போதும் வெள்ளையர் சுதேச அரசர்களுக்குக் கொடுத்தது கிடையாது. அப்பீரங்கிகள் தாம் வெள்ளையர்களின் வன்மைக்கு ஆதாரம். துப்பாக்கிகள், மஸ்கட்டுகள் போன்றவற்றைக் கூட ஓரிரண்டு மட்டுமே சுதேசிகளுக்கு அவர்கள் தருவர்.

நிமித்தியம் நமக்கும் சலாபத்து சங்குக்கும் என்னமாய் நடக்குமோ தெரியாது. ஆனபடியினாலே இவர்களுக்கு மருந்து குண்டு பீரங்கி குடுக்கிறதல்லா. அதுக்கெப்படிப் போக்கா யெழுத வேணுமோ அந்தப்படி எழுத வேணு," மென்று சொன்னார். அப்படி சொன்ன உத்தாரத்துக்கு நான் சொன்னது : "உம்முடனே சேர்ந்தகாரியத்துக் கெல்லாம் முசியே மொர்சேனுக்கு நாம் எழுதியிருக்கிறோம். அவர் உமக்கு வேண்டிய காரியங்க ளெல்லாம் அனுகூலம் பண்ணிக் குடுப்பார். இந்த வேளை சலாபத்து சங்குக்கு எழுதி அனுப்புகிற வேளை அல்ல வென்று தமக்குத் தெரிஞ்சிருக்குமே," என்று எழுத வேணுமென்று சொன்னேன். அந்தப்படிக்கி மதனாந்த பண்டிதனை அழைச்சு விடச் சொல்லி சொன்னார். அந்தப்படிக்கி மதனாந்த பண்டிதருடனே சொல்லிக் கடுதாசி யெழுதச் சொல்லிச் சொன்னார். அவரும் விசையராமராசா மனுஷரும் வெளியிலே போ(யினர்).

பிற்பாடு என்னைப் பார்த்து, "சீமைப் பணம் செலுத்தத் தேவையில்லையா" வென்று கேட்டார். இதுக்கு நான் சொன்னது : "போன மாதம் நம்முடைய சீமா மூலம் எல்லாம் செமாபந்தி தீர்ந்து, இந்த மாதம் லக்ஷம் விராகன் செலுத்துகுறோமென்று அவரவர் வாயிதாப் பண்ணிக்கொண்டு போனார்கள். அது யிந்த மாதம் நாலு லக்ஷம் ரூபாய் வந்து செல்லுகிறதாக இருந்தது. இதிலே சீனயோர்கள் போய் நடக்கிற சங்கதிகளினாலே பணம் குடிகள் குடுக்கிறது நின்றது, பயமும் போச்சுது. முன்னுக்குச் சாகுபடி ஆகிறதுக்குங் கலீல்பட்டுது. யிப்படி நடக்கிறதிலே யென் கையிலே பணம் யெப்படி வந்துசேரும்? நான் கும்பினீருக்குச் செலுத்துகிற தெப்படி?" என்று சொன்னேன். அதில்லாமல் திருவதிக்குப் போயிருக்கிற முசியே தெவோ (M. Desvoeux) குடிகள், நாட்டார் சகலமான பேருகளையும் அழைச்சு யென் (பிள்ளையின் அமுல்தாரர்) கையிலே ஒரு காசு செலுத்தத் தேவையில்லை, பணமெல்லாம் மைத்தவர்கள் கையிலே செலுத்துகிறதென்றும், (எனது) அமுல் (நடந்தாலும்) தகசில் (நிர்வாகம்) தங்களுது யென்று சொல்லிப் பத்திரப் படுத்தினதினாலே, ... எல்லாரும் நம் மண்டைக்குப் பணம் அனுப்புகிறது நிறுத்திப் போட்டார்கள்," என்று சொன்னேன். அதுக்கு உத்தாரம் சொல்லுகுறதுக் கில்லாமல், "முசியே தெவோ எழுதின காகிதத்திலே, நீர் எழுதி வைச்ச நிலுவைக்கும் குடிகள் எழுதிவைச்ச கணக்குக்கும் (ஒத்துவராமல், நீர் எழுதியதிலே) அரைவாசி நிலுவை மட்டுமே நிற்கிறது என்று முசியே தெவோ யெழுதி அனுப்பினா," ரென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது : "சீமா மூலத்திலே கண்டு யெடுத்த (வசூலித்து) காசி வுள்ப்பட வசூலான பணம் யெல்லாம் திரட்டி ஒருமிச்சு துகையைப் பார்த்து, நிலுவை அத்தனை யில்லையே யென்று அவரெழுதி அனுப்பினார். அவர் துகை (முழுவதையும்) பிடிச்சுக்கொண்டு, நாட்டார் (சொன்ன) வயணம் கேட்டு, வசூலான பணமெல்லாம் கும்பினீருக்குச் செல்லவேண்டு மல்லவா என்று

கேட்கிறார். (இது எப்படி?) நாட்டுச் சிலவும் சிப்பந்திச் சிலவும் கிராமச் சிலவும் ருசுமு சிலவு சாதல்வார் சிலவு, கூத்தாடிச் சிலவு, பிச்சைச் சிலவு[1] இப்படி சீமா மூலத்திலே ஆயிரம் வருஷமாய் வெகு சிலவுகள் நடந்து வருகிறது. செமாபந்தி (யின்போது) இச்சிலவுக ளெல்லாம் வசூலிலே கழிச்சு, ... நிகரத் தொகை மட்டுமே கும்பினீருக்குச் செல்லுகிறது. இப்படி யிருக்க, இதை (யெல்லாம்) சேர்த்து நாங்கள் யெப்படி நிலுவையைக் குறைச்சுக் கையெழுத்து போடுவோ மென்று (நாட்டார்கள்) சொன்னார்கள். அதுக்கு முசே தெவோயிருந்து கொண்டு, "உங்களுக்கு நயமாச்சுதே நாம் பண்ணினது," என்று சொல்ல, அதுக்கு அவர்கள் "சாலாவாது நடந்த (வழக்கப்) பிரகாரம் நடந்தாலே காரியம், அல்லாமல் ஒரு காலத்திலேயும் நடவாத காரியம் நடத்தினால் அதினாலே (பின்னாலே) ரொம்ப பளுவு வருமென்று," அவர்கள் சொல்ல, அதுக்கு முசியே தெவோ "அமுல்தாரரும் நீங்களும் ஒத்துக் கணக்குத் தீத்துக் கொண்டு வந்து நமக்குக் கையெழுத்துப் (போட்டுக்) கொடுங்கோள்," என்று சொல்லி அனுப்பி வெச்சிருக்குறார். யிதுவும் அல்லாமல் கணக்கு குடிகள் கிட்ட வாங்குகிற போது கணக்குப் பிள்ளைகளைக் கட்டி அடிச்சதும், மரங்கொண்டு வந்து நாட்டினதும், கயறு புளியமிலாறு களெல்லாம் கொண்டு (அடிச்சுப்) போட்டதும் (அன்றி) "ஆரும் நம்முடையவர்களுடனே (என் மனிதருடனே) பேசத் தேவையில்லை (கூடாது)" என்று தமுக்கும் போடுவிச்சார். (என் மனுஷர் மீது) பாறுக்காரர்களைச் சவுக்கியும் (காவல்) வைச்சார்" என்றும் கோபங்கள் பண்ணினதும், யிதுகள் யெல்லாம் சருக்கமாய்த் தோணத் தக்கதாகவும் சொன்னோம்.

அதுக்குத் தொரை அவர்கள் சொன்னது, "நல்லதாகட்டும். யிதுவரைக்கும் உம்முடைய கையிலே பணம் வந்துதே அதுவெல்லாஞ் செலுத்தினீரா?" வென்று கேட்டார். அதுக்கு "சீமையி(லிருந்து) என் கையிலே வந்த பணத்துக்கும் நான் கும்பினீருக்குச் செலுத்தினத்துக்கும் சிப்பந்தி சாதல்வார்ச் சிலவானதுக்கும் கணக்கு யிருக்குது. அதில் ஒன்றும் வித்தியாசமில்லை. நானிந்த வூருக்கு வந்து நாற்பத்தஞ்சு வருஷமாச்சுது. யிதுவரையிலே நாங்கள் மேன்பாட்டுடனே, நாணயத்துடனேயும், வந்த பிரபுகள் யின்னாரைப் போலே இல்லை என்று துதி பண்ணத் தக்கதாகவும், பிரான்சா வரைக்கும் பேரும் கீர்த்தியும் பெத்து வியாபார சாபார மூலங்களாகவும் ராசக்காரிய மூலங்களாகவும், டில்லி மட்டுக்கும் எண்ணமாய் (?) நடந்துது. (ஆனால்) இப்போது ஒரு வருஷமாய் கைய்யாலே ஆகாதவனென்கிறதாய் (சொல்கிறாப்) போலே

[1] சில்லரைச் செலவுகள், நடநாடக சாலையார் (நடனமாடுவோர், நடிப்போர்), பிச்சைக்காரர் ஆகியோருக்கும் குத்தகைதாரர் சிறுதொகைகளைக் கொடுப்பர். வெள்ளையர் ஆட்சிக்கு முன்பே பல நூற்றாண்டுகள் இத்தகைய இனாம்கள் நடந்து வந்துள்ளன என்பதையும் பிள்ளையின் கூற்றால் நாம் அறிகிறோம்.

ஒருக் காலமும் வந்ததில்லை. இது என்னத்துனாலே என்றால், என்னுடைய பொல்லாத காலத்தினுடைய வேளையே அல்லாமல் ஒருத்தரை வெறுக்கக் காரியம் யில்லை," என்று சொன்னதுக்கு, அவர் "ரெண்டு மூணு மாதத்துக்குள்ளே யிந்த நிலுவை யெல்லாம் செல்லுமா (வந்து விடுமா)?" வென்று கேட்டார். "யிந்த மாசத்திலேயே ரெண்டு மூணு லட்சம் ரூபாய் (வந்திருக்கும்). சீனயோர்கள் போனதைத் தொட்டு (அது) நின்று போனது. யினிமேல் கொம்மாந்தாம் ரோஷ்டமில்லாமல் எங்களுடைய அதிகாரம் நடத்தவேண்டிய படிக்கி நடத்திவிச்சால், நாலைஞ்சு மாசத்துக்குள்ளாக (குத்தகை வசூல்) சாடாவாய்ச் சென்றுபோம் (வந்துபோம்)," என்று சொன்னேன். அதின் பேரிலே நாம் தொரைக்கிக் குடுக்க வேண்டியது யென்று எழுதி கையிலே வைச்சுயிருந்தக் கடுதாசியைக் குடுத்தேன். அதை ஒரு தரத்துக்கு ரெண்டு தரமாய்ப் படிச்சுப் பார்த்துக் கொண்டு, அதை மேசையின் பேரிலே வைச்சு, வேறே ஒரு கடுதாசி எங்குந் தேடினார். அது அகப்படவில்லை. அதன் பேரிலே நல்லது நீர் போ மென்று அனுப்பினார்.

நான் அனுப்பிக்கொண்டு வெளியே வந்தவுடனே, திரும்பவும் அழைக்கச் சொன்னார். உள்ளே போயிருந்தவிடத்திலே, "மயிலாப்பூர் பாதிரி பிஸ்ப்பு என்கிறவர் ஆற்காட்டிலே யிருந்து[1] வந்திருக்குறார். அவருக்கு இருக்கிறதுக்கு ஆலம்புரையிலே ஒரு வீடுந் தோட்டமும் பனமரம் தென்னமரம் பிலாமரம் யிதுகளுடனே யிருக்கிறதாம். அந்த வீடு வேணுமென்று பிசப்பின் மச்சினன் வந்து கேழ்க்குரா," னென்று அவர் மச்சினனுங் கூட வந்து யிருக்கையிலே சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "நான் ஆனால் அறியேன். எழுதி அனுப்பி வைச்சுத் தெரிஞ்சு கொண்டு சொல்லுகுறேன்," என்று சொன்னேன். அப்போ பிஷப்பு மச்சினன் சத்தே உதாரமாய்ச் சொன்னான். அதுக்கு அவனைக் கண்டிச்சுச் சொல்ல மாட்டாமல் தொரை அவர்கள் (உள்ளே போய்விட்டார்). நான் அந்தப் பக்கத்திலே வந்துவிட்டேன்.

அதன் பிறகு என்னை அழைச்சு, "ஒரு கடைகாரன் தன் கடையை முத்தியப் பிள்ளை நித்தியம் சம்பா கோவில் பாதிரிகளெடுத்துக் கொண்டார்களாம் என்று ஒரு பித்திசாம் எழுதிக் குடுத்தான். அது வாக்கும் நான் தேடினது. ஆகையினாலே அவனை விசாரிச்சுத் தெரிஞ்சு சொல்," என்று சொன்னார். நல்லதென்று வெளியிலே வந்து விசாரிச்சேன். சாராயக்கார மங்காம் "நான் அறுபது வருஷமாய்ப் போட்டுக் கொண்டிருந்த கடையை சம்பாவுலுக் கோவில் பாதிரிகள் யெடுத்துக் கொண்டார்க

[1] வெள்ளைக்கார பிஷப்புகள் அந்நிய ஆட்சி பரவுவதற்குப் பெருந்துணை புரிந்ததற்கு இந்த பிஷப் நொரோஞ்னு (Noronha) ஒரு உதாரணம்.

ளென்று நான் தான் பெத்திசாம் யெழுதிக் குடுத்தே," னென்று சொன்னான். நல்லது நாளைச் சொல்லுவோ மென்று அவனை நாளை வரச்சொல்லி அனுப்பிப் போட்டு பனிரெண்டு மணி அடிக்கிற வேளை ஆனதினாலும், மேஸ்தர் இஷ்ட்டார்க்கு விருத்தானதினாலும், யினிமேல் இங்கே காரியமில்லை யென்று வீட்டுக்கு வந்தோம். மேஸ்தர் இஷ்ட்டார்க்குக்கு பகலைக்கும் ராவுக்கும் விருந்தானதினால் பீரங்கி மத்தியானம் சாப்பிடச்சே போட்டார்கள். ராத்திரி கூத்தும் பாட்டும் நடந்துது. யிரநூத்தன்பது மெழுகுத் திரி சிலவு. ராத்திரி மழையும் பேஞ்சுது.

இத்தனாள் பாப்பய்யப் பிள்ளை தொரை அவர்களுக்கு ஒரு பித்திசமெழுதி கந்தப்ப முதலியார் முகாந்திரமாய்க் குடுக்கத்தக்கதாக யிருந்ததை, கந்தன் யென்கிறவன் குருவப்பச் செட்டியுடனே சொல்லி அனுப்பினது என்ன வென்றால் : பாப்பய்யப் பிள்ளை எழுதின பித்திசாமிலே, "சீமைப் பணமெல்லாம் வந்து சேர்ந்தது. அதுக்குக் கணக்குடனே ருசுப் பண்ணுகுறேன். இப்போது சீமையை என் பாரிசம் பண்ணினால் குத்தகைப் படிக்கிப் பணஞ்செலுத்திப் போடுகிறேன். யிதுக்கு சாமீன் முசியே தெலார்ஷு, முசியே தெபொசேத்து ரெண்டு பேரையும் சொல்லிவிக்குறேன்," என்று யிது முதலானதுகளாய் யெழுதி யிருக்குது. இதை யிப்போ குடுத்தால் மோசம் வரும், இந்தப் பேச்சு வார்த்தை தீர்ந்த பிறகு குடுப்போமென்று நிறுத்தினேனென்று சொல்லி, அந்தப் பித்திசாமை அனுப்பினான். அதை பார்த்துக் கொண்டு நான் சொல்லி அனுப்பின தென்னவென்றால்: "கடுதாசியிலே எழுதிக் குடுப்பானே அல்லாமல், தலையெழுத்து எழுதிக் குடுக்கப் போகாதே. குடுக்கிறதை யேன் தாமசம் பண்ண வேணும். சுகமாய்க் குடுக்கச் சொல்லு," என்று சொல்லி அனுப்பிக் கடுதாசியுங் குடுத்து அனுப்பிவிட்டோம். ஆனால் இத்தக் கந்தன் என்கிறவன் குடுத்தனுப்பின சாடைப்பார்த்தால், இதிலே (நான்) பயப்படுகிறேனா, தைரியமாயிருக்குறேனா என்று ஆளை அளப்பி அறிகிற சாடையாய் யோசனை பண்ணினது அல்லாமல், கடுதாசி துரைக்குக் குடுக்கயில்லை யென்று சொன்னது பொய், குடுத்திருப்பான், அதுக்கு அவர் யிடங் குடுத்தவரல்ல வென்றும் யோசனை பண்ணினேன்.[1]

---

[1] துய்ப்ளேவின் மனைவி தூண்டுதலினால் பிள்ளைக்குப் பதிலாக பாப்பய்யப் பிள்ளை பிச்சைக்காரன் நிலையிலிருந்து, 'பெரிய துபாசி' யின் நிலைக்கு உயர்த்தப்பட்டிருந்தார். அதேபோல் கந்தப்ப முதலியை உயரே உட்கார வைக்க முயன்றார் லெறி.

# ஜூலை 1756

## *1756 வருசம், சூலை மாசம், தேதி 2; தாது வருசம், ஆனி மாசம், தேதி 22; சுக்கிரவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி என்னவென்றால் : தரங்கம்பாடிக்கு மத்தத்து அனுப்பிவிக்குற நிமித்தியம் நேத்து கோன்சேல் கூடினார்களே, அந்தக் கோன்சேலிலே குமுக்கு அனுப்பத் தக்கதாகத் தீர்ந்தது.[1] ஆனால் தரங்கப்பாடியிலே யிருந்து, யின்றைய தினம், ஒரு சிக்கிரத்தார் முசியே சீனயோர் சீம்பால் (St. Paul) யென்கிறவன் வந்த பிறகு கறுக்குப் பிறந்து, மத்தியானம் இரநூத்தன்பது சொலுதாதும் நானூறு பேர் சிப்பாயிகளும் முஸ்தீப்பு பண்ணினதுக்கு, கொம்மாந்தாம் முசியே குப்பியைத் திட்டம் பண்ணி (தலைமையில்) கப்பலின் பேரிலே யேத்தி அனுப்பினார்கள். இத்தனாள் சாயங்காலம் முசியே லெறி குவர்ணதோர் மேஸ்தர் இஷ்ட்டார்க்கு, முசியே பெடுத்தல்மீ, வகையிராக்கள் வண்டியின் பேரிலே சுவாரிப் பிறப்பட்டுச் சின்ன துரை(யின்) தோட்டம் பார்க்கப் போனார்கள்.

## *1756 வருசம், சூலை மாசம், தேதி 3; தாது வருசம், ஆனி மாசம், தேதி 23; சனிவாரம்*

இத்தனாள் காலமே எனக்குச் சரீரம் சுவஸ்தமில்லாததினாலே குருவப்பச் செட்டியைக் கோட்டைக்குப் போகச் சொன்ன விடத்திலே அவன் போய் விசாரித்து வந்து சொன்ன சேதி யென்ன வென்றால் : தொரை அவர்கள் சத்து நேரம் வெளியே வந்து நின்று சீக்கிரமாய்க் காகித மெழுதுகிற அலுவலினாலே உள்ளே போனார். யின்றைய தினம் வெள்ளைக்கார னென்கிற பூண்டு ஒருத்தரும் வரயில்லை. முசியே குப்பி தரங்கம்பாடிக்கிப் போற நிமித்தியம் நேத்திய தினம் தானே சொலுதாதுகளையும் சிப்பாயிகளையும் கப்பலின் பேரிலே யேத்தி யித்தனாள் யேழு மணிக்கித் தொரையை வந்து (கண்டு) அனுப்பிவிச்சுக்கொண்டு தரங்கம்பாடிக்கிப் பயணமாய்க் கப்பலின் பேரிலே யேறிப் போனானென்று சொன்னார்கள். பின்னை ஒன்றும் விந்தைகளாய்ச் சேதியில்லை என்று மிது முதலான சேதிகளாய் வந்து சொன்னான். நாமும் விந்தைகளாய் ஒன்றுங் கேழ்விப்படயில்லை. இத்தனாள் சீமா மூலச் சம்மதிக்காக யிருபதினாயிரம் ரூபாயும், அய்யாயிரம் சிலாமணி (செலாவணி) விராகனும் சிதம்பர முதலியார் கொண்டு போய் முசியே

---

[1] தரங்கம்பாடிக் கோட்டையிலிருந்த டேனிஷ்காரர்களுக்கும் தஞ்சாவூர் ராசாவுக்கும் மனத்தாங்கல் ஏற்பட்டது. ஆங்கிலேயர்கள் தஞ்சாவூரின் தரப்பில் நின்றதால், பிரெஞ்சு உதவியை டேனிஷ்காரர் நாடினர்.

லெனுவார் கிட்ட செலுத்தி ரசீது வாங்கிக் கொண்டு எனக்கு வந்து காண்பிச்சார். அதை யெப்போதும் வாடிக்கைப்படிக்கி கட்டிவிக்கச் சொல்லிச் சொன்னேன். ...

*1756 வருசம், சூலை மாசம், தேதி 4; தாது வருசம், ஆனி மாசம், தேதி 24; ஆதிவாரம்*

(தனது குத்தகைக் கணக்கு பற்றி பிள்ளை அவர்கள் ஆளுநருக்கு பிரெஞ்சு மொழியில் எழுதிய ஒரு கடிதம் இங்கு எழுதப்பட்டுள்ளது. அதில் ஏற்கெனவே நாட்குறிப்பில் விவரித்துள்ள விவரங்களே உள்ளன. எனவே, அக்கடிதம் இங்கு விடப்படடுள்ளது.)

இத்தனாள் சாயங்காலம் தரங்கம்பாடிக்கி மத்தத்து போகச்சொல்லி சீமைக் கப்பலின் பேரிலே யேத்தின சொலுதாதுகள் 250 பேரும் நானூறு சிப்பாயிகளும் முசியே குப்பியும் பயணம் போகாமல் தடையாய் நின்றார்கள். யெதுனாலே என்றால், இங்கிலீசுக்காரருக்குத் தொரை அவர்கள் இப்படி மத்தத்து அனுப்பி வைக்குறோமென்று எழுதி அனுப்பினதுக்கு, இங்கிலீசுக்காரர் நீங்கள் மத்தத்து அனுப்பத் தேவையில்லை. தஞ்சாவூரார் தரங்கம்பாடியார்கள் (தமக்கு) வேணத்தைச் செய்யுறார்கள். அல்லவென்று நீங்களனுப்பிவிச்சால், நாங்களுங்கள் கப்பலைக் குறுக்க மறிச்சுத் தடை பண்ணுவோ மென்று யெழுதி அனுப்பினதினாலே, தொரை அவர்களும் அவர்களுக்கும் நமக்கும் பதினெட்டு மாதம் வரை சம்மதி தீர்ந்து யிருக்குதே, ஆகையாலே அந்தச் சம்மதியைத் தள்ளி நாம் நடத்துகிறது அல்ல வென்று சொல்லி (விட்டார்). தரங்கம்பாடியிலே யிருந்து வந்து சக்கிரத்தார் முசியே சீனயோர் சீம்பா லென்கிறவரையும், ராசா மனுஷன், பேர் விளங்கன், வந்தவன் ஒருத்தனையும் ரெண்டு பேரையும் (அழைத்து) "நாமானால் கப்பல் மேலே கூட யேத்தி விட்டோம்; தேவனாம்பட்டணந் துறை போனால் மறிப்பேன் என்று தடையாயெழுதி அனுப்பி வைச்சார்கள்," (என்று சொல்லி) அந்தக் கடுதாசியையுங் காட்டினார். அதின் பேரிலே அவர்கள் மெத்தவும் விசாரத்தை அடைஞ்சு இந்தச் சேதியை தயங்கம்பாடிக்கி யெழுதி அனுப்பினார்கள்.

(இதற்கு) முன்னாலே, காரைக்காலுக்கும் சிதம்பரத்துக்கும் கரை வழியே கடுதாசி யெழுதி, ... காரைக்காலிலே இருந்து அன்பது பேர் சொலுதாதுகளும் நூறு பேர் சிப்பாயிகளும் தயக்கம்படிக்கி (அனுப்பச் சொல்லியும்), சிதம்பரத்திலே யிருந்து இருபது பேர் சொலுதாதுகளும் அன்பது பேர் சிப்பாயிகளும் போகச் சொல்லி(யும்) யெழுதி யிருந்தார்கள். ஆகையாலே அவ்விடத்துக்கும் ராத்திரியே மைத்ததும் போகத் தேவையில்லை என்று (காகிதம்) யெழுதி அனுப்பினார்கள்.

நாலாம் நாள் கப்பலிலே சொலுதாதுகளை யேத்தினவுடனே, தஞ்சாவூருக்கும் காகிதமெழுதி, எங்களுக்கும் சீமையிலிருந்து வுடம்படிக்கை யெழுதி வந்தது; தரங்கம்பாடியாருக்கு[1] வுபாதி வந்தால் மைத்தது (உதமி) அனுப்பச் சொல்லி எழுதி வந்திருக்குது. ஆகையினாலே நாங்கள் மத்தத்து (?) அனுப்பியிருக்குறோம். ஆகையாலே தங்களுக்கும் அவர்களுக்கும் சமாதானமாக வேணும். எங்களுக்கு எழுதி அனுப்பினால் நாங்கள் சமாதானம் பண்ணிப் போடுகிறோம்," என்று யெழுதி அனுப்பி(னார்கள்).

தேவனாம்பட்டணம் பழய தொரை மேஸ்தர் யிஷ்ட்டார்க்கும் முசியே கர்வாலியும் வண்ணான் துறைக்கி வந்து, அவ்விடமெல்லாம் பார்த்துக் கொண்டு போனார்களென்று வண்ணாந்துறையார் ராத்திரி வந்து சொன்னார்கள்.

***1756 வருசம், சூலை மாசம், தேதி 5; தாது வருசம், ஆனி மாசம், தேதி 25; சோமவாரம்***

இத்தனாள் காலத்தாலே தொரையவர்களை எட்டு மணிக்கிக் கோட்டையிலே போய்க் கண்டு ஆசாரம் பண்ணினேன். அதின் பேரிலே சம்பாவுலுக் கோயில் பாதிரியார் வந்து பேசியிருந்து ஒரு கடுதாசியிலே கையெழுத்து வாங்கிக் கொண்டு போனார். அப்பால் சீமைக் கப்பல் கணக்கன் வந்து தஸ்திரத்திலே கையெழுத்து வாங்கிக் கொண்டு போனான்.

அதின் பேரிலே காம்பிராவிலே போனார்கள். போய் முசியே ஷெவரோவையும் அழைப்பிச்சு, மயிலாப்பூர் பாதிரியார் விஸப்பு நொரோஞ்ஞே வேலூரிலேயிருந்து அனுப்பியிருந்த காகிதத்துக்குப் பதில் காகிதம் யெழுதி அனுப்பவேண்டியதானபடியினாலே, என்னைக் காம்பிராவிலே அழைப்பிச்சுச் சொன்னது: பீஸ்ப்பு நோரோஞ்ஞுசும்[2] வந்து, கடப்பாக்கத்திலே கிருஷ்ணாசி(ஜி) பண்டிதன் வீடுந் தோட்டமுமிருக்குதே, அதிலே வந்திருக்க வேணுமென்று யெழுதி அனுப்பியிருக்கிறார். அந்தத் தோட்டங் குத்தகை எவ்வளவோ அது தாம் குடுத்து விடுகுறோமென்று சொல்லுகுறார்," என்று சொன்னார். அதுக்கு நான், "தோட்டமும் வீடும் வுள்ளது தான். குத்தகை இவ்வளவென்று தெரியாது. அதுக்கு ரெட்டிக்கு யெழுதியிருக்கிறேன். மறு சேதி வந்தவுடனே சொல்லுகுறேன்," என்று சொன்னேன். அந்தப்படிக்கி எழுதி அனுப்பச் சொல்லி முசியே

---

[1] தரங்கம்பாடி, தயங்கம்பாடி, தரிங்கம்பாடி என்று ஒரே பக்கத்தில் மூவிதமாக எழுதப்பட்டுள்ளது.

[2] இவரது பெயரும் இடத்துக்கிடம் வேறுபாடாய் எழுதப்பட்டுள்ளது.

ஷெவரோவுடனே (பிற இடங்கில் ஷெவிரோ) சொன்னார்.

அப்பால் விசையராமராஜா மனுஷரை அனுப்பிவிச்சு, நாலு கெசங் சகலாத்தும் வெகுமானமும் குடுத்துக் காகிதமுங் குடுத்து அனுப்பிவிச்சார்கள். அப்பால் மேஸ்தர் இஷ்ட்டார்க்கு அனுப்பிவிச்சுக்கொண்டு போக வந்தார். அப்போ பதினேழு பீரங்கியும் போட்டு அவரையும் அனுப்பிவைச்சார்கள். அதின் பிறகு நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

இத்தனை (இற்றை) நாள் சாயங்காலம் மேஸ்தர் இஷ்ட்டார்க்கு தேவனாம்பட்டணத்துக்குப் போய்விட்டார்.

***1756 வருசம், சூலை மாசம், தேதி 9; தாது வருசம், ஆனி மாசம், தேதி 29; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலமே கேழ்விப்பட்ட சேதி : மயேயிலே யிருக்கிற வெள்ளைக்காரர் பேரிலே மலையாளத்தார்[1] பகைச்சு வந்து மையே(?)யிக்கு அடுத்தாப் போலே யிருக்கிற மூணு மலை மேலும் தாணைய மிருந்து[2] வெள்ளைக்காரரைப் பெலயீனம் பண்ணித் துரத்திவிட்டும், அந்த யிடத்திலே தாங்களிருந்து கொண்டு பீரங்கிகளைத் திருப்பி மயே மேலே அடிக்கிறதும், அவ்விடத்திலே சண்டை நடக்கிறதென்றும் கேழ்க்கப்பட்டு, அதன் பேரிலே எட்டு மணிக்கிக் கோட்டைக்குப் போய் மெத்தை மேலே யிருக்கிற துரை அவர்களுக்குப் பூச்செண்டு குடுத்து ஆசாரம் பண்ணினேன். அவர்களும் வாங்கிக் கொண்டு ஆசாரம் பண்ணி முசியே சொபினேவுடனே பேசிக் கொண்டு யிருந்தவர், அவரை விட்டு என்கிட்ட வந்து, யேதாகிலுஞ் சேதிகளுண்டோ வென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது : துறையூரார் ரெண்டு பேர் குதிரை முஸ்தீப்பு பண்ணிக்கொண்டு நாளை உதயத்திலே வுங்கள் பேட்டிக்கி வருகுறார்களென்று சொன்னேன். துரை அவர்கள் அவ்விடத்திலே பணமெல்லாஞ் செலுத்துகுறார்களா வென்று கேட்டார். “எந்த அடுக்கிலே பணஞ் செல்லும்? நசர் சம்மதிக்கு நீங்கள் முசியே குப்பிக்கி உண்டிகைக் குடுத்த வகை(யில்) பதினாலாயிரம் ரூபாய் செலுத்தினார்கள். பேஷ்க்கஷு மூவ்வாயிரம் பொன்னுக்கு நாலாயிரம் ரூபாய்ச் செலுத்தினார்கள். யிதுகளுக்கெல்லாம் அவர் (குப்பில்) ரெசீது குடுக்கிறத்துக்கு மாட்ட மென்று சொல்லுகுறார். இதல்லாமல், அவர்கள் (கொம்மாந்தாம் முதலியோர்) யெண்ணாயிரம் ரூபாய் மட்டுக்கும் வாங்கியிருக்குறார்கள். கொமாந்தாமுங்களும் அவர்கள் துபாசிகளும் பண்ணுகிற சிலாறுகளும் ரோஷ்ட்டுகளும் வாசம் கோசரமாய் (சொல்லமுடியாமல்) நடத்துகுறார்கள்.

[1] மலபார் ராஜா வென ஆங்கிலத்தில் உள்ளது.

[2] தாணையம்–படை, பாளையம் (இந்துஸ்தானி)

அதினாலே தங்களுக்கு ஒன்றும் நிறுவாகமில்லை, கால் கை ஆடவுமில்லை யென்று மிதுக ளெல்லாம் வுங்களுடனே சொல்லிக் கொள்ள வேணுமென்றும் வந்திருக்குறார்கள்," யென்று சொன்னேன். "அவர்கள் வைக்கீல் கோனேரி நாயக்கன் சூரணிக்குப் போய்க் கலியாணம் பண்ணிக் கொண்டு மறுபடி துறையூருக்குப் போக வேணுமென்று போகச்சே, திருவதியிலே முசியே தெவோ கண்டு காவல் பண்ணி விறுத்தாசலத்துக்கு முசியே கில்லியாரண்டையிலே கூட்டி அனுப்பி வைச்சாராம். அதின் பேரிலே வுங்களுடனே வழியிலே போற பேரைப் பிடிக்கிறதுண்டா வென்று சொன்னார். அதுக்கு நீங்கள் வுடனே எழுதி அனுப்பினதினாலே அவர் கூட்டி (விடுதலை செய்து) அனுப்பிவிட்டார். உங்களண்டையிலே கிட்டத்திலே யிருக்கிற பேர்களே உங்கள் ஒடுதியில்லாமல் இப்படி நடத்திவிக்கிறதிலே, தூரத்திலே யிருக்கிற பேர் நடத்திவிக்கிற ரோஷ்ட்டுகளுக்குத் தாட்சி என்ன? யிதுகளுக் கெல்லாம் வுங்களுடனே சொல்லிக் கொண்டு, தங்களுக்கு உபாதிக ளில்லாமல் பண்ணி வைச்சுக் கொள்ள வேணு மென்று வந்திருக்குறார்க ளென்று (சொல்லி) முன்னாலே வுங்களுக்கு அய்யாயிரம் ரூபாய் பேசி யிருந்தேனே, இப்பால் அதைப் பதினாயிரம் ரூபாய் துரைக்குக் கொடுங்கோள், மைத்தப் பேருக் கெல்லாம் குடுத்து ஆகிற காரிய மென்ன வென்று சொல்லியிருந்தேன். அதுக்கு அவர்கள் வுங்களுக்குக் குதிரை மேலே பிறீதி என்று குதிரைகள் வாங்கி (வருகிறார்கள்). குதிரை வாங்கின விலைக்கும் நீங்கள் பார்க்கிற விலைக்கும் மெத்த ஏகதேசமா (வேற்றுமை நிறைய) இருக்கும். ... பாதி நஷ்ட்டமாயிருக்கு," மென்று சொன்னேன். அதுக்கு, அப்படித் தேவை இல்லை. (எனக்குக்) குதிரை வேண்டாம், ரூபாயாய்த் தானே குடுக்கட்டு மென்று சொன்னார். அதன் பேரிலே, "நான் சொன்னால், அவர்களுக்கு நானாய்ச் சொல்லவிச்சுதாய்த் தோணும். உங்களுடைய அபிப்பிராயம் குதிரை மேலே பிரீதி யென்று அவர்கள் வாங்கினார்களானதினாலே, வுங்கள் கிட்ட வந்த பிறகு நீங்கள் தானே குதிரை வேண்டா, ரூபாயைத் தானே குடுத்து விடுங்கள் யென்று சொன்னால் அவர்களுக்குச் சம்மதியாக யிருக்கும்," யென்று சொன்னேன். அதுக்கு நல்லது தான், அப்படித் தானே சொல்லுவோ மென்று சொல்லித் திரும்பயிலே முசியே லெனுவார் வந்தார். அவருடனே பேசிக் கொண்டபடியே காம்பிராவிலே போனார். பின்னையும் ரெண்டு மூணு வெள்ளைக்காரர் பேசவேணு மென்று அங்கே வந்து காத்துக் கொண்டிருந்தார்கள். நாமும் பிறப்பட்டு ஒன்பது மணிக்கி பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

இதல்லாமல் இத்தனாள் பைகோவிலே (Pegu) சிறிது பூமி ஆக்கிரமிக்கிற நிமித்தியம் அன்பது சிப்பாயிகளையும் முப்பது வெள்ளைக்காரச் சொலுதாதுகளையும் பைகோவுக்குப் போற கப்பலின்

பேரிலே யேத்தினார்கள். அவ்விடத்திலே போயிருக்கிறதுக்கு மச்சிலி பந்தரிலே (இருந்து) கோன்சேலியேர் (ல சேல்) வந்திருக்குறார். முசே லசேலை (La Selle) அனுப்பி வைக்குறார்களென்று ரெண்டொரு வெள்ளைக்காரர் சொன்னார்கள். முசே லசேலும் வந்து துரையுடனே பேசிக்கொண்டிருக்குறார். இனிமேல் அறியவேண்டியது, இது நடந்த சேதி.

***1756 வருசம், சூலை மாசம், தேதி 10; தாது வருசம், ஆனி மாசம், தேதி 30; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போய் பூச்செண்டு குடுத்து ஆசாரம் பண்ணின விடத்திலே துரை அவர்களும் முகமலர்ந்து வாங்கிக் கொண்டு ஆசாரம் பண்ணினார். அதின் பேரிலே துறையூர் வைக்கீல் கோனேரி நாயக்கன் ரெண்டு குதிரையும் சீரொப்பாவும் கொண்டு வந்து வைச்சுக் கொண்டிருக்குறாரென்று சொன்னதுக்கு, நல்லது வரச்சொல்லு என்று சொன்னார். அதன் பிறகு பாளோசிப் பண்டிதனும் கோனேரி நாயக்கனும் கூட்டிக் கொண்டு போய் யித்துடனே அன்பது ரூபாயும் நசர் கூட வைத்துப் பேட்டி பண்ணிவிச்சோம். அதின் பேரிலே துரை சொன்னது: "உங்கள் நசர் சம்மந்தம் இருபத்தையாயிரம் ரூபாய் முசியே குப்பிக்குக் குடுக்கச் சொல்லி நாம் தனக்கா பண்ணியிருக்கிறதிலே, நீங்கள் யேன் செலுத்தாமல் மூவாயிரம் ரூபாய் யெல்லாங் குடுத்து மத்தது குடாமலிருக்கிற தென்ன?" வென்று கேட்டார். அதுக்கு அவர்கள், "பதினாயிரம் ரூபாய் ரொக்கத்திலே செலுத்தியிருக்குறோம். யிதல்லாமல் பேஷ்க்கஷு என்று நாலாயிரம் ரூபாய் செலுத்தியிருக்குறோம். யிதுவுமல்லாமல், பதினோராயிரம் ரூபாய் ஆடி மாதம் வரையில் செல்லத்தக்கதாகச் சீமை அடமானம் பண்ணி யிருக்கிறோம்" யென்று சொன்னார்கள். அதுக்குத் தொரை முசே ஷெவிரோ வென்கிறவரை அழைச்சு, நேத்து முதலாய் மூவாயிரம் ரூபாய் சென்னதாக (வந்ததாக) எழுதி வந்திருக்குதே, நீங்களிப்படிச் சொல்லுகுற தென்ன வென்று கேட்டார். அதுக்கு, "வுங்களுடனே எங்களாலே பொய் சொல்லப்போமா? நாங்கள் சொன்னது பொய்யல்ல. இது தேவரீர் நன்றாய் விசாரிச்சால் நாங்கள் சொல்லுகுறது பொய் யென்றும், அவர்களெழுதினது பொய்யென்றும் ரெண்டுந் தெரியவரு," மென்று சொன்னார்கள். அதுக்கு தொரை அவர்கள் சொன்னது, "நீங்கள் ஒப்பிசியால்மாருக்குக் குடுக்குறோமென்று சொல்லியிருந்ததுக்குத் குடுத்தீர்களோ தெரியாது. இல்லாவிட்டால் பணஞ் சென்றதை (வந்ததை) யில்லை யென்று

[1] பிரெஞ்சுக்காரர் மட்டுமின்றி ஆங்கிலேயரும் இப்படி நம் பாளையக்காரர்களைப் பிடுங்கித் தின்றதைப் படிக்கப் படிக்க மனம் கொதிக்கிறது. இப்படி இந்தியாவை ஓட்டாண்டி ஆக்கியதற்காக எந்த வெள்ளையரசும் இன்று வரை மனப்பூர்வமாக வருந்தியதில்லை. மாறாக இன்றும் அவை அதையே தான் வேறு வழிகளில் செய்து வருகின்றன.

யெழுதுவார்களோ?" வென்று கேட்டதுக்கு,[1] "இவர்கள் சொன்னது அப்படி. அவர்களுக்குக் குடுத்து இப்போதும் நாங்களொன்றுஞ் சொல்லயில்லை. அது வேறே இருக்குது. இவர் நடத்திவிக்கிறதும் (சொல்கிறதும்) அங்கே நடக்கிற காரியங்களும் அனேக வித்தியாசமுண்டு. அதுகளெல்லாம் நாங்கள் சொல்லயில்லை. இது நசர் சம்மதிக்கும் பேஷ்கஷு சம்மதிக்கும் ரொக்கம் குடுத்ததும் தனகா பண்ணினதும் சொன்னோம். ரொக்கங் குடுத்ததுக்கும் ரெசீது யிருக்குது," யென்று சொன்னார்கள்.

அதின் பேரிலே முசே ஷெவிரோவைப் பார்த்து, கொம்மாந்தாங்கள் நடத்துகிற காரியத்திலே கும்பினீர்ப் பணங்கள் செல்லத்தக்கதில்லை யென்று ரொம்ப சலிப்பான உத்தரங்கள் சொல்லி, அவர்களுக் கெல்லாம் தாக்கீதையாய்க் காகிதங்க ளெழுதச் சொல்லிச் சொன்னார். அப்பால், "நமக்குக் குதிரை யென்ன செய்ய? குதிரை நமக்குத் தேவையில்லை," என்று சொன்னார். அதுக்கு இவர்கள், "அப்படிச் சொன்னால் யெப்படி குதிரையை வைச்சுக் கொள்ளுகுற" தென்று சொன்னார்கள். ஆனால் "ரெண்டு நாள் வைச்சிருந்து பார்க்குறோம். பசுந்தாயிருந்தால் வைச்சுக் கொள்ளுகுறோம். இல்லாவிட்டால் குடுத்துவிடுவோ மென்று சொல்லி, குதிரையை யேறி விடச் சொல்லிப் பார்த்தார். லாயத்துக்கு கொண்டு போகச் சொல்லிப் போட்டு காம்பிராவிலே போனார். யிதிலே நாமும் போளூர் சாபர் அல்லி கான் (Polur Jafar Ali Khan) மாம்பழம் அனுப்பினதையும் குடுத்துப்போட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

### *1756 வருசம், சூலை மாசம், தேதி 12; தாது வருசம், ஆடி மாசம், தேதி 1; சோமவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போகச்சே முசியே லெறி கோவர்ணதோர் அவர்கள் முசியே சொல்மினியாக்கும் நாலஞ்சு பேருடனே தச்சக் கூடத்திலே வந்து வேலைபார்த்துக் கொண்டிருந்தார். அங்கே போய் பூச்செண்டு குடுத்துக் காண்பிச்சு ஆசாரம் பண்ணினோம். அவர்களும் வாங்கிக் கொண்டு ஆசாரம் பண்ணினார். அங்கே யிருந்து பீரங்கி குண்டு வண்டிகளையும் தச்சர் கருமார் வேலை செய்யுறதுகளையும் பார்த்துக் கொண்டிருந்து அப்பால் கோட்டைக்குள்ளே போய் மேல் வீட்டின் பேரிலே போனார். போன பிறகு அங்கே ஒரு தரம் வுலாத்தி அதன் பிறகு முசியே லெனுவாரும் தொரை அவர்களும் அங்கே யிருந்து கடுதாசி பார்த்துக்கொண்டு யிருந்தார்கள். பின்னையும் வெள்ளைக்காரர் ஒருத்தர் ரெண்டு பேர் வந்திருக்குறார்களென்று வுள்ளே போய் யெச்சரிச்சால், தொரை வெறுமனே யிருந்தாரென்று வந்து கபுறு சொல்லவே, அங்கே வந்திருந்த வெள்ளைக்காரரும் பிறப்பட்டுப் போய் விட்டார்கள். அதன் பேரிலே நாம் ரெண்டு நாழிகை அங்கே தானே

யிருந்து அப்பால் ஒன்பது மணிக்கி பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

மதுராந்தத்துக்கு முன்னாலே ஸேம்ம கிறிஸ்த்தூம்[1] மலையப்பன் என்கிறவன் போயிருந்தான். அவனை வேண்டாமென்று இத்தனாள் மரிதாசி (மரியதாசு) என்கிறவனை அனுப்பி வைச்சார்கள். நேத்து வந்த தயங்கம்பாடிக் கப்பலிலே யேழு பெட்டி வெள்ளி யிறக்கி, டங்காசாலையிலே விட்டு ரூபாய் அடிக்கச் சொன்னார்கள். அது அடிச்சவுடனே அதைக் கப்பலிலே யேத்திக் கொண்டு பயணம் வங்காளத்துக்குப் போறதாய்க் கேழ்விப்பட்டுது. அந்த யேழு பெட்டி வெள்ளியும் லக்ஷம் ரூபாயிக்குக் காணுமென்று சொன்னார்கள்.

இதல்லாமல் போன வருஷம் அற்பிசி மாசம் சீமையாகிய யேரோப்பா ராச்சியத்திலே புடுதிக்கிசு ராச்சியத்திலே ... பிரதானமாயிருக்கப் பட்ட லீசுப்பன் (லிஸ்பன்) வென்கிற ராசதானிப் பட்டணத்திலே யேழு நாள் அகோராத்திரம் மழை (பெய்து), இந்த யேழு நாளும் விடாமல் பூகம்பங் கண்டு அந்தப் பட்டணமானது ஆடினது) ரெண்டரை நாழிகை மூணு நாழிகை (நேரம்) (இருக்கும்) ... அந்தப் பட்டணத்துக்குள்ளே லட்சத்தன்பது னாயிரம் வீடு உண்டென்றும், அந்த வீடுகள் ரெண்டு மெத்தை மூணு மெத்தை யிருக்கிற வீடுகளே அல்லாமல், ஒரு மெத்தை யிருக்கிற வீடுகள் யில்லை யென்றும், அப்படிப்பட்ட வீடுகளிலே செனங்கள் மெத்தவும் நெருக்கமாய்ப் பிரஞ்சுக்காரர், யிங்கிரேசுக்காரர், ஒலாந்தாக்காரர் தென்மார்க்கர், யித்தாலியர், யீசுப்பாங்கிக்காரர் (ஸ்பானியர்) வகையிரா தொப்பிப் போட்ட சாதிக்குள்ளே சகலமான பேர்களும் வியாபாரமாகிற பயிருக்கு அந்தப் பட்டணம் ஒரு களம் போலே யிருக்கப்பட்டதான தினாலே, சகலமான வியாபாரங்கள் நடத்துகிற பேர்களெல்லாம் அவரவர் திரவியங்களும் சரக்குகளும் நிறைஞ்சிருக்கிற தாகையால், மனுஷரும் வெகு சனங்களிருந்தார்கள். இதல்லாமல் பரதேசத்திலே யிருந்து வருகிற வர்த்தகருகளுக்கெல்லாம் நன்றாய் மரியாதைகள் நடக்கிறதானதினாலே வெகு வர்த்தகர்கள் சேர்ந்திருக்கிறார்கள். இப்படி யிருக்கச்சே ராசாவினுடை பாபத்தினாலேயோ செனங்கள் செய்யுற பாபத்தினாலேயோ சுவாமியுடைய ஆக்ஞை யெனப்பட்டது, அந்தப் பட்டணம் முழுகிறதுக்கு அத்தனை மழை பேஞ்சுது. யேழு நாள் பூகம்பம் கண்டு ஆயிரம் பதினாயிரம் (வீடுகள்?) யிறங்கி எக்காலத்திலேயும் ... சத்தங் காணுகிறதிலேயும் அதிகமாய் பூமியின் கீழே மகத்தாகிய சத்தம் பிறந்து, அதன் பேரிலே பூமி வெடிச்சு, இந்த வீடுகளெல்லாம் விழுந்ததென்றும், அதிலே யிருந்தும் செலம் பிறப்பட்டு பட்டணத்தின் ஆதியந்தம் கொண்டு போச்சென்றும், ராசாவும் ராசாவினுடைய பெண்சாதியும் ராசாவினுடைய

[1] Cunning Christian என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

பிள்ளையும் இதர ராச்சியத்து ஸ்தானாபதி வகையராக்களிலே சிறிது பேரும் தப்பி மலை மேலே வந்து சேர்ந்து பிழைச்சார்கள் என்றும், அந்த ராசாவுக்குக் காயங்கள் பட்டுதென்றும், மைத்தப்படி அந்துப் பட்டணத்திலே யிருந்து சகல செனங்களும் மறித்துப் போனார்கள் (என்றும்), இதல்லாமல் அந்த வெடிப்பிலே யிருந்து அக்கினியும் பிறப்பட்டு தென்றும் சொல்லுகிறார்கள். இனிமேல் யிதுக்கு பாயாவார் (விவரங்கள்) அறிஞ்சு யெழுதவேண்டியது.

*1756 வருசம், சூலை மாசம், தேதி 13; தாது வருசம், ஆடி மாசம், தேதி 2; செவ்வாய்கிழமை*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதியென்ன வென்றால் : சலாபத்து சங்கு அண்டையிலேயிருந்து ஒரு முகுலன் துரைக்கி வெகுமானங் கொண்டு (வந்து) பிளிச்சப்பள்ளத்திலே வந்து யிறங்கி, தொரை அவர்களுக்குச் சொல்லி அனுப்பி விச்சதாய்க் கேழ்விப்பட்டோம். ஆனால் சலாபத்து சங்கு பெகுமானம் மமுதல்லி கானுக்கு வந்தபோது தானே இந்த மொகுலன் தொரைக்கு பெகுமானங் கொண்டு ... ஆற்காட்டிலே வந்திருக்கிறானென்று முன்னாலே கேழ்விப்பட்டிருந்தோம். அவன் தான் வருகுறானென்று யோசனை பண்ணிக் கொண்டோம்.

*1756 வருசம், சூலை மாசம், தேதி 14; தாது வருசம், ஆடி மாசம், தேதி 3; புதவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் சென்னப்பட்டணத்திலே மூணு கப்பல் வந்ததாயும், (அவை) சண்டைக்கு எத்தனமாய் வந்ததாயும், அதின் பேரிலே புதுச்சேரிக்குப் போற சரக்கு, காகிதங்கள் போகத் தேவையில்லை, போனால் தடைபண்ணச் சொல்லி மேட்டுக்கு[1] துரை உத்திரவு குடுத்தார்கள் என்றும் சொன்னார்கள்.

*1756 வருசம், சூலை மாசம், தேதி 15; தாது வருசம், ஆடி மாசம், தேதி 4; குருவாரம்*

இத்தனாள் காத்தாலே எட்டு மணிக்கி கோட்டைக்குப் (நான் போனபோது முசியே லெறி கோவர்ணதோர் அவர்களும் ரெண்டு ஒப்பிசியால்மார்களும் முசியே சொல்மினியாக்கும் முசியே ஷர்ப்பாந்தியேர் (Charpentier) என்கிறவனும் பேசிக்கொண்டு யிருந்தார்கள். அப்போ முசியே கோவர்ணதோரவர்களைச் சந்திச்சு ஆசாரம் பண்ணினவிடத்திலே, குளுந்த முகமாயிருந்தார். அந்தச் சாடையைப் பார்த்துக் கொண்டு, யித்தனாள் நாம் சீமா மூலத்திலே முசியே தெவோ

[1] ஆங்கிலத்திலும் மேட்டு (mettu) என்ற சொல்லே உள்ளது.

பண்ணுகிற ரோஷ்ட்டும் அவமரியாதையும் விசிதப் படுத்திச் சொல்லவும், முசியே தெவோ பேரிலே பிராது எழுதின நாலுக் காகிதங்களையும் குடுக்கக் கூடவோ மென்றும் யோசனை பண்ணி, யிதுக்கு அடி பீட்டிகை (பீடிகையாக) "சென்னப்பட்டணத்துக்கு மூணுக் கப்பல் சீமையிலிருந்து வந்துதென்றும் அந்தக் கப்பல் வந்த பிற்பாடு புதுச்சேரிக்குக் காகிதங்கள் முதலானதுகள் போனால் மேட்டிலே தடை பண்ணச் சொல்லியும், சரக்குகள் போனால் சாவடியிலே தடை பண்ணச் சொல்லியும், இப்படி ரெண்டு யிடத்திலேயும் தாக்கீது ஆச்சுதென்றும், இனி மேல் தமுக்குப் போடுவார்களோ என்னமோ தெரியாதென்றும் அவ்விடத்திலிருந்து வந்த பேர் சொன்னார்கள். இதல்லாமல் யிந்தக் கப்பல் வந்த மறுநாள் கோன்சேல் கூடி ஒரு சுலுப்பு முஸ்தீப்பு பண்ணி தெற்கே பயணம் பண்ணி அனுப்பி வைச்சார்களென்றும், மனுவார்க் கப்பல் (man-of-war) சிறிது யிடத்திலே வந்திருக்குறாப் போலேயும், அந்த யிடத்துக்குச் சேதி சொல்லி அனுப்பி வைச்சதாகவும், யிதல்லாமல் தேவனாம்பட்டணத்திற்கு சென்னப்பட்டணத்திலேயிருந்து ஒருத்தன் சின்ன துரையாய் வருகுறானென்றும், அவனைப் பெரிய துரைத்தனத்திலே வைச்சுப்போட்டு, மேஸ்தர் கிளேவிசு அப்பிறம் சண்டை காரியத்து நிமித்தியம் திரிச்சிராப்பள்ளி வகையிரா இடங்களுக்கு கோமிசாயிறு தே கேராய் (Commissaire du Guerre) திரியுகிற தென்றும், சண்டை பண்ணுகிறதுக்குத் தயாராய் சீமை உத்தரவு (ஒன்று) வரவேணுமென்று காத்துக்கொண்டிருக்கிறார் களென்றும்," யிது முதலான சேதிகளாய் சொன்னதுக்கு, தொரை "மெய்தான் நமக்கும் அந்தப்படித் தான் எழுதி வந்தது யென்றும், ஆனாலிப்போ சீமை உத்திரவு வந்திருக்கிறதைப் பார்த்துக்கொண்டால் சண்டையானாப் போலே எண்ண வேணுமே அல்லாமல் இனிமேல் சண்டை நின்னாப் போலே ஆகும் யென்று எண்ணக் கூடாதென்றும், சண்டை துவக்கிறத்துக்கு ஒரு உத்திரவு மாத்திரம் குறைச்சல், அது நிமித்தியங் காத்துக் கொண்டிருக்கிறோம்," யென்றும் சொல்லி, பின்னையும் அவ்விடத்தி லென்ன சொல்லுகிறார்களென்று கேட்டார். அவ்விடத்திலே யானால் பிரஞ்சுக்காரருக்குக் கும்பினீர்க் கப்பல் நாலு ஆக பனிரெண்டு கப்பலும் வருகுதென்றும்,[1] தங்களுக்குச் சண்டைக் கப்பல் யிருபது பிறப்பட்டு பத்துப் பத்துக் கப்பலாய் (இரு) தாவுகளிலே யிருக்குதென்றும், நேத்து மூணு கப்பல் வந்து மறு நாள் ஆலோசனை பண்ணி, ஒரு சுலுப்புப் பயணம் பண்ணி அந்தச் சண்டைக் கப்பலண்டைக்கு அனுப்பி வைச்சார்களென்றும், யினிமேல் சண்டை நடக்குமே அல்லாமல்

[1] 8 கம்பெனிக் கப்பல்களும் 4 ராசாவின் கப்பல்களும் ஆக மொத்தம் 12 பிரெஞ்சுக் கப்பல்கள் வருகிறதென்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது. பிற செய்திகளும் ஆங்கிலப் பதிப்பில் மாறுபடுகின்றன.

நடவாமலிருக்கத் தக்கதில்லை என்றும், முசியே புசிக்கும் சலாபத்து சங்குக்கும் விரோதிச்சு இப்போ தங்களுக்கு (ஆங்கிலேயருக்கு) அனுகூலமாய் சலாபத்து சங்கு யிருக்குறாரென்றும், இனிமேல் சீமை பூமிகள் தங்களை வந்து சேருமென்றும், இப்படி பொரிமாவைத் தோண்டினவன் கதையாய்[1] வெகு ஆசையின் பேரிலே யிருக்குறார்களென்றும், சென்னப்பட்டணத்திலே கோந்துராத்துப் பண்ணிச் சிறிது பணம் குடுத்தார்களென்றும், (அதற்கும் மேலாக) தேவனாம்பட்டணத்திலேயும் நாலாயிரம் கட்டுக்குப் பேசி ரெண்டாயிரங் கட்டுக்கு கோந்துராத்துப் பண்ணி மூணு (வர்த்தகருக்கு) முப்பதுனாயிரம் வராகன் குடுத்தார்களென்றும், இப்படி சண்டை ஒரு யிடத்திலே யிருக்குது, வியாபாரம் ஒரு யிடத்திலே யிருக்குது யென்றும் சொன்(னேன்).

"சண்டை (வருவது நிச்சயம்) ... யிதென்ன வர்த்தகமும் முப்பதுனாயிரம் விராகனும்[2] ஒரு கணக்கா? கும்பினீர் வர்த்தகம் நின்றுபோக(க் கூடாது) வென்று கோந்துராத்துப் பண்ணினார்கள். ஆனால் ஒரு உத்திரவுக்கு மாத்திரம் கடலைப் பார்த்துக் கொண்டேயிருக்குறோ," மென்றும் (துரை) சொன்னார்.

அதின் பேரிலே மீர் குலாம் உசேன் ஒடம்பிறந்தாள் மருமகன் மீர்துசா சாயபு (Murtaza Sahib) என்கிறவன் தங்களுடைய யீய்யக் கணக்குக்குப் பணங் காசு குடுக்கச் சொல்ல வேணுமென்று தொரையை வந்து கேட்டதுக்கு, யிருநூத்துச் சிலுவானம் பாரம் ரங்கப் பிள்ளை பேருக்குக் கணக்குலே வரவு வைச்சுக் கொண்டிருக்கிறபடியினாலே ரங்கப் பிள்ளை கையிலே நீங்கள் வாங்கிக் கொள்ளுங்கோள்," யென்று சொல்லி என்னைப் பார்த்து, "வுமக்கும் கும்பினீருக்கும் லக்ஷ லக்ஷக்கணக்காய் வரவு செலவு யிருக்குதே! முசே துப்பிளேயிக்சு தானே உம்முடைய (அத்தொகையை) (பத்து) வைச்சு (எழுதியிருக்கிறார். ஆதலால்) யிந்த யீய்யச் சம்மதி ஏழாயிரத்துச் சிலுவானம் ரூபாயும் நீர் அவர்களுக்குக் குடுத்துவிட்டு, (கும்பினீர்) கணக்கிலே பத்து யெழுதிக் கொண்டு ... சேத்துப்போடும்," யென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். மீறுத்து (முர்த்தசா) சாசாயபு (விடம்) அந்த ரூபாய் பிறக்கிற மாசத்திலே குடுக்குறோ மென்று சொல்லி அனுப்பிப் போட்(டேன்).

அப்பால் தொரை அண்டையிலே நிற்கச்சே, "செஞ்சியிலே யிருந்து முசியே பொலோ கணக்குத் தீர்த்து அனுப்பிவிச்சார். (அவர் அனுப்பின) காகிதங்களையும் கணக்கையும் (பார்த்தால்) நூத்தி முப்பத்தொன்

[1] இது 'இதோபதேசம்' என்ற சமஸ்கிருத நூலில் உள்ள ஒரு கதையாம்.

[2] முன்பு 34,000 என்றும் இங்கு 30,000 என்றும் உள்ளன. 30,000 என்றுதான் ஆங்கிலத்தில் உள்ளது.

பதினாயிரம் ரூபாய் சாராதாரன் (renter) பேரிலே பாக்கி என்றும், இந்த நூத்திமுப்பத்தி ஒன்பதினாயிரம் ரூபாயில் தபசீல் (பயிரிட்ட) குடிகள் பேரிலே நாற்பதினாயிரம் ரூபாய் வரவேணுமென்றும், சாமீன்தாரனுக்கு ஒன்பதினாயிரம் ரூபாய்க் குடுத்திருக்குதென்றும், கொம்மாந்தாங்களுக்குப் பதினாயிரம் ரூபாய் குடுத்திருக்குதென்றும், சிப்பந்தி சாதல்வார் சிலவு வகையிரா நாற்பத்தி நாலாயிரம் என்றும், பின்னையும் ரெண்டொரு துகை அந்த நூத்தி முப்பத்தொன்பதினாயிரம் ரூபாயிக்குக் கணக்குச் சொன்னார். யிப்படி பணங்கள் சிலவு ஆகிப் போனால் கும்பினீருக்கு எப்படி பணஞ் செல்லும்?" யென்று கேட்டார்.

அதுக்கு "நான் முன்னாலே தானே சாமீன்தாரரைத் தொட்டுச் சிறிது பணஞ் சிலவாகிப் போகுதென்றும், பிறகு கொம்மாந்தாமுகள் ரோஷ்ட்டு தொட்டுஞ் சிலவாகிப் போகுது யென்றும் (சொல்லி) யிதுகளுக்குத் துலுக்கர் நாளையிலே சீமா மூலம் குத்தகை வாங்கிக் கொள்ளுகிறவர்களுக்கு யெக்குத்தியாராய் கண்டனை தெண்டனை நயப்பயங்கள் ஆக்கினைகள் செலுத்துகுற அதிகாரம் (நடந்தது). அது நடக்காமல் போனால், பணம் முழுகிப் போம், வியாபாரத்தைப் போலே (அது) அல்ல வென்று, முன் முசியே கொதேவுடனே குத்தகைப் பேச்சை இந்த வயணம் யெல்லாம் சொன்னதுக்கு, அவரந்தப்படிக்கி நடப்பிச்சுக் கொள்ளச் சொல்லி உத்தாரம் பண்ணினபடிக்கி நடக்கயில்லை. அனேக விசையும் நாம் உங்களுடனே சொல்லிக் கொண்டதுமல்லாமல், அனேகந்தரம் யெழுதிக் குடுத்தேன். நீங்கள் சத்தே வுபேஷ்ஷை பண்ணினபடியினாலே இப்படி வந்தது. இனிமேல் ஆகிலும் ஒருத்தர் பேச்சைக் கேளாமல் அதிகாரம் பண்ணிக் கொள்ளச் சொல்லியும், கொம்மாந்துகள் ரோஷ்டுகளில்லாமலும் நடப்பிச்சால் பணம் ஆகும். யில்லாவிட்டால் இப்போ பணம் முழுகிப்போனாப் போலே தான்," என்று சொன்(னேன்). அதுக்கு, "இந்தப் பணம் உனக்குக் குத்தகைக்காரனல்லோ குடுக்க வேணுமென்று" கேட்(டார்). நான்சொன்னது, "எனக்கு அந்தக் குத்தகைக்காரன் குடுக்க வேணும், நானுங்களுக்குக் குடுக்க வேணு," மென்று சொன்(னேன்). "மெய்தான் இந்தப் பணம் யெப்படி வரப்போகு," தென்று கையை விரித்தார். நானிருந்து கொண்டு, "நான் உங்கள் கையில் குத்தகை வாங்கினபடிக்கி ஆதாயம் பார்த்துக் கொண்டு ஒருத்தருக்குக் குத்தகை குடுத்தேன். அங்கே நிலுவை நிக்கிற பணமெல்லாம் உங்களுதே அல்லாமல் என்னுதா? நானுங்களுக்கு நிலுவை எழுதிக் குடுத்ததுக்கும் செஞ்சிக் கணக்கு வந்ததுக்கும் துகையிலே யிருபதினாயிரம் ரூபாய் குறையாயிருக்குது. இந்த ரூபாய் குறைந்தாலும், நானும் அந்த குத்தகைக்காரனும் ஒத்துக் கொள்ளச்சே நானுங்களுக்கு எழுதிக் குடுத்ததுக்கும் செஞ்சிக் கணக்கு வந்ததுக்கும் நானுங்களுக்கு எழுதிக் குடுத்த நூத்தி அன்பத்தொன்பதினாயிரம் ரூபாய் நிலுவையும்

சரிக்கட்டி வரும். நானிது வரைக்கும் உங்களுக்கு (சொன்ன) தெல்லாம் பொய்யாய்க் கண்டுது. இப்போதுதான் செஞ்சிக் கணக்கிலே சத்தே ஏறக்குறைய சரிப்பட்டுதே! அந்தப்படிக்கி (மற்ற கணக்குகளும்) சத்தேறக் குறைய சரிப்படும். மைத்தப் போர்கள் அவரவர் பிரயோசனத்தைத் (சுயநலம்) தொட்டுச் சொன்ன பேச்சுக்களை மெய்யென்று கேட்டீர்களே! சொன்னவர்களுடைய நடத்தைகளைப் பூறுவோத்திரமாய் நீங்கள் விசாரித்தால் அப்போ (உண்மை) வெளியாகும்," யென்று சொன்(னேன். அதுக்கு) உத்தாரஞ் சொல்லாமல், மறுபடி செஞ்சிக் கணக்குகளைத் தானே பார்த்துப் பார்த்து, "1,39,000 ரூபாய் நிலுவைக் குடிகள் பேரிலே யிருக்குது. நாற்பதினாயிரம் போக லக்ஷம் ரூபா யிப்படி லுக்கிசானாப் (வசூலிக்க முடியாதபடி) போச்சு," என்று சொன்னார். "முன் குத்தகைக்காரரும் சாமீன்தாரராயிருந்த வெள்ளைக்காரரும் என் மனுஷர் சீமையைப் பார்க்க வொட்டாமல் (நிர்வாகம்) பண்ண (சேதிகளை) நானப்போ வுங்களுக்குப் பித்திசாமெழுதி, போன நொவெம்பர் மாசத்திலேயே குடுத்த(படி) சாமீன்தாரர்களையும் குத்தகைக்காரர்களையும் பணங் குடுக்கச் சொல்லி ஒபரீகாரிட்(டிருந்தீரே)[1] யானால், ரொக்கமாய்ப் பணம் வந்(திருக்கும்). வெள்ளைக்காரர்களாச்சுதே என்றும், அவர்கள் சொன்ன பேச்சை மெய்யென்று எண்ணி (இருந்தீர்கள்). இப்போ அவர்கள் நடத்தைகள் விசிதமாச்சுதே," யென்று சொன்னதுக்குச் சும்மாயிருந்தார்.

அதின் பேரிலே முசியே தெவோ திருவதி சீமை வகையிராக்களுக்கு கணக்கு மெய் பொய் யென்று விளங்கப் போனவர், சீமையை சந்தேயித்தம் அமுலாய் விசாரிக்க (குடியானவர்களே நிர்வகிக்க வேணும் என) ஆசை கொண்டு, என் மருமகன், அவ்விடத்துக் குத்தகைக்காரர்களுக்கு எல்லாம் மேல் விசாரிப்பாய் வைத்தவனை நடப்பிக்கிற அவமரியாதைகளும், நாட்டார் குடிகள் சமஸ்தமான போர்களுக்கும் "ரங்கப்பனுக்கு இனிமேல் சீமை நடக்கிறதில்லை, நாம் கட்டிக் கொள்ளுகிறோம். நீங்கள் சரிப்போன படிக்கிக் கணக்குெ யழுதி வையுங்கோள்," யென்று சொல்லுகுறது மல்லாமல், அவர்கள் பேரிலே நாங்கள் கணக்குத் தீத்து வாங்கின நிலுவைச் சீட்டுகளும் முச்சலிக்காவுகளும்[2] சாமீன்தாரர்களுடைய சீட்டுகளையும் கொண்டு வந்து குடுக்கச் சொல்லியும், குடிகளுக்கும் நாட்டாருக்கும் திஷ்டாந்திரமாயிருக்க, எங்கள் மனுஷரைக் கட்டிவைத்து அடிக்கிறதும், சவுக்கிகள் வைத்துப் போறவாறக் காகிதங்களை வாங்கிறதும், என் மருமகனுடனே ஒருத்தனையும் பேச ஒட்டாமல் பதினைந்து போர் பாறுக்காரர்களை வைத்து, அதன் நடுவே யிருக்கச்சே

[1] 'கண்டித்திருந்தீர்களே யானால்.'
[2] ஒப்பந்தம். நடுவர் தீர்ப்பு.

வேலைக்காரர்களைக் கூடப் பேச ஒட்டாமல் பண்ணு(கிறார்). வெள்ளைக்காரர் வாடிக்கை தூக்கிலே போடுகிறவனுக்குக் கூட சாப்பாடு மத்ததுகளை நன்றாய் போடச் சொல்லுகுறார்கள். அதுகள் கூடயில்லாமல் சாப்பாட்டுக்குக் கூட போகவொட்டாமல், அரிக்கத்துப் (தொந்திரவு) பண்ணி வைக்கிறதுக்கு, என்ன அப்படிப்பட்ட கிரிமினேல் குத்தம் பண்ணினதை யிவர் அறிந்து நடத்துகுறார்? ... இப்படிப் பின்னையும் அனேகம் அரிக்கத்துப் பண்ணுகுறதும் இந்தச் சம்மதிகள் காகிதத்திலே யெழுதி முடியாது.

இதல்லாமல் குடியானவர்கள் நாட்டார்கள் குத்தகை வாங்கின போர்களை, நீங்க ளென்னத்துக்குப் பணம் செமதலைப் பண்ணிக் (அக்கறையோடு) குடுக்கிறீர்கள்? சிலவு சித்தாயம் ஒன்றுங் கவையில்லை. வசூல் மாத்திரம் யெழுதிக் குடுத்து விடுங்கோ," ளென்று சொல்லி, முன் அவரவர் எழுதிக் குடுத்த கணக்குகளைத் தள்ளிப் போட்டு, வேறே கணக்கு வாங்கி லுக்குசான் (நஷ்டம்) கும்பினீரைச் சேருமென்று அறியாமலும், சீமைப் புலமும் கணக்குப் புலமு மறியாமலும், சீர்மையைத் தாம் கட்டிக்கொண்டால் பிரயோசனப்படலாமென்று, சவுரிராய னென்கிற ஒரு சின்ன மனுஷன் பேச்சைக் கேட்டுக்கொண்டு, யிப்படி அனேகம் விதமாய் நடத்துகிறது எனக்கு மெத்த ஆச்சரியமாயிருக்கிறது. இந்தப் பளுவு கடசியிலே யெப்படி வருமென்றும் பாராமல் (செய்கிறார்). கோன்சேலிலே (முடிவு செய்தபடி) தாம் கணக்கு விளங்க வேண்டிய நியாய மெப்படியோ, அப்படி பொய் மெய்யென்று அறிந்து வரப் போனார். அவர் சீமையிலே (குத்தகைப் பணத்திலே) வைத்த ஆசையினாலே ஞாயத்தை எல்லாம் அறிந்து (மறந்து?) போய் அனியாயமாய் நடத்துகுறாரென்று, தாசீல் (செய்யும்) நம்முடைய மனுஷரை வாயோடு வாய்ப் பேச ஒட்டாமல், சீர்மையை யேன் என்று கேளாமலும், என்ன சம்பவிக்குமோ ... வென்று தோத்தம் பண்ணிக்கொண்டு வருகிற சாடை வுங்களுக்குத் தெரிஞ்சுயிருந்தாலும், என்னுடைய பொல்லாத வேளையினுடைய குண முங்களுக்கு அவ ரெழுதுகுறதே அல்லாமல் ... ஒருக் காலுஞ் சிக்கப் போறதில்லை யென்று சொல்லி (நடத்துகிறார்). நான் சொன்னது (நடப்பதில்) பதினாயிரத்தில் ஒரு பங்கும் யில்லை. நான் சொன்னது ஆயிரத்திலே ஒரு பங்கில்லை (நான்) யெழுதி யிருக்கிறது," யென்று (சொன்னேன்). முசியே தெவோ அவ்விடத்துக்குப் போன பிறப்பாடு சூலை மாசம் 13 தேதி வரைக்கும் நடப்பிச்சதைச் சுருக்கமாய் யெழுதியிருக்கிற நாலு காகிதங்களையும் குடுத்து தயவு பண்ணி படிச்சுப் பார்க்க வேணுமென்று சொன்னதுக்கு, அசன்யமில்லாமல் (சோம்பலில்லாமல்) யிந்த மட்டுக்கும் கேட்ட (பின்) அந்தப்படிக்கே நாலு காகிதமும் படிச்சுப் பார்த்து, "வுன் மருமகன் தண்டின பணம் உனக்குச் செலுத்தாமல் வைத்துக் கொண்டிருக்கிறானாமே?"

யென்று சொன்னார். "அப்படி யிராது. ஆனாலும் நீங்கள் கணக்கு மெய் பொய் யென்று நிலுவை பாத்து வரச் சொல்லி மூணு பேர்களை மூணு பங்கீடாய்ப் பங்கிட்டு அனுப்பினதுக்கு, கணக்கு விளங்கிறவர் (பார்க்கப் போனவர்) இப்படி யெல்லாம் நடப்பிக்கக் காரிய மென்ன?" வென்று கேட்டதுக்கு, "உன் மருமகன் பேரிலேயும் அவ்விடத்துக் குடிகள் பிராது பண்ணுகுறார்கள்," என்று சொன்னார். "குடிகள், நாட்டார்," அமுல்தாரர் பேரிலே பிராது பண்ணுகிற வாடிக்கை. ரெண்டு பேர் வியாச்சியத்துக்கு வந்தால், ஒருத்தன் தோற்கிறதும் ஒருத்தன் கெலிக்கிறதும் சகசமாமே. கெலிச்சவன் தனக்கு ஞாயமாய்த் தீர்த்தார்கள் யென்று சொல்லுவான். தோத்தவன் அனியாயம் பண்ணினானென்று சொல்லுவான். இது அவர்கள் கையிலே பணம் அறுவிடுகிற காரியமாகி யிருக்கச்சே, துவேஷ மில்லாம லிருக்குமா? நீங்கள் அறியாத நியாயத்துக்கு நான் சொல்லப் போறதென்ன?" வென்று சொன்(னேன்). "முசியே தெவோவுக்கு யெழுதி அனுப்புகிறேன், யினிமேல் அப்படி நடக்கப்படா," தென்று சொன்னார். "உங்கள் சித்தம் எங்களைப் பண்ணுகுற அரிக்கீத்தும் அபகீர்த்தியும் உங்களுதே அல்லாமல் எனக்கென்ன? நான் உங்கள் கும்பனீரைச் சேர்ந்தவனென்றும், யென் பேர் பிரதிஷ்டை டில்லி பரியந்திரமும் யேராப்பா ராச்சியம் யெல்லாம் கீர்த்தியா யிருக்கிறது. ஆனபடியினாலே, பூஷணமா யென்னை நடத்தினாலும் உங்கள் மனுஷனென்று தான் கீர்த்தி. ஆபூஷணமாய் நடத்துகிற அபகீற்தியும் தங்களுது," என்று சொன்(னேன்). நகைச்சார்.

நகைச்ச சாடை எனக்குத் தெரியும். நல்லது, இது தம்முடைய தயவு யில்லாம லிருக்கிறவர்களுக்கு இப்படி நடக்கிறதென்றாப் போலே அர்த்தம் பண்ணிக்கொண்டு நகைச்சார் யென்று நான் மனசிலே எண்ணிக் கொண்(டேன்). கும்பினீர் (காரியம்) முழுகிப் போகு தென்று சறுவாத்துமாகத் தோத்தாமல், இப்படி நடத்துகிறாரென்றும், இந்தப் பதிலாமை தம்முடைய தலையின் பேரிலே நிற்கிறதென்றும் தோத்தாமல், நாம் பஞ்சப்பாட்டுப் பாடின(தாக) நகைச்சாரென்றும் யெண்ணிக் கொண்(டேன்). ஒருத்தரைத் தொட்டா (எதுவும்) யிருக்குது? காலம் செய்யுதென்று எண்ணிக்கொண்டு, "உங்கள் சித்தத்துக்குத் தோத்தினப்படிக்கி நடப்பிக்கிறது தான்," என்று சொன்னேன்.

அப்பால் முசியே துவலேர் (M. Duvelaer) செத்துப்போனது நீர் அறிவீரா யென்று கேட்டார். "நேத்து ஒப்பிசி (funeral mass) படிச்சார்களே. ஆனால் (அவர்) மெத்த சமத்தன், கெட்டிக்காரன், யோகசாலிகளிலே விருத்திகரமுண்டான யோகசாலி. எங்கள் தகப்பனார் நாள் முதல் எங்களுக்கும் அவருக்கும் சினேகமுண்டு. முன் வியாபாரத் தளவிலே, வேவாதேவி சீனா யாத்திரை பண்ணுகிறபோது நடந்ததுண்டு. இப்பால் சீமையிலே வும்முடைய உடம்பிறந்தாளைக் கலியாணம் பண்ணின

பிற்பாடு, கும்பினீர் திரேக்குதிரேருக்குள்ளே வாச்சாலகனாயிருந்து, அப்பாலவர்களுக் குள்ளே யெல்லாம் யிவர் பேச்சே அல்லாமல் வேறே பேச்சில்லாமல் நடந்தது. இப்பால், மினிஸ்தருகளெல்லாரு மிவருக்கு ஆப்த்தராயிருந்தது மல்லாமல் பிரான்சுக் கும்பினீர் காரியமாய் நாலாம் வருசம் மூணாம் வருசம் இங்கிரேசுத் தேராவுக்குப் போனபோது, இந்தியாக் காரியத்து நிமித்தியம் பிரான்சு ராசாவினுடைய வைக்கீல் செத்துப்போய் விட்டத்தின் பேரிலே இவரைத் தானே ஸ்தானாபதியத்துக்கு நேமிச்சது. (இது) எல்லாருக்கும் அகப்படாதே. மகாயோகசாலியான படியினாலே இவருக்குக் கிடைச்சது. ஆனால் மரணத்தை அடைஞ்சுப் போனார்," யென்று சொன்னதுக்கு, "மெய்தான், கெட்டிக்காரனாம். அன்பத்தாறு வயது. பிள்ளையில்லாமல் போச்சுது. தம்பி, தம்பி பிள்ளைகள், அண்ணன் பிள்ளைகளிருக்கிறார்கள். ஆனாலிவ(ர்களு)க்கு யோகம் வரப்போகுதா?" வென்றார். "மெய்தான், யெனக்கு பெகு ஆதராவாயிருந்(தார்), விழுந்து போய்விட்டார்," என்று சொன்னதுக்கு, "உனக்கென்ன? அவரைப் பார்க்கிலும் நூறு பங்கு அதனமாய்க் கும்பினீரிலேயும் ராசாவினுடைய யிடத்திலேயும் மினிஸ்தருகளிடத்திலே யுமா யிருக்கிற முசே கொதே வுனக்குச் சினேகிதனாயிருக்கச்சே, உன் காரியம் முன்னைப் பார்க்க ஆயிரம் பங்கு அதனமாய் நடக்கும்," என்று சொல்லி, "முசியே துப்பிளேயிக்சு வீட்டுலே கோன்சேனா (வீட்டுக்காவல்) தாயிருக்கிறாப் போலே முசே கொதேப் பண்ணிப்போட்டா," ரென்று சொன்னார். அதுக்கு "சீர்மையிலே ஆருடைய பிராப்பும் ஆசாராவும் பட்சமும் யிருந்தாலு, மிங்கே தொரைத்தனம் பண்ணுகிறவர்களுடைய தயவு யிருந்தாலாங்காட்டும் காரியங்கள் நடக்குமே அல்லாமல், மைத்தப்படி நடக்கத் தக்கதில்லை," யென்று சொன்னதுக்கு ஒத்துக் கொண்டார்.

அப்பால் "புடுதிக்கல் (Portugal) ராசதானிப் பட்டணம் போன வருஷம் பிரட்டாசி மாசத்திலே (செப்டம்பர்) பூகம்பங்கண்டு (பூமி) வெடிச்சு முழுகிப் போன சேதி அறிவியா?" வென்று கேட்டார். சாடையாய்க் கேழ்விப்பட்டதே அல்லாமல் விசிதமாய்த் தெரியாத்தென்று சொன்னேன். ஆயிரத்தி எழுநூத்தி அன்பத்தஞ்சா மாண்டு செப்த்தம்பர் மாசத்தையிலே பூமி வெடிச்சு, லட்சத்திப்பதினாயிரம் வீடுண்டு, எல்லாம் மெத்தை வீடுகள், எல்லாம் பூமியிலே விழுந்து முழுகிப் போச்சுது. இங்கிலீசுக்காரர்களுக்குத் தான் ரெண்டு மூணு கோடி திரவியத்துக்குச் சேதமுண்டு. பிரான்சுக்காரர், ஒலாந்தாக்காரர், தென்மார்க்கர், இத்தாலியர், சுவேசு, அலுமாஞ்சு வகையிரா ஏரோப்பியருக்கு எல்லாம் சேதமுண்டு. ஏரோப்பா ராச்சியத்திலே வியாபாரத்துக்குப் பிரதமமாயிருக்கப்பட்ட ஸ்தலங்களிலே முதல் ஸ்தலமும் (அந்த) ராசதானிப் பட்டணம். லக்ஷக்கணக்காய் வெகு சனங்கள் சேதப்பட்டுப் போனதினாலே இங்கிலீசுக்காரர்களுக்கு வெகு லுகுசான்

வுண்டு. மைத்தப் பேர்களுக்கெல்லாம் யிருபது முப்பது லக்ஷம் அன்பது லட்சம் எழுபது லக்ஷம் மட்டுக்கும் வுண்டாயிருக்கும். ஏரோப்பியா ராச்சியத்திலே யிப்படிப்பட்ட அதிசெயமாய் வெகு நாளைக்குப் பிற்பாடு இந்த நஷ்ட்டம் கண்டுது... இத்தாலியேன் ராச்சிய மெல்லாம் மலை ராச்சியம்; செஞ்சி மலை போலே பத்தத்தனை யிருபதத்தனை ஒசத்தியும் விஸ்தாரமுண்டு. அவ்விடத்திலே மலைகள் பிளந்து ஐங்காத வழி அறு காத வழி மட்டுக்கும் போய் விழுந்து, பட்டணங்கள் கிராமங்கள் அகப்படுகிற துண்டு. கிராமங்கள் வெடிச்சு பூமியிலே யிருந்து அக்கினி சுவாலையாய்க் கிளம்பி, அப்பால் சலம் வந்து மொண்டு கொண்டு, முழுகிப் போனதுண்டு. (இது) அந்த இத்தாலியேன் ராச்சியத்திலே வாடிக்கையே அல்லாமல், பிராஞ்சா, இங்கிலீசுத்தோர், அலுமாஞ்சு, ஒலாந்தா, புடுத்திகீசு இந்தப் பிரதேசத்திலே பூகம்பம் ஒரு வேளை உண்டாயிருக்கிறதே இல்லாமல், இப்படி சம்பவித்ததில்லை. அந்த இத்தாலியேன் தேசத்திலே (அது) வாடிக்கையான படியினாலே அங்கே யிருக்கிற செனங்களுக்கு பூமி வெடிக்கிற துண்டு. ரெண்டு நாள் மூணு நாள் முன்னமே சிறிது சின்னங்கள் காணும். அந்த சாடை அறிஞ்சு யிருக்கிற செனங்கள் தப்பிச்சுக் கொள்ளுவார்கள். அதிலே வெகு பேர் சாகிற பேர்களுண்டு. யிந்த வட்டங்களிலே யில்லாததினாலே நிச்சிந்தையா யிருந்ததினாலே, பெகு செனங்கள் சேதப்பட்டுப் போனார்கள். அப்படி யிருந்தும் பூகம்பம் விடாமல் ஏழு யெட்டு நாள்கள் கண்டபடியினாலே சிறிது பேர்கள் தப்பினதுண்டு. ஆனால் வெகு திரவியமும் வெகு சரக்கும் வெகு வஸ்துக்களும் சேதப்பட்டு முழுவிப் போச்சுது. இங்கிலீசுக்காரர்களுக்கும் சுதேயுக் (ஸ்வீடிஷ்) காரர்களுக்கும் தான் வெகு சேதம்," என்று சொல்லிப்போட்டு அவர் உள்ளே போனார்.[1] நான் அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

அப்பால் சோசியர் சொன்னபடிக்கி நாலாந் தேதி பிரபுவுக்கும் நமக்கும் விஸ்தாரமாய்ப் பேச்சு நடந்தது. பதினோராந் தேதி (இவை தமிழ் மாதத் தேதிகள்) முதல் சுபங் குடுத்துக் கொண்டு வரவேணும். கலகங்களும் ஆரம்பிச்சுக் கொண்டிருக்கிற படியினாலே சோசியம் தப்பாய்க் காணவில்லை. யின்றைய வரைக்கும் சரிப்பட்டுது. மேல் நடக்கவேண்டிய பலன் சொன்னபடிக்கு நடக்கிறதும் அனுபவம் அறிய வேண்டியது.

முசியே புசிக்கும் சலாபத்து சங்குக்கும் பிகாடான பிற்பாடு, முசியே புசி வையாசி மாசத்திலே (ஆத்திரத்தின்) பேரிலே பிகாடிச்சு அயிதராபாத் தெல்லாம் ... கொள்ளையிட்டு, (அவ்வூர்க்) கில்லேதாரனையும் வெட்டிப்

[1] ஆங்கிலப் பதிப்பில் போர்த்துகல் விபத்து தவிர, பிற செய்திகள் விடப்பட்டுள்ளன.
[2] இச்செய்தி வெறும் வதந்தியே.

போட்டு வந்தார்.[2] வர்த்தகாள் வீடுகள் உள்பட கொள்ளையிட்டு, கோட்டையையுங் கட்டிக் கொண்டதின் பேரிலே, பாளாசி ராயன் குதிரைகள், சானோசி நிம்பளக்கார், ராசா சந்திரசேனன் குமாரன், மல்காரி ஓல்க்கார் வகையிராக்களுடைய பவுன்சு யிருபதினாயிரம் குதிரையுடனே முசியே புசியையும் அவர் பவுன்சையும் சுத்திக் கொண்டார்கள் யென்றும் சண்டை ஆகுதென்றும் சலாபத்து சங்கு நாலு நாளைய பயணத்திலே யிறங்கியிருந்தவனும் போய் சுத்திக் கொண்டான் என்றும் துலுக்கர் மாசம் சவால் (ஷவ்வால்) மாசம் 4 தேதி கோல்கொண்டையிலே யெழுதின காகிதம் காசிதாசு புக்கன்சி (Kasidas Bukkanji) கடைக்கு ஆற்காட்டுக்கு சவால் மாசம் பனிரெண்டாந் தேதி வந்து (இச்) சேதி யெழுதி வந்தது. அதில் பாரிசியிலே எழுதி வந்த பயாவாறு (விவரங்கள்) படிக்கிக் கீழே எழுதியிருக்குது பார்த்துக்கொள்ள வேண்டியது.

ஆற்காட்டிலே யிருந்து மகம்மது ஆக்கல் (தவக்கல்) குமாரன் எழுதி அனுப்பின காகித விபரம் : அயிதராபாத்திலே யிருந்து புக்கன்சி காசிதாசு கடைக்கி ஆற்காட்டுக்கு எழுதி அனுப்பின ஓலையிலே பனிரெண்டு நாளைக்குள்ளே வந்த சேதி : அயிதராபத்துக் கிட்ட கொழே மகல் (Kolemahal) என்கிற சாகாவிலே (முகாமிலே) முசியே புசி தம்முடைய பவுன்சு 2,000 பேர் சொலுதாது, 8,000[1] பாறுக்காரர்களுடனே யிறங்கி யிருக்கச்சே சிறிது சவாபு சால் (சச்சரவு) நிமித்தியமாய் அயிதராபாத்துலே யிருக்கிற ராசா (சப)றல்லீ கானுடைய (சபர் அலி கான்) குமாஸ்தா யிப்றயீம் அல்லி கான் கிட்ட வக்கீல் றும்மி கானை (Rumi Khan) அனுப்பிவிச்ச விடத்திலே யிபராம்[2] அல்லி கானுக்கும் நுரும்மி கானுக்கும் கானாசங்கி சவாபுசால் (பேச்சுவார்த்தை) நடந்துது. (அப்பால் அவர்களுக்கிடையே சச்சரவு ஏற்பட்டு) ரன(ம்)சான் மாசம் 29 தேதி இப்றயீம் (அ)ல்லி கான் (ரூமி கானை) வெட்டிப் போட்டபடியினாலே, அந்த சமாச்சாரம் முசியே புசி கேட்டு தம்முடைய பவுன்சுடனே அயிதராபாத்து சகரு (நகர்?) மேலே போய் சண்டை பண்ணி சகரு பூந்து கொஞ்சங் கொள்ளையிட்டு, அந்த யிப்றயீம் அலிகானையும் வெட்டிப்போட்டார். அதைத் தொட்டு அங்கே யிருக்கிற குடிபடைகள் வகையிரா கொஞ்சம் தட்டு முட்டு தப்பி வைச்சுக் கொண்டு வலசை போனவர்களும், சிறிது பேர் அகப்பட்டுக் கொண்டு கொள்ளை குடுத்தவர்களானார்கள். அந்த சமாச்சாரம் சலாபத்து சங்கு

[1] 800 என்று தமிழ்ப்பிரதியில் உள்ளது.

[2] தமிழ்ப்பிரதி செய்தவர் பெயர்களை எவ்வாறெல்லாம் வரிக்கு வரி மாற்றி யெழுதியிருக்கிறார் என்பதைக் காண்க. ரூமி கான் என்ற பொதுவான பெயர் கிழக்கு ரோமாகிய இஸ்தான்பூல் நகரிலிருந்து வந்த முஸ்லீம் தளகர்த்தர்களைக் குறிக்கும்.

அயிதராபாத்து(க்கு) நாலு நாளையப் பயணத்திலே யிருக்கச்சே கேட்டு, தம்முடைய பவுன்கும் பின்னையும் மராட்டியர் குதிரை யிருபதினாயிரம் மட்டுக்கும் செபை பண்ணிக் கொண்டு (விரைந்து) அயிதராபாத்துக்குக் கிட்ட வந்து சுத்திக் கொண்டார்களென்றும், முசியே புசியினுடைய மனுஷரில் ஆராகிலும் சகரிலே யிருந்து வந்தால் தலையை வெட்டிப் போடுகிறார்களென்றும் – யிந்தப்படிக்கி யிருக்கு தென்று எழுதி வந்தது.

இத்தனாள் ராத்திரி, மூணாம் வருஷம் முசியே கொதே தொரைத் தனம் பண்ணின போது கய்க்குளர் (கைக்கோளர்) இரண்டு வகுப்பாயிருந்து, ஒருத்தருக் கொருத்தர் ஆகாமலும் நாட்டாமை யில்லாமலும் சின்ன துரை முசே பெடுத்தல்மீயுடனே சொல்லிக் கொண்டு, அவர் முன்னிலையாய் தீராமல்படிக்கி, முசியே கொதேவுடனே சொல்லிக் கொண்டதுக்கு, அவர் சின்ன துரை முகாந்திரமாய் விசாரிச்சு, யிது பெரிய துபாசி யினுடைய வேலை, அவர் முகாந்திரமாய் நடந்தால் பெலனாயிருக்கும், முன்னும் பின்னும் எந்தச் சாதியிலே நாட்டாமை வைக்க வேணு மென்றாலும் பெரிய துபாசி முகாந்திரமாய் நடக்கிறதென்று கேழ்விப்பட்டிருக்கிறோம்; ஆனபடியினாலே இதை நீர் தானே விசாரித்து அதுக்குக் கப்பாசு (தகுதி) ஆரோ அவனை நாட்டாண்மைத் தனத்துக்கு வைக்கச் சொல்லி உத்திரவு குடுத்தார். அதன் பிறகு கய்க்குள்ரை அழைப்பிச்சு, “நீங்கள் ஒருத்தருக் கொருத்தர் கிச்சாட்டைப் (சண்டையிடுவதைப்) பார்த்தால் கெட்டுப் போகப் போறீர்கள். இப்பவுந் துரை அவர்களும் உத்தாரம் குடுத்தார்களே, அந்தப்படிக்கி நாம் தானே ரெண்டு பேரை நேமிக்கிறோம். அவர்கள் சொன்னபடிக்கிக் கேளுங்கோ,” ளென்று சொன்னோம். நல்ல தென்று ஒப்புக்கொண்டார்கள். அந்தப்படிக்கிச் சீட்டெழுதி சாவடியிலே கட்டி வைச்சு, சிறிது நாளைக்கிப் பிற்பாடு நாம் தானே நேமிச்சால் பெலவந்தமாய் நேமிச்சாப் போலே ஆராகிலும் சொல்லிக் கொள்ளுவார்களென்று, அவர்களை அழைச்சு, “நீங்கள் தானே ரெண்டு வகுப்புக்கும் வகுப்பு(க்கு) ஒருத்தனை யுங்களுக்குச் சரிப்போன பேரை நேமிச்சுச் சொல்லுங்கோள். அந்தப்படிக்கி நாம் உத்தரவு குடுக்கிறோம்,” என்று சொன்னேன். ஆண நாயக்க முதலியாரையும், ஒரு வகுப்புக்கு முத்து முதலியாரையும் நேமிச்சு, “இந்த ரெண்டு பேரும் சொன்னபடிக்கி நாங்களனைவரும் கேழ்க்கிறோம். நீங்க ளுத்தாரங் குடுங்கோ,” ளென்று கேட்டார்கள். இந்த ரெண்டு பேரை நாட்டாமைக்கு நேமிச்சால் சமஸ்தமான பேருக்கும் சம்மதியா வென்று கேட்டார் (கேட்டேன்). அதுக்கு சம்மதி தானென்று சொன்னபடியினாலே, அந்த ரெண்டு பேருக்கும் ரெண்டு கிசம் சகலாத்து பெகுமானம் பண்ணி, எல்லாருக்கும் பாக்கு வெத்திலை குடுத்து, யிருவரும் சொன்னபடிக்கிக்

கேளுங்கோள் யென்று திட்டம் பண்ணி அனுப்பிவிட்டோம்.

*1756 வருசம், சூலை மாசம், தேதி 16; தாது வருசம், ஆடி மாசம், தேதி 5; சுக்கிரவாரம்*

இத்தனாள் காத்தாலே கோட்டைக்குப் போய் எட்டு மணிக்கி முசியே லொரி (லெறி) கோவர்ணதோர் அவர்களைச் சந்திச்சு பூச்செண்டு குடுத்தவுடனே, அதை வாங்கி முகந்து கொண்டு தென்னண்டை நெடுஞ்சாலையிலே யிருக்கச்சே எட்டு மணி வேளையுண்டு. அப்போ துறையூர் வைக்கீல் கோனேரி நாயக்கனும் வந்து நின்று சலாம் பண்ணினான். அவனைப் பார்த்து முசியே குப்பிக்கி யிருபத்தையாயிரம் ரூபாய்க்கி சம்மதி பண்ணினார்களா வென்று கேட்டார். அவரை (நான்) கேட்டதுக்கு, நாலைஞ்சு நாளையிலே அவருக்கு (அது கொடுக்கப்பட்டு விடும்) எண்பிச்சு, அப்பால் "பேஷ்கஷுப் பணம் மாத்திரத்தானல்லோ உங்களுக்குச் செல்ல வேண்டியது? அதுக்கும் மார்க்கம் பார்க்குறோம்" யென்று கோனேரியான் (கோனேரி ராயன்) சொன்னான். அந்தப்படிக்கி (நான் துரையுடன்) சொல்லி அப்பால், "உம்முடைய பேச்(சின் படி) முன்னிருபது நாயிரம் ரூபாய் குடுத்தார்களே, இப்பவும் பதினாயிரம் ரூபாய் குடுக்கப் பேசியிருக்குது. அதுக்கு அய்யாயிரம் ரூபாய் யெட்டு நாளையிலே சம்மதி பண்ணி வைக்குறோம். மைத்ததும் சம்மதி பண்ணுகுறோம் யென்று கோனேரி நாயக்கன் சொல்லுகுரான்," என்று சொன்னதுக்கு, "நல்லது தயங்கம்பாடியாருக்கும் தஞ்சாவூராருக்கும் சமாதான மாச்சுதே, திரும்பவும் கலாபமென்று சொல்லுகுறார்களே மெய்தானா" வென்று கேட்டார் "மெய்தான். முன் பணஞ் சிறிது கோயிலிடிச்சுப் போட்ட சம்மதி குடுக்குறோமென்று ஒடம்படிக்கையாம். யிப்போ குடுக்கமாட்டோமென்று (தென்மார்க்கர்) சொல்லுகுறார்களாம். அதினாலே சண்டையென்று எத்தனம் பண்ணுகிறதாகச் சேதி கேழ்விப்படுகிறது," யென்று சொன்னதுக்கு, "அப்படியா, யிந்தக் கபுறு நான் கேட்டதில்லை," யென்று (சொன்னார்).

அப்பால் "இந்தப் பட்டணத்துக்குள்ளே (புதுச்சேரியில்) சராப்புகள் (shroffs) லக்ஷாந்திரம் குடுக்கல் வாங்கல் பண்ணத் தக்கன பேர் ஒருத்தருமில்லை," (என்று அவர்) சொன்னதுக்கு, முன் காசிதாசு புக்கன்சி குமாஸ்தா, வல்லப சுந்தர் குமாஸ்தா, கோவற்தன தாசு[1] குமாஸ்தாக்கள் வகையிராக்கள் யிவ்விடத்திலே யிருந்தார்கள். முசியே துப்பிளேயிக்சு அமுலிலே பாப்பய்யப்பிள்ளை காறுபாரிலே சிறிது பதுமாபிலிகள்

[1] இவர்களெல்லோரும் குஜராத்தி பாங்கர்கள். இவர்களது கிளைகள் தென்னிந்தியாவிலும் தக்கணத்திலும் பல வியாபாரப் பட்டணங்களில் இருந்தன.

(துகராறுகள்) நடந்தபோது போய்விட்டார்கள். காசிதாசு புக்கன்சி குமாஸ்தா மாத்திரம் ஒட்டிக் கொண்டிருந்தான். அப்பால் முசியே புசி லக்ஷம் ரூபாய்க்கு (ஒரு) உண்டிகை அனுப்பின (போது) முசியே துப்பிளேயிக்சு தாறேன் என்று அட்டிப்பண்ணிப் போட்டார். அப்பால் முசியே கொதே வந்தார். அவருங் குடுக்கமாட்டாமென்றார். அத்துடனே உண்டி சண்டி புதுச்சேரிக்கி ஒருத்தரும் எழுதக் கவையில்லை. அவ்விடத்திலே யிருந்து எழுதியிருந்தாலும் குடுக்கல் வாங்கல் பண்ண வாண்டாமென்று திட்டம் பண்ணிப் போட்டார்கள்," யென்று சொன்(னேன்). "(அது) முசியே துப்பிளேயிக்சு குத்தமல்ல, முசியே கொதேயுடய குத்தம். அதன் பிற்பாடு நானறிந்து முசியே மொற்சேனைக் குடுக்கச் சொல்லி மச்சிலிபந்தருக் கெழுதிக் குடுத்தே," னென்று சொன்னார். "இது நான் அறியேன். எத்தனை நாளாச்சுது?" என்று கேட்டதுக்கு, முசியே மொற்சேன் யிவ்விடத்துக்கு வந்து போன பிற்பாடு யென்று சொன்னார். "பணஞ்சென்று தா (கொடுக்கப்பட்டதா?" என்று நான் கேட்டேன்) அதுக்கு, "அந்தச் சேதி நான் அறியேனென்று (அவர்) சொன்னார். "முன்னிருந்த சராப்புகளுக்கு இந்தப்பட்டணத்தினுடைய கொம்பியான்சு (நம்பிக்கை) யெடுப்பட்டுப் போச்சுது. இனிமேல் வுங்களைத் தொட்டு வுண்டாகவேணு," மென்று சொல்லி, யிப்பவும் "காசிதாசு புக்கன்சி[1] ஆற்காடு வந்து, சென்னப்பட்டணத்துக்குப் போறவனாகயிருக்குறான். ஆனபடியினாலே தாங்கள் தயவு பண்ணி தயாரச (இணக்கமான) காகிதம் ஒன்று எழுதிக் குடுத்தால், நானும் ஒன்று எழுதி அனுப்புகுறேன்," யென்று சொன்னதுக்கு, நல்லது அப்படியே செய்யலாமென்று (சொன்னார்). "தத்காலம் லக்ஷம் ரெண்டு லக்ஷம் வேண்டி(யிருக்குது). அது யிது (க்கு) சம்பந்தப்படாதே (உதவாதே). அதுக்கென்ன மார்க்கம்," யென்று கேட்டார். "நம்முடைய பட்டணமென்றால் பரதேசத்து வர்த்தகர்களுக்கு நம்பிக்கையில்லை. அப்படி நம்பிக்கையில்லாமல் போய்விட்டது. அதினாலே இத்தனைப் பிரயாசம் வந்திருக்குது. ஆனாலும் நானுமங்கே எழுதி அனுப்பி வைச்சு, என்னாலே ஆனமட்டுக்கும் பிரயத்தனம் பண்ணுகுறேன்," என்று கேவலம் முறிச்சு (ஒளிக்காமல்) சொன்னால், மனசிலே விகல்ப்பம் தோணும் யென்று யோசனை பண்ணி, லகுவாய்ச் சொன்னேன்.

காகிதக் கட்டுகள் மொழுகுச் சீலையிலே கட்டி முத்திரை போட்டு மச்சிலிபந்தரிலே (யிருந்து) தண்டகம் தண்டகமாய் (ஒருவர் பின் ஒருவராக) அரை நாழிகைக்குள்ளாக மூணு சோடா வந்தது. அப்போ முசியே லெனுவார் அந்தக் காகிதங்களைப் பிரிச்சு, தொரை

[1] சென்னையில் இவரது நிறுவனம்தான் ஆங்கிலேயரின் போர்ச் செலவுகட்குக் கடன் தந்து உதவியது.

காகிதங்களைத் தொரை கையிலே கொடுத்து, மைத்த பேர் காகிதங்களை மைத்தபேர் கையிலே குடுத்தார்கள். அப்போ முகியே தெபொசேத்தும் வந்திருந்தான். காகிதங்களிலே கோல்கொண்டையிலிருந்து முசே புசி காகிதங்களும் யிருந்(ததைப்) பார்த்தவுடனே, முகம் வாடிக் கண்டபடியினாலே நேத்தைக்கி முசியே புசி கலாபம்கோல் கொண்டையிலே நடந்த சேதி எழுதி வந்திருக்கும், அதினாலேயும் வேலூர் (எல்லூர்), ராசமகேந்திரம், ஸ்ரீக்காகுளம் முத்தபா (முஸ்தபா) நகர் வகையிரா சீமைகளெல்லாம் கட்டினார் யென்றும் சேதி கேழ்க்கப்பட்டுதே, அதுவும் யெழுதி வந்திருக்கும், எல்லாம் யோசனை பண்ணிப்பார்க்க கலக சமாச்சாரமாயெழுதி வந்திருக்குமென்று யோசனை பண்ணிக் கொண்டிருக்கச்சே, காகிதங்கள் விஸ்தாரமாய் வந்தபடியினாலே படிக்க உள்ளே காம்பிராவிலே போனார். நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1756 வருசம், சூலை மாசம், தேதி 17; தாது வருசம், ஆடி மாசம், தேதி 6; சனிவாரம்*

சலாபத்து சங்கு அண்டையிலே யிருந்து முசியே லொறி (லெறி) கோவர்ணதோரவர்களுக்குக் காகிதங் கொண்டு வந்த மொகுலன் (மொகலாயன்) பேர் விளங்கனைப் பல்லக்கும் குதிரையுடனே யுள்ளே வரச்சொல்லி, முசியே லொறி (?) கொவர்ணதோரவர்கள் வாசற்படிக்கி ஒரு சீட்டு குடுத்தார்கள் யென்று சோபுதாரன் வந்து சொ(ன்னான்). அவன் உள்ளே வந்தவுடனே நீங்க ளெந்த விடுதி காண்பிக்குறீர்களோ அந்த விடுதியிலே யிருக்கச் சொல்லியும், அவ(னுக்குப்) படியும் உங்களுடனே சொல்லிக் குடுப்பிக்கச் சொன்னாரென்றும் சொன்(னான்). பழங் கும்பினீரை (கம்பெனி அலுவலகம்) முஸ்தீது பண்ணியிருக்குதே, அங்கே யிருக்கச் சொல்லி அனுப்பி விச்சேன். (ஒரு) ... கர்னாடகம் சுபா மமுதல்லி கான் வசம் பண்ணினோம், வுங்கள் வசமாயிருந்த சீமையும் அவர்கள் வசம் ஒப்பிவிச்சு, யிதுவரைக்கும் குடுக்க வேண்டிய பணமும் அவர் வசத்திலே செலுத்தவும் (என்று சொல்லி) தாக்கீதுக் காகிதம் (அவன்) கொண்டு வந்தபடியினாலே[1], ஆவாஹனம் விசர்ச்சனங்கள் (ஆடம்பரங்கள்) இல்லாமல் சலாபத்து சங்கு அண்டையிலே யிருந்து வந்த மன்சுபேதாரனை ஒரு சோபுதார (னை மட்டும் அனுப்பிப்) போயழைத்து வந்து ஒரு யிடத்திலே யிறக்கிப் போட்டுப் போறதாய் நடந்துதென்று வூரிலே செனங்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள்....

---

[1] புசியின் அத்துமீறிய செயல்களாலும், அவனைத் தடுக்க லெறிக்கு மனமோ தைரியமோ இல்லாததாலும், பிரெஞ்சுக்காரர் உறவை நிசாம் சங்கு முறித்துக் கொண்டு, ஆங்கிலேயரது உதவியை நாடும் நிலைக்குத் தள்ளப்பட்டார்.

***1756 வருசம், சூலை மாசம், தேதி 18; தாது வருசம், ஆடி மாசம், தேதி 7; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் இங்கிலீசுக்காரருக்கு பங்காளாவிலே (பங்காளத்திலே) யிருக்கும் கல்கத்தா யென்கிற ரேவு அன்பது அறுபது வருஷகால (த்துக்கு முன்னே கொடுக்கப்பட்டது). பங்காளாவுக்குத் (கல்கத்தாவுக்கு) தொரையாயிருந்த இங்கிரேசுக்கார திரேக்குதேர், அவுரங்கேசேபு (அவுரங்கசீப்) பாச்சா குமாரன் (அல்ல, பெயரன்) சமதாரா (Samadara)[1] யென்கிறவன் அன்பது அறுபது வருஷத்துக்கு முன்னே அவ்விடத்திலே வந்திருந்தபோது, அவருக்கு மனசு வர நடந்து கொண்டு, அந்தக் கல்கத்தா யென்கிற பட்டணம் கைசவப்படப் பத்துப் பணஞ் செலவழிச்சு, யிங்கிலீசுக்காரருக்குச் சேரத் தக்கதாய்ச் சன்னது வாங்கி சீமைக்கி அனுப்பினவிடத்திலே, அவ்விடத்திலே யிருந்து தொரைத்தன மேற்பட்டு கணக்கு வழக்கு, சவாபுசால் (எல்லாம்) சீமையிலே பேசிக் கொள்ளுகிறதே அல்லாமல் சென்னப்பட்டணத்துக் கீழே தேவையில்லை யென்று[2] அன்று முதல் யின்றைய வரைக்கும் நடந்துகொண்டு வந்தது.

அந்தப் பட்டணத்திலே பெரிய பெரிய மாதுபார் (செல்வந்தர், பெரிய மனிதர்) யிருந்தார்கள். (இப்போ) பங்காளத்து நவாபாயிருக்கிற அலாவறதி கானுக்கும் (அலி வர்த்தி கான்) யிங்கிலீசுக்காரருக்கும் சர்ச்சையாயி, யந்தக் கல்க்கத்தாப் பட்டணத்திலே (இருந்த) யிங்கிலீசுக்காரர்களைத் துரத்திவிட்டு, அன் வறதி (அலி) கான்[3] கட்டிக்கொண்டதாகக் கேழ்விப்பட்டோம். ஆனாலிருவருக்கும் சண்டை வந்த பூர்வோத்திரம் (காரணம்) இனிமேல் பயாவாரியாய் (விவரமாய்) அறிஞ்சு யெழுதவேண்டியது.[4]

***1756 வருசம், சூலை மாசம், தேதி 20; தாது வருசம், ஆடி மாசம், தேதி 9; செவ்வாய்***

இத்தனாள் காலமே முசியே லொறி (?)

---

[1] இப்பெயர் அசீம்–உஷ்–ஷான் என்றிருக்க வேண்டும்.

[2] அதாவது, 'கல்கத்தா இனி சென்னப்பட்டணத்துக்குக் கீழ்பட்டதாக இராமல், நேரே லண்டன் கம்பெனியின் கீழ் இருக்கும்' என்று ஏற்பாடாகி...

[3] படி எடுத்தவர் இந்தப் பதிவு முழுவதையும், வழக்கம்போல், விளங்கிக்கொள்ள இயலாதவாறும், ஏராளமான எழுத்துப் பிழைகள் உள்ளவாறும் எழுதியுள்ளார். தமிழ் எழுத்துப் பயிற்சியோ, கவனமோ இல்லாத ஒருவரிடம் இப்பணியினை ஒப்படைத்தது மிகப் பெருங்குறை.

[4] கல்கத்தாவைப் பிடித்துக் கொண்ட வங்காள நவாபு அலி வர்த்தி கான் 1756 ஏப்ரலிலேயே காலமாகி விட்டார். அவரை அடுத்துப் பட்டமேறிய அவரது பெயரன் சிராஜ்–உத்–தௌலா தான் கல்கத்தாவைக் கைப்பற்றினார்.

கோவர்ணதோரவர்க(ளுக்கு) அயிதராபாத்துக் கோட்டையிலே முசியே புசியை மராட்டியர் குதிரையும் சலாபத்து சங்(கின்) பவுன்சும் சுத்திக் கொண்டிருக்குதென்று சேதி வந்தபடியினாலே, அவ்விடத்துக்கு மத்தத்து அனுப்புகிறதுக்கு (அவர்) காகிதங்களை யெழுதுகிற அலுவலிலே யிருக்குறாரென்று சேதி கேட்டபடியினாலே, நான் கோட்டைக்குப் போகவில்லை.

முசே புசிக்கு மத்தத்து (உதவியாக) அறுநூற்று நாற்பது சொலுதாது(களையும்), யிறநூறு பேர் சிப்பாயிகளையும், அதுக்கு யெசமானாய் முசியே சொபினேயையும் திட்டம் பண்ணி, கப்பலின் பேரிலே யேத்தி, மச்சிலிபந்தரிலே போய்ச் சேர்ந்து, அங்கேயிருந்து அயிதராபாத்துக்குப் போகத் தக்கதாய் அனுப்பிவிச்சதாய்க் கேழ்விப்பட்டோம். மத்தப்படிக்கி யிங்கிலீசுக்காரரும் துளாயிரம் சொலுதாதுகளையும் சிறிது சிப்பாயிகளையும் நாலு கப்பலின் பேரிலே முஸ்தீப்பு பண்ணி, ... கல்க்கத்தா பட்டணத்தை பங்காளத்து நவாபு கைவசம் பண்ணிக்கொண்டு கலகம் நடக்கிறபடியினாலே அவ்விடத்துக்கு மத்தத்தாய் அனுப்பிவிச்(சார்கள்) என்றும் கேழ்விப்பட்டோம். ஆனால் அவரவர் சொல்லிக் கொள்ளுகிறது, அயிதராபாதுக்கும் சலாபத்து சங்குக்கும் மத்தத்து ஆக (அவற்றை ஆங்கிலேயர்) யனுப்பி விச்சதாய் சொல்லிக் கொள்ளுகுறார்கள். யென் புத்திக்கு கல்கத்தா (பட்டணத்துக்கே) மத்தத்து அனுப்பினார்களென்று நிற்செயமாய் (நிச்சயமாய்த்) தோணப்பட்டதை யெழுதி வைச்சேன்.

***1756 வருசம், சூலை மாசம், தேதி 26; தாது வருசம், ஆடி மாசம், தேதி 15; சோமவாரம்***

இத்தனாள் காலமே முசியே பெடுத்தல்மீ பெண்சாதியினுடைய பேர் பண்டிகையானபடியினாலே முசியே லொறி (?) கோவர்ணதோர் வகையிராக்களுக்கு ராத்திரியும் பகலும் விருந்(துக்கு) முசியே பெடுத்தல்மீ தோட்டத்துக்குப் போனார்கள். நான் வெளியே பிறப்பட்டுப் பூந்தோட்டக் கச்சேரிக்குப் போய் பனிரெண்டு மணி அடிச்சவுடனே வீட்டுக்கு வந்தேன்.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் : சென்னப்பட்டணத்திலே கலாபஞ் (சண்டை) சுறுக்காய் (வருகிறதினாலே) சுத்திலுங் கொத்தளம் போடுகிற நிமித்தியம், சீமைகளிலே பதினாயிரம் ஆள் முஸ்தீப் பண்ணி அனுப்பி விக்குறார்கள் யென்றும், பிராமணாளை முதற்கொண்டு ஆள்பிடிச்சு வேலை செய்விக்குறார்களென்றும், கோட்டைக்குள்ளே கும்பினீர் உத்தியோகஸ்தர்களை விடத் தேவையில்லை யென்று நிபந்தனை பண்ணினார்களென்றும், லிங்கச் செட்டி செய்யூரண்டையிலே தான் கட்டிவிக்கிற சாவடியைப்

பார்க்கவேணுமென்று பாதி வழியே வந்தவனை சென்னப்பட்டணத்து ... மனுஷர் வந்து அரை நாழிகை நிக்கத் தேவையில்லை யென்று அதி சீக்கிரமாய் அழைச்சுக்கொண்டு போனார்களென்றும், இப்படியாக தாம்தூம் சொல்லி முடியாதென்றும் சொல்லிக் கொண்டார்கள். இதல்லாமல் மமுதல்லி கான் நூறு பேர் சொலுதாதுகளுடனேயும் யிறநூறு சுவார்களுடனேயும் ரெண்டு பீரங்கியுடனேயும் பயணம் பிறப்பட்டு சென்னப்பட்டணத்துக்கு வருகுறானென்றும், சென்னப்பட்டணத்திலே யிருக்கிற வர்த்தகர் தங்களது ... திரவியங்களைப் (பத்திரம்) பண்ணுகிறதுக்குக் காட்டுப்புறமாயிருக்கிற பாளையப்பட்டுகளுக்கு (அனுப்புவிக்க) யெத்தனமா யிருக்குறார்கள் யென்றும் – யிது முதலான சேதிகளாய்க் கேழ்விப்பட்டோம்.

*1756 வருசம், சூலை மாசம், தேதி 27; தாது வருசம், ஆடி மாசம், தேதி 16; செவ்வாய்*

இத்தனாள் காத்தாலே யேழு மணிக்கி முசியே (லெறி) கோவர்ணதோர் நடுச்சாலைக்குத் தென்னண்டைக்குக் கிழக்கு மேற்கு நெடுங்சாலையிலே ஒலாத்திக் கொண்டிருக்கச்சே, அவரண்டையிலே சொலிமினியாக்கும் முசியே ஷற்பாந்தியோர் பின்னையும் ரெண்டு ஒப்பிசியால்மார்களும் இருந்தார்கள். முசியே கொற்ணேத்து பேசியிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு போனான். அப்போ நான் போய் சந்திச்சு ஆசாரம் பண்ணினேன். அவரும் குளுந்த முகமாய் ... நாலாறு தரம் ... யென்னைப் பார்த்துக் கொண்ட சாடையிலே, என் மனதிலே யிவர் நம்மைக் கண்டு பேசுகிற அபிலாஷையிலே யிருக்குறாரென்று யோசனை பண்ணிக்கொண்டிரு(ந்தேன்). அவரவர்கள் வந்து பேசினவர்களுக் கெல்லாம் சீக்கிரமாய் உத்தாரம் கொடுத்து யனுப்பச்சே யென் முகத்தைப் பார்த்துக் கொண்டேயிருப்பார். அப்பால் சீக்கிரத்துக்கு காம்பிராவிலே போய், உடுப்பைக் (மேல் கோட்டை) கழட்டிப்போட்டு, யென்னை அழைத்து விறுத்தாசலம் சீமைக் குடிகள் (தூங்களே) குத்தகை (எடுத்துக்கொள்ளக்) கேழ்க்குறார்களென்று (சொன்னார்). "அவர்கள் தான் குத்தகை (எடுத்திருக்கிறார்கள்); மேன்விசாரிப்பு (க்கு மட்டுமே) யென் மருமகன் (இருக்கிறார்)," யென்று சொன்னேன். ஆனால் "முசியே கில்லியார் யேது அப்படி எழுதினது," யென்று கேட்டார். போன வருசம் குத்தகை ஆதிவராக முதலியார் யென்று ஒருத்தன் யிருந்தான். இவ்வருஷத்துக்கு நாட்டார் குத்தகை யென்று சொன்னதின் பேரிலே, "முசியே பொலோ கொண்டு வந்த கணக்கி(ன் படியும்) அவர் சொன்ன பேச்சி(ன் படியும்) குடிகளுக்கு நிறுவாகமில்லை (குத்தகை கொடுக்க இயலாது அவர்களை நம்பினால்) என்று சொன்னார். யிப்போ சீமையின் பேரிலே யிருக்கிற நிலுவை லக்ஷத்து முப்பதினாயிரத்து சில்வாணம் ரூபாயு மெப்படி வரப்போகுது? நாராயண சாஸ்திரி ஒரு காசுக்கு ஆஸ்தியில்லாதவன்,

யென்னமாய்க் குடுக்கப் போறானென்று ஆக்ஷேபனை பண்ணினா," ரென்று சொன்னார்.

"பத்து வருஷ காலம் மராட்டியர் கொள்ளை வல்லடியினாலே யேகத்துக்கு ராச்சியம் யெல்லாம் நிப்பாத்தியமாய் போனது. ஒரு ஊரிலே யிறநூறு சமுசார (குடும்பம்) மிருந்த விடத்திலே பத்து[1] குடியில்லை. நூறு மாடு வைத்துக் கொண்டிருந்தவன் நாலு மாடு வைத்துக்கொள்ள அவகாசமில்லை. யிருபது காணிக்கு உழுதவன் ஒரு காணி உழ அவகாசமில்லாமல் நிலமெல்லாம் பாழாய்க் கிடக்குது. கலாபம் வந்ததினாலே ராச்சியத்திலே யிருந்த குடிகளெல்லாம் சிதறிப் போயும், கூலி வேலைகள் செய்தும், துப்பாக்கி எடுத்துக் கொண்டும், ராச்சியம் விட்டு ராச்சியம் போயும் யிப்படி சிதறி வெகு சனங்கள் போயிவிட்டார்கள். போன பேர்கள் போக யிருக்கிற செனங்கள் கொஞ்சமானதினாலே, ஆளில்லாதினாலே, சீமை பயிர் சாகுபடி ஆகிறதுக்கு வெகு பிரயாசை யாயிருக்கிறது. யித்தோடே கூட கொம்மாந்தாமுகள் பண்ணுகிற ரோஷ்டுகளினால் சாகுபடி(க்கு) வெகு குந்தகம் வந்தது. அமுல் பண்ணுகிறவனுக்கு அதிகாரமில்லாததினாலே ... நயம் பயம் பெலம் ஆக்கினை (எல்லாம் போய்), அபராதம் வாங்கிற சக்தி யில்லாதினாலே ... பேரிசு, குத்தகை (ஆக) ... சீமையிலே வசூலான பணம் கூட கைக்கு வந்து சேருகிறதுக்கு யிடமில்லாமல் நானாவிதமாய்க் கரைஞ்சு போனது. இப்படி யெல்லாமிருக்கிற சேதி சகலமுந் தேவரீர் சித்தத்திற்கு விசிதமாய் தெரிஞ்சுயிருந்தாலும், யிந்த சீமா மூல மறிஞ்சு யிருக்கிற பேரை நீங்கள் பரஸ்பரமாய் அழைப்பிச்சுக் கேட்டால், அவர்கள் சொல்ல, தங்களுக்கு நன்றாய் விசிதப்படும். அமுல் பண்ணுகிறவனுக்கு ஆஸ்தியில்லாத தினாலேயும் சீமா மூலத்திலே (ஆன வசூலைத்தான் அவன் கொடுக்க முடியும்). இப்படிப்பட்ட பெரிய துகைக் கெல்லாம் அவன் வீட்டிலே யிருந்து பணங் குடுக்க (முடியாது)... அப்படி (பயிர்த் தொழில்) வந்து ரெசவாதம் போலே பூமியிலே யெடுக்கிற திரவியத்தைத் தொட்டுத்தான். மழையில்லாமலும் (சதா இடையூறு) களினாலேயும் பயிர் சேதங்கள் சிறிது யிடங்களிலே வரும். அதினாலே தான் ஒருத்தருக் கொருத்தர் குத்தகை குடுக்கிறதும் சாமீன் வாக்கிக் கொள்ளுகிறதும். யிப்படி ஒரு வருஷம் ரோஷ்ட்டு (நஷ்டம் வரும் என்பதால்) தான் ரெண்டு வருஷம் நாலு வருஷம் (என) ஏகமாய்க் குத்தகை குடுக்கிறது. ஒரு வருஷம் போனால் மறு வருஷத்திலேயாகிலும் சீமை சுரூபம் பண்ணி பணமெடுக்கிற நிமித்தியம் (இப்படிச் செய்கிறது). இதுக்கு சாமீன்தாரன் முன்னுது

[1] இருபது என்று ஆங்கிலத்தில் உள்ளது. மேலும் வெள்ளையரின் அட்டூழியத்தினால் மக்கள் எவ்வளவு துயரங்களை அனுபவித்தார்கள் என்பதைப் பிள்ளை நேரடியாக அறிந்து விவரிக்கிறார்.

பின்னுது வாய் (ஒரு வருஷம் போனாலும், அடுத்த வருஷம் அதைச் சரிக்கட்டிக் கொள்ளுவான்). அதினாலே தான் நானுங் குத்தகையைக் குடுத்து அதுக்கேத்த வெள்ளைக்காரரை சாமீன் வாங்கினேன். தேவரீர் வெள்ளைக்காரர் என்ன குடுக்கப் போறாரென்று சொல்லிவிட்ட படியினாலே, வெகுவாய் லுகுசானாய்ப் (நஷ்டமாய்ப்) போச்சுது. இதல்லாஞ் சீமா மூலக் கணக்கு வருகுறதிலே உங்களுக்குத் தெரியவரும். சாமீன்தாரர் தாங்கள் உத்தாரம் செய்த பணம் குடாமல் போனது மல்லாமல், சீமா மூலத்திலே தாங்கள் கையாடினதும், தங்கள் கிட்டயிருக்கிற பேர் கையாடினது மிப்படியாக யெடுத்துக் கொண்டதுமல்லாமல், திரும்பவும் தங்களுக்குப் பணம் வரவேணும் யென்று அவர்கள் உங்களுடனே வந்து சொல்லிக் கொண்டார்கள். அதுக்கு நானுங் கணக்கெழுதி உங்கள் கையிலே கொண்டு வந்து குடுத்தேன். அப்படி யிருந்தும் நீங்கள் அவர்கள் சொல்லுகிற பேச்சை நிலவரமா யெண்ணி யென்னைப் பணம் குடுக்கச் சொன்னீர்கள். அந்தப்படிக்கி என் கிட்ட அவர்கள் பணம் வாங்கிவிட்டார்கள். (இப்படி) சீமையிலே வசூலான பணம் கும்பினீருக்குச் செல்லாமல் நானாவிதமாய்ச் சிதறிப் போச்சுது. இந்த வெள்ளைக்காரர் சாமீனிலே குத்தகை பண்ணின அமுல்தா(ர்களை நான்) பணங் கேழ்க்கப்போனால், (அமுல்தாரருக்கு உடந்தையாக வெள்ளைக்காரர்) உங்களிடம் வந்து (பிராது) சொல்லி (கொள்கிறார்கள்). இப்படி எல்லாப் பணமும் அவர்களே வைச்சக் கொண்டிருக்கிறார்கள். யிந்தப் படிக்கி நாலு விதத்திலேயும் பணஞ் சிதறிக் கிடந்தால், அதுக்கு நான் செய்யலாவ தென்ன?" வென்று (கேட்டேன்).

அதுக்குத் துரையவர்கள், "லுக்குசானாப் போன பணம் திரும்ப யெப்படி வரு" மென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது : "மூன்றாம் வருஷக் குத்தகைக்குப் போன வருஷக் குத்தகை அரைவாசி அதனம். போன வருஷத்துக்கு இந்த வருஷம் பின்னையும் அதனம். இப்படியாக வருஷா வருஷம் அதன மென்னத்துக்கு ஆக வந்துது (என்றால்), வருஷா வருஷம் பூமியிலே யதிகமாய் பயிர் கொண்டு பணம் யெடுக்கலா மென்கிறதைக் குறிச்சு தான் குத்தகையி லெழுதி குடுத்தது. யிப்படித்தான் ராச்சியமெல்லாம் நடக்கிறது. யிது மூணு வருஷம் பாப்பய்யப் பிள்ளை, ரங்கப்ப முதலியார் அமூலாயிருந்த பூமி, போன வருசம் மார்கழி மாசம் யென் வசமாச்சுது. அதுக்கு மூணாம் மாசம் பயிர் யேறினதும் போன வருஷம் அதிகப் பயிர் யேறினதும், (உமக்குத் தெரியும்). இந்த வருஷம் சீனயோர்கள் போனதும், கால மழை பேஞ்சுதும் பயிரேறாமல் தாஷ்சியாகிக் கிடக்கிறதும் நீங்கள் விசாரிச்சால் நன்றாய் தெரியவரும்," என்று சொன்னேன்.

அதுக்கு கொமாந்தாமுகள் யித்தனை பணம் வாங்கினார்களா வென்று கேட்டார். அதுக்கு நான், முன்னேதானே யிந்த கொம்மாந்தாமுகள் பண்ணுகிற ரோஷ்ட்டுகள், பணங்களை அமுல்தாரனை உபத்திரவம் பண்ணி வாங்கியது, அதினாலே பயிர் தாழ்வு வருகுறது, குடிகளெல்லா மலைஞ்சு போறது (இதுகளை) நானடிக்கடி யெழுதயில்லையா? தேவரீர் அவர்களும் அவர்களுக்குத் தாக்கீதெழுதி அனுப்பவில்லையா? யெத்தனை நீங்களெ ழுதினாலும் அவர்கள் கலிலாகத் தானே காரியங்களையும் கெடுத்து, பணங்களையுஞ் சுத்திக்கொண்டு யிப்படி நானாவிதமாய்ப் பண்ணிப்போட்டார்கள்," என்று சொன்(னேன்). (அப்படியானால்) நாம் வாங்கின நசர் சம்மதியைக் குடுத்து விடுகுறோமென்று (துரை) சொன்னார்கள். அதுக்கு நான் சொன்னது, "நீரேன் குடுக்கிறீர்? சீமா மூலத்திலே கிராமச் செலவு யென்றும், நாட்டுச் சிலவென்றும், சாதல்வாரென்றும், யிந்த பூமி தோணின நாள் முதல் கொண்டு நடக்குது. யின்றைக்குத் தானா புதுசாய் நடக்குது? அந்த யோசனை யென்னத்துக்கு? சீர்மையிலே கூத்தாடிப் பிச்சை போக்கு வரத்தாயிருக்கிற பேர்கள் (பயணிகள்) இதுகளெல்லாம் சீமையிலே வசூலாகிற பணங்களிலே... சிலவு பண்ணி, சிலவான பணத்தை திரும்பவுஞ் சீமையிலே தபரிக்குப் போட்டு, அறுவாகிறது. அப்படியிது பூமி தோணின நாளாய் நடக்கிற காரியம். இதுகளைத் தொட்டு நீங்கள் யோசனை பண்ணவேண்டிய தென்ன யிருக்குது?" என்று சொன்(னேன்).

சீமையிலே வசூலான பணத்(துக்கும்) நீர் கும்பினீருக்குச் செலுத்தினது(க்கும்) வெகு வித்தியாசமென்று சொல்லுகிறார்களென்று சொன்னார். அதுக்கு "அப்படி வித்தியாசமாய்ச் செலுத்தியிராது. சீமையிலே யிருந்து வந்த பணத்துக்கும், யிவ்விடத்திலே சிப்பந்தி முதலாகிய சிலவுக்கும் கும்பினீருக்குச் சென்றது போக அன்பதினாயிரம் அறுவதினாயிரம் அல்லது லக்ஷம் ரூபா யேறக் குறைய யிருந்தாலிருக்கும். விசேஷிச்சு யிருக்கமாட்டாது. இது பொய் மெய் யென்கிறது யின்னம் பத்து நாளையிலே உங்களுக்குத் தெரியும்," என்று சொன்னேன்.

அதின் பேரிலே வயிரச் சம்மதி யொன்று இருக்கு தல்லவா யென்று சொன்னார். அதுக்கு நான், "அன்றைக்குத் தானே கையிலே கொண்டு வந்து குடுக்க வந்தால், நீர் யிருக்கட்டும் யென்று வாங்கிக் கொள்ளாமல் கொடுத்துவிட்டு, அதன் பேரிலே தானல்லோ உங்களுக்கு ரொம்ப கோபம் பிறந்துது. அது யென் பேரிலே குத்தமென்ன?" வென்று சொன்னேன். அதன் பேரிலே சத்து நேரம் வெறுமனே நின்று காம்பிராவிலே போனார். நான் வெளியே வந்திருந்தேன். அப்போது குண்டூர் வெங்கிடாசலச் செட்டி விழுந்து போனதுக்கு, அவன் சிறிய தகப்பன் செஞ்சு செட்டியும் மேல்ப்படி வகையிரா தம்பிமாரும் வந்தார்கள். அவர்கள் வந்தவுடனே தொரையண்டைக்குப் போய் அவர்களுக்கு வெகுமதி பண்ணி ஆதரவு

சொல்லி அனுப்பவேணுமென்று (சொன்னேன்). யென்ன குடுக்கவேணு மென்று கேட்டதுக்கு ஒரு சிப்பம் சகலாத்து குடுக்கலாமென்று சொன்னேன். சீட்டெழுதிக் கொண்டு வரச்சொல்லி யதிலே கையெழுத்துப் போட்டுக் குடுத்து, சகலாத்தும் பாக்கு வெத்திலை பன்னீரும் அழைப்பிச்சு வைச்சுக் கொண்டு, அவர்கள் மனது மூணு பீரங்கியாகிலும் அஞ்சு பீரங்கியாகிலும் போட வேணுமாம் யென்கிறதாயிருக்கிற தென்று சொன்னேன். அது உனக்கு மாத்திரமே அல்லாமல், பின்னை யாருக்கும் போடத்தக்கதில்லை யென்று சொல்லி, முன் நடந்ததுண்டோ வென்று கேட்டார். அதுக்கு நான் கும்பினீருக்குக் குடுத்தியோர்களுக்கே அல்லாமல் மத்தப் பேருக்கு ஆருக்குமில்லை யென்று சொன்னேன். அப்படி யிருக்க நீ யென்னத்துக்கு சொன்னது யென்று கேட்டார். அவர்கள் மனோபாவத்தைச் சொன்னே னென்று சொன்னேன். யேன் யிப்படிக் கேட்டோ மென்றால், முசியே பொலோ சொல்லி யனுப்பினதினாலேயும் நமக்கு யவர்களிடத்திலிருக்கிற பிரீதியினாலேயும் சொன்னோம்.

யிப்படி யிருக்கையிலே முசியே பொலோ மெத்த சந்தோஷத்துடனே வந்து, தொரையும் அவரும் காம்பிராவிலே போய் பதினொன்றே முக்கால் மணி மட்டுக்கும் பேசி யிருந்து உச்சாகந் தப்பி வெளியே பிறப்பட்டு வீட்டே போனார்.

அதன்பிறகு குண்டூர் வெங்கிடாசலச் செட்டி சித்தப்பன் செஞ்சு செட்டி மேல்ப்படி தம்பிமார் ரங்கப்ப செட்டி, ராமாஞ்சுலு செட்டி, நரசிங்க செட்டி யிவர்களும் கும்பினீர் வர்த்தகரும் யிருந்தவர்களை அழைச்சுக்கொண்டு துரையண்டைக்குப் போய்ப் பன்னீர் பாக்கு வெத்திலை சகலாத்துச் சிப்பம் குடுப்பிச்சோம். அதின் பிறகு துரை யிவர்க ளெல்லாம் அவன் பமீலாயா யென்று கேட்டார். அதுக்கு யின்னம் பத்து பேர் வீட்டிலே யிருக்கிறார்களென்று சொன்னோம். அதுக்கு அவன் நல்லவன், யிவர்களு மப்படித்தான் நடந்து கொண்டால் நம்மாலே ஆன சகாயம் நாம் பண்ணுகிறோ மென்று சொல்லி ... அவர்களை அனுப்(பினார்).

பிறகு காளவாய்க் குமரப் பிள்ளையும் யெல்லப் பிள்ளையும் கந்தப்ப முதலியும் வந்து பாப்புராயர் கொடிக்கால் போடுகிறதுக்கென்று கண்ட(வர்) நிலங்களை யெல்லாம் வெட்டிப்போடுகி(றார்) யென்று வந்து சொல்லிக் கொண்டார்கள். அதுக்கு யென்னை அழைச்சு அதை நீர் விசாரிச்சு, சச்சரவில்லாமல் தீத்துப் போடுமென்று சொல்லி, (மேலும்) வெள்ளவாரியை அடைக்கவேணுமாம், அதையும் நீர் போய் பார்த்து அதுக்கெப்படியுண்டோ அந்தப்படிக்கித் திட்டம் பண்ணுமென்றும், காடெல்லாம் வெட்டிப் போடுகிறார்களாம், வெட்டாமல் படிக்கித் திட்டம் பண்ணச் சொல்லியுஞ் சொல்லிப்போட்டு அனுப்பிவிச்சார்.

அதின்பேரிலே நாமும் வெளியே வந்தோம். அப்போ குண்டூர் செஞ்சி செட்டியும் கும்பினீர் வர்த்தகரும் வெங்கிடாசல செட்டி வீடு மட்டுக்கும் வரவேணுமென்று அழைத்தார்கள். நல்லது யென்று அவர்கள் வீட்டுக்குப்போய் ஒரு சாலுவை வாங்கி, அவர்களுக்கு வெகுமானங் கொடுத்து வீட்டுக்கு வந்தோம்.

சாயங்காலம் முசியே பொலோ அவர்கள் திண்டிவனம் கணக்குப் பார்க்கிற நிமித்தியம் திண்டிவனத்துக்குப் போனார். இது சேதி முன் காலமே (காலையில் பேசப்பட்டபோது) துரையவர்கள் சொன்னது சீமா மூலக் கணக்கு விசாரிக்க மூணு சீனயோர்கள் போயிருக்கிறார்களே. அவர்கள் கணக்குப் பார்த்துக்கொண்டு வந்தவுடனே ஒரு வோற்சாய் (இதை அப்பால்) தீத்துப் போடுவோமென்று சொல்லிப் போட்டு காம்பிராவுக்குள்ளே போனார்.

*1756 வருசம், சூலை மாசம், தேதி 29; தாது வருசம், ஆடி மாசம், தேதி 18; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே எட்டு மணிக்கு கோட்டைக்கு போனவிடத்திலே துரையவர்கள் கீழண்ட நெடுஞ்சாலையிலே முசியே தொத்தேல் வகையிரா ஒபிசியால்மார்களும் முசியே லெனுவார் கோன்சேலியேரும் யிருந்தார்கள். முசியே தொத்தேல் பேசி அனுப்பி விச்சுக்கொண்டு போனபிற்பாடு, முசியே லெனுவாரும் முசியே சோலிமினியாக்கும் கூட நிற்க, ஒரு கணக்கும் ரெண்டு கடுதாசியும் காண்பிச்சார். அப்பால் முசியே மொற்சேத்து ஒரு சின்ன துணுக்குக் காகித மொன்றும் காண்பிச்சான். அதைப் பார்த்துக் கொடுத்துவிட்டு, முசியே லெனுவா(ரோடு) அந்தக் கணக்கையும் கூட (எடுத்துக்) கொண்டு காம்பிராவிலே போனார். ஒன்பது மணி மட்டுக்கும் யிருந்து பூந்தோட்டக் கச்சேரியே வரச்சே, முசியே லெறி கோவர்ணதோர் காசா வேலைக்காரன் கந்தப்பன் என்கிறவன் சொன்னது: வினாயகப் பிள்ளை துணிசவரை (பணிசவரை—ஒரு சாதியினர்) அடிச்சு, சின்ன துரையுடனே சொல்லிக் காவல் பண்ணிவிச்சானென்றும், இது நிமித்தியம் வெள்ளாழரெல்லாம் கூடி ஒரு பித்திசாமெழுதி துரை கையிலே கொண்டு வந்து கொடுத்ததுக்கு அவரெல்லாம் விசாரிப்போமென்று தாமசமாய்ச் சொல்லி, சின்ன துரை நியாயமாய் விசாரிப்பாரென்று சொல்லி அனுப்பிவிட்டார். துரை மனதிலே சின்ன துரை நியாயத்திற்கு அதிகாரியானபடியினாலே அவர் செய்ததுக்கு இவர் ஒன்றுஞ் செய்யமாட்டோ மென்று சொல்லி யெல்லாத்துக்கும், நாங்கள் வந்து உங்களுடனே தனிச்சுக் கண்டு பேசிக் கொள்ளுகிறோமென்று (துரை சொன்னதாகக் கந்தப்பன்) சொன்னான். நல்லதென்று சொல்லிப்போட்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

## ஆகஸ்ட், 1756

*1756 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 3; தாது வருசம், ஆடி மாசம், தேதி 23; செவ்வாய்*

இத்தனாள் காலமே யெட்டுமணிக்கு கோட்டைக்குப் போய் முசியே லொறி (?) கோவர்ணதோர் அவர்களைக் கண்டு சந்திச்சேன். அப்போ முசியே தொத்தேல், முசியே லெனுவார் வகையிரா ஒபிசியாலுமார்கள் பேசியிருந்தார்கள். மறுபடியும் நான் ஆசாரம் பண்ணினேன். அவர் முகங்குளிர்ந்து தலையை வளைத்து ஆசாரம் பண்ணினார். அப்போ கிட்டயிருக்கிற குருவப்பச் செட்டி சொன்னது, துரை முகம் குளுந்து தலையை வளைத்து ஆசாரம் பண்ணின சாடையைப் பார்த்தால் அவருடைய சுயகாரியம் உம்முடனே பேசத் தக்கதாகத் தோணுது என்றான். எனக்கும் அப்படிதான் தோணுதென்று சொல்லுகிறதுக்குள்ளே நாலு தரம் ஆறு தரம் கீழ் கண்ணுலே பாத்துக் கொண்டிருந்தார். அதின் பேரிலே யென்னைக் கிட்ட அழைச்சு, ஆற்காட்டுச் சேதிகள் யேதாகிலும் உண்டாவென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "ஆற்காட்டிலே யிருக்கிற வெள்ளைக்காரரிலே பாதிப் பேர் வெள்ளைக்காரரும், யிருபது யிருபத்திரெண்டு பீரங்கியும் சென்னபட்டணத்துக்குக் கொண்டு போனார்களென்றும், சென்னப்பட்டணத்துக்கு (சலா) பத்து சங்கு அண்டையிலே யிருந்து காகிதத்தைக் கொண்டு (வந்த) கயற்தீன் கான் (கயிருதீன் கான்)[1] சென்னப்பட்டணம் கோவர்ணதோர் மேஸ்தர் பிக்கட்டு அண்டைக்குப் போ(னான்); சீமை கலக (போர்) சமாசாரத்தை அறிஞ்சு கொண்டு பதில் சமாச்சாரம் சொல்லுகிறோமென்று கயிறதின் (?) (கானை நிறுத்தி) வைச்சுக் கொண்டதாய்ச் சொல்லிக்கொள்ளுகுறார்கள்," யென்று சொன்னதுக்கு, "மெய்தான், நாமுங் கேழ்விப்பட்டிருக்கிறோம். ஆனாலிது பதினெஞ்சு நாளைக்கு முன்னே நடந்த சேதி," யென்று சொன்னார். அதின் பேரிலே, "யிந்தக் காரியம் நிமித்தியந்தான் ஆற்காட்டுக்குஞ் சென்னப்பட்டணத்துக்குஞ் சவாபுசால் நடந்து கொண்டிருக்குது. இதிலே ஒன்று தீந்தாலல்லோ வேறே ஒன்று (எடுத்துக் கொள்ளப்படும்)" யென்று சொன்னார்.

அப்பால் தொண்ணூறு சில்லரை மஞ்சடி (மஞ்சாடி) ஒரு ரவையும் (வயிரம்) எழுபதே சில்லரை மஞ்சடி ஒரு ரவையும், யிரெண்டு ரவையு மெப்படியாவது விலை தீத்து வாங்கிப் போடவேணுமென்று சொன்னதுக்கு, "நான் யெழுபதே சில்லரை மஞ்சடி ரவையைக் கையிலே கொண்டு

[1] இவன் முகமதலி கானின் மைத்துனன்.

வந்துக் குடுத்ததுக்கு நம்பிக்கைப்பட்டு வாங்க மாட்டமென்று சொன்னீர்கள். அதின் பேரிலே அங்கே யிருந்து உடமை கொண்டு வந்த வர்த்தகர் அஞ்சு மாதம் காத்துக் கொண்டிருந்து ரொம் பேசாராய் (ஆனார்கள்). உடமை கொண்டு வந்த சேவுகர் மாத்திரம் போய் விட்டார்கள். வர்த்தகரை நிறுத்திவைச்சுக் கொண்டு யிருக்கிறேன். அவர்களு மிங்கேதானே யிருக்கிறார்கள். இனிமேல் அவர்களைக் கண்டு பேசி சேதி சொல்லுகிறே," னென்று சொன்னேன். அதன் பேரிலே அவர் "ஆறு சீட்டி, கறுப்புப் பூ போட்டது வேணும். அது யெங்கேயாவது விசாரிச்சு வாங்கச் சொல். அகப்படாவிட்டால் அந்த மாதிரியாகிலும் ஒன்று உண்டாக்கச்" சொல்லிக் கடுதாசியிலே தம்முடைய கையெழுத்தாய் யெழுதிக் கையெழுத்தும் போட்டுக் கொடுத்தார். நல்லதென்று வாங்கிக்கொண்டேன். இதிலே கோன்சேல் கூடுகிறதுக்கு முசியே பெடுத்தல்மீ மத்தும் உண்டான கோன்சேல்க்காரர் வந்திருக்கிறார்க ளென்று கபுறு சொன்னபடியினாலே, யெழுந்திருந்து கோன்சேல் வீட்டுக்குப் போனார். அப்போ அங்கே யிருக்கிற வெள்ளைக்காரர் இப்போ கோன்சேல் கூடக் காரியமென்ன? ஆனாலுஞ் சீர்மை யிலிருந்து கப்பல் ஆகோஸ்து மாசம் பிறந்தும் வராதபடியினாலே இராசகாரியம் (அரசியல்) நிமித்தியம் கோன்சேல் கூடவேணுமே யல்லாமல் வேறே ஒருகாரியமும் யில்லை (வியாபாரக் காரியத்துக்காக அல்ல) யென்று சொல்லிக் கொண்டார்கள். நான் பிறப்பட்டுப் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன். அப்பால் பதினோரு மணிவரைக்குங் கோன்சேல் கூடியிருந்து கலைஞ்சு போனார்கள். காரியம் யின்னதென்று தெரியாது. அது அறிஞ்செழுத வேண்டியது.

*1756 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 4; தாது வருசம், ஆடி மாசம், தேதி 24; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்கு வெளியே பெரிய வரிசை வைத்து துரை வகையிராக்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்போ நான் போய்க் கண்டு ஆசாரம் பண்ணினேன். அப்பால் பெரிய வரிசை கலைஞ்சு போன பிறகு, ஒப்பிசியால்மார் வகையிராக்களுடனே கோட்டைக்குள்ளே மேல்வீட்டின் பேரிலே போகச்சே நானுங் கூடத்தானே போனேன்.

அப்போ திருவிதியிலிரு(க்கிற) சிராசந்து (சார்ஜெண்ட்) முசியே தொத்தேல் பேருக்கு ஒரு காகிதமெழுதி அனுப்பினதிலே, திருவண்ணை நெல்லூரிலே யிருந்து அன்பது துப்பாக்கிக்காரர் பிறப்பட்டு

சோழவல்லியிலே[1] யிருக்கிற தானியம் தகயத்தக்கதாய்ப் (கைப்பற்றுப்) போனவர்களை மறிச்சு வைத்தேன் என்றெழுதினான்.

அதை முசியே தொத்தேல் துரைக்குங் காண்பித்தான். துரை யென்னை அழைத்து, இது யேதென்று கேட்டார். மெய்தான் சோழவல்லியிலே யிருக்கிற குடிகள் தானியத்தை விடாமல் பெலவந்தம் பண்ணினார்கள். ஆனபடியினாலே அந்த தானியத்தைப் பிடிப்பித்து புதுச்சேரிக்கு அனுப்புகிற நிமித்தியம் அன்பது துப்பாக்கிக்காரரை அனுப்பிவிச்சேனென்று சொன்னதுமல்லாமல், அவர்கள் இவ்விடத்திலே யிருந்து போனவர்களல்ல, பரஸ்பரமாய்ப் (என் மார்க்கமாய்ப்) போனவர்களென்று சொன்னதுக்கு, துரை "யிப்போ அங்கங்கே துப்பாக்கிகளைக் கண்டால் மறிக்கச் சொல்லி உத்தாரங் கொடுத்துயிருக்கிறோம். ஆனபடியினாலே மறிச்சார்கள். இனிமேல் அனுப்ப வேணுமானால் நம்முடைய கையிலே தஸக்கு (துஸ்தக்) வாங்கிக் கொண்டு அனுப்பு," யென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். இதிலே முசியே தொத்தேல் அன்பது பேரையும் விட்டுவிடச் சொல்லி எழுதித் தருகுறோம் யென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன்.

அதின் பிறகு துரை திருவதியிலே யிருக்கிற சொலுதாதுகள் மீன் பிடிச்சுக் கொண்டால் அவ்விடத்திலே யிருக்கிற அமுல்தாரர் அதைத் தடை பண்ணினானாம் யென்று கேட்டார். அதுக்கு நான், "அது வந்து வித்து முதலாய்ப் பணம் சர்க்காருக்குச் செல்லுகுறது, குத்தகையோடே சேர்ந்தல்ல. கிரையம் குடுத்தால் குடுப்பார்க," ளென்று சொன்னேன். "நல்லது கிரையம் குடுக்கச் சொல்லி வைக்குறோம். சொலுதாதுகளுக்குத் தேவையான மீனும் கருவாடுங் குடுக்கச் சொல்லி எழுதியனுப்," பென்று சொன்னார். நல்ல தென்று சொன்னேன். அப்பால் முசியே ஷெவிரோவை அழைச்சு கிரையங் குடுத்து வாங்கிக் கொள்ளச் சொல்லி திருவீதி திருசந்துக் (சார்ஜென்ட்)[2] கெழுதி யனுப்பச் சொன்னார். நல்லதென்று சொன்னேன். அந்தப்படிக்கி யெழுதியனுப்பி விட்டார்கள்.

அதின்பிறகு, முசியே ஷெவிரோயிருந்து துரையுடனே உசேன் மாவுத்தன் ஆனை வர்த்தகர் சம்மதி பத்தொன்பதினாயிரம் ரூபா சனத்தின் (துவறு, அசனுதீன்) கான் மகன் கொடுக்க வேண்டுமென்று, அங்கப் பிள்ளையையும் அவனையுங் காவல் பண்ணி வைச்சிரு(க்குதே), அந்தச் சம்மதி முசியே தெவோ முன்பாகத் தீந்து, அந்த பத்தொன்பதினாயிரம் ரூபாயையும் அங்குப் (அங்கப்) பிள்ளையையும்

---

[1] சோழுவெள்ளி – Soluvelli என்று ஆங்கிலத்திலிருப்பது சரியன்று.

[2] முன்பும் இங்கும் எப்படி வேறுபாடாய் எழுதியுள்ளார் என்பதைப் பார்க்க. அதேபோல் கீழே அசனுதின், அசனதின் என்று இருவகையாக உள்ளது.

அசனுதீன் கான் மகனையும் கொடுக்கச் சொல்லித் தீத்தப்படி, அசனதீன் கான் மகன் பதினய்யாயிரம் ரூபாய் குடுத்து விட்டான். அங்கப் பிள்ளை குடுக்க வேண்டிய நாலாயிரம் ரூபாய்க்கும் வர்த்தகரைப் பிணைச்சு சொல்லிவிக்குறோம் யென்று சொல்லுகிறார். காவல் விட்டு விடத் தேவையில்லை?" வென்று கேட்டார். அதுக்கு, துரை யென்னைப் பார்த்து வர்த்தகர் (கொடுக்க) நாள் செல்லும். நீ பதினஞ்சு நாளையிலே தருகுறோம் யென்று செல்லிக் கொண்டாயானால், யிப்போ தானே விட்டு விடுகுறோம்," என்றார். நல்லதென்று சொல்லியானவுடனே, உசேன் மாவுத்தனை அழைத்து அந்தப்படிக்கு சம்மதியாவென்று கேட்டார். அதுக்கு உசேன் மாவுத்தன், "பத்தொன்பதினாயிரம் ரூபாய் வர வேண்டியது ஆச்சுதே, யெப்படி?" யென்று சொன்னான். அதுக்குத் துரை, "முழுகிப் போன பணம் வந்தால் முதலுக்கு முதலாய் வாங்கிக் கொண்டால் ஆகாதா? யிப்போ கலாபிச்ச வேளை. வந்ததை வரப் பத்து," யென்று சொன்னார். அதுக்கு உசேன் மாவுத்தன் சத்து கசக்கினான். அப்பால் நானவனுக்கு, இந்த வேளை தப்பினால் பணம் வரமாட்டாதென்று தெரியப்படச் சொன்னதின் பேரிலே, சம்மதம் தானென்று துரையுடனே சொன்னான். அதுக்கு துரை, "உனக்கு நாலாயிரம் ரூபாயும் பதினஞ்சு நாளையிலே ரங்கப்பன் சம்மதி பண்ணுவான் யென்று சொல்லி, அங்கப் பிள்ளையைக் காவல் விட்டு விடச்சொல்லி, கப்பித்தான் காடுதுவை அழைச்சு உத்தாரங் குடுத்தார். அந்தப்படி விட்டு விட்டார்கள்.

அப்பால் உசேன் மாவுத்தன் துரையுடனே, "இது யென்ன கொஞ்சப் பத்ததி! பாப்பய்யப் பிள்ளை பேரிலே யிருபத்தையாயிரம் வராகன் வரவேணு," மென்று சொன்னான். அதொரு பெரிய பத்ததியிருக்குதா யென்று சொன்னார். அதுக்கு அவன், "உங்களுக்குப் பத்து தரம் பித்திசா மெழுதிக் கொடுத்தேன். சீட்டையுங் காண்பித்தேன். நீங்கள் அறியாது போலே கேழ்க்கிறீர்கள்," என்று சொன்னான். ஆனால் நானவன் சொன்ன படிக்கிச் சொல்லாமல், பாப்பய்யப் பிள்ளை பேரிலே வரவேண்டியது பெரிய பத்ததி யானபடியினாலே அதைத் தயவு பண்ணி வாங்கித் தரவேணுமென்று சொல்லுகிறா," னென்று சொன்னேன். அப்பால் அந்த நாலாயிரம் ரூபாயும் பதினஞ்சு நாளையிலே தருகுறோமென்று உசேன் மாவுத்தனுக்குச் சொல்லி அனுப்பிப் போட்டு யிருக்கச்சே, முசே ஷெவிரோ நாம் சொல்லிக் கொண்ட நாலாயிரம் ரூபாய்க்கும் ஒரு காகிதம் பிரான்சிலே யெழுதிக் கொண்டு வந்து கையெழுத்துக் கேட்டான். அந்தப்படிக்கிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்து, அதுக்கு நக்கலுமெழுதி வாங்கிக் கொண்டேன்.[1] ஆனால் நாம் யோசனை பண்ணினது, வந்தவாசி திருவேங்கிடப் பிள்ளை மருமகன் சின்னயப்

[1] பிள்ளை ரொம்பவும் முன்னெச்சரிக்கைக்காரர்.

பிள்ளை இந்தப் பணம் தருகுறோம் யென்று தஸ்தாவீசு குடுத்தபடியினாலே, அதைக் கட்டிக் கொண்டு, நாமொப்புக் கொண்டதேயல்லாமல் சும்மா வொப்புக்கொள்ளயில்லை. அப்பால் துரை உள்ளே போனார்.

நான் பிடவை பார்க்கிற சாலையிலே யிருக்கச்சே, ராமச்சந்திரராயனும் வந்திருந்தான். அப்போ சீமையிலே யிருந்து ஒரு சின்ன சுலுப்பு பீரங்கியும் போடாமல் வந்தது. அதிலே துரைக்கு மாத்திரம் ஒரு காகிதம் வந்ததென்று அந்தக் காகிதத்தையுங் கொண்டு சேவுகன் வந்து என்னுடனே யுங் கபுறு சொன்(னான்). கட்டு மரக்காரன் அந்த சுலுப்புக்காரரை நீங்களெங்கே யிருந்து வந்தீர்கள் யென்று கேட்டதுக்கு, கேட்டால் குத்திப் போடுவோமென்று சொல்லிப் போட்டு, பேசாமல் காகித மாத்திரம் துரை கையிலே கொண்டு போய்க் கொடுங்கோளென்று சொன்னானென்று சொல்லிப் போட்(டான்). (இப்படி) வந்த (படியினாலே) சிர்மையிலே (கலாபம்) சுத்திக் கொண்ட சாடையாய்க் கண்டுது. இனிமேல் விசாரித்து எழுதவேண்டியது.

### *1756 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 8; தாது வருசம், ஆடி மாசம், தேதி 28; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்கு யேழரை மணிக்கு முசியே லெறி கோவர்ணதோரவர்களண்டைக்கு கோவர்ணமா மேலே போனவிடத்திலே முசியே தொத்தேல் வகையிரா ஒப்பிசியால்மார் களெல்லாரும் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போ நானாசாரம் பண்ணினவுடனே, அவ ரென் கிட்ட வந்தார். அப்போ ஆற்காட்டிலே யிருந்து வந்த சேதி யென்ன வென்றால், சென்னப்பட்டணத்துக்குப் போயிருந்த மமுதல்லி கான் மச்சினன் கைறத்தினக் (Khairuddin) கான் யென்கிறவன் (கூடே) நூறு சொலுதாதுகளும் நூறு சிப்பாயிகளும் மூணு ஒப்பிசியாலுமார்களும் பல்லக்கின் பேரிலே பிறப்பட்டு ஆற்காடுக்கு வந்து சேர்ந்தார்கள் யென்றும், அவர் முன்னே எது காரியத்துக்குப் போனார்களோ அந்தக் காரியத்துக்கு என்னமாய் தீத்துக்கொண்டு வந்தார்களோ அது தெரியாது. அது யினி மேல் விசிதப் படுமென்றும் எழுதி வந்தது யென்றும் சொன்னேன். அப்பால் சென்னப்பட்டணத்திலே நாலுக் கப்பல் முஸ்தீதுப் பண்ணி கப்பலுக்கு நூத்தன்பது சொலுதாதுகளை யேத்தி, கப்பலுக்குக் கப்பல் ஒரு பீரங்கி வேட்டு தூரத்துக்கு நிறுத்தி நாலு கப்பலுக்கும் மருந்து குண்டு வகையிரா சாமான்களும் யேத்தி யிருக்கிறார்களென்றும், ரஸ்த்து வகையிரா தண்ணீர் உள்பட உள்கோட்டையிலே சே(ர்க்)கிறார்களென்றும், சொலுதாதுகளுங் கூட ராத்திரியும் பகலும் கூலி வேலை செய்கிறார்களென்றும், இந்தக் காபிராவினாலே வர்த்தகர் எல்லாரும்

அடக்கமாக (பத்திரமான இடங்களிலே) வஸ்துக்களை வைக்கிற எத்தினத்திலே யிருக்கிறார்களென்றும், சிறிது பேர் ஆசராயிருக்கிற விடத்திலே அனுப்பிவிச்சார்களென்றும், நானூறு பேர் சிப்பாயிகளும் அன்பது சொலுதாதுகளும் ஒரு ஒப்பிசியாலும் வடக்கே போறார்கள் யென்றும், அவர்கள் போறயிடம் யின்ன யிடமென்று தெரியாதென்றும், யிந்தப்படி சென்னபட்டணத்திலே யிருந்து வந்தவர்கள் சொன்னார்களென்று சொன்(னேன்). கப்பல் (கள் எத்தனை) ஒரு பீரங்கி வேட்டு தூரமாய் நிறுத்தியிருக்குதென்று (கேட்டார்). ஆம், நாலு கப்பலும் அந்தப்படி தானிறுத்தி யிருக்குதென்று சொன்னேன். அவரும் கத்திக் கட்டிக்கொண்டு கோயிலுக்குப் பூசைக் கேழ்க்கப் போனார். நான் பிறப்பட்டுப் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

***1756 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 11; தாது வருசம், ஆடி மாசம், தேதி 31; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே எழுரை மணிக்கிக் கோட்டைக்கிப் போனவிடத்திலே முசியே கில்லியாரிருந்து கொண்டு, "நான் சீரங்கத்திலிருந்து வந்த பிற்பாடு நீர் வந்து விசாரியாமற் போனீர்," என்று சொன்னார். "நாலு தரம் வந்தேன். ரெண்டு தரம் உம்முடைய துபாசியுஞ் சட்டைக்காரனு மிருந்து கொண்டு நீங்கள் அலுவலிலே யிருக்கிறீர்களென்று சொன்னார்கள். மத்த இரண்டு தரம் நீர் வீட்டிலேயில்லை யென்று சொன்னார்கள், என்று சொன்னதுக்கு, "ஒருத்தரும் (இதைச்) சொன்னதில்லை," யென்று வேலைக்காரர்களை நொந்து கொண்டு, யென்னைப் பார்த்து, நீர் மனம் பொறுத்துக் கொள்ளுமென்று சொல்லி, அப்பால் "சீரங்கத்திலே நடந்திருக்கிற அநியாயங்களுக்கு நாலு மாசம் செல்லும் விசாரித்துத் தீந்து வருகிறதுக்கு. இப்போ யிருக்கிறபடிக்கி யிருந்தாலும் இரண்டு மாசத்தைக்குப் பிற்பாடு சீர்மையும் கோயிலும் போய்விடும் என்று எண்ணிக் கொள்ளும்... ஆனால் முசியே லெறி கோவர்ணதோர்த் தனத்திலேக் கொம்மாந்தாமுகளும் வெள்ளைக்காரர்களுக்கும் பயமில்லாமல் அனியாயம் பண்ணுகிறதால் பட்டணமும் சீர்மையும் பெகு தாழ்ந்து போச்சுது," என்று யிப்படி பல பேச்சாய்ச் சொல்லிப் பேசியிருந்தார். அதுக்கு நான், "துரைத்தனம் பண்ணுகிறவர் பேரிலே வெறுக்க வேண்டியதில்லை. காலம் யிளப்ப மென்றும், அதினாலே இத்தனாள் இத்தனை தாழ்த்திக் கொடுத்துது. நாளையிலே ஆவணி மாசம் முதலாக நாளுக்கு நாள் அனுகூலமாய் வரும். துரைத்தனம் பண்ணுகிறவர்களுக்குங் கீர்த்தியும் வரும் கெட்டிக் காரனாகவும் ஆக்கும். முசியே புசிக்கும் சலாபத்து சங்குக்கும் நடந்த சம்மதிகளை விசாரியும். இங்கிரேசுக்காரர் (தும் ராசாவை நடத்திய விதத்தைப்) பாரும். பங்காளம்

முதலாக பொம்பாயிலே கூட நடந்திருக்கிற காரியத்தைப் பாரும். (ஆங்கிலேயர்கள்) மெத்த யிளப்பமா யிறங்கி வருகிறார்களோ யில்லையோ?" வென்று (நான் கேட்டேன்.) "யேழட்டு மாசத்துக்கு முன்னே தானே சித்திரை முதற்கொண்டு தொப்பிப் போட்டவர்களுக்கு எளப்பம் காணுமென்று நீர் சொன்னபடிக்கி, தரங்கம்பாடி யாருக்குக் கூட வெகு சேதம் வந்து, அப்பால் தஞ்சாவூரார்களுக்கும் அவர்களுக்குங் சண்டை சமாதானமாச்சுது. புடுதிக்காலிலே (போர்த்துக்கலிலே) லிசுபேன் (லிஸ்பன்) யென்கிற பட்டணம் பூகம்பம் கண்டு முழுகிப் போய், தொப்பிக்காரர்களுக்கெல்லாம் நஷ்ட்ட முண்டு. நீர் சொன்ன சாடை கண்டுது," யென்று சொல்லி, யினிமேல் நடக்குறதெல்லாம் சரிபார்க்க வேணுமென்று சொன்னார். "எனக்குக் கூட தாழ்த்தி காணுது (வந்தது); (அதை) யிந்த நாள் மட்டுக்கும் கண்டு கொண்டு வந்(தேன்). யினிமேல் நாளை ஆவணி மாசம் முதல் யெனக்கு சுபம் உசந்து காணும், உங்களுக்கும் உசந்து காணும்," என்றும், யிதுகளெல்லாம் சரியாய் வரவேணுமென்று சொன்னதுக்கு, மெய்தான் யென்று சொ(ன்னார்).

பின்னை, துறையூர் வைக்கீல் கோனேரி நாயக்கனை (அவர்) முன்னே விட்டு, "துறையூர் காரியம் விசாரிக்கிறதுக்குக் கூட உம்மை கொமுசேராய்த் திட்டம் பண்ணி யிருக்கிறபடியினாலே, அங்கே யிருக்கிற கொம்மாந்தாமுகள் அனியாயம் பண்ணின சங்கதிகளெல்லாம் விளங்கி, ஞாயப்படிக்கி தீத்துக் கொண்டு கொடுக்க வேணு," மென்று சொன்(னேன்). அந்த துறையூர் ரெட்டி முசியே மரியே (M. Marion) என்கிற ஒப்பிசால் (துறையூரிலிருந்து) போன (பின்) வீட்டைப் பெருக்கிச் சாணி போட்டு[1], மெத்த அவமரியாதை பண்ணினார்களென்றும், பிரான்சு சாதிக்கே அவமரியாதை பண்ணினானென்றும், அந்த ரெட்டியை நான் நன்றாய் விசாரிப்பே னென்றும், நான் தானே முசியே மரியோனை மறுபடி துறையூரைப் போகச் சொல்லி எழுதினேனென்றும் சொன்னார். அவன் யிருபதினாயிரத்து சிலுவானம் ரூபா செலுத்திக் கொண்டு பதினாயிரம் ரூபாய்க்கு ரசீது கொடுத்தானென்றும், முசியே தில்லி யென்கிறவன் பதினாயிரம் ரூபாய் வாங்கிப் போட்டான் யென்றும், முசியே மெதெ (M. Mede) என்கிறவன் ரொக்கம் ஆயிரம் கொள்ளையிலே(யும்) ஆயிரம் (ரொக்கத்திலேயும்), வாங்கிப் போட்டானென்றும், இந்தப்படிக்கு பயாவாரியாய்ச் (விளக்கிச்) சொல்லி, இந்த அனியாயமெல்லாம் விளங்கி நியாயமாய்த் தீத்துக் குடுக்க வேணுமென்றும், அவர்களும் உம்முடனே சொல்லிக் கொண்(டிருக்கிறார்கள்) என்றும் சொன்னேன். யிவர்கள் சொன்னதுக்குச் சாதக (சான்று) முண்டாயிருந்தால் அப்படியே தீத்துக் குடுக்கிறே," னென்றும் மந்தகத்திலே (தயகக்கத்தோடே) சொன்னார்.

---

[1] வெள்ளைக் கிறிஸ்துவன் இருந்த வீட்டைத் தீட்டுக் கழித்தல்.

அந்தச் சேதியை கோனேரி நாயக்கனுக்குச் சொல்லி, முசியே கில்லியாருக்கும் துறையூர் வைக்கீல் நாளை காலமே உம்முடைய வீட்டுக்குப் பேட்டிக்கு வருவானென்று (சொல்லிய பின்), யிவரையும் போகச் சொல்லி, அப்பால் அவர் கையிலே அனுப்பிவிச்சுக் கொண்டு கோவர்ணமாமுக்குப் போகவேணுமென்று பிறபட்டவுடனே, முசியெ லெனுவார் வந்து முசியே கில்லியாருடனே பேசியிருந்து, என்னைப் பார்த்து குண்டூர் பாலி செட்டியைத் துரை சந்திப்பு பண்ணிவிச்சு, பெகுமானம் வாங்கிக் கொடு, என்று சொன்னதுக்கு, அவர்கள் (செட்டி?) யென்னுடனே சொல்லவில்லை யென்று சொன்னேன். அதுக்கு, (முசே லெனுவார்) "முந்தாம்நாள் தானே (அவர்) யென்னுடனே சொன்னதுக்கு, நானும் முசியே லெறியுடனே சொன்னதுக்கு, அவரும் நல்ல தென்று சொன்னார். அது உம்முடைய வேலையானபடியினாலே உமக்கு எச்சரிச்சு உம்மைக் கொண்டு செய்விக்க வேணுமென்று சொல்லுகிறே," னென்று சொன்னான். "முசியே லெறி கோவர்ணதோ ரண்டைக்குப் போய் வருவோம் வாரும்," யென்று அழைத்தான். நல்லதென்று மேல் வீட்டின் பேரிலே போனவுடனே, நாலு கெசம் சகலாத்துக் குடுக்கவேணுமென்று முசியே பெடுத்தராம் பேருக்கு ஒடுதினாசு யெழுதி விச்சு வாங்கி வா, கையெழுத்து வாங்கித் தாறேனென்று சொன்னபடிக்கு ஒடுதினாசொன்று யெழுதி கையிலே வைத்துக் கொண்டுயிருந்தேன். தான் முன்னே போய் பேசியிருந்து உம்மை அழைப்பிக்குறேனென்று சொல்லி துரையண்டைக்குப் போய்ப் பேசினதுக்கு, (அவர்) யிடம் குடாமலிருந்தபடியினாலே அழைப்பிக்கயில்லை. அப்பால் நேரஞ்சென்று போகுதென்று நானுள்ளே பிரவேசிச்சு, குண்டூர் பாலிசெட்டி வந்தான். "நாலு கெசஞ் சகலாத்துக் குடுக்க வேணு மென்று ஒடுதினாசிலே கையெழுத்துப் போடவேணு," மென்று அந்த ஒடுதினாசைக் கையிலே கொடுத்ததுக்கு, அவர், "இல்லாத வாடிக்கையைப் பண்ண வேணாம். நான் கையெழுத்துப் போடுகிறது யில்லை,"' யென்று திரும்பவும் ஒடுதினாசைக் கொடுத்து விட்டார். அப்பால் முசியே னுவ்வி (லெனுவார்) என்னைக் கண்ணைக்காட்டி, (மீண்டும்) சொல்லச் சொல்லி, தாம் சமுதாயிச்சுச் சொல்ல மாட்டாமல் போனார். அதின் பேரிலே நானிருந்து கொண்டு, "கும்பினீர் வர்த்தகருக்கும் மத்த பேருகளுக்கும் அனுசாரமாய் தேவரீர் மரியாதை பண்ணாமல் போனால், அவர்களை யார் சட்டை பண்ணுவார்கள்?" யென்று, அவருக்கெப்படித் தெரியப்படச் சொல்ல வேணுமோ அந்தப்படி சொல்லி, அந்த ஒடுதினாசுவைக் கையிலே குடுத்து கையெழுத்துப் போடச் சொன்னவிடத்திலே, நல்லதென்று சம்மதித்துக் கையெழுத்துப் போட்டுக்கொடுத்தார். அதன் பிறகு அந்தக் கடுதாசியைக் கொடுத்தனுப்பி சகலாத்து வாங்கிக் கொண்டு வரச்சொல்லி, குண்டூர் பாலி செட்டி வகையராக்களை துரை முன்னே விட்(டேன்). அவரும் பேசமாமலிருந்தார். இவர்களும் பேசாமலிருந்தார்கள். அப்பால் நான்

உபசார வார்த்தையாய்ச் சொல்லி, நாலு கெசம் சகலாத்தையும் குடுப்பிச்சு, அவர்கள் அனுப்பிவிச்சுக் கொண்டு போனபிறகு, நானும் அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1756 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 13; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 1; சுக்கிரவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஏழரை மணிக்கி கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவர்ணதோர் அவர்களைக் கண்டு சந்திச்சு யிருக்குமிடத்திலே, அவர் கீழண்டை நெடுஞ்சாலையிலே (துன்) காம்பிரா ... அண்டையிலே முசியே தொத்தேல் வகையிராக்களுடனே பேசியிருக்கச்சே, என்னைக் கிட்ட வழைத்து தெத்துவாசல் உபய பாரிசத்திலே மேடு (நிரவப்பட்டு) நீர் மட்டம் போட்டிருக்குதே, அதுகளிலே யாகட்டும் குண்டு சாலையிலே யாகட்டும் பண்ணிகள் (பன்றிகள்) வந்து விழுந்துதே உண்டானால், பண்ணியைக் குத்தி எடுத்துக் கொள்ளு (கொல்லு) கிறதுமல்லாமல், அவர்கள் கையிலே அபராதம் வாங்கி ஆக்கினையும் பண்ணுவோமென்று தமுக்குப் போடுவிக்கச் சொன்(னேன் என்றார்). நல்லதென்று சொன்னேன். அப்பால் சென்னப்பட்டணத்துப் பேச்சும், அவர்கள் கோட்டை கட்டுகிறதும் யிப்படிப் பல பேச்சுகளாய்ப் பேசியிருந்து, அவர் காம்பிராவிலே உள்ளே போனார். நான் அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1756 வருசம், அகொஸ்து மாசம், தேதி 14; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 2; சனிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் துரையவர்களைக் கண்டு சந்திச்சவுடனே, நேத்து சாயங்காலம் பங்காளத்திலே யிருந்தும் மச்சிலிபந்தரிலே யிருந்தும் கடுதாசி வந்ததை வாசித்துக் கொள்ளுகிற நிமித்தியம் கோன்சேல் கூடுகிற (தாயிருந்தது). (துன்) தோட்டத்துக்குப் போயிருந்த சின்ன துரையும் கோன்சேல்க்காரரும் எல்லாரும் வந்தார்கள். அவர்களை யுங் கூட்டிக் கொண்டு கோன்சேலிலே போனார்கள். உடனே சக்கிரத்தேர் வந்து கோன்சேல் கலைஞ்ச பிற்பாடு உம்முடனே பேச வேணுமென்று துரை சொன்னரென்று சொன்னான். நல்லதென்று சொல்லிப் போட்டு நான் பிடவை பார்க்கிற சாலையிலே வந்திருந்தேன். கோன்சேல் கலைஞ்ச பிறகு பத்தரை மணிக்கு நான் மேல்வீட்டின் பேரிலே போனவுடனே, முசியே கில்லியாருந் துரையும் தனிச்சுப் பேசிக் கொண்டு யிருந்தார்கள். முசியே பெடுத்தல்மீ யிப்பறத்திலே யிருந்தவர் என்கிட்ட வந்து, "பங்காளத்திலே யிருக்கிற கல்கத்தா பட்டணத்தை புங்காளத்திலே

நபாபு காசீம் பாசா[1] பிடிங்கிக் கொண்டு, அந்தக் கொட்டடியிலே யிருந்த சகல சாமானையும் எடுத்துக் கொண்டு அதிலே யிருந்த வெள்ளைக்காரர் எல்லாரையும் பிடிச்சுக் காவலில் வைத்து, அதின் பேரிலே கல்கத்தாவையும் பிடிச்சுக் கொண்டு, அந்தப் பட்டணமெல்லாம் ஏகமாய்க் கொள்ளை யிடுகிறானென்றும், அதிலே யிருந்த கோவர்ணதோரும் மத்தக் கோன்சேலியேர்களும் கைக்கு அடக்கமாய் யிருக்கிறதுகளை மாத்திரம் எடுத்துக் கொண்டு, கப்பலின் பேரிலே யேறி கெங்கையிலே யிருக்கிறதாகவும், அந்த நபாபு வெள்ளைக்காரர் வீடுகள் யெல்லாம் யிடிக்குறான் யென்றும் ... யெழுதி வந்தது. இன்னம் யிவ்வடத்திலே யிருந்து கப்பலின் மேலே போன செனம் (படை) போய்ச் சேந்ததில்லை. போய்ச் சேர்ந்தால் ஒரு தரம் அவர்கள் பேரிலே சண்டை போட்டு கல்கத்தாவை வாங்குவார்கள். அப்படி வாங்(கி)னாலும் (பிணங்கள் தான் அங்கே இருக்கும்) ..." என்று சொன்னார். அதுக்கு நானிவர்களுக்கும் அவர்களுக்கும் கலாபம் வந்த விதம் யென்ன வென்று கேட்டேன். அதுக்கு நபாபு அலாவதிக்கான் (அலி வர்தி கான்) யென்கிறவன் வெகு நாளாய் நபாபு மட்டம் பண்ணினவர் அஞ்சாறு மாதத்துக்கு முன்னே விழுந்து போனார். அந்த யிடத்துக்கு அவர் தம்பி குமாரன் வந்து நாலஞ்சு மாதமாச்சுது. யிவர் பட்டத்துக்கு வந்தவுடனே பிரான்சுக்காரர் தின்மார்கள் ஒலாந்துக்காரர் மத்துமுண்டான அவர் ராச்சியத்திலே யிருக்கப்பட்ட சகல செனங்களும் போய்க் கண்டு நசர் வைத்தார்கள். யிங்கிலீசுக்காரர் மாத்திரம் உமக்குப் பாற்சாப் (பாதுஷா) பற்வானா வந்தன்றைக்கு அல்லவோ நாங்களும்மை நபாபென்று பேட்டி பண்ணிக் கொள்ள வேணும் ... யென்று சொல்லி பேட்டிக்கும் போகாமல் நிராகரிச்சு யிருந்தார்கள். அது முன்னிலையாய் அவருக்குக் கோபம் பிறந்து, நம்முடைய கீழே யிவன் ஒரு குடியானவன், யிவனுக் கித்தனை ஆச்சுதா வென்று, யிது முன்னிலையாய் பட்டணத்தையுங் கட்டிக் கொண்டு யித்தனை யெல்லாம் கேடு வந்தது.[2] சென்னப்பட்டணம் நாம் பிடிச்சுக் கொண்டாப் போலே, அப்போ இந்தக் கல்கத்தா யென்கிற பட்டணம் யிருந்தபடியினாலே, நூறு லக்ஷம் ரூபா மட்டுக்கும் கடன் வாங்கி சமுதாயிச்சுக் கொண்டு வந்தார்கள். அந்தக் கடன் யின்னம் கொடுபட்டதில்லை. அப்படி ஒரு சமையா சமயத்துக்கு நூறு லக்ஷம் யிறு நூறு லக்ஷம் கடன் வாங்கத் தக்கதாயிருக்கிற பட்டணம் இந்தப் பிரபஞ்சத்திலே யெங்கே யிருக்குது? சகலமான அயிசுரியங்களும் அந்தப் பட்டணத்திலேயுண்டு. அந்தப் பட்டணத்துக்குச் சரியாய் இந்த இந்தியா ராச்சியங்களிலே ஒரு பட்டணத்தையும் சொல்லப் போகாது. இத்தனை அயிசூரியம் உள்ள

---

[1] இப்படி யாரும் வங்காள நவாபுவாக இல்லை.

[2] காரணம் இங்கு சரியாக விளக்கப்படவில்லை. மேலே தம்பி குமாரன் என்பதும் சரியில்லை. ஒரு மகள் வயிற்றுப் பேரன் அவன்.

பட்டணம். அந்தப் பட்டணத்துக்கும் அயிசுரியங்களுக்கும் நாச காலம் வந்தது. இனி மேல் ராச்சியத்திலே பட்டுப் பிடவைகள், பட்டு நூல் சாலுவைகள் முதலான பங்காள தினிசுகள் யெல்லாம் வெகுவாய்க் குறைஞ்சுப்போம். கிடைக்கிறது வெகு பிரயாசம். இனிமேல் யிங்கிலீசுக்காரருடைய யோக காலமும் போய்விட்டது. இனிமேல் இங்கிலீசுக்காரர் யிவ்விடத்திலே நிபாய்க்கிறது (நிலைப்பது) கடினம்," என்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது : "யிங்கிலீசுக்காரர்களுக்கு லிசுபோ (லிஸ்மன்) வென்கிற புறுதுகால் (?) ராச்சியத்துக்குப் பிரதானமாய், இராசதானியாயிருக்கிற பட்டணம் முழுகினதினாலே வெகு சேதம் வந்தது. இப்போ யிதிலேயும் வெகு சேதம் வந்தது மல்லாமல், லெம்பர் (பம்பாய்?) யென்கிற பட்டணத்தின் பேரிலேயும் அங்கிலியரும் (அங்கிரியாக்களும்) மராட்டியரும் வந்து சண்டைபோட்டு, அங்கேயும் இக்கட்டு வந்து யிருக்கிறபடியினாலே, யினிமேல் நிபாய்க்கிறது கடினந்தான்," என்று சொன்னோம். அதன் பேரிலே அவர் தொப்பிப்போட்ட பேரை யெல்லாம் பிடிக்குறதாய்ப் பொல்லாத காலம் வந்தாப் போலே யிருக்கு தென்று சொன்னார். அதுக்கு நான் "மெய்தான். தரங்கம்பாடி யாருக்கும் உபா(தைகள்) ஒரு நாளுமில்லாதது வந்தது. ஒலாந்தாக்காரருக்கும் வெகு நஷ்ட்டமாய் அவர்கள் வியாபாரமுமிந்த யீந்தியா கரையிலே வெகு கொஞ்சமாய்ப் போச்சுது. பிறிதிக்கிசுக்காரருக்குப் பட்டணமே முழுகிப் போச்சுது. மச்சிலிபந்தர் சீர்மைகளுக்கும் வேதை வந்து கலாபம் பிடிச்சுக் கொண்டிருக்குது. ஆகையாலே நீங்கள் சொன்னது மெய்தான்," என்று சொன்னேன். அதன் பேரிலே அவர் அனுப்பிவிச்சுக் கொண்டு முசியே திலார்ஷு, முசியே தெபோசேத்து முதலான கோன்சேலியேர்களெல்லாம் அனுப்பிவிச்சுக் கொண்டு கீழே போனார்கள்.

அதன் பேரிலே துரையவர்க ளென்னை அழைப்பிச்சு, "இந்த அக்கின் (அக்கல்) நாயக்கன் பிள்ளைகள் ரெண்டு பேர் சம்பா கோவில் பாதிரிகள் முன்னிலையாய் வந்து கண்டார்கள். அவர்களுக்கு நம்முடைய திருவீதி முதலான கிராமங்களுக்கு யெல்லாம் காவல் கொடுத்து, நாலு கெசம் சகலாத்தும் வெகுமானம் கொடுத்து அனுப்ப வேணுமென்று யிருக்குறோம், அது சேதி யென்ன?" வென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "யிவர்கள் பூருவோத்திரம் எனக்கு ஆதியோடந்தமாய் நன்றாய்த் தெரியாது. மத்தியிலே கொஞ்சம் கொஞ்சம் கேழ்வியானது உண்டு. கொஞ்சமிவர்களும் முன்னாலே என்னோடே வந்து சொல்லிக் கொண்டதினாலேயும் நானும் கொஞ்சம் அறிந்ததுண்டு. யிப்போ யிருக்கிற குள்ளம நாயக்கனும் யிவர்களும் பாத்தியமுள்ள பேர் ஆரோ வென்று நன்றாய்த் தெரிஞ்சுக் கொண்டு, அதன் பேரிலே சொல்ல வேணுமே யல்லாமல் பதறிச் சொல்லப் போகாது. நாமிவர்களைத் தானே நேமிச்சு

அனுப்பினால் அந்தக் குள்ளம னாயக்கன் யென்கிறவன் நம்முடைய கிராமங்களிலே வந்து சிலாறு பண்(ணுவான்). அதனாலே குடிகள் கலைஞ்சு சாகுபடிக்குத் தாழ்த்தி வருமென்று சொன்னோம். அதுக்குத் துரை அவர்கள் "ஆனால், அதுக் கென்ன செய்ய வேணும்?" என்று கேட்டார். அதுக்கு அந்த குள்ளம னாயக்கனையும் அழைப்பிச்சு சேதி பாதிகள் கேட்டு அவன் சொல்லுகிறதையும் அறிஞ்சு அதன் பேரிலே அதுக்கேத்தப்படித் திட்டப்படுத்தி அனுப்பினால் சபாய் (சுமுகமாய்) நடக்கும். யில்லாவிட்டால் கலாபிக்கும்," யென்று சொன்னோம். அதுக்கு அந்தப்படிக்குத் தானே அவனுக்கெழுதி அனுப்பிவிச்சு அழைப்பி யென்று நமக்குச் சொல்லி, அதுக்கு முன்னே அவர்களுக்குக் குடுக்கிறதுக்கென்று அழைப்பிச்சிருந்த நாலு கெசம் சகலாத்தும் கொண்டு போகச் சொல்லி, மொகூபு பண்ணி, (திருப்பியனுப்பி) அவர்களை அழைக்கச் சொன்னார். அப்போது முத்தியப் பிள்ளை வைச்சிருந்த தேவடியாள் மகளைக் கலியாணம் பண்ணின சதாசிவ ரெட்டி யென்கிறவன் அவர்களையும் அழைச்சுக் கொண்டு வந்தான். அவர்கள் இருபத்தோரு ரூபாயு நசர் வைச்சுக் கண்டார்கள். கண்டவுடனே, "யெல்லாம் யென்னுடனே சொல்லியிருக்குது. அவர் பிறகே போய்க் கேளுங்கோள் அவர் யெல்லாம் திட்டம் பண்ணுவார்," என்று சொன்னார். அதின் பேரிலே நாமுமவர்களும் அனுப்பிக் கொண்டு பிறப்பட்டு வருகிறதிலே, யிதிலே சின்ன துரை சாப்பாட்டுக்கு வந்தார். அவரையுங் கண்டு சலாம் பண்ணிக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.[1]

***1756 வ்ருசம், ஆகொஸ்து மாசம், தேதி 15; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 3; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே முசியே லெறி கோவர்ணதோரவர்கள் கோயிலுக்குப் போய் மேல் வீட்டின் பேரிலே வந்து கப்பல் வருகிறதைப் பார்த்துக் கொண்டிருந்தார். நான் போயிக் காண்பிச்சுக் கொண்ட விடத்திலே அப்போது துரை சொன்ன சேதி: "திருக்கோவிலூர் சும்மதியிலே மோதின் (முகியுதீன்) சாயபும் குருமூர்த்தி அய்யரும் அப்பு (Abu) மகம்மதுக்கு அமுல் தாக்கல் பண்ணமாட்டோமென்று (அமுல்தாரராக ஏற்றுக் கொள்ள மாட்டோம் என்று) யிங்கே யிருந்து போன முசியே திபோமென்கிறவனும் (Dubon) ஏழெட்டு வெள்ளைக்காரரும் போனவர்களை அப்பு (அபு) மகம்மது மனுஷனாக்கும் யென்று வழியிலே விடாமட்டோமென்று காயப்படுத்தினார்களாம். முன்னாலே தானே இந்த வெள்ளைக்காரர்

[1] இத்தொகுதிக்கு மூல ஏடுகள் இல்லாமல் பிரதியையே ஆங்கிலேயரும் பயன்படுத்தினர். அதிலும் ஏராளமான பிழைகள் இருந்ததாம். ஆங்கிலத் தொகுதி 10இல் ஆங்காங்கே வரும் அடிக்குறிப்புகளைப் பார்க்க.

சோலி வேண்டா மென்று சொல்லி யிருந்தோமே, திரும்பியும் நீர் அவர்களை வழியிலே நடத்துகிறது (நிலமித்தது) உம்முடைய பேரிலே குத்த," மென்று சொன்னார். அதுக்கு, "நான் அப்படி யேதாகிலும் வெள்ளைக்காரருக்குக் கொடுக்கவுமில்லை. வெள்ளைக்காரர் சாமீன் வைச்சுக் கொள்ளவுமில்லை. முன்னாலே வசந்தராயப் பிள்ளை(யும்) குருமூர்த்தி அய்ய(னும்) இருந்தார்கள். அவர்கள் வசமாய்த் தந்திருந்தேன். அதிலே வசந்தராயப் பிள்ளை விழுந்து போனார். அவர் சமத்தன், கெட்டிக்காரன். அவன் போனபடியினாலே யிப்போது அப்பு (அபு) மகம்மதுக்குக் குடுத்து (ஒரு) தமிழ்ச் (தமிழனை) சாமீனும் வாங்கினோம். அதிலே சாமீன்தார் அப்பு (வுக்கும்) மகம்மதுக்கும் கொஞ்சந் தகராறு இருந்ததினாலே, அது தீருகிறவரைக்கும் அப்பு மகம் மதுக்கு அமுல் தாக்கலா பண்ண வேண்டாமென்று யெழுதியிருந்தோம். அதின் பிறகு யிவர்களிங்கே சமாதானப்பட்டு வந்து சொன்னார்கள். அதின் பேரிலே நாம் காகிதம் கொடுத்தோம். அந்தக் காகித மங்கே போகு முன்னமே, அப்பு மகம்மது மனுஷரும் சாமீன்தார் மனுஷரும் போயி அங்கே தங்களுக்கு அமுல் தாக்கல் பண்ணயில்லை யென்று முசியே ஒமோவுடனே (Aumount) போய்ச் சொல்லிக் கொண்டார்கள். அவர் (அது) நம்முடைய (விஷய) மல்ல வென்று சொல்லா(மல்), உடனே தாம் வந்து அமீனாகிய மோதினி சாயபுவையும் குருமூர்த்தி அய்யனையும் ரொம்ப அலைக்கழித்து கில்லாதாரனையும் ரொம்ப அலாகு பண்ணி, அந்தக் குத்தம் தம்முடைய பேரிலே சுமராத படிக்கி, அவர்கள் கையிலே யிருந்த காகிதங்களையும் வாங்கிக் கொண்டு உங்களண்டைக்கு வந்து, அங்கே நடந்த சங்கதிகளெல்லாம் நான் வந்து பிராது பண்ணிக் கொள்வே னென்று, அதுக்கேத்த அடியாய் உங்களுடனே வந்து தப்புந் தாறுமாய்ச் சொன்னார். "அவர்கள் பொய் சொல்லுகிறார்கள், வெள்ளைக்காரனைப் பூந்து அடிச்சுப் போட்டார்கள்" என்று சொன்னார். "எங்கேயாகிலும் உண்டா, வெள்ளைக்காரனைத் தமிழன் கை நீட்டி அடிக்கிறது? தமிழன் பயந்திருப்பான், வெள்ளைக்காரன் தனக்குத் தோணினபடி யெல்லாம் நடத்திப் போட்டு, திரும்பவும் தமிழன் பேரிலே சொன்னால் அவர்கள் வார்த்தையாய் மெய்யென்று கேட்டு தேவரீரு மிப்படிச் சொன்னால் யிதுக்கு உத்தாரம் நான் யென்ன சொல்லுவேன்? முன்னாலேயு மிப்படித் தான் கொமாந்தாங்களெல்லாம் சரிப்போன படிக்கெல்லாம் நடத்தி, சீர்மை யெல்லாம் பாழாய்ப் போச்சுது ... கோன்சேலியேர்கள் போய் விசாரிச்ச பிற கல்லவோ அவர்கள் நடத்தினதும் அதினாலே வந்திருக்கிற லுகுசாங்களும் தெரியவந்தது. யினிமேல் காரியமும் நடக்க மாட்டாது," என்று சொன்னோம்.

---

[1] முன்பு மோதின் சாயபு, இப்பொழுது மோதினி சாயபு!

அதின் பிறகு துரை, ஒழுகரைக் குடிகள் வந்து பிராது பண்ணுகிறார்களே, அது சேதி யென்ன வென்று கேட்டார். "அதுக்கு முன்னாலே பதினாலு வருஷமாய் முசியே துப்பிளேயிக்சு குடிகுத்தகையாய்த் தானே குடுத்து வந்தார்கள். அப்படி யிப்போதும் அவர்களை ஏத்துக் கொள்ளச் சொன்னால், தங்களுக்கு நஷ்டம் வந்திருக்குது, அதல்லாமலும் முசுராயி பாதி சிறிது தள்ளிப் போட்டார்கள் (பாதி பேர் போய்விட்டார்கள்). ஆகையினாலே யெங்களுக்குத் தேவையில்லை யென்று சொன்னார்கள். அதின் பேரிலே குண்டு கிராமத்தார் ஏத்துக் கொண்டார்கள். அதன் பிறகு அவர்களென்னுடனே வந்து (புகார்) சொன்னார்கள். நானும் சொல்லத் தக்கன தெல்லாம் சொன்னேன். அதிலும் கேழ்க்கமாட்ட மென்றார்கள். அதன்பிறகு குண்டு கிராமத்தார் நாலு பேரிலே ஒருத்தர் யேற்பட்டு இரெண்டு பேர் கிறிஸ்துவர்களையுஞ் சேர்த்துக் கொண்டு போய் காரியம் பார்த்தார்கள். அதின் பிறகு இவர்கள் தாங்களே ஒத்துக் கொள்ளுகிறோமென்று வந்தார்கள். அவர்கள் குடியான(வர் ஆன) தினாலும் போட்டி மேலே வந்ததா(லும்) தயவு பண்ணினாலும் (அப்படியே) பண்ணலாம். (ஆனாலும்) அவர்கள் சொல்வது நியாயமாகாது)," யென்று சொன்னோம் ... அதின் பேரிலே அவர்களை அழைப்பிக்கச் சொன்னார். அதன் பிறகு உள்காம்பிராவே வந்திருந்தார். குடிகள் வந்து கண்டார்கள். நீங்களேன் வந்து பிராது பண்ணுகிறதென்று கேட்டார். அதுக்கவர்கள், "முன் குத்தகையிலே எங்களுக்குச் சிறிது நிலம் (சொந்த உபயோகத்துக்கு) கும்பினியார் அவரவருக்கு விட்டு விட்டார்கள். அந்த நிலத்துக்கு உண்டான பணம் (பாக்கியை) கும்பினியா ரொத்துக் குடுக்கவேணும். சிறிது நிலங்க ளெல்லாம் தோட்டம் போட்டுக் கொண்டு பணங் குடுக்குறோ மென்று கிறேப்பிலே கூட (பதிவு அலுவலகம்) யெழுதி யிருக்கிறார்கள். அதுவும் வர வேணும். யிதெல்லாம் முன்னாலே முசே கொதே அவர்களுடனே சொன்னோம். அப்போது அவர்கள் ஆயிரம் விராகன் ... தருகிறோமென்று சொன்னார்கள். அதுக்கு நாங்கள் சம்மதியாம லிருந்தோம். அப்படியிருக்க, யிதுக ளெல்லாம் கூடிவந்தால் (கொடுப்பதாகச் சொன்ன விராகன் வந்தால்) நாங்கள் குத்தகை யேத்துக் கொள்ளுகுறோம், யில்லாவிட்டால் எங்களாலே ஆகாதென்று சொன்னோம். அதுக்கு யிந்த குண்டு கிராமக் குத்தகைக்காரர் (தலையிட்டதானாலே) விராகன் வராமல்ப் போச்சுது. (அவர்கள் தாங்களே குத்தகை ஒத்துக் கொள்கிறோம் என்று சொன்னதின் பேரிலே) நாங்களே குத்தகை யேத்துக் கொண்டோம். ... அதுக் கிப்போது, குமரப் பிள்ளையுடனே பங்கு கூட்டிக் கொண்டுயிருக்கிற கிறிஸ்துவ ரெட்டிகள் நீங்கள் சறுவாத்துமனா யேத்துக் கொள்ளவாண்டா மென்று எங்களுக்குச் சொல்லிப்போட்டு, தாங்கள் போய் உள்ளுக்குள்ளே வஞ்சனையாயி குமரப்பிள்ளையுடனே பங்கிருந்து கொண்டிருந்து, முன் குத்தகையிலே

யிருபத்தஞ்சு வராகனாக யிருந்த நிலத்துக்கு யிப்போ அன்பத்தாறு வராகன் போட்டு, சம்மதியானால் உழுங்கோள் இல்லாவிட்டால் நிலத்தை விட்டுப் போட்டுப் போங்கோ ளென்று சொல்லுகுறார்கள். ஆனபடியினாலே நாங்கள் நூறு நூத்தன்பது வீட்டுக்காரர் உங்களுடனே நடந்த சங்கதி யெல்லாம் ஒரு தரஞ் சொல்லிப்போட்டு யெங்கேயாகிலும் போவோமென்று வந்தோ," மென்று சொன்னார்கள் ... அதுக்குத் துரை அவர்கள் சொன்னது, "அப்போது எத்தனை பிராத்திச்சாலும் (முறை கேட்டாலும்) மாட்டோமென்று போட்டு, (பின்) இரெண்டு பேர் போட்டியாய் யேத்தப் பிறகு, யிப்போது வந்து சொல்லிக் கொள்ளுகிறீர்கள். நல்லதுதான். யெதிராளிகள் வார்த்தையுங் கேட்டல்லோ சொல்ல வேணும். ஆகையால் நீங்களும் நாளைக்கு வாருங்கள். அவர்களையும் நாளைக்கு வரச்சொல்லி கேட்டுச் சொல்லுகுறோம்," யென்று அவர்களைப் போகச் சொல்லி யென்னுடனேயும் அவர்களை நாளை வரச் சொல்லும் யென்று சொன்னார்கள்.

### *1756 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 16; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 4; சோமவாரம்*

இத்தனாள் மோக்காவுக்குப் போயிருந்த சீமைக்கப்பல் சரக்கேத்திக் கொண்டு இருபது நாழிகைக்குமேல் வந்து சேர்ந்து பதினோரு பீரங்கி போட்டு, கப்பித்தானும் யிறங்கி வந்தான். யிதிலே பொலோ பெண்சாதி[1] மகனும் வந்தான். வியாபாரம் போராது.

மோக்கா கப்பலிலே வந்த சேதி யென்ன வென்றால் : இங்கிரேசுக்காரருக்கும் பிரான்சுக்காரருக்கும் முன் பிப்றயேர் மாசம் 23 தேதி சண்டைக்கு திக்கிளேரிச மிட்டார்களென்றும், திக்கிளேரிசமிட்ட சேதி மோக்காவிலே யிருக்கச்சே மோக்காவிலே யிருக்கிற ஒலாந்தாப் பேத்திரி கப்பித்தானுக்கு வந்ததாகவும், அவரிவர்களுக்குச் சொன்னதாகவும், யிதல்லாமல் முசியே சென்சோருசு (M. St Georges) என்கிற ராசாவினுடைய கப்பல் கப்பித்தான், ராசாவினுடைய கப்பல்கள் பனிரெண்டுடனே இந்த திக்கிளேரிச மிடாததுக்கு முன்னே பிறப்பட்டானென்றும், முசியே துப்பிளேயிக்சு சிறிது கப்பலுகளுடனே சண்டைக்கு திக்கிளேரிச மிட்ட பிறகு பிறப்பட்டாரென்றும் ஒலாந்தாப் பெத்திரி கப்பித்தான் சொன்ன மாத்திரத்திலே, யிவர்கள் போட்டது போட்டவாக்கிலே அந்த மட்டுக்கும் கப்பலிலே யேத்தியிருந்த கப்பேக் கொட்டை இரண்டாயிரத்தி நூறு கட்டு போதுமென்று நிலுவைச் சலுவைகளும் விட்டுவிட்டு வந்துவிட்டோமென்று சொன்னார்கள்.

[1] இவள் இரண்டாவது மனைவி. முதல் கணவனுக்குப் பிறந்த மகன்.

***1756 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 18; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 6; புதவாரம்***

காலமே முசியே லெறி கோவர்ணதோர் இன்னம் சில துரைகளுடனே நெடுஞ்சாலையிலே பேசிக் கொண்டிருக்கச்சே, நான் போய் ஆசாரம் பண்ணினேன். அவர் முசியே தொத்தேலுடனே பேசியிருக்கச்சே, யேண்டபல்லி கிருஷ்ணராயன் விழுப்புரம், கள்ளக்குறிச்சி, கச்சிராயப்பாளையம், திருப்பாலைப்பந்தல், திருவரங்கம் வகையிரா யிடங்களிலே ட்டாணாயிருக்கிற கும்பினீர் சிப்பாயிகளுக்கு ஒன்றரை மாசத்துச் சம்பளம் ஆயிரத்தி முன்னூத்திச் சில்வானம் ரூபாய் வரவேணுமென்று பிரான்செழுத்திலே கணக்கெழுதிக் கொண்டு வந்து முசியே தொத்தேல் கையிலே கொடுத்ததை, சீனயோர் கோவர்ணதோர் கையிலே கொடுத்து, இந்தச் சிப்பாயிகள் ரங்கப்பன் சீர்மையிலே ட்டாணா யிருக்கிறவர்கள் யென்று சொன்னதின் பேரிலே, என்னை அழைத்து இது யென்ன சம்மதியென்று (கேட்டார்). "முசியே சொபினே அனுப்பிவிச்ச ட்டாணா அந்தந்தச் சாகையிலே யிருக்கிறது மெய், மைத்தப்படி நானொன்றும் அறியேன்," யென்று சொன்னதுக்கு, அவரிருக்கிறது மெய்தானா வென்று கேட்டார். இருக்கிறது மெய்தா னென்று சொன்னதின் பேரிலே, காயிதக் கணக்கைக் கையிலே வாங்கிக் கொண்டு, முசியே ஷெவிரோ கோந்துவாரே போய் கையெழுத்துப் போட்டுக் கொண்டு விழுப்புரத்திலே யிருந்து சம்பளத்துக்கு வந்து காத்து யிருக்கிற சிப்பாய் கையிலே கொடுத்தார்.

அப்பால் துறையூரிலே யிருந்து முசியே மரியோனென்கிற ஒபிசியால் வந்து காண்பிச்சுக் கொண்டு, கணக் கொன்று குடுத்தான். அதைப் பார்த்துக் கொண்டு, பின்னை ஒருத்திரமும் சொல்லயில்லை. அப்பால் அவருடனே பேசியிருந்து முசியே லெனுவாரை அழைச்சு உள்ளே காம்பிராவிலே ஒன்பது மணிக்கி நுழைந்தார். அப்பால் நான் அரை மணி நேரம் பிடவை பார்க்கிற சாலையிலே யிருக்கச்சே முசியே பொலோவும் அவர் பிறகே கணக்கெழுதப் போன கணக்கனும் ரெண்டு பேரும் துரையைக் கண்டு பேசப் போனார்கள். முசியே கில்லியார் அழைத்தனுப்பினபடியினாலே நானவர் அண்டையிலே போய்க் கண்டு பேசினவிடத்திலே, அவர் சோமவாரத்து நன்றைக்கு சீரங்கத்துக்குப் போறதாயும், யிதுக்கு முன்னே போறதுக்குத் தமக்குச் சரீரம் லகுவாயிருக்க யில்லை யென்றும், "கப்பலில் மோக்காவிலே யிருந்து வந்த சேதியும் முசியே துப்பிளேயிக்சு வருகிற சேதியும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். முசியே துப்பிளேயிக்சு வருகிற சேதி யெனக்கு பொய்யாய்க் காணு[1] தென்று," சொல்லி, அவர் பெண்சாதிக்கிச் சரீரம்

---

[1] 'காணவில்லை' என்று ஆங்கிலப்பதிப்பில் உள்ளது.

லகுவாயிருக்குதென்றும், பின்னையும் லோகாபிரமமாய்ப் பேசியிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டபோது, துறையூர் வைக்கீல் கோனேரி நாயக்கன் வந்து முசியே கில்லியாருக்கு சலாம் பண்ணி, "முசியே மரியோன் யென்கிறவன் இன்றைக்கு வந்தான். யெங்கள் கையிலே வாங்கின பணமும் நடந்த சமாசாரமும் வயணமும் விசாரித்து ஞாயம் யெங்கே யிருக்குதோ (அதன்படி) தயவு பண்(ண வேணும். தவறு நடந்த இடத்திலே சிட்சை) நடக்கவேணு," மென்று சொன்னான். அப்படியே நடப்பிக்கிறேன் யென்று சொல்லியதின் பேரிலே, வைக்கீல் சொன்னது : "முசியே தில்லை (Tilly) யென்கிறவன் முன்னே துறையூருக்கு வந்தபோது கோயில் விக்கிரகங்களை யெடுத்து உலகநெல்லூரிலே வைத்துப் போட்டு வந்திருக்குறான். அது விசாரிச்சு வாங்கிக் குடுக்கவேணு," மென்று கேட்டதுக்கு, "ஒருகாகிதத்திலே யெழுதி வந்து குடுங்கோள். அதை முசியே லொரி (?) கொவர்ணதோர் அவர்களுக்குக் காண்பிச்சு வாங்கித் தாறேன்," யென்று சொல்லச் சொல்ல, நல்லதென்று அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம். அப்பால் முசியே[1] பனிரெண்டு மணிவரைக்கும் பேசியிருந்து வீட்டுக்குப் போனா னென்று கபுறு சொன்னார்கள்.

### *1756 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 19; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 7; குருவாரம்*

இத்தனாள் காத்தாலே யேழரை மணிக்கி முசியே லெறி கோவர்ணதோர் அவர்களண்டைக்குப் போனவிடத்திலே, அவர் தென்னண்டை பாரிசம் கிழக்கு மேற்கு நெடுஞ்சாலையிலே ஒலாத்திக் கொண்டு முசியே தொத்தேலுடனே பேசிக் கொண்டுயிருந்தார். முசே சொலிமினியாக்கு, பின்னையும் நாலத்து ரெண்டு பேர் ஒப்பிசியால் மார்கள் கூட யிருக்கச்சே நான் போயாசாரம் பண்ணினவுடனே, முசே பெடுத்தல்மீ, முசியே கில்லியார், முசியே மீரா, முசியே லெனுவார் வகையிரா கோன்சேலியேர்கள் யெல்லாரும் வந்து, முசியே பொலோ மாத்திரம் வராமல் யிருந்தார். அப்பால் கோன்சேல் வீடு முஸ்தீப்பு பண்ணினார்கள். முசியே பெடுத்தல்மீயும் முசியே கோவர்ணதோர் ரெண்டு பேரும் ... அரை நாழிகை நேரம் ஒலாத்திப் பேசி யிருந்தார்கள். அப்பால் கோன்சேல் வீட்டுக்குள்ளே நுழைந்தார்கள். முசியே பொலோ சரீரம் சுவஸ்தமில்லாததினாலே வரவில்லை யென்று முசியே லெனுவார் சொன்னார். யேது நிமித்தியமாய் கோன்சேல்க் கூடினதென்றால், நேத்து சாயங்காலம் முசியே புசியினுடைய காகிதமும், மச்சிலிபந்தர் முசே மோர்சேன் காகிதமும் வந்ததாகவும், அது நிமித்தியம் கோன்சேல்

[1] பெயர் ஆங்கிலத்திலும் விடுபட்டுள்ளது. இது கில்லியாராக இருக்கலாம்.

கூடினார்களென்றும், மயே காகிதமும் வந்தது, அது நிமித்திய மென்றும் சொன்னார்கள். அப்பால் பதினோரு மணி மட்டுக்கும் கோன்சேல் கூடியிருந்து கலைஞ்சார்கள். முசியே புசியினுடைய சம்மதி யின்ன தென்று தெரியவில்லை. ஆனால் வந்த சோடாக்காரர் சொன்னதாய்க் (கேட்ட) சேதி, முசியே லாசும் முசியே சொபினேயும் கோல்கொண்டைக்கு முசியே புசிக்கு மத்தத்து (உதவப்) போக, சிறிது தூரம் பவுன்சுடனே போன(போது) வழிகாட்டின (வழிகட்டி—வழி தடைபோட்டு) படியினாலே போகக் கூடாமல்,[1] பெசவாடை யென்று ஒரு ஸ்தலம் கிருஷ்ணா தீரம் அக்கரை ஓரமதிலே வந்து சேர்ந்தார்கள். முசியே புசிக்கும் சலாபத்து சங்குக்கும் சிறிது ஒடம்படிக்கை பேச்சு நடந்ததாவும், முசியே புசிக்குப் பதிலாக முசியே லாசு யிருக்கவும் முசியே புசி புதுச்சேரிக்கி வந்து விடவும், (அயிதர்) சங்கு (Haidar Jang) என்கிற கோசா கலந்தர் கான் குமாரனை சலாபத்து சங்கு ஒப்பிச்சுப் போடவும் இப்படிப் பேச்சு வார்த்தைகள் நடந்து, முசே லாசை மாத்திரம் அழைத்துப் போக ஒரு மொகுலன் பெரிய மனுஷனாக வருகுரானென்றும், யிப்படியாகச் சொன்னதாய்ச் சொன்னார்கள். யிந்த சமாசாரம் யினிமேல் விசிதமாய் தெரியவரும்.

அப்பால் பிடவை பார்க்கிற சாலையே வந்து, ஒழுகரைக் குடிகளை பூந்தோட்டக் கச்சேரிக்கு வரச் சொல்லி, நானும் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன். அங்கே முராரி ராயன் வைக்கீல் கிருஷ்ணப்ப னென்கிறவன் முராரி ராயன் காகித மொன்று கொண்டு வந்து கொடுத்தான். அதிலே யெழுதியிருந்த வயணம் : "முசியே புசியைத் துரத்திப் போட்டு, அப்பால் இங்கிலிசுக்காரர்களும் தாங்களுமா யிருக்கிறதாய் சவா பாசி ராயன் (ஆலோசனை பண்ணுகிறான்). சலாபத்து சங்கு (தன் விருப்பப்படி) நடக்கவும் (ஆலோசனை பண்ணுகிறான்) ... சாவனூரிலே நாமும் முசபர் கானு மிருக்கச்சே யெங்கள் பேரிலே பாசி ராயன் வந்திறங்கி சண்டை பண்ணுகிறபோது, சலாபத்து சங்கு ... முசியே புசிக்கு (இதை எல்லாம்) உள்ளபடி யெழுதியனுப்பியும், முசியே புசி (அதை) மெய் (என்று) கொள்ளாமல் யெங்கள் பேரிலே சண்டை பண்ணினார். எங்களுக்கும் பாசி ராயனுக்கும் ஒத்ததுவாய்த் தீந்தவுடனே, சலாபத்து சங்குவை பித்துவா பண்ணி (தூண்டிவிட்டு), முசியே புசிக் கெதிராகக் கோபமும் வெறுப்பும் கொள்ளச் செய்தார்கள்). கர்னாட்டக சுபாவுக்கு மமுதல்லி கான் பேருக்கு பகலி பற்வாணா பண்ணி, வேலூர் (எல்லூர்), ராசமகேந்திரம், ஸ்ரீக்காகுளம் வகையிரா சுபாவும் மமுதல்லி கானுக்குத் தானே பகலி பற்வாணா பண்ணி யிங்கிலீசுக்காரர் மத்தத்து யிருக்க யிந்தப்படி யெல்லாம் நடப்பிச்சார்கள். யிந்த சமய மென்னை வரச்

[1] அடைமழையினால் அவர்களால் செல்ல முடியவில்லை.

சொன்னால் நான் வருகுறேன். கர்னாட்டக மெல்லாம் கட்டிப் போடுவோம். பின்னையும் ஸ்ரீக்காகுளம் வகையிரா தாலூக்குகளும் கட்டுவோம். கிருஷ்னைக் கிப்புறம் யிருக்கிற சீர்மை தமாமும் (எல்லாம்) சாதிக்கலாம்," என்று தன் அபிப்பிராயத்தை எழுதியனுப்பி வைச்சான். இந்தப்படிக்கி துரைக்குங் காகிதம் வந்துது. முசபர் கான் காகிதமும் வந்தது. முசபர் கான் சீரொப்பாவும் வந்து தொரை வாங்கிக் கொண்டார் யென்று கிருஷ்ணப்பன் யிந்தக் கபுறும் சொல்லிப் போட்டு, யிதுக்குப் பதிலுத்தரஞ் சொல்லவேணுமென்று சொல்லிப் போனான். இதல்லாமல், "சலாபத்து சங்கு முசியே புசியின் பேரிலே சண்டை பண்ணி, யென்னையும் குமுக்கு அனுப்பச் சொல்லி யெழுதினார். நானும் முசபர் கானையும் சிறிது பவுன்சையும் அனுப்பிவிச்சுப் போட்டேன். காரியத்துக்கு எப்படிப் பண்ண வேணுமோ அப்படிப் பண்ணலாமென்று ... யோசனை பண்ணியே அனுப்பினேன்," யென்றும் முராரி ராயன்) யெழுதி யனுப்பிவிச்சான். அவரவர் நினைப்பு ராச்சியத்திலே கலாபமும் அரிஷ்ட்டமும் (நடப்பதாலே) யிப்படி யிருக்குது. யினிமேல் யென்னமாய் நடக்குமோ அறிய வேண்டியது.

### *1756 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 28; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 16; சனிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே முசியே லொறி (?) கோவர்ணதோரவர்கள் மேல் வீட்டின் பேரிலே தென்னண்டை சாலையிலே ஒலாத்திக் கொண்டிருந்தார்கள். அப்போ போய் ஆசாரம் பண்ணி, மயிசூர் ராசாவுக்கும் தளவாய் தேவராச உடையாருடைய சறுவாதிகாரி(யான) நந்திராசாவுக்கும் யிருபத்து அஞ்சு நாளைக்கி முன்பாக, முன் ஆடி மாதத்திலே, நடந்த சேதி (யை, மயிசூர் தளவாயின் வக்கீல் கிருஷ்ணப்பன் சொன்னதைச் சொன்னேன்). நந்திராசாவும் தேவராச வுடையாரும் ஏகோபிச்சு, "நாம் சிறு பிள்ளையாய்ப் பார்த்து யிவனுக்குப் பெண்ணையுங் குடுத்து பட்டத்திலே வைச்(சோம்). யிவனிப்போ அவரவர் துற்புத்தியைக் கேட்டுக் கொண்டு நம்மை சரிப் பிடிக்கவும் இல்லாமல், நம்மைக் காவல் பண்ணி, உத்தியோகத்துக்கு (வேறே) மனுஷரை வைச்சுக் கொள்ள ஆலோசனை பண்ணியிருக்குறான். ... யினிமேல் நாமிவனைச் சரிப்பிடிச்சுப் போட்டு, யிவனுக்கு நம்முடைய மகள் வயத்திலே பிறந்திருக்கிற நாலைஞ்சு வயதுப் பிள்ளைக்குப் பட்டத்தைக் கட்டுவோம் ... ராசாவுக்கு துற்போதனை போதிச்ச பிரதானி வெங்கிடபதி அய்யனையும் நாலைஞ்சு மாதத்துக்கு முன்னே பிடிச்சது. துர்க்கத்திலே கொண்டு போய் போட்டு, இந்த ராசாவின் அரண்மனை வாசலிலேயும் மனுஷரை வைச்சு யி(ருக்கிறோம்). அப்படி யிருக்கையிலே அந்த ராசாவானவன் அயிதர் நாயக்கன் (Hyder Nayak) தமையன் சபாசுக் கான் (Shabaz-Khan) யென்கிற வனையும் பேதிச்சு (தூண்டிவிட்டு)

சேவுகம் தூறு பண்ணிக் கொள்ளச் (விட்டுவிடச்) சொல்லி, தாமுளவிலே (இரகசியமாய்) கண்டி ராவிடம் (Kande Rao)[1] அன்பதினாயிரம் (பொன்காசு) குடுத்து, குதிரையும் பாறுக்காரரையும் சேர்க்கச் சொல்லி. யவர்கள் சேகர(ம் செய்து) மறு நாள் கோட்டைக்கு வந்து பிரவேசிக்கிற தாயிருக்கிறார்கள்," (என்று பேசினர்). இந்த சமாசாரம் நந்திராசாவும் தளவாய் தேவராச வுடையாரும் அறிஞ்சவுடனே, கோட்டை வாசலெல்லாஞ் சாத்தச் சொல்லியும் ராணுவ மெல்லாம் ராத்திரியே சேகரம் பண்ணி, அரண்மனையைச் சுத்தி யிருக்கிற கோவில்கள் மேலே யெல்லாம் பீரங்கிகளை யேத்திவிச்சு, திரிச்சிராப்பள்ளியிலே யிருக்கிறபோது சேர்ந்திருந்த பாறுக்காரர், வெள்ளைக்காரர், சட்டைக்காரர் யிவர்களை யெல்லாம் கோயில்கள் பேரிலே யேத்திவிச்சு, மைத்த ராணுக்களை யெல்லாம் அனுப்பிவிச்சு, அரண்மனை நாலு பிறமுஞ் சுத்திக் கொள்ளச் சொல்லி, காலமே ராசாவை வெட்டிப் போடப் போனார்கள். அப்போது. அந்த ராசாவுடனே அரண்மனைக்குள்ளே வெகுநாளாய் யிருக்கிற முன்னூறு பேர், ராசாக்க(ளுடைய உறவினர்), குருக்கள், தளவாய். சூத்திராள் ஆகிய பெரிய மனுஷர்கள் ஆயிரம் பேர் கத்தியைக் கையிலே வாங்கிக் கொண்டு, அரண்மனைக்கி வெளியே சண்டைக்கிப் பிறப்பட்டு. கைகலந்து சண்டை பண்ணதாகவும், அதிலே (எதிர்த் தரப்பிலே) அன்னூறு பேரும் ராசா மனுஷரிலே அன்னூறு பேரும் காயமாய் விழுந்ததாகவும், அதிலே நந்திராசா தளவாய் பவுன்சு முறிஞ்சு பின் வாங்கினதினாலே, ராசா திரும்பவும் அரண்மனைக்குள்ளே போனதாகவும், அதின்பேரிலே நந்திராசா சுத்துக் கோயில்கள் பேரிலே யேத்தி யிருக்கிற பீரங்கிகளை அரண்மனையின் பேரிலே யெடுத்துக் கட்டிச் சுட்டதாகவும், அப்போது அரண்மனைக்குள்ளே யிருக்கிற புருஷாள் பெண்டுகள் தாதிகள் வகையிராக்களிலே நூறு பேர் விழுந்து போனார்களென்றும், அதிலே நந்திராசாவும் தேவராசா வுடையாரும் அரண்மனைக்குள்ளே போய் பூந்து, அங்கே ராசா வகையில் செத்த பேர் போக மைத்த பேர்களை யெல்லாம் பிடிச்சுக் கட்டிக் காவலிலே போடச் சொல்லி, தாங்கள் உள்ளே போய் ராசாவை வெட்டிப் போடப் போனதாகவும், அப்போது யிந்த ராசாவை வளர்த்த கிருஷ்ணராசா வுடையார் பெண்சாதி வந்து ராசாவைக் கட்டிக் கொண்டு, தன்னையும் வெட்டிப் போடச் சொல்லிச் சொன்னதாகவும், அதன் பேரிலே அனேகம் தகராறுகள் நடந்து, அதன் பிறகு ராசாவையும், அவர் பிள்ளையையும் பெண்டாட்டியையும் அந்தம்மாளையும் (கிருஷ்ணராச உடையார் மனைவி) அந்தப்புரத்திலே காவலாக வைச்சு, அரண்மனை யெங்கும் தங்கள் மனுஷரை வைச்சுப் பத்திரம் பண்ணி யிருக்குறார்கள். யிந்த சேதி நானா வைக்கீல் கேட்டு, தளவாய் நந்திராசா வண்டைக்குப் போய் நீங்கள் யிப்போ ராசா பேரிலே கத்தி யெடுக்கிறது நியாயமா, இது

[1] இவர் அயிதர் நாயக்கனின் எழுத்தன்.

மரியாதையல்ல, இந்த சேதி நானா சாயபு கேட்டால் உங்களுக்குக் கொஞ்சத்திலே போகாது யென்று ரொம்ப தகராறு சொன்னதாகவும், அதின் பேரிலே அவனைக் (ராசாவை) கொண்டுபோய்க் கோட்டைக்கு வெளியே விட்டு விடச் சொல்லி மனுஷரைக் கூட்டி அனுப்பினதாகவும், அவர்கள் கைப்பிடியாய்க் கொண்டுவந்து கோட்டைக்கு வெளியே விட்டு விட்டார்கள் என்றும், அதன் பேரிலே அவன் (ராஜா) நானாவுக்கு யிங்கே நடந்த சேதிக்கெல்லாம் சவிஸ்தாரமாய்க் காகித மெழுதி, நாலு ஒட்டகைக் காரர் கையிலே குடுத்து டகோட்டாக்காய் (வேகமாய்) நானா அண்டைக்கு அனுப்பினதாகவும், யிந்தப்படி போக்குவரத்து, மனுஷர் கூட நடவாதபடிக்கிப் பத்திரம் பண்ணி வெகு பந்தாயிருக்குதென்றும் – யிந்த சேதி யெல்லாம் மயிசூர் தளவாய் வைக்கீல் கிருஷ்ணப்பன் யென்கிற பிராமணன் வந்து சொன்னானென்று, நான் தொரையுடனே சொன்(னேன்).

இதெல்லாங் கேட்டு அதன் பிறகு, "உலகநெல்லூர் கொம்மாந்தாம் யெழுதின காகிதத்திலே அங்கே ஆரோ ஒருத்தன் ஒருத்தனைக் கொன்று போட்டானென்று எழுதினான். அதேது சேதி?" யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது: ஒரு யிந்துஸ்தானி கோழி வியாபாரம் பண்ணிக்கொண்டு வருகுறான். வெளியே போய் கோழி வாங்கி ஒரு கூலிக்காரன் தலையிலே வைத்துக்கொண்டு வருகிற வ்ழியிலே ஒரு கருமான் உலையிலே நெருப்பு வாங்கி புகை பத்த வைச்சுக் கொள்ளு முன்னே கூலிக்காரன் முன்னுதாய்ப் போனதாகவும், அதிலே யிவனுக்குக் கோபம் வந்து அந்தக் கருமானுக்கு ஒரு பணத்தைக் குடுத்து, அவனை ஒடிப்போய் கூலிக்காரனைக் கூட்டிவரச் சொல்லி, நீ முன்னுதாய்ப் போனதென்ன என்று அவனை நாலடி போட்டு வேறே கூலிக்காரனை வைச்சுக் கொண்டு கல்லக்குறிச்சிக்கு வந்துதாகவும், அந்தப்படி அடிப்பட்ட கூலிக்காரன் ரெண்டு மூணு நாள் கிடந்து செத்துப் போனதாகவும், அந்த சேதி கொம்மாந்தாங் கேட்டு அந்த யிந்துஸ்தானியைக் காவல் பண்ணி யிருக்கிற தாகவும் எழுதி வந்தது," யென்று சொன்னேன். அதுக்கு யெல்லாங் கேட்டு கூலிக்காரனா வென்று சொன்னார். ஆமென்றேன். "அவனை அழைப்பிக்கிறதா, அங்கே தானே காவல் பண்ணி வைக்கிறதா?" வென்று கேட்டதுக்கு, ஒன்றுஞ் சொல்லாமல் சும்மாயிருந்தார்.

அப்போது முசியே ஷெவிரோ முசியே கொற்னேத்தை அழைப்பிச்சு வந்தார். அவருடனே சிறிது சகலாத்தும் முகமல்லும் புட்டேதாரும் கொண்டு வரச் சொன்னாப் போலே யிருந்தது. பின்னையும் யேதேதோ பேசினார்கள். அதன் பேரிலே துரை உள்காம்பிராவிலே போனார். நானும் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் மத்தியானத்துக்கு மேலே முசியே பொலோ அழைப்பிச் சனுப்பிவிச்சபடியினாலே, நாம் போனவிடத்திலே முசியே பொலோ சொன்னது : "நம்முடைய விசாரிப்பிலே வந்த உம்முடைய வந்தவாசி, திண்டிவனம், கருங்குழி, விழுப்புரம், சுப்பூர், செஞ்சி வகையிரா பற்காணாக்களுக்கு யிசாரா குடுத்துதும் (நீர் செலுத்தியதும்), பாக்கியும் நீர் அனுப்பின ராசி பண்டிதருடனே கணக்கு யெழுதி வைக்கச் சொன்னதுக்கு, அவர் செஞ்சி, வந்தவாசி ரெண்டு பற்காணாவுக்கும் யிசாரா, பேரீசு (செலுத்தியது), பாக்கி யெழுதி வைச்சார். அது சரிதானா?" வென்று கேட்டார். அவரெழுதி வைச்ச படிக்கிச் சரிதான் யென்று சொன்னேன். ருசுமுள், சாதல்வார் (வழக்கமான இனாம் செலவுகள், பிற செலவுகள்) யிசாராதார் யேன் ஒத்துக் குடுக்க மாட்(டோம்) என்கிறார்க ளென்று கேட்டார். அதுக்கு நாம் சொன்னது: "நூதனமல்ல. இதுக்கு முன் கர்னாட்டகம்[1] துலுக்காணிய (துலுக்க ராச்சியம்). யிதுகளிலே யெல்லாம் நடந்து வந்தது தான் யிப்போதும் அவர்கள் ஒத்துக் கொடுக்கிறதாய்த் தானெழுதிக் குடுத்து யிருந்தார்கள்? இது வந்து குத்தகைக்காரர் குடுக்கிறதல்லா, அலாயிதா (தனியாகக்) குடிகள் குடுக்கிறது. ஆகையிலே யிசாராதாரும் சாமீன்தாருமா யோசனை பண்ணிக் கொண்டு யிதை நாம் சுத்திக் கொள்ளாமல், நீங்கள் வெள்ளைக்காரராச்சுதே, தொரையுடனே அதுக்கேத்தபடி சொல்லிக் கொண்டால் நமக்கு த(ங்)கிப் போமென்று யோசனை பண்ணிக்கொண்டு, சாமீன்தா(ர் பேரில்) வெள்ளைக்காரர்கள் யெல்லாரும் போய், தொரை அவர்களுடனே சொல்லிக் கொண்டு நடந்த சம்மதிகளெல்லாம் நீங்களு மறிஞ்சு யிருக்கிறதாமே? அதைத் தொட்டு இப்படி அலைஞ்சு கொண்டு இருந்தது. இப்போதும் அவர்கள் குடுக்கிறதாய்த் தானே சொல்லி (விருப்பம்) எழுதிக் கொள்ளச் சொல்லிவிட்டார்கள்," என்றும் சொன்னேன். அதுக்கு, யிது காரியம் ஒரு தரம் கோன்சேலிலே பேசித் தீத்துப் போட்டால் தொந்தரையில்லை. சாபாய் (சுமுகமாய்) நடக்குமென்று சொல்லி, அதன் பேரிலே யிந்த கொம்மாந்தாமுகள் சாமீன்தாரரைப் பண்ணின ரோஷ்ட்டுகளெல்லாம் ஒரு பித்திசா மெழுதிக் கொண்டு வரவேணுமென்று சொ(ன்னேன்), அதன் பேரிலே, "வெள்ளைக்காரர் சமர்த்தர், புத்தியுள்ளவர்கள், கணக் கறிஞ்சவர்கள். தமிழருக்குப் புத்தியுமில்லை, கணக்குந் தெரியாது. சுத்த அசடு," என்கிறதாய் ... வெகு நேரம் பேசியிருந்து அனுப்பிவைச்சார். நாமும் அதுக்கெல்லாம் சொல்ல வேண்டியபடிக்கி உத்தாரஞ் சொல்லி அனுப்பிவைச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தோம். "நாளை ஆதிவார மானத்தினாலே நாளை

---

[1] விழுப்புரம், கர்னாடகம், கோவர்ணதோர், விறுத்தாசலம் என்றே பெரும்பாலும் எழுதப்பட்டுள்ளன.

நன்றைக்கு சோமவாரங் கணக் கனுப்பிவையும். நீரும் அழைச்ச போது வாரு," மென்று சொன்னார். நல்லதென்று சொல்லிப் போட்டு வந்தோம்.

### *1756 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 29; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 17; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவர்ணதோர், சின்னதுரை முதலான ஒப்பிசியால்மார் சகலரும் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்து, மெத்தை மேலே யிருக்கையிலே, நான் போய் காண்பிச்சுக் கொண்டேன். அப்போ முசே பொலோ யிருந்து, கருங்குழி சீர்மையில் கலீல் நிமித்தியம் வெள்ளைக்காரருக்குத் துபாசியாய்ப் போயிருக்கிற சேங்குறித்தர்[1] மலையப்ப னென்கிறவன் முத்து வெங்கிட்டராம ரெட்டியை முன்னூறு ரூபாயைக் குடுக்கச் சொல்லி யெழுதி யனுப்பி வைச்சு, சிப்பாயிகளையும் அனுப்பிவிச்சுப் போட்ட யிடத்திலே, சிப்பாயிகள் போயி முத்து வெங்கிட்டராம ரெட்டியை ரொம்பவும் அரிக்கதை (தொந்தரவு) பண்ணி வைக்கிறதாக அவன் வைக்கீல் யிச்சாசி பண்டிதன் (Ichasi Pandit) வந்து தம்முடனே சொல்லிக் கொண்டதாகவும், என்னைக் கூட வைத்துக் கொண்டு முசியே பொலோ அவர்கள் துயைவர்களுடனே சொன்னார். அதுக்குத் துரையவர்கள் அவ்விடத்துக் காரியம் விசாரிக்கிற முசே தொபொனை (Tobin) யழைக்கச் சொன்னார். அவர் வந்தவுடனே முசியே பொலோ யிருந்து, "ஒன்று ரங்கப்பனுத்தாரம் வேணும், அல்ல வென்றால் என்னுத்தாரம் வேணும். இரெண்டு பேர் உத்தாரமு மில்லாமல் இவன் தானே யெழுதி யனுப்புகிறதும், சிப்பாயிகளை அனுப்பி அரிகத்துப் பண்ணுகிறதும் நிமித்தியமென்ன? இப்படித் தானல்லோ யெல்லாருஞ் சரிப்போனபடிக் கெல்லாம் நடத்திவிச்சதினாலே எல்லாக் காரியங்களும் கெட்டுப் போச்சுது," யென்று சொன்(னார்). அது துரைக்கு மனதிலே கொஞ்சம் அசமாதானமாய்க் கண்டுது (உரைத்தது). அதன் பிறகு துரையவர்கள் அந்த துபாசியை அழைப்பிக்கச் சொல்லி முசியே தொபேனுடனே சொன்னார்.

அதின் பேரிலே நான் பறங்கிப் பேட்டையிலே மரக்காயர் கப்பல் சரக்கு யேத்தி யாத்திரைபாய் (பயணமாய்ப் பாய்) விரிக்கிற தாயிருந்தார்கள். அந்த வேளையிலே ஒரு மலாயி காரன், கத்தி கொண்டு கைநகம் வாங்கிக் கொண்டிருந்தவன், என்ன தோணிச்சுதோ திடீரென்று எழுந்து யிருந்து கிட்ட உள்க்காந்திருக்கிற மரக்காயரிலே காரியக்காரரா யிருக்கிறவர்களிலேயும், சில்லரை மரைக்காயருக்குள்ளும் அஞ்சு பேரை அந்தக் கத்தியாலே குத்தி தண்ணீரிலே குதிச்சான். கூட கிளாசுகள்

---

[1] Cunning Christian என்று ஆங்கிலத்தில் உள்ளது. முன்னும் இப்படியே குறிக்கப்பட்டுள்ளது.

(லஸ்கர்கள்) குதிச்சு அவனைப் பிடிச்சுக் கொண்டு வந்து பறங்கிப்பேட்டையிலே காவல் பண்ணி வைச்சிருக்குது. குத்தின பேரிலே ஒருத்தன் விழுந்து போனான். இப்பால் யாரார் செத்துப் போனாரோ தெரியாது," என்று சொன்னேன். அதுக்குத் துரை சொன்னது: "அவ்விடத்திலே யென்ன நிமித்தியமிப்படி நடந்ததென்று நன்றாய் தகிக்கத்தாய் விசாரிச்சு எழுதியனுப்பச் சொல்லு," என்று சொல்லிப் போட்டுக் காம்பிராவிலே போனார். அந்த மட்டுக்கும் நானும் அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக்கச்சேரியே வந்தேன்.

## செப்டம்பர் 1756

*1756 வருசம், செப்த்தேம்புரு மாசம், தேதி 1; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 20; புதவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவர்ணதோர் அவர்களும் பின்னையும் ரெண்டு மூண்டு பேர் ஒப்பிசியால்மார்களும் கண்டு பேசிக்கொண்டிருக்கச்சே, நான் போய்க் கண்டவுடனே அப்போது அவர் முகத்தைப் பார்த்தால் யோசனையின் பேரிலே யிருக்கிறாப் போலே கண்டுது. அங்கே ஒன்பது மணி வரைக்கும் யிருந்து அவர் காம்பிராவிலே போய்விட்டார். பிறகு வெளியிலே வந்தேன். அங்கே கேழ்விப்பட்ட தென்ன வென்றால், நேத்து ராத்திரி துரையுடனே வந்து எலமாங்கி (அலுமாஞ்சி) கொம்மாந்தாம் முசியே லெம்பேர் (Lambert) என்கிறவன் துறையூரிலே யிருந்து நம்முடைய வூருக்கு (வந்து) அஞ்சு ஆறு நாளாச்சுது. அவன் அலுமாஞ்கி ஒப்பிசியால்மாரிலேயும் பிரான்சு ஒப்பிசியால்மாரிலேயும் சிறிது பேரை உடைச்சு, யிவர்கள் வழியிலே சிறிது சொலுதாதுகளையும் சட்டைக்காரரையும் ஒரு கும்பினி சேர்த்துக் கொண்டு வெளியே போறதாயிருக்குதென்று ஒரு அலுமாஞ்கிக் காரன் வந்து சொன்னான். உடனே துரையவர்கள் அந்த அலமாங்கிக்(?) காரனையும் அந்த ஒப்பிசியால்மார்களையும் பிடிச்சுவந்து, காவலிலே வைக்கச்சொல்லி உத்திரவு குடுத்து, ராத்திரி யெல்லாம் தீவட்டிகள் பிடிச்சுக் கொண்டு அஞ்சாறு பேரையும் பிடிச்சு வந்து காவலிலே வைத்தார்கள். யித்தனாள் நாமும் அங்கே யிருக்கிறதிலே அந்த அலமாங்கிலே மலெரென்கிரவனையும்[1] பின்னையும் ஒரு ஒப்பிசியால்மாரையும் பின்னை நாலு பேர் (பிரஞ்சுக்காரனையும்) பின்னையும் நாலு அலமாங்கி (?) ஒப்பிசியாலையும் கொண்டுவந்து கோட்டை மேலே அங்கங்கே வேறே வேறாய்க் காவலிலே வைத்து, நாலு நாலு பேர் சந்திரேனார்களை வைத்து, பத்திரம் பண்ணினார்க ளென்று கேழ்விச்சுது. இப்படி கேட்டுக் கொண்டிருக்கச்சே, யிவர்களைக் காவல் பண்ணிப் போட்டு கோட்டை மேலே யிருந்து இறங்கி வருகிற அலமாங்கி (?) கொம்மாந்தாம் முசியே பிஷோ (M. Pichard) என்கிறவன் என் கிட்ட வந்து தன் கிட்ட ஒரு வண்டியிருக்குது, விலைக்கு வாங்கிக் கொள்ளுகிறீராவென்று கேட்டான். அவசியங் குடுத்தால் வாங்கிக் கொள்ளுகிறேன் என்று சொன்னதுக்கு, நான் கொண்டபடிக்கு எடுத்துக் கொள்ளு வென்று சொன்னதுக்கு, முன்னூறு ரூபாய்க் குடுத்தால் வாங்கிக் கொள்ளுகிறோமென்று சொன்னேன். அதுக்கப்படி

---

[1] அலுமாஞ்சி லாம்பேர்ட்.

குடுக்கப்படாதென்று சொல்லிப் போட்டு, துரைக்குக் கபுறு சொல்லப் போனான். அவன் பிறகே வந்தவன் சொன்னது, யிவன் ஒபிசியால்மாரைக் காவல் பண்ணிவிச்சுப் போட்டுப் போறான் என்று சொன்னான். அந்த மட்டுக்கும் பதினோரு மணியாச்சுது நானும் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

***1756 வருசம், செத்தேம்புரு மாசம், தேதி 3; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 22; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவர்ணதோரவர்களைக் கண்டவிடத்திலே அவர்கள் முசியே தொத்தேல், முசியே புஷோ (பிஷோ) யிவர்களுடனே பேசிக் கொண்டிருந்தார். அப்படி யிருந்தவர் நான் போ யரை நாழிகை பொறுத்து, என்னை அழைச்சுக் கொண்டு அப்பாலே போய் "விறுத்தாசலம் ஒப்பிசியால் நமக்கு யெழுதி அனுப்பிவைச்சான். நாலு கிராமத்தார் கூடி விலகிப் போனார்களாம். யிப்படி குடிகள் போனால் கும்பினீருக்குப் பணம் யெப்படி வரும்? அது சேதி யென்ன?" யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது: "அங்கே யிருக்கிற ஒப்பிசியால்கள் மனோபாவம் உங்களுக்குத் தெரியாத தாயிருக்கட்டும். நானந்த சேதியை விசாரித்துச் சொல்லுகுறேன்," யென்று சொன்னேன். அதின் பேரிலே சும்மாயிருந்தார்.

சும்மாயிருக்கிறதைப் பார்த்து நான் சொன்ன சேதி : அயிதராபாத்துலேயிருந்து ஆற்காட்டுக்குச் சேதி வந்தது. அங்கே யிருந்து யிங்கே யெழுதி வந்தது. அந்தக் காகிதம் அயிதராபாத்து விட்டுப் பிறப்பட்டு பதினஞ்சு, பதினாலு நாளாச்சுது. அதிலெழுதி வந்த சேதி, யேதென்றால் : முசியே லாசு, முசே புசி அண்டைக்குப் போக வேணுமென்று போனவிடத்திலே, முசியே புசி பணமும் (அ)யிதர் சங்கு பணமும் பவனகிரிக் கோட்டையில்[1] வைச்சு யிருந்த தாகவும், அந்தக் கோட்டையின் பேரிலே சலாபத்து சங்கு தண்டு அனுப்பி வைச்சு சண்டை குடுத்ததாகவும், முசியே புசி முசியே லாசுவை "நீர் யென் (என்கிட்ட வர) தேவையில்லை, நீர் பவனகிரிக் கோட்டையின் பேரிலே ... போய் சலாபத்து சங்கு(வின்) தண்டைத் துரத்தி விடவேணும்," யென்று யெழுதி அனுப்பினதாகவும், அதன் பேரிலே முசியே லாசு பவனகிரிக் கோட்டையைப் பார்த்தாப் போலே போய், சலாபத்து சங்கு தண்டை யெல்லாம் முறியாச்சுத் துரத்திவிட்டு, அதின் பேரிலே முசியே புசி அண்டைக்குப் போவோமென்று வந்ததாகவும், வருகிறபோது முசபர் கான், முனிவர் கான் முதலான பேர்கள் வந்து யெதித்து வெகுவாய் சண்டை குடுத்தார்கள் யென்றும், அந்தச் சண்டையிலே யெதிழுத்த

---

[1] அயிதராபாத்துக்கு 25 மைல் கிழக்கில் உள்ளது.

பேர்களையெல்லாம் வெகு சேதப்படுத்தி, அத்தனை பேரையும் தள்ளிக்கொண்டு யிறநூறு பேர் வெள்ளைக்காரரும் நூறு பேர் சிப்பாயிகளும் செத்துப் போனதும், சிப்பாயிகள் ஓடிப்போனதும், பீரங்கிகள் சிறிது போனதும் போக முன்னூறு பேர் வெள்ளைக்காரர் ரெண்டு பீரங்கிகள் சிறிது சிப்பாயிகளுடனே போய் முசியே புசி அண்டையிலே சேர்ந்ததாகவும், அவர் வந்து சேர்ந்த சேதி சலாபத்து சங்கு கேட்டு ராசவட்டம் விட்டுப் பேசுகிறதும், ஆற்காட்டிலே மமுதல்லி கானுக்கு யெழுதி வந்ததாகவும், அதன் பிறகு யிதுக்கு முன்னே உச்சாகமாய் செனம் சேகரிச்சு சலாபத்து சங்கு அண்டைக்கு அனுப்பவேணுமென்று யிருந்த விடத்திலே யிந்த சேதி வந்தவுடனே, அந்த உச்சாகம் யில்லாமல் சந்து செனம் அனுப்புகிறதும் நிறுத்தி, "பிரான்சுக்காரர் தயிரியமும் ஷாத்திரியமும் பார்த்தீர்களா, லெக்ஷ செனம் யென்கிற விடத்திலே நாற்பதினாயிரம் குதிரையாகிலும் யெதிர்க்குமே. யிதிலே அன்னூறு பேருடனே பிறப்பட்டு பவானகிரி (?) சுத்திக் கொண்டிருந்த தண்டையும் அடிச்சு முசியே புசி அண்டைக்கு வர ஒட்டாமல் குறுக்கே வந்து மறிச்ச தண்டையும் அடிச்சு, முன்னூறு பேருடனே முசியே புசி கிட்டப் போய்ச் சேர்ந்தார்களிவர்கள்; (இது மிக சாகசமல்லவோ)" யென்று யெழுதி வந்துதென்று சொன்னேன். அதுக்கு துரை முசியே தொத்தேலை அழைச்சு, இந்தச் சேதி யெல்லாம் அவருக்குச் சொல்லி, வந்த காகிதத்தையும் யழைப்பிக்கச் சொல்லி, யென்னைப் பார்த்து, "முசியே லாசு என்ன? முசியே சோபினி (M. Saubinet) கூட போயிருக்கிராரே! அவரை யேன் சொல்லயில்லை?" என்று கேட்டார். அதுக்கு நான், "இந்த ராச்சியத்திலே யிருக்கிற பேரெல்லாம் முசியே லாசை மாத்திர மறிவார்களானதினால் அவர் பேரை மாத்திரம் சொல்லுகிறார்க" ளென்று சொன்(னேன்). முசியே தொத்தேல்," யிதென்ன அதிசெயம்? ராசா சங்கு[1] லெக்ஷங் குதிரையென்ன, அவன் தண்டென்ன? அந்த வேளையிலே ரங்கப்பன் பவுன்சை வைச்சு[2] அவன் தண்டெல்லாம் அதளகுதளமாய்ப் பண்ணினதும், தாமசக் கொல்லி கானைப் போலேக் கொத்தவனை (Tahmash Quli Khan)[3] கொன்றதும், நாசறு சங்கு ஆற்காட்டிலே யிருக்க காஞ்சீபுரம் தோறணங்கட்டினதும்—அப்போது நடந்த சாகசங்களிலே யிது எவ்வளவு?" யென்று சொன்னார். அதுக்கு நான், முசியே தொத்தேல் நாசற் சங்கு செஞ்சி மேலே வந்திறங்கி சண்டை குடுக்கையிலே முசே தொத்தேல் பண்ணின சாகசங்களும் இப்பாலவர் பண்ணின ஷசாத்திரங்களும் நான் ரொம்ப சொன்னவிடத்திலே தொரை யித்தனையும் கேட்டு(க் கொண்டார்).

---

[1] நாசர் ஜங் என இருத்தல் வேண்டும். ஆங்கிலத்திலும் ராசா சங்கு எனவே உள்ளது.

[2] இதனை தொத்தேல் ஒருவேளை நம் பிள்ளையை உற்சாகப்படுத்துவதற்காகச் சொல்லியிருப்பாரோ? அல்லது, பிள்ளையின் மிகைப்படுத்தலோ?

[3] இவன் ஒரு பாரசீக மன்னன், நாதிர் ஷாவுக்கு முன் ஆண்டவன்.

அதன் பேரிலே யிந்த மாசத்தைக்கு யேதாகிலுஞ் சீமா மூல பணம் வருமா வென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது: "யேன் வராமல்? சீமையிலே யிப்போது கம்பு மாசூலும் மணக்கத்தை (ஒரு நெல் வகை) (மாசூலும்) யிந்த வகையிலே பணமுண்டு. யிதிலே பலனைக் கெட்டி பண்ணிக் கொண்டு பணம் வரவேணும். யிதுக்கு முசியே பொலோ, முசியே கில்லியார் யிவர்கள் பணங்காசு யென்கிட்ட அனுப்பச் சொல்லியும், அனுப்பின சேதியைத் தங்களுக்கு யெழுதச் சொ(ன்னார்கள்). முசியே தெவோ வானால் சகலமும் தம்முடைய மனுஷருக்கு, தம்முடைய அதிகாரமில்லாமல் நமக்கு ஒன்றும் தாக்கல் கூட ஆகாமல் பண்ணிப்போட்டு வந்தார்," என்று சொன்னோம். அது கேட்டுக் கொண்டு சும்மாயிருந்தார்.

அதன்பேரிலே நான் சொன்னது, "யிதெல்லாம் பளு யேத்துகிறவன் (குத்தகைக்காரன்) கண்ணில் யெண்ணை குத்திக்கொண்டு சாகிறதையாய் யிருந்து பார்த்துப் பலன்களை விட்டுப் பணம் ஆகப் பண்ண வேண்டியது. இப்போது குடிகள் பேரிலேயும் யிந்த பலத்திலே கெதபாக்கிலே (?) சிறிதும் நாளது ரேகையும் அறுவிட்டு, (பயிராவதைத் தடுக்காமல்) சாகுபடி தாஷ்சி வராமல் அதுக்கும் விட்டு, யிப்படி மெத்தவும் பக்குவமாய்க் கொண்டு வரவேண்டியது. அந்தப்படிக்கி நடக்கிறதுக்கில்லாமல் சரிப்போனபடி பலனை குடிவசத்திலே விட்டு, அவன் குடுத்ததை வாங்கிக் கொண்டு செயங்காரியங்களையும் பார்த்துக் கொண்டு நடப்பிச்சுக் கொண்டிருந்தால், செய்யலாவதென்ன யிருக்குதென்று?" சொன்னேன். அதுக்கு உத்தாரஞ் சொல்லாமல், உன் கணக்கு யெப்போ கொண்டு வருவாயென்று கேட்டார். அதுக்கு நான், "எல்லாக் கணக்கும் முசியே தெவோ யெழுதி வந்திருக்கிறார். எனக்கு கணக்கு தாக்கல் வராமலும் பண்ணிப் போட்டு வந்திருக்கிறார். நான் அப்போது இப்போது வந்த கணக்குகளைத் தேடி யெடுத்து ஒவ்வொன்றாய்ச் சோதிச்சு யெடுத்தாலல்லோ கொண்டு வரவேணும். யின்னம் பத்து நாள் பிடிக்கு," மென்று சொன்னேன்.

அதன் பிறகு சஞ்சீவி ராயர் (வந்தார்). இவர் ஆரென்றும், வந்ததென்ன வென்றும் (துரை) கேட்டார்... முந்தாம் நாள் மீர் குலாம் உசேன் மருமகன் யிவர் பணம் தரவேணுமென்று பித்திசா மெழுதிக் குடுத்தானே, அவன் தான்," என்று சொன்னேன். அதுக்குப் பணம் யேன் குடுக்கயில்லை யென்று கேட்டார். அதுக்கு அவர், "நான் முசபர் கான் கணக்கப் பிள்ளை (நான். அவருக்குப் பணம்) குடுக்கவேணும். அதுக்கு முசபர் கானுது வீடு தட்டுமுட்டு சிறிது (ஜாமீனாய்) யிருக்குது," யென்று சொன்னார். அதன் பேரிலே யென்னைப் பார்த்து, நீயிதைத் தீத்துப் போடு யென்று சொன்னார். அதின் பேரிலே, "யிப்போ ஒரு சேவுகன் பித்திசாம் கொண்டு வந்து குடுத்தான். அதையுங் கேட்டு

அந்த நிலத்துக் காரியமும் தீத்துப் போட்டுவிடு," என்று சொல்லிப்போட்டு காம்பிராவிலே போனார். நானும் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன் ....

சலாபத்து சங்கு முசபர் கானுக்கு சீர்ப்பை (Sirpi) சுபையும் கோட்டையும் யெழுதிக் கொடுத்ததாகவும், கந்தனூர் யிம்மாத்து (இமாயத்) பாதர் கான் தம்பி முனிவரு (முனவர்) கானுக்கு நிசாம் சாகீரை யெழுதிக் குடுத்ததாகவும், மமுதல்லி கான் குமாரனுக்கு மூவ்வாயிரம் குதிரைக்கு மன்சுபாவும் அதுக்குள்ள சாகீரும் யெழுதி அனுப்பினதாகவும் ஆற்காட்டிலே யிருந்து யெழுதி வந்ததாகவும் துரையுடனே சொன்னோம்.

***1756 வருசம், செப்தம்புறு மாசம், தேதி 5; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 24; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே தொரை, சின்ன துரை முதலான பேரெல்லாரும் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு மெத்தையின் பேரிலே யெல்லாரும் வந்துவிட்டதினாலே, நானும் போய் பூச்செண்டு குடுத்து முசியே புசிக்கும் முசியே லாசுவுக்கும் சலாபத்து சங்குவுக்கும் சமாதானமான (மானதுக்கு) முபாற்குபாதி சொன்னோம். அதுக்கு அவர் ஒன்றும் உத்தாரஞ் சொல்லாமல், நான் அறிவேன் யென்று சொன்னார். அதிலே சின்ன துரை (எந்த ஷரத்தின் அடிப்படையில்) என்று கேட்டார். முசியே சமாதானமாச்சு வென்று யிழுத்தாப் போலே சொன்னார். அதின் பேரி லென்னை என்ன வென்று கேட்டார். அதுக்கு நான் முசியே புசிக்கும் சலாபத்து சங்குவுக்கும் சமாதானமாச் சென்று சொன்னோம். தொரை அவர்கள் விஸ்தரிச்சுச் சொல்லாததினாலே நாமேன் விஸ்தாரமாய்ச் சொல்லுகுறோமென்று (நினைச்சு) அந்த மட்டுக்கும் நிறுத்தினோம். அதன் பிறகு சின்ன துரை ரெண்டொரு வார்த்தை யெடுத்து பிரஸ்தாபித்தார். அதுக்கு பெரிய துரை சத்தும் தயவாய்ச் சொல்லயில்லை. அதன் பிறகு சின்ன துரை தம்முடைய கையில் ஒரு கடுதாசி வைத்திருந்ததை துரைக்குக் காண்பிச்சு வீட்டுக்கு அனுப்பிக் கொண்டு போனார்.

நானும் அந்த மட்டுக்கும் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கிப் போனேன். மறுபடி துரை அழைக்கிறாரென்று சேவுகன் வந்து அழைச்சான். உடனே பிறப்பட்டு துரை அண்டைக்கு போனேன். போனவுடனே தொரை சொன்னது, "முசே லெம்பேரைக் காவல் பண்ணியிருக்குதே, யிவன் சீர்ப்பை (யிலிந்து வந்தவன்). இங்கே யிருந்து, நபாவுக்கு சொலுதாதுகளும் பவுன்சும் கொண்டு வாரேனென்று சொல்லிப்போட்டு யிங்கே வந்தான். நாற்பது பேர் சட்டைக்காரரும்

சொலுதாதுங் கொண்டு போய் சீர்ப்பியிலே வைச்சிருக்கிறான்[1]. அதுக்கு உபாயமாயி யிவன் கையிலே காகித மெழுதி வைச்சு வாங்கியிருக்குறோம். (இரண்டு சேவுகர்களை நேமிச்சு) அவர்களுக்குச் சிலவுக்கு நூறு விராகன் கையிலே குடுத்தனுப்பு. இவனைக் காவலிலே வைச்சிருக்(கிறதை) (யும், காவலிலிருந்து கடுதாசி எழுதினான் என்பதையும்) அவர்கள் அறியலாகாது. யிவர்கள் அங்கே போயி யிவன் காவலிலே யிருக்கிறவன் யெழுதிக் குடு(த்திருக்கிற) கடுதாசி ரெண்(டும்) நானு மொரு கடுதாசி(யும்) எழுதி அதுக்குள்ளே வைச்சு முத்திரை போட்டுக் குடுக்கிறேன். யிதைக் கொண்டு போயவர்கள் கையிலே குடுத்து, அவர்களுக்குச் சிலவுக்குக் கேட்டதைக் குடுத்து, வந்த பேரைக் கூட்டிக் கொண்டு வந்து விடச் சொல்லு," யென்று சொல்லி, தாமும் ஒரு கடுதாசி யெழுதி அதுக்குள்ளே வைச்சு முத்திரை போட்டு ரெண்டு கடுதாசியும் என் கையிலே தந்து ரெண்டு பேர் பிராமணரைப் பயணம் பண்ணி அனுப்பிவைக்கச் சொன்னார். அதின் பேரிலே நான் சொன்னது, "சலாபத்து சங்குக்கு (எதிராகப் புறப்பட்டு) முசியே லாசு, முசியே புசி அண்டையிலே போய்ச் சேர்ந்த சேதிக்கு முன்னாலே பிரான்சு எழுத்திலே கடுதாசி யெழுதி உங்கள் கையில் குடுத்திருந்தேன். இப்பால் அங்கே முசே லாசு முகாந்திரமாய் (சமாதானப் பேச்சு நடந்தது). அப்பால் முசியே புசியும் முசியே லாசும் பாதற் (பகதூர்) சங்கு வகையிறாக்களும் பேட்டிக்கிப் போன விடத்திலே சலாபத்து சங்கு தம்முடைய தம்பி மீரு முகோல் என்கிறவரையும் (Mir Moghul), சா நவாசு கான், மகம்மது அன்வர் கானென்கிற பார்சா (பாதுஷா) வுடைய பக்ஷி, முபார்சி (முபாரிஸ்) கான், ராசா சந்திசேனன் குமாரன் முதலான பெரிய மனுஷரை யெதிரே (போய் அழைச்சு வரச்சொல்லி அனுப்பி) முன்பின் நடந்து வருகிறபடிக்கி சந்திப்பு ஆசாரம் முதலானதும் நடந்து, அப்பால் இவர்களுக்கும் அவர்களுக்கும் யெப்போதையும் போலே ஏகமனதாயிருக்கவும், யிவர்கள் சாகீர் சிப்பந்தி (செலவுக்கு) விட்டிருந்த சீமைகள் சீக்காகுளம், ராசமகேந்திரம் முதலான சீமைகளும் கர்னாட்டக சுபாவும் யிவர்களுக்குத் தானே குடுத்து, ஆணை சத்தியப் பிரமாணிக்கங்கள் குரான் (பேரிலேயும்) வெள்ளைக்காரர் வாஞ்சில் (gospel) என்கிற வேதம் யெழுதி யிருக்கிற பொஸ்தக(த்தின் பேரிலேயும்), மராட்டியர் பண்டா ரென்கிற மஞ்சப் பொடி அரிசி (ஆகியவை) கொண்டு, மராட்டியர், துலுக்கர், வெள்ளைக்காரர் மூன்று பேரும் ஒருத்தருக்கொருத்தர், சத்தியம் பண்ணிக் கொண்(டனர்)... யிவர்களுக்கு நடந்து வந்த சீர்மை யிவர்களுக்கே (நடக்க வேணும்), யெல்லாரும் ஒன்றாயிருக்கிறது, அமுல் பேஷுக்கஷு முதலான காறுபாறுகளிலே முசியே புசி வரத் தேவையில்லை, இவர் குதிரை யுண்டு, ராணு வுண்டு,

---

[1] 'அவன் நடந்ததை அப்படியே ஒப்புக் கொண்டான்' என்று ஒரு வரியும் ஆங்கிலத்தில் உள்ளது.

யிவர் சீமை யுண்டு, யிந்தப்படிக்கி யிருக்கிறதென்று பேசித் தீத்து முசியே புசி தம்முடைய யிடத்துக்குப் போனார். யிது ஆவணி மாசம் 10 தேதி நடந்து 11 தேதி வெகுமதி ஆச்சு தென்று காகிதாசு புக்கன்சி கடைக்கு ஆற்காட்டுக்கு யெழுதி வந்தது. ஆற்காட்டிலே யிருந்து நேத்து ராத்திரி அஞ்சு நாழிகைக்கு யிவ்விடத்துக்குக் கபுறு வந்தது" என்று சொன்னோம். "நேத்து ராத்திரி வர்த்தகன் மனுஷன் வந்து சொன்னான். நாமும் வந்த மனுஷர் ரெண்டு பேருக்கு ஆறு ரூபாய் வெகுமானம் குடுத்தோம்," என்று (துரை) சொன்னார்.

அந்த மட்டுக்கும் அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்திருக்கையிலே, நம்முடைய மளிகை நல்லதம்பி செட்டி அருணாசல செட்டி[1] பத்து மணிக்கு விழுந்து போனான் யென்று வந்து சொன்னார்கள். உடனே மேலுகிரி செட்டியாரையும் சொக்க முதலியாரையும் அனுப்பிவைச்சோம். அவர்கள் போய் ராமகிஷ்ண செட்டியுடனே சொன்ன வயணம் : "அருணாசல செட்டி விழுந்து போனானே, பிள்ளை அவர்கள் கணக்குத் தீரவேணுமே, வெகுபணம் வரவேணும். கும்பினீருக்கும் பணம் செல்லவேணுமென்று எட்டு நாளைக்கு முன்னே வந்து சொன்னதுக்கு அப்படி கொஞ்சம் சுவஸ்தமானவுடனே வந்து கணக்கு தீர்ந்து உண்டான பணம் சம்மதி பண்ணுகிறாரென்று சொன்னாரே, அவரானால் விழுந்துபோனால் போலே ஆச்சுதே. யிதுக்கு நாதன் (பொறுப்பாளி) ஆரென்று கேட்டதுக்கு, "அதுக்குத் தடையென்ன? அருணாசல செட்டி தமையன் குமாரன் எல்லாத்துக்கும் தறணி யாயிருக்கிறான். கருமாந்திரம் கழிச்சு, அதன் பிறகு கணக்கு தீந்து, உண்டான பணம் சம்மதி பண்ணுகுறோம்," என்று (ராமகிருஷ்ண செட்டி சொன்னார்). யிந்தப்படிக்கி அவன் சொல்ல வேண்டாமா வென்று கேட்டார்கள்.

கேட்டவுடனே அவன் வீட்டுக்கு யெதிர் வாசல் திண்ணை ஓரத்திலே யிருந்து கொண்டிருந்த நொண்டிக்கால் அய்யங்காரைப் போய் வீட்டிலே யிருந்தவனை அழைத்துவரச் சொன்னார். உடனே கனகசபை செட்டி[2] வந்தான். வந்தவுடனே ராமகிருஷ்ண செட்டி அவனைப்பார்த்து சொன்ன வயணம் : "யெசமானர் சொக்கப்ப முதலியாரையும் மேலுகிரி செட்டியாரையும் அனுப்பிவிச்சார்கள். முன் எட்டு நாளைக்கு முன்னே சேஷய்யங்காரையும் அனுப்பி வைச்சோம். அதுக்கு அருணாசல செட்டியார் எல்லாத்துக்கும் சுவஸ்தமானவுடனே வந்து பேசித் தீத்துப் போடுகிறேன் யென்று சொன்னாரே, யிப்போ வானால் தேவகெதி யிப்படி யிருந்துதே, கணக்கு தீரவேண்டியதற்கும் பணத்துக்கும் பாத்தியம் வேணுமே யென்று

[1] நல்லதம்பி மகன் அருணாசல செட்டி.

[2] அருணாசல செட்டியின் அண்ணன் மகன்.

கேழ்க்குறார்க" ளென்று சொன்னதுக்கு, கனகசபை செட்டி ... "நாளது வரைக்கும் (வட்டி உட்பட கணக்குக்கு) நான் பாத்தியம். அதுக்குத் தடையென்ன? என் தகப்பன் தாமுமிருக்கிறார். கணக்கு தீத்துப் போடுகிறேன் ... பணமும் நானே உத்திரவாதம் பண்ணுகுறேன். யென்னை ரெக்ஷிக்கிர பாரம் பிள்ளை அவர்களுடையது," என்று உபசாரமாய் சொன்னான். யிதுக்கு சாக்ஷி, எதிர்த் திண்ணையே (இருந்து) கேட்டிருந்த அருணாசல செட்டி குமாஸ்தா, வடக்கே சரக்கு கொள்ளப் போயிருந்த திருவேங்கிடநாதப் பிள்ளை தம்பி எல்லப்பிள்ளை, மத்தும் அங்கே யிருக்கிற செட்டிகளும் கேட்டிருந்தார்கள்.

*1756 வருசம், செப்தம்புறு மாசம், தேதி 8; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 27; புதவாரம்*

இத்தனாள் சிரஞ்சீவி அப்பாவுக்கு சீமந்த மானபடியினாலே வீட்டிலே கலியாண சம்பிரமமெல்லாம் நன்றாய்த் தானே நடந்தது. அப்பாவுக்கு சரீரம் லெகு வானதினாலே லெங்கணத்திலே யிருந்தான்.

கோட்டையிலே (என்டபல்லி) பல்லி கிருஷ்ணராயன் வந்து சொன்ன சேதி: உதயத்திலே சந்தினோர் காக்கிற விடத்திலே ஒரு காகிதமிருந்ததாகவும், அதை நாலு பேருக்குக் காட்டி அவன் ஒரு வெள்ளைக்காரன் கையில் குடுத்ததாகவும், அவன் கும்பினீர் சேவுகன் கையில் குடுத்ததாகவும், அவன் தொரை கிட்ட குடுத்தானென்றும், துரை அதைப் பார்த்துக் கொண்டதாகவும், அதிலே ஆரோ பேர் ஊரில்லாமல் தொரை மேலே குத்தங்கள் யெழுதியிருந்தது. உடனே மொரைக்கி கோபஞ் செனிச்சு, அந்தக் கடுதாசி முசியே தெவோவுக்கும் பின்னையும் ரெண்டு மூணு வெள்ளைக்காரருக்கும் காண்பிச்சு, அந்தச் சேவுகனைக் கூட்டி வந்து யிது உன் கையிலே ஆர் குடுத்தாரென்று கேட்டார்களாம். அவன் வெள்ளைக்காரனைச் சொன்னதாகவும், அந்த வெள்ளைக்காரனை அழைச்சுக் கேட்டதாகவும் அவன் சந்தினோர் காக்கிற சட்டைக்காரனைச் சொன்னதாகவும், அவனை அழைச்சுக் கேட்டதுக்கு, அங்கே கோட்டை வாசல் திறக்கையிலே மாடப்பிறையிலே வைச்சிருந்தது, நாலு பேருக்குக் காட்டி எடுத்தே னென்று சொன்னதாகவும், அதன் பேரிலே அல்லாரையும் கோபம் பண்ணி, யினி மேலப்படி ஆராகிலும் காகிதங் கொண்டு வந்தால் தாம் பார்த்துக் கொள்ளுகிற வரைக்கும் கொண்டு வந்தவனை வைச்சுக் கொண்டிருக்கிறதென்று திட்டம் பண்ணினாரென்றும் சொன்னான்.

சாயங்காலமானதும் மால் தீவுலே யிருந்து கப்பல் வந்தது. அதிலே சோகி (?) வந்தது. (துரைக்கு) மால்தீவு ராசாவின் காகிதமும் வெகுமதியும், நமக்கு ராசா காகிதம் வெகுமானம் பாயும் வந்தது.

*1756 வருசம், செப்தம்புறு மாசம், தேதி 9; தாது வருசம், ஆவணி மாசம், தேதி 28; குருவாரம்*

இத்தனாள் காலமே சேஷாத்திரிப் பிள்ளை அவர்களுக்குச் சரீரம் சுவஸ்தமில்லாததினாலே, காரைக்காலிலே யிருந்து நேத்து கலியாணத்துக்கு வந்த கந்தப் பிள்ளை (யோடு) கனகம்மாளையையும்[1] திருமலைப் பிள்ளையையும் சிரஞ்சீவி அய்யாசாமியையும் பயணம் பண்ணி செங்கல்ப்பட்டுக்கு அனுப்பிப் போட்டு, நாம் கோட்டைக்கு வந்த யிடத்திலே, கும்பினீர் வர்த்தகர் காரிக்கம் பிடவையும் காரைக்கால் வர்த்தகர் ரவை செல்லாவும் பார்வையிட்டுக் கொண்டிருந்தார்கள். அங்கே சின்ன துரையும் முசியே மீராவும் யிருந்தார்கள். அவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணிக் கொண்டோம். அப்போது மால் தீவுக் கப்பலிலே வந்த ராசாவினுடைய குமாஸ்தா துரையவர்களுக்குக் காகிதம் ரெண்டும் பாயும் கடல் தேங்காயும் கொண்டு வந்தான். உடனே அவனையும் கூட்டிக் கொண்டு துரை கிட்டப்போய்க் கண்டு, அவனையும் காண்பிச்சுக் கொண்டு இரண்டு பாயும் கடல் தேங்காயும் கொடுப்பிச்சோம். அப்போது அந்தக் கடுதாசியை வாங்கி வைச்சுக்கொண்டு அவனை வந்தியா வென்று கேழ்க்கிறதுக்கில்லாமல் மையமாய் வாயைக் கெட்டியாய் மூடிக்கொண்டு, வெறுமனே இருந்தார்.

அப்படி யிருக்கையிலே முசியே மீரா வந்து, "காரைக்கால் வர்த்தகர் ரவை செல்லா (முன்பு கொண்டு வந்ததுக்கும் இப்போ) கொண்டு வந்ததுக்கும் மெத்த வித்தியாசமாயிருக்கிறது. நீங்கள் வந்து பார்க்கவேணும்," யென்று அழைச்சார். உடனே (துரை) யெழுந்திருந்து மெத்தையைவிட்டுக் கீழேயிறங்கி பிடவை பார்க்கிற சாலையிலே வந்து அந்த செல்லாவைக் குஞ்சங்கள் எண்ணிப் பார்க்கச் சொல்லி யெண்ணிப் பார்த்துபிறகு, நாளைக்காகட்டும் யென்று வைச்சுவைக்கச் சொல்லி, பத்து மணி வரைக்கும் அந்தப் பிடவை பார்க்கிற சாலையிலே தானே யிருந்து, அந்த சல்லா பதினாலு குஞ்சமிருக்க வேணுமே யெத்தனை குஞ்சமென்று கேட்டார். பதிமூணு குஞ்சம் யிருக்கு தென்றும் சொன்னார்கள். யின்னம் நாலஞ்சு பிடவை யெண்ணிப் பார்க்கச் சொல்லிப் போட்டு, துரையுஞ் சின்ன துரையும் எட்டரை மணி முதற்கொண்டு பத்தரை மணிவரைக்கும் அஞ்சு நாழிகை விடாமல் பேசினார்கள். என்ன பேசினார்களோ தெரியாது. ஆனாலும் முசியே லெனுவார் நான் கோட்டையிலே வந்தவுடனே என்னைக் கண்டு, பெட்டியிலே யிருந்த பணமெல்லாம் சிலவழிஞ்சுப் போச்சு, யிந்த மாசத்தைக்குப் பணமில்லை யென்று சொன்னான். அதுக்கு சுவாமி யிருக்குறார் என்று சொன்னேன். அவனும் அப்போ வந்து

---

[1] காலஞ்சென்ற பிள்ளையின் தம்பி மனைவி.

துரையுடனே பேசிப் போனான். ஆகையாலே பணத்து நிமித்தியம் பேசினதாய்க் கண்டுது. அதன் பேரிலே முசியே கொற்ணேத்தும் கோட்டை சம்பிரதி (கணக்கன்) வெள்ளைக்காரரும் முசியே மீராவும் சின்ன துரையும் கூடிப் பேசினார்கள். யிப்படி அவரவர் கூடிப் பேசி துரை மச்சுமேலே போனார். நாம் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

***1756 வருசம், செப்த்தேம்புறு மாசம், தேதி 13; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 1; சோமவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே மெத்தை மேலே போய் துரையவர்களைக் கண்டோம். முசியே தொபேன் (Tobin) கூடயிருந்தார். அப்போது துரையவர்கள் சொன்னது, "கருங்குழி சீர்மை கலீல் தாலூக்கிலே உன்னுடைய அமுல்தாரர் சிறிது வித்தியாசங்களாய் நடத்தினார்களா? அவர்களைக் கொண்டு வந்து காவலிலே வைச்சிருக்குதே, அது சேதி யென்ன?" வென்று கேட்டார். "மெய்தான். ஆதியிலே நான் அமுல்தாரர் நேமிச்சு விசாரிச்சுப் போட்டோம். இங்கிரேசுக்காரர் கலீல் வந்தது. அது வரவே யிங்கே யிருந்து முசே தெருஷே கலீல் தாலூக்குக்குக் கொமுசேராய் போனார். அவர் போன நாள் முதல் சொன்னபடிக்கெல்லாம் (தான்) அமுல்தாரரைக் கேட்டு நடந்து கொள்ளச் சொல்லித் திட்டம் பண்ணினார் யென்று அமுல்தாரர் யெழுதி யனுப்பினார்கள். நானும் அந்தப்படியே முசியே தெருஷே யெப்படி சொல்லுகிறாரொ அந்தப்படிக்கி நடந்து கொள்ளுகிறதல்லாமல், யேறத்தாட்சியாய் நடந்தால் உங்கள் பிராணனுக்கு (ஆபத்து) வரும் (என்று எழுதி அனுப்பினோம்). அதன்பிறகு அமுல்தாரர் அனுப்பிவிக்கிற காகிதத்திலே கொமுசாய் சொன்னபடிக்கி நடந்து கொள்ளுகிறோமென்று யெழுதுவார்கள். அதுக்கு நான் அவர்கள் சொன்னபடிக்கி நடந்து கொள்ளவுமென்று யெழுதுவேன். யிப்போது அமுல்தாரர் யெழுதி யனுப்பின காகிதங்களெல்லா மிருக்குது. நான் யெழுதின காகிதங்களுக் கெல்லாம் நக்கல் யிருக்குது. முசே தெருஷே அனுப்பின காயிதமிருக்குது. யிதெல்லாம் பார்த்துக் கொண்டால் தெரியவரும்," மென்று சொன்னேன். அப்போது முசியே தெபெனெ யிருந்து அவர்கள் உம்முடைய அமுல்தாரர் ஆமோ, அல்லவோ, வென்று கேட்டார். "அதுக்கென்ன? நான் அமுல்தாரர் நேமிச்சேன். சகலமும் அவர் உத்தாரப்படிக்கி நடந்து கொண்டார்கள். அதினாலே நமக்கென்ன?" வென்று சொன்னேன். அப்போ துயைரவர்கள், "நீ சொன்னது மெய் தான், அது நியாயமே. சரி யிப்போது நாம் சொல்லுகுறோம் : யின்று முதற்கொண்டு நீ உன் மனுஷரைப் போட்டு உன் கஸ்தலிலே (பொறுப்பிலே) அவ்விடத்துக் காரியமெல்லாம் விசாரிச்சுக் கொண்டு, அடிக்கடி நமக்குக் கபுறு சொல்லு. யிந்த சீனயோரும் அறியச் சொல்லிக் கொண்டு வா. யிதுக்கு முன் விசாரிச்சு (கணக்குகளைப்

பார்த்து) சொல்," என்று சொன்னார். அதுக்கு நான், "யிது வந்து யிங்கிரேசுக்காரர் கலீலே சேர்ந்த சம்மதி. இதுக் கெல்லாஞ் சீனயோர்கள் பார்க்க வேண்டியது," யென்று சொன்னேன். அதுக்கு துரையவர்கள் சொன்னது : "அப்படித் தேவையில்லை. யின்று முதல் நீ விசாரிச்சுக் கொண்டு அடிக்கடி கபுறு சொல்," என்று சொன்னார். பின்னையுந் துரை சொன்னது: "யிப்போது காவலிலே வைச்சிருக்குதே, அவர்களை அனுப்பி விசாரிக்குறதானாலும் விசாரிச்சுக் கொள்ளு, வேறே அமுல்தாரர் அனுப்பிகிற தானாலும் அனுப்பிவிச்சு விசாரி," யென்று சொன்னார். அதுக்கு நான், "இவர்களை அனுப்பப் போகாது. வேறே மனுஷரை யனுப்பி விசாரிக்க வேண்டியது," என்று சொன்னேன். அப்படியே வேறே அமுல்தாரரை அனுப்பி விசாரிச்சுக் கொள்ளச் சொல்லி நிறை உத்தாரங் குடுத்தார். நல்லதென்று சொன்னேன்.

அதன் பேரிலே, முசியே தெபோனை அனுப்பிப் போட்டு, புதுச்சேரி காசு[1] போலே திருவண்ணாமலையிலே காசு போடுகிறார்களாம். முசியே பொலோ வந்து சொன்னார். அந்தக் காசென்று சிறிது காசுங் கொண்டு வந்துக் குடுத்தார். அதென்ன?" வென்று கேட்டார். மெய்தான் நானுங் கேட்டேன் என்று சொன்னேன். அது யேது, யெப்படிப் போடுகிறதென்று சொன்னார். அதுக்கு நான் யிந்தப் புதுச்சேரிக் காசு யிங்கே (பணத்துக்கு) அறுபத்து நாலு வீதம் விற்கிறது. இது வெளியிலே கொண்டு போய் நாற்பது நாற்பத்தஞ்சு வீதம் விற்பார்கள். யிதினாலே வெகு பேருக்குப் பிழைப்பு உண்டென்று சொன்(னேன்). இதுக்கென்ன செய்ய வேணுமென்று கேட்டார். அவர்களுக்கு எங்கள் காசு நீங்கள் போடுகிற தேது யென்று எழுதி யனுப்ப வேணும் யென்று சொன்னேன். அதுக்கு உள்ளே போய் அந்தக் காசிலே நாலு மூன்று காசை யென் கையிலே தந்து, யிதை நீ விசாரிச்சு வந்து சொல்லு. அப்படியே எழுதி அனுப்புவோமென்று சொல்லிப் போட்டு, கொஞ்சம் காரியமிருக்குது. நீ வீட்டுக்குப் போ வென்று சொல்லி அனுப்பிவிச்சார். அந்த மட்டுக்கும் அனுப்பி விச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

### *1756 வருசம், செப்தேம்புறு மாசம், தேதி 14; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 2; செவ்வாய்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் துரையவர்களைக் கண்டு காண்பிச்சுக்கொண்டோம். அவர் மெத்தை மேலே உலாத்திக் கொண்டிருந்தார். இப்படியிருக்கையிலே, முசியே பொலோ செஞ்சி கொம்மாந்தா மொரு காசு ஆர் கிட்டவும் வாங்கத் தேவையில்லை யென்று பத்திரப்படுத்தி வந்திருக்க, அவரது பாராக்காரர், சிப்பாயிகள் வழியிலே

---

[1] காசு ஒரு செம்பு நாணயம்.

சனத்துக்கு ஒரு ரூபாய் வீதம் பிடிச்சு வாங்கினார்கள் யென்று சேதி கேட்டுது. அதுக்குச் சாதகமாய் வக்கீல் மைத்தப் பேர் அவர்களையும் அழைச்சுக் கொண்டு துரையண்டைக்கு வந்தார். அவர் வந்தவுடனே துரை யவர்களையும் கூட்டிக் கொண்டு காம்பிராவிலே போனார்கள். அந்த மட்டுக்கும் நாம் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1756 வருசம், செப்தேம்புறு மாசம், தேதி 17; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 5; சுக்கிறவாரம்*

இத்தனாள் காலே கோட்டைக்குப் போன விடத்திலே முசே லெறி துரையவர்களும் கோன்சேலியேர்களும் பிடவை பார்க்கிற சாலையிலே யிருந்து, ரவை செல்லாவைப் பார்த்துக் கொண்டு யிருந்தார்கள். சின்ன துரை நியாயந் தீர்க்கிற சாவடிக்குப் போயிருந்தார். முசியே தெவோ பங்காளப் பிடவை சலவை பார்த்துக் கொண்டிருந்தார். யிப்படி யிருக்கையிலே முசே புசி, முசியே லாசு, முசியே சொபினே அவர்களுக்கும் சலாபத்து சங்குக்கும் சமாதானமான சேதிக்கு முசே புசி காகிதம் வந்தது. அந்த சந்தோஷத்து நிமித்தியம் இருபத்தோரு பீரங்கி போட்டார்கள்.

அப்படி யிருக்கையிலே வில்லியநெல்லூர் கொம்மாந்தாம் அந்த வூரிலே கலியாணமானாலும் ஒருத்தர் செத்தாலும் மேளம் தமுக்கு நசர் வைத்து தம்முடைய உத்தாரத்தின் பேரிலே கொட்டுகிறதே யல்லாமல், மைத்தப்படி கொட்டத் தேவையில்லை யென்று திட்டம் பண்ணினதாக முசியே பொலோ அவர்களுடனே வந்து அந்த வூரார் சொல்லிக் கொண்டார்கள் என்று முசியே போலோ, அவர்களையும் கூட அழைச்சுக் கொண்டு, துரையவர்களுக்குச் சொல்லி, அப்படி யொருக்காலும் யில்லாதது யிப்போது நடத்தத் தேவையில்லை யென்று கண்டிப்பாய்க் காயிதம் யெழுதி அனுப்பினார்கள்.

ரவை செல்லா யிருபத்தி ரெண்டு கட்டு விழுந்தது. அதின் பேரிலே துரையவர்கள் மெத்தை மேலுக்குப் போனார்கள். எல்லாரும் வீட்டுக்குப் போனார்கள். நானும் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1756 வருசம், செப்த்தேம்புறு மாசம், தேதி 18; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 6; சனிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே முசே தெலி (M. Tilly) பங்காளத்துப் பிடவை பார்க்கிற சாலையேப் போய், பிடவை பார்த்துக் கொண்டிருந்தார். துரை அவர்களும் கோன்சேலியேர்களும் முசியே புசிக்கும் சலாபத்து சங்குக்கும் சமாதானமானதுக்குக் கோவிலுக்குப் போய் சுவாமியைப் பிரார்த்திச்சுக் கொண்டு, பூசை கேட்டு

மெத்தை மேலே வந்து ஒருத்தருக்கொருத்தர் உபசாரஞ் சொல்லிக்கொண்டு, தம்பூறு அடிச்சு, இப்படி யிருக்கையிலே, நான் போய் துரைக்குப் பூச்செண்டும் கொடுத்து காண்பிச்சுக் கொண்டிருக்கையிலே, துரையவர்கள் சாவடி மணியக்காரரை அழைப்பிச்சு முன்னாலே வில்லியநெல்லூரிலே யிருந்து நெல்லு வந்தால், தீர்வைச் சாவடியிலே யெப்படி வாங்கிறதென்று கேட்டார். அதுக்கு மணியம் அழகப் பிள்ளை சொன்னது : "ரங்கப்ப முதலியார் கையிலே வாங்கினது நூத்துக்கு மூன்றும், கன்னியாஸ்ரீ மகமை அரையும் ஆக மூணரை வீதம் வாங்கி வந்தோம். அதன் பிறகு முசியே கொதே வந்த பிறகு, வழுதாவூர் தீர்வையைத் தள்ளிப் போட்டு சகலமான பேருக்கும் நூத்துக்கு ஒன்று உபரியாய் வைத்து வாங்கிக் கொள்ளச் சொல்லித் திட்டம் பண்ணினார். இப்பால் அந்தப்படிக்கி வாங்கிக் கொண்டு வருகிறோம். ஆனதினாலே வில்லியநெல்லூர் நெல்லுக்கு நூத்துக்கு நாலு அரை 4½ வீதமாச்சுது," யென்று சொன்னான். ஊரிலே சில்லரைக்கு வாங்கிற தெப்படி யென்று கேட்டார். ஊரிலே பருத்திகு பாரிலே (சில்லரைக்கு?) வாங்கிறது நூத்துக்கு ஆறே முக்கால் வீதம் என்று சொன்னான். அதுக்கு குண்டூர் ராமாஞ்சி செட்டி யிருந்து, நயினார் மகிமை, கோபால மகமை, ஊர்க் கணக்கு சில்லரை (கணக்கருக்குச்) மகமை (என்று) இதிலே சிறிது தள்ளுப்பட்டுப்போம். மத்தது கும்பினீருக்குச் சேரும்," யென்று சொன்னான். அதுக்கு, கும்பினீருக்கு எவ்வளவு யென்று கேட்டார். அதுக்கு மகமையிலே நூத்துக்கு ஒன்றே கால் வராகன் சேரும் யென்று சொன்னான். அதுக்கு கந்தப்ப முதலி, யிதுக்கும் அதுக்கும் வித்தியாசம் ஒரு விராகனென்று சொன்னான். அதுக்கு துரை சொன்னது, "ரங்கப்ப முதலி கும்பினி காரியமாய்ப் பார்த்தான். அதினாலே அப்படி நடந்தது. உங்களுக்குக் குத்தகையாச்சுதே? உங்களுக்கு அப்படி நடக்குமா?" யென்று கேட்டார். அதுக்கு ராமாஞ்சி செட்டி சொன்னது: "நாங்கள் கும்பினீர் மனுஷரல்லவா? (குத்தகைக்கு இப்போ எடுத்து குத்தகை வாங்குகிறோம்). அப்படிச் சொன்னா லெப்படி?" என்று சொன்னான். அதுக்கு துரை, நல்லது யோசனை பண்ணிக் கொண்டு சொல்லுகுறோ மென்று சொல்லிப் போட்டுக் காம்பிராவிலே போனார். நான் அந்த மட்டுக்கும் பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

***1756 வருசம், செப்த்தேம்புறு மாசம், தேதி 19; தாது வருசம், பிடட்டாசி மாசம், தேதி 7;***

இத்தனாள் ஆதிவாரம் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே முசியே புசிக்கும் சலாபத்து சங்குக்கும் சமாதானமான சந்தோஷ பண்டிகையான படியினாலே முன்னுதாய் துரை மெத்தை மேலே வீடுகளெல்லாம் திறந்து வைத்து, தீனியும் வைச்சு,

துரையும் கோன்சேலியேரும் ஒபிசியாலுமார்கள் கணக்கர் வகையரா வெள்ளைக்காரர் யெல்லாரும் கூட யிருக்கையிலே, நாம் போய் நூறு விராகன் நசரும் வைத்து "உங்களுக்கு சுவாமி இன்றையதினம் யிந்த சந்தோஷங்கள் கொடுத்தாப்போலே, இன்னம் வெகு சந்தோஷம் தயவு பண்ணுவார்" யென்று உபசாரங்கள் சொல்லி, பூச்செண்டுகள் கொடுத்து காண்பிச்சுக் கொண்டு உடனே கும்பினீர் வர்த்தகர் நசர் 21 விராகன், பாளையக்காரர் நயினார் கலியாணத்துக்கும் (சேர்த்து) 120 விராகன், காரைக்கால் கும்பினீர் வர்த்தகர் வி 42, துறையூர் வைக்கீல் கோனேரி நாயக்கன் வி 21 நசறும், வினாயகப் பிள்ளை மொகரா அஞ்சு– யிந்தப்படிக்கி அவரவர் நசர் வைச்சுக் கண்டார்கள். அப்பால் துரையவர்கள் சாப்பாட்டிலே யிறங்கினார்கள்.[1]

அதன் பேரிலே பெரியண்ண முதலி (என்னுடனே) சொன்னது : "முசியே தெவோ, முசியே தெலார்சு, முசே தெபோஷேசத்து மூன்று பேரும் முசே போஷேத்து (?) வீட்டிலே முந்தாம் நாள் பேசியிருந்து போன பிறகு முசே தெவோ வந்து பேசின தென்ன வென்று முசே பொஷேத்தைக் கேட்டேன். அதுக்கவர் சொன்னது : "ரங்கப்பிள்ளை முசியே தெவோ போய் விசாரிச்சு வந்த தாலூக்குக்கு யினிமேல் அவருக் கதிகாரம் கவையில்லை, அவர் மனுஷரேதாகிலும் சொன்னால் கேழ்க்கத் தேவையில்லை யென்று அந்தந்த அமுல்தாரருக்கு யெழுதி அனுப்பினாராம். அதுக் கோசரம் அவர் துரையுடனே சொல்லித் தமக் கதிகாரம் யிருக்குதென்று (விளக்கி), பணம் காசு யிவர் வசத்திலே செலுத்தச் சொல்லியும் துரை கடுதாசி யெழுதியனுப்பப் போறாராம், யின்னம் நாலஞ்சு நாளையிலே கோன்சேல் கூடுவார்கள் போலே காணுதென்றும் சொல்லிக் கொண்டிருந்தார்கள்; ஆனபடியினாலே நாமென்னத்துக்கு சும்மா யிருக்கிறோம்? யிவர் செய்யூர் பணச் சம்மதி குடுக்கவேணுமே, அது குடுக்க வில்லையென்று கோன்சேலிலே சொல்லட்டுமா" யென்று (கேட்டார்). அதுக்கு நான் "வழுதாவூர் மட்டும் போய் இரண்டு மூன்று நாளையிலே வருகுறேன், வந்தவுடனே அது தீத்துப் போடுகிறது தானெ"ன்று சொன்னேன். "நீங்களும் நான் வந்து அழைக்கிறேன். ஒரு தரம் அவர் வீடு மட்டுக்கும் வரவேணும், அவருக்கு நம்முடைய காரியமெல்லாம் அனுகூலமாய்ப் பேசத்தக்கதாகத் திட்டமாய்ப் பேசியிருக்கிறேன். நீங்களும் வந்தால் சமாதானமாய்ப் போகு," மென்று (பெரியண்ண முதலி) ரொம்பவுஞ் சொல்லிப் போட்டுப் போனான். அதன் பேரிலே ராமாசி பண்டிதரை அழைச்சு, முசியே பொலோ அண்டைக்குப் போய், அவருக்கு யிது வரைக்கும் (நான்) துரையவர்கள் கையிலே யெழுதிக் கொடுத்த பித்திசாமங்க ளெல்லாம் நக்கல் யெழுதி

[1] நாம் ரூபாய்க்கு 'ரூ' என்றெழுதுவது போலே, அன்று வி என்பது விராகனைக் குறித்தது.

யிருக்கிறதை அவருக்குக் காண்பிச்சு, முன் நடந்த சேதிகளும் இப்போ முசியே தெவோ நடத்துகிற சங்கதிகளும் எல்லாஞ் சொல்லச் சொல்லி, ராமாசி பண்டிதரை அனுப்பிப் போட்டு, நம்முடைய சாவடி அக்கிரகாரத்திலே துறையூர் வைக்கீல் கோனேரி நாயக்கன் நமக்கு விருந்து பண்ணிக் கொண்டிருக்கிறபடியினாலே அந்த விருந்துக்காக திருவேங்கிடபுரத்துக்குப் பத்து மணிக்கு வந்தோம்.

முசே தெவோ நேத்து ஆறாந் தேதி (துரை) அவர்கள் கையிலே (பதினோரு) பர்வானா (வாங்கினார்). அவர் விசாரிப்பு திருவதி பஞ்சமால், சிதம்பரம் பஞ்சமால், சிவப்பட்டணம் உள்பட பதினோரு தாலூக்குக்குப் பதினோரு காகிதமும், எல்லாத்துக்கும் ஒரட்டாக ஒரு காகிதமும் வாங்கினார். அந்தக் காகிதத்திலே எழுதி யிருந்த வயணம் : அந்த தாலூக்கு (களின் பேரை எழுதி), அமுல்தாரர் நாட்டார் குடிகளுக்கு முசே தெவோ அவர்கள் உங்கள் சீர்மைகளைக் கணக் கெல்லாம் (சரி பார்த்தார்); அந்தக் கணக்குப் படிக்கு உண்டான பணம் (அவரது துபாசியான பாப்பய்யப் பிள்ளை) வசத்திலே செலுத்தி, அவர் ஆணை ஆக்கினைக்கு உள்ப்பட்டு நடந்து கொள்ளவும்," யென்று யெழுதி யிருந்தது. அதுக்கு நக்கலும் வந்தது.[1]

யின்று பண்டிகைக்குக் கோவிலுக்குப் பூசை கேழ்க்க துரை போயிருந்த போது யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள்.

### *1756 வருசம், செப்த்தம்புர் மாசம், தேதி 20; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 8; சோமவர்ரம்*

இத்தனாள் காலமே திருவேங்கிடபுரத்திலிருந்து ஆறு மணிக்கு வீட்டுக்கு வந்து கோட்டைக்குப் போகாமல் வீட்டில் தானே யிருந்தோம். மத்தியானம் முசியே பொலோ வரச் சொல்லி யனுப்பினதினாலே சாயங்காலம் முசியே பொலோ யண்டைக்குப் போன விடத்திலே, அவர் சொன்னது : "சீமா மூலத்திலே நாம் கணக்கு விசாரிச்சு வந்த தாலுக்கு(க்கு) யெல்லாம் அவ்விடத்திலே நடப்பிலே உண்டான பணங்களெல்லாம் நாமழைப்பிச்சுச் செலுத்த வேண்டியிருக்கிறது. ஆகையாலே நீர் அந்த தாலுக்குகளிலே யிருக்கிற அமுல்தாரர் தாசீல்தாரர் யிவர்களுக் கெல்லாம் மெத்தவும் கண்டிப்பாக எழுதி யனுப்பி விச்சு, அவ்விடங்களிலே யிருக்கிற மகசூல்களிலே ஒரு காசு ஆகிலும் சிதறாமல், சிப்பந்திக்குக் கூட ஒரு காசு கொடாமல் சேகரித்து, முன்னிலுவையும் குடிகள் பேரிலே யிருக்கிறதினாலே, குடிவாரம் கூட விடாமல் சகலமும் ஒப்படி பண்ணி உடனுக்குடனே (மகசூலை) வித்து, அந்த ஷணமே

[1] இது தொடர்பாக நமது பிள்ளை செப்டம்பர் 7 அன்று பொயிலோவுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினார். அது ஆங்கிலத் தொகுதியில் இணைப்பாகத் தரப்பட்டுள்ளது.

பணங்களைக் கட்டி, இவ்விடத்துக்குத் தம்மண்டைக்கு அனுப்பச் சொல்லி நீரும் கடுதாசி யெழுதும். நாமு மெழுதித் தருகுறோம். யிதை அனுப்பி விச்சு பணங்களெல்லாம் நம்மண்டையிலே வந்து சேரும் படியாக ... தாக்கீது அனுப்பிவியு," மென்று சொன்னார். நாமும் உடனே ராமாசி பண்டிதரை அங்கே வைச்சு, முசியே பொலோ (வின்) துபாசி முத்தப் பிள்ளையும் கூடயிருந்து அவர் தாலுக்கு சீர்மைக்கெல்லாம் காகிதமெழுதச் சொல்லித் திட்டம் பண்ணினோம். அப்போது துபாசி முத்தப் பிள்ளை காகிதம் வேணுமென்று கேட்டான். அதுக்கொரு நாழிகை (முசியே பொயிலோ) யோசனை பண்ணி, "என் கையிலே சீர்மைக்கு யெழுதுகிறதுக்குக் காகிதம் (கொஞ்சம்) யிருக்குது. கோட்டையிலே நாலு ரெண்டு வாங்கிக் கொண்டு வந்தேன். அதை உன் கையிலே தந்தாலெப்படி?" யென்று சொல்லி, இரண்டு காகிதம் மெத்தப் பிரயாசத்துமேலே குடுத்து அதன் பிறகு என்னைப் பார்த்து, "இந்த வந்தவாசி முதலான தாலூக்கு கணக்குலே இசாரா, பேரீசுதானே?" வென்று கேட்டார். அதுக்கு "யிந்தப் பேரீசு கும்பினீர் பேரீசு அல்ல. நமக்கும் யிசாராதாருக்கும் தீத்து யெழுதிக் கொண்ட பேரீசு. நமக்கும் கும்பினீருக்கும் பேரீசு வேறே. அந்தப் பேரீசு அல்ல யிது," யென்று சொன்னோம். "அப்படியா, அது யித்தனை நாளும் நான் கும்பினீர் பேரீசென்று அல்லோ யெண்ணி யிருந்தேன். (இவை) களெல்லாம் நம்முடைய கும்பினீர் பேரீசு யென்று அல்லோ எழுதி வைச்சேன். அதை நான் நிசமா யெண்ணி அல்லோ யித்தனை நாளும் கணக்கும் யெழுதினேன். இனி மேலிந்த கணக்கெல்லாம் நான் கிழச்சல்லோ யெழுதவேணும்? உன்கிட்ட யிருக்கிற ராமாசி பண்டிதர் கீழே நாலு (சம்பளக்காரன்) யெழுதுகிற கணக்கை யித்தனை நானெழுதினேன்?" என்று வெகு வியாசடையாய் ரெண்டு நாழிகை நேரம் தன் துபாசி முதலான பேர்கள் பேரிலே யெல்லாம் கோபம் பண்ணினார். அதன் பிறகு நான் சொன்னது : "அவர்கள் பேரிலே யேன் கோபம் பண்ணுகிறீர்? கும்பினீ(ருக்கு நான் பதில் சொல்லவே வேண்டாமா? குடிகள் எனக்குப் பதில் சொல்ல வேண்டாமா?) அதினாலே அவர்கள் என்னைக் கும்பினியாய் வைத்து எழுதினார்கள்," யென்று சொன்னேன். அதுக்கு, "நீர் சொன்னது நிசம்தான். அது யித்தனை நாளும் எனக்குத் தெரியாதே போச்சுது," யென்று சொல்லி, அங்கே கோபம் தணிஞ்சு, கூட கணக்கு யெழுதின வெள்ளைக்காரனை அழைத்து, இந்தக் கணக்கெல்லாம் கிழிச்சல்லோ யெழுத வேண்டியிருக்குது? இதுக்கெப்படி உபாயம்?" என்று கேட்டார். அதுக்கு, "இது வந்து கும்பினீர் பேரீசு அல்ல. இது ரங்கப்பன் கையிலே யிசாராதாரர் தீத்து யெழுதிக் குடுத்த பேரிசு யென்று யின்றைய தினம் ரங்கப்பன் சொல்ல நானறிஞ்சேன், யென்று யெழுதிக் கையெழுத்துப் போட்டால், இத்தனை நாள் தெரியாமலிருந்து

இன்றைக்குத் தெரிஞ்சுக்கொண்டேன். என்றெழுதுகிறது உம்முடைய யோசனைக்கி (அறிவுக்கு) யிளப்பமாய் அல்லோ தோணும்," யென்று (அவன்) சொன்னான். அதுக்கு உனக்கென்ன தெரியுமென்று நம்முடைய பேரிலே கொஞ்சம் கோபம் பண்ணினார்.[1] நமக்கென்ன வேண்டியதை செய்யட்டுமென்று சும்மாயிருந்தேன்.

அதன் பிறகு விழுப்புரத்துக் குடியான பேர் மகா செனங்கள் யின்ன மேன் வரயில்லை என்று கேட்டார். "இப்படி யெங்கே யாகிலும் உண்டா?[2] லக்ஷம் விராகன் சீர்மைக்கு நிறுவாகம் பண்ணுகிற குடிகள் அவர்கள். துலுக்காணியத்திலே (முஸ்லீம் ஆட்சியில்) கூட அடிக்கடி குடிவாங்கி (குடி பெயர்ந்து) அடுத்த வூரிலே போயிருப்பார்கள். அவர்களைப் போய் உடம்படிக்கை பண்ணி அழைச்சு வருகிறதே அல்லாமல், பிலவந்தமாய்ப் பிடிச்சு வரப்படாது. அப்படிப் பிலவந்தமாய்ப் பிடிச்சு வருகிறதானால் சீமா மூலத்திலே யிருக்கிற குடிகளெல்லாம் மலைச்சு ஓடிப்போமே," யென்று சொன்னேன். அதுக்கு, "அப்படித் தேவையில்லை. யிப்போதும் நான் கண்டிப்பாய்க் காகித மெழுதுகிறேன். நீயும் தாக்கீதுக் காகித மெழுதி, அவர்களைப் பிடிச்சபிடியிலே கட்டிக் கொண்டு வரச் சொல்லி யெழுதச்" சொன்னார். நல்லதென்று அந்தப்படிக்கிக் காகிதமெழுதச் சொன்னேன்.

அதன்பிறகு, "யின்றைக்கு சந்தா சாயபு மகன் துரைக்கி வெகுமானம் கொண்டு வந்தானே, அப்போ அங்கே யெல்லாம் உன்னைத் தேடினேன். நீயேன் வரயில்லை? துரையானால் நீ தன் கிட்டவந்து காத்திருக்கிறதில்லை, அழைச்சுப் போகவிட்டாலும் உடம்பு சுவஸ்தமில்லை யென்று சொல்லி அனுப்பிப் போட்டு, தேவடியாக்களையுங் கூட்டிக்கொண்டு வேடிக்கையாய்த் திரியுறான், அவனுடைய சமயம் பாத்து நான் பேச வேண்டியிருக்கிறதே யல்லாமல், அவன் கும்பினீர் காரியத்திலே யிருக்கிறவனாய் யென் கிட்ட வந்து காத்திருந்து அழைச்ச வேளைக்கு வந்து பேசுகிறானா யென்று சொன்னார். இப்படி நீ நடக்கலாமா?" வென்று கேட்டார். அதுக்கு நான், "மெய்தான். எனக்கு சித்திரை வையாசி மாசம் சரீரம் லகுவன்றிலே யிருந்துது. அப்போது நானெங்கே போகப் போறேன்? மத்தப்படி நான் காரியங்களைப் போய்ச் சொல்லப் போனாலும் அதுக்கு மறு உத்திரம் சொல்லுகிறதுமில்லை. நன்றாய் காது குடுத்துக் கேழ்க்கிறதுமில்லை. முசியே லெனுவார், முசியே தும்மா, முசியே துப்பிளேயிக்சு[1] யெல்லாரும் என்னுடைய வார்த்தை யென்றால் நன்றாய்க்

---

[1] இவ்விவரம் முழுவதும் தனக்கே விளங்காமல் படியெடுத்தவர் எழுதியுள்ளார். ஆங்கில வாசகம் இங்கே மாறுபடுகிறது.

[2] "அவர்களை நீங்கள் எதிர்பார்க்க முடியாது," என்று ஆங்கிலப்பதிப்பில் உள்ளது.

கேழ்ப்பார்கள். தங்கள் மனதிலே யிருக்கிற சேதி யெல்லாம் யென்னுடனே நன்றாய்ச் சொல்லுவார்கள். நானும் அவர்கள் மனசு வர நடந்து கொள்ளுவேன். இவரானால் கிட்ட சேர ஒட்டுகிறதில்லையே. நான் செய்ய வேண்டியதென்ன?" வென்று சொன்னேன். அதுக்கு, "அப்படிச் சொல்லுவார்களா? ஒருத்தர் அப்படி யிருப்பார்கள், ஒருத்தர் யிப்படி யிருப்பார்கள். அது வந்து நம்முடைய வேளை, குணமென்று நாம் விடாமல் போய்ப் பார்க்க வேணுமே யல்லாமல் அப்படி விட்டுவிடப்போமா?" யென்கிறதாய்ச் சொல்லி வீட்டுக்குப் போகச் சொன்னார். நல்லதென்று அனுப்பிவிச்சு வந்து யெழுதின காகிதங்க ளெல்லாம் குடுத்து சீமா மூலத்துக்கு அனுப்பிவிட்டோம்.

***1756 வருசம், செப்த்தோம்புறு மாசம், தேதி 22; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 10;***

இத்தனாள் புதவாரம் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே துரையவர்களும் கோன்சேலியேர்களும் மெத்தை மேலே யிருந்தார்கள். நாமும் போய்ப் பூச்செண்டு கொடுத்துக் காண்பிச்சுக் கொண்டு கூடத்தானே யிருந்தோம். அப்படியிருக்கையிலே, சலாபத்து சங்கு அண்டை யிலிருந்து முசியே புசி பேரிலே பிராது கொண்டு வந்து யிருக்கிற பேர் விளங்கன் முகிலன் (மொகலாயன்) ரெண்டு மாசமாய் தாது பிராது யில்லாமல் கிடந்தவனை, யிப்போது சலாபத்து சங்குக்கும் முசே புசிக்கும் சமாதானம் ஆன சேதி வந்ததினாலே, யிந்த முகிலன் கையிலே கொண்டு வந்திருக்கிற காகிதமும் வாங்கிக் கொண்டு, அவனையும் அழைத்து பேட்டி வாங்கிக் கொள்ளுவோமென்று அந்த முகிலனை அழைக்கச் சொன்னார். அவன் வருகிறதுக்குப் பத்தரை மணி பிடிச்சது. அவனும் வந்தான். அவனை அழைச்சுக் கொண்டு துரையண்டைக்குப் போனோம். அப்போது அவன் நாற்பது அன்பது ரூபாயிலே ஒரு சீரொப்பாவும் பிடிச்சுக் கொண்டு துரையவர்களைக் கண்டு ஆலிங்கனம் பண்ணிக்கொண்டான். அதன் பிறகு துரை நடுக் காம்பிராவிலே கனப்பையின் (சோபாவின்) பேரிலே தாமிருந்து கொண்டு அவனுக்குக் கிட்ட ஒரு நாற்காலி போடச் சொல்லி அதிலே யிருக்கச் சொன்னார். அந்தப்படிக்கி அவனும் அதிலே யிருந்து கொண்டு ஒரு சரிகைப் பையிலே தொரை அவர்களுக்கு ஒரு கடுதாசியும் பிரான்சு ராசாவுக்கு ஒரு கடுதாசியும் கட்டி யிருந்தது. அதை யெடுத்துக் கொண்டு துரை முன்னே வைச்சு அவன் சொன்னது : "நவாபு சலாபத்து சங்கு அவர்களுக்கும் முசியே புசி அவர்களுக்கும் சமாதானமாய்ப் போச்சுதே. சுவாமி தயவினாலேயும் உங்களுடைய யோகாதி சயத்தினாலேயும்

---

[1] துய்ப்ளே கூட கடைசி ஆண்டுகளில் இப்படிச் செய்யவில்லை.

சமாதானமானதே அல்லாமல் வேறே யில்லை. அது நல்லதாச்சுது. ஆனாலும் யிப்போது நான் கொண்டு வந்த காகிதத்தைத் தொட்டு காரியமில்லாமல் போனாலும் ஒரு தரம் பார்த்துக் கொண்டு எனக்கு மறு உத்திரம் குடுத்தனுப்ப வேண்டிய," தென்று சொன்னான். "மெய்தான். நம்முடைய அதிருஷ்ட்டம் நல்லதா யிருக்கிறதுனாலே சமாதானம் ஆச்சுது. யிப்போதும் அந்தப்படியே காகிதம் குடுத்தனுப்பி வைக்கிறோம்," யென்று சொல்லி யென்னைப் பார்த்து, "பிரான்சு ராசா அவர்களுக்குக் காகிதம் வந்து யிருக்குதே, அது யினிமேல் அனுப்ப வேண்டிய தென்ன?"[1] வென்று கேட்டார்.

அதுக்கு நான் சொன்னது: "கலாபமாயிருந்த வேளையிலே யெழுதியனுப்பினதாமே. இப்போது சமாதானமாகிப் போச்சுதே. யினிமேல் நாமதை அனுப்ப வேண்டியதென்ன?" வென்று சொன்னேன். அதின் பேரிலே துரை பேருக்கு வந்த கடுதாசியை யென் பேருக்குத் தந்து, யிதிலே யெழுதி யிருக்கிற மத்தலப்பை சொல்லச் சொல்லிச் சொன்னார். அந்தக் கடுதாசியிலே யெழுதியிருந்த மத்தலப்பு, "முன்னாலே யிதாயித்து மொகதின் கான் முசபர் சங்கு அவர்களைப் புதுச்சேரியை விட்டு முசியே துப்பிளேயிக்சு அவர்கள் முசியே புசியையும் அவர் பிறகே தண்டு கூட்டி அனுப்புகிறபோது, மாசம் ஒன்றுக்கு லக்ஷத் தன்பதினாயிரம் ரூபாய் வீதம் குடுத்து வரச் சொல்லி மோகாப் (நிபந்தனை) பண்ணி அனுப்பிவைச்சார். அந்தப் படிக் குடுத்து வந்தோம். இப்பால் காசுதின் கான் நம்முடைய பேரிலே ராச காரியமாய் வருகுறாரென்று சேதி வந்தபோது, சிறிது பலன் கூட்டிக் கட்டவேண்டி முசியே புசிக்கும் உத்தாரங் குடுத்து மாசம் ஒன்றுக்கு ரெண்டு லெக்ஷம் ரூபாய் வீதம் மோகாப் பண்ணினோம். முசியே புசியும் யெங்கள் பிறகே வந்த நாள் முதலாக நமக்கு மனது வர நடந்து கொண்டபடியினாலே, நாமும் பின்னையும் விசேஷமாய்த் தானே சகல காரியங்களிலேயும் அவரை மொகனையாய் (முன்) வைத்து நடத்தி வைச்சுக் கொண்டு வந்தோம். மச்சிலி பந்தருக்கு வந்தவிடத்திலே தம்முடைய சம்பளத்துக்குத் தனகா பண்ணி (அந்தச் சீமையைக் கொடுக்க) வேணுமென்று கேட்டார். அப்போது நம்முடைய கசானாவிலேயும் பணங்காசு கொஞ்சந் தட்டான வேளையாயிருந்த படியினாலே, ஸ்ரீகாகுளம், ராசமகேந்திரம், யெல்லூர், மிறுத்துசா (முர்த்தசா) நகர் வகையிரா அஞ்சு மகல், வருஷமொன்றுக்கு முப்பத்தி ரெண்டு லெக்ஷம் ரூபாய் யெடுக்கிறது, முசே புசி வசம் பண்ணிப் போட்டோம். இப்பால் முஸ்தாபா நகர் என்கிறதைத் தம்முடைய வசம் பண்ண வேணும்,

[1] 'அதை இனிமேல் அனுப்பவேண்டுமா?' என்பது பொருள். மொகலனை அண்டையில் வைத்துக் கொண்டு அவனுக்கு விளங்காத பிரெஞ்சில் அல்லது போர்த்துக்கீசியத்தில் பிள்ளையும் லெறியும் பேசி யிருக்கவேண்டும்.

உள்ள பணம் குடுக்கிறோமென்று சொன்னார். அதுக்கு நல்லதென்று வருஷமொன்றுக்கு ஏழரை லெக்ஷம் யெடுக்கிறது, அதுவும் அவர் வசம் பண்ணினோம். நாலு வருஷமாச்சுது. முப்பது வருஷமட்டுக்கு (அது தனக்கு) வேணுமென்று யெழுதினார். "யிது வாசித்துச் சொல்லுகையிலே துரை சொன்னது, "அந்தச் சீமை யித்தனை பணம் யெடுக்குதா? சும்மாயதுகளை ஒசத்தி யெழுதினார்," என்று சொன்னார். அப்பால் அந்தக் காகிதத்தில் (எழுதியிருந்தது): "இப்படி யெல்லாம் வரவேண்டியிருந்தாலும், முசியே புசி நம்முடைய யிடத்திலே நடந்து கொள்ளுகிற பிரீதியினாலேயும், முன்னாலே நமக்குப் பண்ணின நன்மையினாலேயும், நாமிதல்லாம் (காதிலே) வையாமலிருந்தோம். யிப்படி யிருக்கையில் கோசா கலந்தர் கான் மகன் யிவர் யிடமாய்ச் சேர்ந்த பிறகு, முசே புசி நம்மைத் தாழ்த்தியாய்ப் பேச்சுவார்த்தைகளிலே (சொல்லி), ஒசந்து பேசிக் கொண்டுவந்தார். அதுவும் நான் மனதிலே வையாமல் பண்ணுகிற மரியாதை தப்பாமல் தானே நடத்திவிச்சுக் கொண்டு வந்தோம். அப்படியிருக்க நாம் கோல்கொண்டா மசிலிலே யிறங்கியிருக்கிற போது முசியே புசி நாமிருக்கிற யிடத்துக்கு வந்து, சுத்திலும் மனுஷரை வைச்சு நம்மைப் பிடிக்கத் தக்கதாக யோசிச்சு, தாம் நம்மண்டைக்கு வந்து நம்மைப் பார்த்து, "நீ நமக்கு யெசமானாயிருக்கிறதுக்கு லாயக்கில்ல. நீ சின்ன புத்திக்காரன்" என்று மிப்படி யெல்லாம் தப்பிதமாய் உத்தாரங்கள் சொன்னார். அப்போது நாம வருக்கான உத்திரம் அவருக்கு அமர் (அமைதியாய்ச்) சொல்லி, யிவர் நம்மை மோசம் பண்ணயிருக்கிறாரென்று நா முன்னாலே கேட்டிருந்தபடியினாலே அதுக்கான பிலன் பண்ணிக் கொண்டு நானுமிருந்த படியினாலே, அவரை மார்க்கமாய்க் கொண்டு வந்து சாவனூர்–பங்காபுரம் யாத்திரையான (பயணமான) பிறகு, அதுக்கேத்தபடியா யிவரை மொள்ள கழுத்தி பாதர்பு பண்ணி (அமைதியாக) அனுப்பிவிட்டபடியினாலே, அவருக்குச் சம்பளத்துக்கு விட்டிருந்த சீமைகளை சப்த்தி பண்ணச் சொல்லி அனுப்பியிருக்கிறோம். யினிமேல் நமக்கு பெலன் வேண்டும் போது தங்களுக்கு யெழுதி அனுப்பிவிச்சுக் கொள்ளுகிறோமென்று எண்ணியிருக்கிறோம். அந்த சீமையிலே தங்கள் மனுஷரிக்கிறதாமே ஆகையினாலே (அவர்களுக்குத்) தாங்க ளெழுதி அனுப்பி வைச்சு அழைப்பிச்சுக் கொள்ளவேண்டியது," என்று அந்தக் காகிதத்திலே யெழுதியிருந்தது. யிதெல்லாம் பிறம்பாயிருந்து கேட்டுக் கொண்டு யிப்படியிருக்கையிலே, ராசாக் காகிதம் அனுப்பி வைக்கிற தல்லவே யென்று சொல்லிப் போட்டு, அந்த முகிலனுக்குப் பன்னீரும் பாக்கு வெத்திலையும் குடுத்து அனுப்பிவைச்சார்.

யிதுக்குள்ளே நாலு தரம் முசியே தெவோவை அழைப்பிச்சுப் பேசினார். அது பாத்தால் நம்முடைய சீமா மூலப் பேச்சாகவே கண்டுது. அதன் பேரிலே நம்மைப் பார்த்து யிப்போ யிருக்கிற கம்பு மாசூல் சீமா மூலத்திலே என்ன காணு மென்று கேட்டார். "நாலு மாசமாய் யென் கஸ்தலிலே (நிர்வாகத்திலே) சீமை யில்லாமலிருக்கிறதினாலே எப்படி யெனக்குத் தெரியும்?" யென்று சொன்னேன். அதுக்கு முசியே தெவோ, "சீமை உன் கஸ்தலிலே யில்லை யென்கிறது மெய்தான். முசியே பொலோ, முசியே கில்லியார் இவர்களிரெண்டு பேரும் விசாரிப்பு (செய்கிற) சீமை உன் கையிலே தானே யிருக்கிறது. உன் மனுஷர்தானே அங்கே யிருக்கிறார்கள்?" என்று சொன்னார். அதுக்கு என் மனுஷரென்கிறது மாத்திரமே அல்லாமல் ஒடுதி யெல்லாம் அவர்களுதே, என்னுதல்ல," வென்று சொன்னேன். "அது மெய்தான். ஆனாலும் உன் மனுஷரிருக்கிற தாலே யிந்த கம்பு சித்திலே யிருக்கிற பலன் இவ்வளவென்று உனக்குத் தெரியாமல் யிருக்குமா சொல்லு?" என்று கேட்டார். அதுக்கு, "நாளை நன்றைக்கு வந்து சொல்லுகிறேன்" யென்று சொன்னேன். "அப்படியல்ல, கும்பினிரிலே ஒரு காசில்லை. ஆகையினாலே நாளைக்குத் தானே வந்து சொல்லவேணும்," யென்று சொன்னார்.

"கல்லக்குறிச்சி தாலூக்கிலே கோந்துவார் என்கிறவன் வருகிற பணம் யெல்லாம் கொண்டு போறான் யென்கிறதாய்ச் சேதி கேட்டோம். அலமாங்கி (அலமாஞ்சி) கொம்மாந்தானுக்கு அந்த முஸ்ததாரன் (குத்தகைக்காரன்) இருபத்தாராயிரம் ரூபாய் குடுக்க வேணுமென்றும், அவன் அந்தப்பணம் யெல்லாம் கொண்டு போறானென்றும் சேதி கேட்டோம். அது யேது?" என்று கேட்டார். அதுக்கு அந்தச் சீமைக்கி யிசாராதாரன் அப்பு (அபு) மகம்மது. சாமீன் தாரன் இன்னான் (வேறே இருக்கிறான்). அவ்வளவே. அன்றிலே (இருந்து) நான் வெள்ளைக்காரருடனே பேசினதேயில்லை. சாமீன்தாரனை (வரச்சொல்லி) அனுப்பினதாய்க் கேட்டேன். நமக்கென்ன அவன் வேண்(டின) பேரை அனுப்பட்டும். நான் (நிர்வாகத்தில் இருந்தவரையில்) அவர்களைப் பணத்தைக் கேட்டு, ருசு (சாட்சி) பண்ணிக் கொண்டிருக்குறேன். யிப்பால் நடுவிலே (என் நிர்வாகம்) அத்துப் போச்சுது. ஆனபடியினாலே யிப்போது நீங்களதுக்கு போதெல் (உத்தரவு) குடுத்தால் அவரவரை கண்டிச்சுப் பணம் வாங்கலாம்," என்றும் சொன்னேன்.

அதுக்கு, "யிப்போவானால் கும்பினீரிலே ஒரு காசில்லை. ஆகையினாலே குடிவாரங் கூட ஒழக்கு தானியங்கூட விடத்தேவையில்லை. சாகுபடி யில்லாவிட்டாலும் போகட்டும். நீ யெப்படி கண்டனை தெண்டனை நடக்க வேணுமோ அந்தப்படி நடத்தி வைச்சு, பணம் சேகரம் பண்ணு," யென்று சொ(ன்னார்).

அதன் பிறகு குண்டுரோர் மாசூல் (தவறு. ராமசூலச்) செட்டி நரசிங்கச் செட்டி யிவர்கள் வந்து, வில்லியநெல்லூர் நெல்லு சம்மதி தீத்துத் தரவேணுமென்று சொன்(னார்கள்). இவர்களை முன்னே விட்டு, நான் சொன்னதுக்கு முன் நடந்த சேதி என்னவென்று கேட்டார். அதுக்கு முன்னாலே முசியே துப்பிளேயிக்சு நடத்தினதும், இப்பால் முசியே கொதே நடத்தினதும், யிதுவெல்லாம் நடந்த வயணப்படிக்கிச் சொன்னவிடத்திலே, அதெல்லாம் நன்றாய் கவனிச்சுக் கேட்டு, அதன் பிறகு தாம்தானே கையினாலே மூணரை நாலரை (ஐந்தரை) யென்று விலை (விரலை) மடக்கி யெண்ணிப் பார்த்துக் கொண்டு, அதன் பேரிலே ரங்கப்ப முதலியார் நாள்படிக்கு வாங்கிக் கொள்ளச் சொல்லி சாவடி மணியக்காரருக் கெல்லாம் சொல்லச் சொல்லி சொன்னார். நல்லதென்று சொன்னேன்.[1]

### *1756 வருசம், செப்த்தேம்புறு மாசம், தேதி 25; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 13; சனிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே மெத்தையின் பேரிலே நானும் கும்பினீர் வர்த்தகரும் கூடப் போயிருக்கையிலே பா(ர்)த்து, துரை அவர்கள் காம்பிராவிலே யிருந்து கொண்டு அழைக்கச் சொன்னதின் பேரிலே, கும்பினீர் வர்த்தகரையும் கூட்டிக்கொண்டு போய்க் கண்டோம். தொரை அவர்கள் ஒன்றும் பேசாமல் அரை நாழிகை மட்டுக்கும் வெறுமனே யிருந்தார். அதின் பேரிலே நான், "சகலாத்துச் சம்மதி கும்பினீர் வர்த்தகருடனே பேசி அழைச்சுக் கொண்டு வரச் சொன்னீரே அவர்கள் வந்திருக்கிறார்கள்," யென்று சொன்னேன். அதுக்கு யிவர்களுக்கு சகலாத்து விலை தெரியுமா? வென்று கேட்டார். அப்போது வற்தக(ர்கள்),[2] யிது தொரையைத் தொட்டுயில்லை, நாம் (தான்) பண்ணிவிக்கிறதா யெண்ணிச் சொன்னார்கள். அதுக்கு நான் தொரை (கப்பல் நிமித்தியம் வேறே) விசாரமாயிருக்குறார் என்று சொல்ல, அதன் பேரிலே, "வற்த்தகர் நூறு கட்டுக்கு மேலே யெடுக்க மாட்டார்கள். விலையிலே யெவ்வளவாகிலும் நயம். பண்ணவேணு," மென்று சொன்னேன். நல்லதென்று சொன்னார். அதின் பேரிலே முசியே

[1] வெள்ளைக்காரக் கொம்மந்தாம்கள் சீமைக் குத்தகைப் பணத்தைச் சுருட்டிக் கொண்டு போக அவர்களைத் தட்டிக் கேட்காமல், 'குடிகள் வரட்சியில் வெள்ளாமை இல்லாமல் போனாலும் போகட்டும், நீ அவர்களைப் பிடித்து, தண்டித்து எப்படியாவது எங்கள் கம்பெனிக்குப் பணம் சேகரம் பண்ணிக் கொடு' என்று தமிழராகிய பிள்ளையை ஆளுநர் கேட்பதைக் காண்க. இதுதான் வெள்ளையராதிக்கத்தின் உண்மைச் சொரூபம். இப்படியே சுதேசிகளைக் கையாட்களாகக் கொண்டு, சுதேசிகளைச் சுரண்டினர் வெள்ளையர்; யானையைக் கொண்டே யானையைப் பிடிப்பது போல.

[2] இந்நூல் முழுவதும் வற்தகர் என்றே எழுதப்பட்டுள்ளது.

கொற்னேத்துக்குச் சொல்ல வேணு மென்று சொன்னேன். அதுக்கும் வெறுமனே யிருந்தார். அதன் பேரிலே நானாய் "நீங்கள் சொன்னீர்களென்று சொல்லவா?" யென்று சொன்னேன். நல்லது சொல்லென்று சொன்னார். அந்த மட்டுக்கும் வற்தகரை வெளியே போயிருக்கச் சொல்லிச் சொன்னேன்.

அதன் பிறகு துரையிருந்து கொண்டு, "சீமையிலே எவ்வளவு மகசூலிலே வருமென்று முந்தாம் நாளே கேட்டேன். யேன் சொல்லயில்லை?" யென்று கேட்டார். அதுக்கு முசியே பொலோ அவர்கள் விசாரிப்பிலே சீர்மையிலும், முசியே கில்லியார் விசாரிப்பு சீமையிலே கூட ஒக்தோபர் மாசம் முப்பதாந் தேதிக் குள்ளே யிருபதினாயிரம் யேற, யிருபதினாயிரம் குறைய லெக்ஷம் ரூபாய் கண்டிப்பு மேலே அறுவு பண்ணினால் வரும். யிதல்லாமல் கார்த்திகை மாசம் மார்கழி மாசம் நெல்லு பலன் வேறே வரும். அது வேறேயிருக்கு," தென்று சொன்னேன். அதைக் காரியமாய்த் (கவனமாய்த்) தானே கேட்டார்.[1]

அதன் பேரிலே திருவணாமலையிலே புதுச்சேரிக் காசு அடிக்கிறது நிசமா வென்று கேட்டார். மூன்று மாசமாய் அடிக்குறார்களென்று சொன்னேன். அதுக்கு என்ன செய்ய வேணு மென்று கேட்டார். "மமுதல்லி கானுக்கு யெழுதினால் நவாபு என்றல்லவோ யெழுதவேணும். அப்படி நீங்கள் யெழுதுகிறதல்லா. ஆகையாலே சென்னப்பட்டணம் கோவர்ணதோர் பேருக்கு யெழுதுகிறது யுக்த," மென்று சொன்னேன்.[2]

நல்லதென்று சொல்லி, "சென்னப்பட்டணத்துக்கு அப்றில் மாசம் 26 தேதிக்கு, நம்முடைய சித்திரை மாசம் 16 தேதி, பிறப்பட்ட ரெண்டு கப்பல் வந்துதாம். நமக்கும் கப்பல் வந்தால் பணம் கோட்டில்லாமல் (கேடில்லாமல்) காரியமெல்லாம் நன்றாய் நடக்கு," மென்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது, "யிதெல்லாம் துரைத்தனம் பண்ணுகிறவர்களுடைய யோகத்தினாலே வருகிறது. உங்களது அதிருஷ்ட்டம் நல்ல அதிருஷ்ட்டம். யெப்படியென்றால், முசியே புசிக்கும் சலாபத்து சங்குக்கும் சமாதானமானது பெரிய அதுருஷ்ட்டம். ஆகையாலே கப்பலும் வரும், பட்டணத்துக்கும் சுகம் உண்டு," யென்று சொன்னேன். இது உண்டான பேச்சு தான் யென்று சொன்னார். அதன் பேரிலே கும்பினீர் வற்தகர் யிந்த வேளைக்கி சகலாத்து (broadcloth) 200–300 கட்டு யெடுத்துக் கொண்டு பணம் குடுக்கமாட்டார்களாயென்று கேட்டார்.

---

[1] 'அதையே மீண்டும் கேட்டார்' என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

[2] இப்படியே சென்னை ஆளுநருக்கு எழுதியதாகவும், அவர் (பிகட்) முகமதலிக்கு எழுதியதாகவும், "அது வழக்கமாக நடந்து வருகிறதுதானே," என்று முகமதலி சொன்னதாகவும் Country Correspondence என்ற நூலில் உள்ளது. (காண்க : ஆங்கிலப் பதிப்பு பக். 215.)

அதுக்கு "அவர்களிந்த நூறு கட்டு யெடுத்து, யிதுக்குப் பிடவை கூட்டிப் போட்டால் போறாதா? அத்தனைக் கிவர்கள் யோக்கியரா?" வென்று சொன்னேன். அதுக்கு, "யிந்த வூரிலே ஆரும் பெலத்த வற்தகரில்லை," யென்று சொன்னார். மெய்தானென்று சொன்னேன்.[1]

அதன் பிறகு துறையூர் சம்மதிக்கி, "முன்னாலே உங்களுக் கிருபதினாயிரம் ரூபாயும், எனக்கு அய்யாயிரம் ரூபாயும் சொல்லியிருக்குறார்களென்று சொல்லியிருந்தேனே, அதுக்கு முன்னாலே விராகன் ஒன்றுக்கு ரூபா நாலு வீதம் ரூபா யிருபத்தினாயிரத்துக்கும் பறங்கிப்பேட்டை விராகன் அய்யாயிரம் கொண்டு வந்து குடுத்தார்கள்... எனக்குச் சொன்ன அய்யாயிரம் ரூபாயிலே நாலாயிரம் ரூபாயிக்குப் பறங்கி விராகன் ஆயிரம் விராகன் கொண்டு வந்து வைச்சுக் கொண்டிருக்கிறார்களென்று நான் உங்களுக்குச் சொல்லியிருந்தேனே, அந்த விராகன் வந்திருக்கு," தென்று சொன்னேன். அதுக்கு அவர்களை அழைப்பி யென்று சொன்னார். அப்போது கோனேரி நாயக்கன் ஆயிரம் விராகனையுங் கொண்டு வந்து துரை அவர்கள் முன்னே வைச்சு சலாம் பண்ணிக் கொண்டான். அவரைப் பார்த்து யிதேது விராகன் என்று கேட்டார். (இது லெறி நடித்த நாடகம்.) அதுக்கு அவர் முன்னாலே உங்களுக்கு யிருபதினாயிரம் ரூபாயிக்கி பறங்கி விராகன் அய்யாயிரங் கொண்டு வந்து கொடுத்தோமே. அப்போது பிள்ளை அவர்களுக்கு அய்யாயிரம் ரூபாய் சொல்லியிருந்தோம். அதுக்கு யித்தனை நாளைக்கிப் பிற்பாடு யிப்போது நாலாயிரம் ரூபாயென்று விலைகட்டி, அதுக்கு பறங்கி விராகன் ஆயிரம் அனுப்பி வைச்சார்கள். அது கொண்டு வந்து குடுத்தோம். அதுக்குப் பிள்ளை அவர்கள் உங்க கிட்டத்தானே குடுக்கிறதென்று கொண்டு வரச் சொன்னார்கள். கொண்டு வந்தே," னென்று சொன்னார். அதுக்கு யென்னைப் பார்த்து ஆயிரம் விராகனுஞ் சரியாயிருக்குமா யென்று கேட்டார். சரியா யிருக்குமென்று சொன்னேன். அதுக்கு முன்னே பத்து விராகன் குறைஞ்சு தென்று சொன்னார். யிப்படித் தேவையில்லை, யிப்போ யெண்ணிப் பார்க்கலாமென்று சொன்னேன். அதுக்கு நல்லது நானிப்போ யெண்ணிப் பார்த்து சொல்லுகுறேனென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன்.

அதன்பேரிலே முசியே கில்லியாருக்கும் ரெண்டாயிரம் ரூபாய் கொடுக்கச் சொல்லிக் காகித மனுப்பி யிருக்குறோம். ஆகையினாலே,

[1] பிரெஞ்சுப் புதுச்சேரியின் நிதி சீர்கெட்டிருந்ததுக்கு இது ஒரு நல்ல சான்று. சகலாத்து என்பது ஐரோப்பிய நாட்டுக் கம்பெனித் துணி. அதை இறக்குமதி செய்து, இந்தியாவின் பருத்தித் துணியை அந்நியர் வாங்கினர்.

... ரெண்டாயிரம் வராகனும் அவர் கையிலே செலுத்தச் சொல்லி யெழுதி அனுப்பச் சொல்லென்று சொன்னார். நல்லதென்று கோனேரி நாயக்கனுடனே அந்தச் சேதியைச் சொன்னோம். அவரும் அந்தப்படியே யெழுதி அனுப்பி வைக்குறோம் என்று சொன்னார்.[1]

அதுக்குப் பிறகு கொனேரி நாயக்கர் சொன்னது. "முன்னாலே பேஷக்கஷு அன்பதினாயிரமும் கும்பினீருக்கு நகர் யிருபத்தையாயிரம் ரூபாயும் சொன்னதுக்கு தேவரீர் கும்பினீருக்குச் சொன்ன யிருபத்தை யாயிர(த்தை) முசியே குப்பி கொம்மாந்தாம் கையிலே செலுத்தி வைக்கச் சொல்லிச் சொன்னீர்கள். அந்த ரூபாய் நிமித்தியம் வந்து, துபாசி கந்தப்பன் தம்பி நயினாத்தே (நயினாதன்) யிக்கு மூவ்வாயிரம் ரூபாயும், அவனுக்கு யெசமானாக வந்த முசியே மரியோனுக்கு ஒன்பதினாயிரம், யிதல்லாமல் ரெண்டு மாதத்தையிலே அரிசி யென்றும் பிடவை அரிசி யென்றும் இவர்கள் (வாங்கிக் கொண்டது) பதினாலாயிரம் ரூபாயுண்டு. யிதல்லாமல், முசே மெதெ ரென்(கிற) சீரங்கம் கொம்மாந்தாம் எங்கள் யெசமானைப் பட்டத்திலே வைச்சதுக்கு, நாங்கள் சீரொப்பா குடுக்கப் போனால், அது வாங்குறதில்லை யென்று, சிப்பாயிகளை வைச்சு வெகு உபாதி பண்ணி, (தனக்கு ரொக்கமாக) ஆயிரம் (தவறு. ஆறாயிரம்) ரூபாயும், கொள்ளையிலே பதினாயிரம் ரூபாயுமாகப் பதினாறாயிரம் ரூபாய் கொண்டு போனார். அதுக்கு முன்னே தில்லை (Tilly) என்கிறவர் வந்து ரொக்கம் பன்னீறாயிரமும் சிறிது விக்கிரகங்களும் மத்ததும் வாங்கிக் கொண்டு போனார். யிப்படி ஆறு மாதத்துக்குள்ளே நாற்பதினாயிரம் ரூபா மட்டுக்கும் அவரவர் உபாதி பண்ணி வாங்கினால், கும்பினீர் பேஷ்கஷு எந்த விதமாய் நாங்கள் செலுத்தப் போறோம்? தனகாவுக்குச் (அடமானத்துக்கு) செலுத்திய ... பணத்தை, தங்களுக்கு நன்குடைக்காக வந்தது என்று எங்களுக்கு ரசீது குடாமல் வாயடிச்சால், நாங்கள் செய்யலாவதென்ன? இதுக்கு கும்பினீக்காகச் செலுத்திக் கொண்டதை நீங்க ளெடுத்துக் கொண்டு போகக் காரியமென்ன வென்று அவர்களுடனே கண்டிப்பாகச் சொல்லி, (அவர்கள் எடுத்துக்கொண்ட) பணத்தை வாங்காமல் போனால், அவர்கள் யெங்களை யெல்லாம் (விரைவில்) கொன்றல்லவோ போடுவார்கள்?" யென்று சொன்னார். அதுக்கு துரையவர்கள் சொன்னது: "அவர்கள் தங்களுக்கு நன்கொடை குடுத்தார்களென்று சுவாமியை நோக்கிச் சத்தியம் பண்ணுகுறார்கள்ளே. அதுக்கு நாம் செய்யலாவதென்ன? வென்று சொன்னார். அதுக்கு கோனேரி நாயக்கர், "நீங்களிப்படிச் சொன்னால் எங்களைக் கொன்று போடுவார்கள். என்ன நிறுவாகம் பண்ணப் போறோம்," என்று சொன்னார். அதுக்கு மெத்தவும் வியாசடைப்பட்டுக் கொண்டு, நல்லது முசியே

[1] பிள்ளைக்கே என்ற பணம் பெரும்பாலும் வெள்ளையருக்கே எனத் தெரிகிறது.

கில்லியார் அவ்விடத்துக்குப் போயிருக்குறார்களே அவரிடத்திலே சொல்லிக் கொள்ளுங்கோள். அவர் தீத்துத் தருவார்," என்று சொன்னார். அதுக்கு உங்கள் கடுதாசு வேணுமென்று சொன்னான். அதுக்கு, "முன்னமே எழுதியிருக்குறோம், யிப்பவும் வேணுமானால் எழுதித் தாறோம்," யென்று சொன்னார்.

அப்பால், "முன்னாலே உங்களுக்கு ரெண்டு குதிரையும் சீரொப்பாவும் கொண்டு வந்தேன். தேவரீர் வேண்டாமென்று கொடுத்துவிட்டீர்களே. யிப்போது அவர்கள் அந்தக் குதிரையும் சீரொப்பாவும் துறையூருக்கு அனுப்புகிறதாய்க் கொண்டு வாரார்கள். அதுக்குத் தேவரீரவர்கள் சீரொப்பாவுங் குதிரையும் அனுப்பி வைச்சோ மென்றும்[1] அவர்களுக்கு ஒரு காகிதமும், அரியலூராருக்கும் தஞ்சாவூராருக்கும் மிவர்கள் (எங்களுக்கு எதிராகச்) சத்துருவை சேர்க்கத் தேவையில்லை யென்று ரெண்டு காகிதமும் தயவு பண்ண வேணுமென்று," (கேட்டார்). "அதை அங்கே அவர்கள் ரொம்ப வேடிக்கையாய் (மதிப்போடு) வாங்கிக் கொண்டால் (துங்களுக்கு) ரொம்ப பிரதிஷ்டையாயிருக்கும்," என்றும் சொன்னார். அதுக்கு சீரொப்பாவும் கொண்டு வரச்சொல்லி, மதனாந்தபண்டிதருக்கு நீ சொல்லிக் காகித மெழுதி வைச்சுப் போடுயென்று சொன்னார். அதன் பிறகு, யிவர்களுக்குச் சத்துரு யிங்கேயிராமல் பண்ண வேணுமென்று சொன்னேன்... அதுக்கு அப்படியேப் பண்ணுகுறோமென்று சொன்னார். அப்பாசி பண்டிதர் முந்தாம் நாள் போனதாகக் கேட்டேனென்று சென்னேன். நான்தான் போகச் சொன்னேனென்று சொன்னார். யிதைக் கோனேரி நாயக்கனுக்குச் சொல்லவேண்டாமென்று சொன்னார். யிதிலே பின்னையும் வெகுவார்த்தை நடந்தது. அந்த மட்டுக்கும் அனுப்பிக் கொண்டு நாம் பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

### *1756 வருசம், செப்த்தோம்புறு மாசம், தேதி 26; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 14; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்ன துரை வீட்டுக்கு வந்தோம். அப்போது சின்னதுரை(யின்) பெண்டாட்டியும் (மகளும்) கோயிலுக்குப் போய் வந்தார்கள்.[2] சின்ன துரையும் பங்காளத் (திலிருந்து வந்திருந்த) கோன்சேல்காரனும் கோயிலுக்குப் போக வேணுமென்று வெளியே வந்தார்கள். அவர்கள் நாலுபேருங் கூடி நின்று பேசிக் கொண்டிருக்கையில் நாமும் போய்க் கண்டோம். அப்போது சின்ன துரை

---

[1] பிரெஞ்சு துரை தங்களுக்கு அன்பளிப்பாக இவற்றினை அனுப்பினதாகப் பிறருக்குப் படவேண்டும் எனத் தமிழ்ப் பாளையக்காரர்கள் செய்து கொண்ட பாவனை.

[2] தமிழ்ப்பிரதி வழக்கம்போல் இங்கும் தவறாக எழுதப்பட்டுள்ளது. ஆங்கில மொழிபெயர்ப்பு இல்லாமலிருந்தால் தமிழ்ப்பிரதியில் உள்ளதைப் புரிந்து கொள்ளவே முடியாது.

பேச வேணுமோ வென்று கேட்டார். பேசவேணு மென்று தான் வந்தேனென்று சொன்னதுக்கு, "நான் கோயிலுக்குப் போய் வருகுறேன், நீ யென் பெண்டாட்டியோடே பேசியிரு, கோயிலுக்குப் போய் வாறேன். அதன் பேரிலே ரெண்டு பேரும் பேசிக் கொள்ளுவோம்," என்று சொன்னார். அப்போது நான் பூச்செண்டு குடுத்தேன். அந்த பூச்செண்டைத் திரும்பவும் என் கையிலே தந்து, நீ தானே என் பெண்டாட்டி கையிலே குடுத்து கூட்டிப்போய் பேசிக் கொண்டிருயென்று சொன்னார். அப்போ மதாம் பெடுத்தல்மீ, அவர் உத்தாரம் ஆச்சுதே நீயும் நானும் பேசுவோம் வாவென்று பூச்செண்டும் வாங்கிக் கொண்டு என்னையும் கைப்பிடிச்சு அழைச்சுப் போய், நாம், மதாம் பெடுத்தல்மீ, அவள் மகள் மூன்று பேரும் யிருந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்போது மதாம் பெடுத்தல்மீ சென்னப்பட்டணத்துக்கு சீர்மைக் கப்பல் வந்ததிலே யெழுதி வந்த சேதி யென்று சொன்னது யேதென்றால், "முன் காரைக்காலிலே துரைத்தனம் பண்ணி சீமைக்குப் போன முசியே ரீசு (M. Le Riche) என்கிறவன் முசியே பெடுத்தல்மீ பேருக்கு ஒரு காகித மெழுதியிருந்(தான்)... முசே கொதே சீமைக்குப் போனவிடத்திலே, ராசாவினாலே வெகு சமாதானம் (தவறு. வெகுமானம்) பெத்தாரென்றும், கும்பினி காரியமெல்லாம் அவர் சொல்லுக்குக் கீழே நடக்குதென்றும், முசியே துப்பிளேயிக்சுக்கு யின்னம் ராசா பேட்டியுமில்லை, மந்திரிமார் பேட்டியுமில்லை, போனபோதே பிடிச்சு வீட்டுக்குள்ளே தானே கிடக்குறாரென்றும், இவருடைய தட்டு முட்டு சகலமு மிங்கே யிருந்து போன(தை) யல்லாம் கும்பினியாருடைய கிடங்கிலே (போட்டுக்) கிடக்குதென்றும், அப்பால் ராச காரியம் (சண்டை) பிரான்சு ராசாவுக்கும் (இங்கிலீசுக்காரருக்கும்) நடக்கிறத்தினாலே, பிரான்சுக்காரர் யிங்கிலீசுக்காரர் கப்பலிலே வெகு கப்பலும் அனேக சுலுப்புகளும், யிரு நூறு உருப்படி மட்டுக்கும், பிடிச்சுக் கொண்டார்களென்றும், இவர்க(ளது) கப்பலிலேயும் சிறிது கப்பல்க ளெல்லாம் அவர்கள் பிடிச்சுக் கொண்டார்களென்றும், யிப்போ யிருக்கிற இராசாவுக்கு முன்னே இராச்சியம் பண்ணின லூயிக் கத்தோர்சு (பதினான்காம் லூயி) என்கிற ராசா நாளையிலே நாற்பத்து நாலு வருஷம் ... தொப்பி போட்ட வெள்ளைக்காரரெல்லாரு(க்கும்) சண்டை நடந்த போது யிசுப்பாஞ்சு (ஸ்பானிய) இராசாவுக்கு அமெரிக்கு ராச்சியத்திலே செல்லுகிற போர் மகோம், சிலில் தாரென்கிற (Port Mahon Gibralter),[1] இரெண்டு துறைமுகப் பட்டணம் இங்கிலீசுக்காரர் பிடிச்சுக் கொண்டதை, அந்தப் பெரிய ராசா நாளையிலே கலகந் தீந்து ... சமாதானக் காகிதத்திலே கையெழுத்து விழுகிறபோது, அந்த யிசுபாஞ்சி இராசா மாத்திரம் ரெண்டு பட்டணத்து நிமித்தியம் (அவற்றை இங்கிலீசுக்காரர் தர மறுத்ததால்) தாம்

[1] மதாம் பெடுத்தல்மீ சொன்னதை பிள்ளை தவறாக எழுதியுள்ளார்.

கையெழுத்துப் போடுகிற தில்லையென்று சொன்ன போது, பிரான்சு ராசாவுக்கு (இசுப்பாஞ்சி ராஜா) பேரனானப்படியினாலே, பிரான்சு ராசா உங்களுக்கு நாம் அந்தப் பட்டணம் யெப்படியும் வாங்கித் தாரோம், யிப்போ கையெழுத்துப் போட்டுக் கொடுமென்று சொல்லி, அதன்பிறகு அவர் கையெழுத்துப் போட்டுக் குடுத்தபடியினாலே, அந்த விரெண்டு பட்டணமும் யிங்கிலீசுக்காரர் கையிலே யிருக்குது ... நாற்பத்தஞ்சு வருஷகாலம் யித்தனை சண்டையிலேயும் (அவற்றை) வாங்கிக் கொடுக்க யிடமில்லாமல் யிருந்த படியினாலே, இப்போது போன வருஷம் சண்டையிலே பிரான்சுக்காரர் போய் அந்த விரெண்டு பட்டணமும் இங்கிலீசுக்காரர் கையிலே யிருந்ததை வாங்கி, இசுபாஞ்சு ராசாவுக்குக் கொடுத்த தாகவும், அது முன்னிலையாய் வெகு கலாபம் வந்து நடக்கு தென்றும் கடுதாசியிலே எழுதிவந்தது என்று மதாம் பெடுத்தல்மீ சொன்னார்.

ஆனால் இவ்விடத்திலே பதினெட்டு மாசம் கலாபம் நிறுத்தி முசே கொதே போனாரே அதுக்கு அங்கே என்னமாய் தீந்துதோ தெரியவில்லை, அது யேதாகிலுந் தெரியுமாவென்று (நான்) கேட்டதுக்கு, அது ஆருக்குந் தெரியாது, அது வந்து முசியே கொதேக்கும் மினீஸ்தருக்கும் ராசாவுக்கும் தெரியும். மத்தப்படி யாருக்கும் தெரியாது. இனிமேல் கும்பினீயார் காகிதம் கோன்சேலுக்கு வந்தால் அதிலே தெரியுமென்று சொன்னார். ஆனால் யிப்போது யிந்தக் கப்பல்களிலே கும்பினியார் கடுதாசிகள் கோன்சேலுக்கு வந்ததில்லையா வென்று (நான்) கேட்டதுக்கு, யிதுகளிலே படுத்திகுலார் (தனியார்) கடுதாசிகள் வந்ததே யல்லாமல், வேறில்லை. நம்முடைய கப்பலிலே கும்பினீ கடுதாசிகள் வந்ததிலே காரியங்கள் பார்க்கிறது மாத்திரம் எழுதி வந்ததல்லாமல், யிப்படி தீர்மானச் சம்மதிகள் ஒன்றுமே எழுதி வந்ததுயில்லை. யினிமேல் வருகிற கப்பலுகளிலே யெழுதி வருமென்று தோணுதென்று சொன்னார். அதென்ன இந்தக் கப்பல்களிலே யெழுதி வராமல் போனது யெனக்கு மெத்த ஆச்சரியமா யிருக்குதென்று சொன்னதுக்கு, "மெய்தான் அவ்விடத்திலே நடக்கிற ராசகாரியம், கலாபங்களிலே யிது காரியம் அவர்கள் திஷ்ட்டிக்கு யெவ்வளவு? யிப்போது யிவ்விடத்திலே யிருக்கிற சேதி, முசே துப்பிளேயிக்சு பதினாறு கப்பலுடனே மயேயிக்கு வந்ததாகவும், பத்து நாளையிலே (இங்கு) வருவாரென்றும் பெரும் பேச்சாய் சொன்னார்கள் ... இப்போ வந்த காகிதத்திலே அந்த ராச்சியத்திலே (கூலிக்காரனைக் காட்டிலும்) சிறுமை யாயிருக்கிறார். அவரிங்கே பார்சாவுக்குச் சமானமாய் சகல வைபோகத்துடனே யுமிருந்தவர். அவர் மெத்த வர்மம் உள்ளவர், மிகவும் நல்லவர். அவர் பெண்சாதி மெத்தப் பொல்லாதவள். அவளாலே அவருக்கு யித்தனை யிக்கட்டும் அபகீர்த்தியும் வந்தது. அவரென்ன செய்வார்? அப்படி யிருக்க, இங்கே பிறக்கிறது யிப்படிப் பிறக்கிறது. ஆகையாலே

ஒன்றையும் நிசஞ் (நிச்சயமாய்ச்) சொல்லக்கூடாது" யென்று சொல்லி யிப்படி யிரெண்டு நாழிகை நேரம் நாலு வார்த்தையும் பேசிக் கொண்டிருந்து, கோட்டைக்குப் போறேனென்று சொன்னேன். அதுக்கு "சின்ன துரை பேச வருகிறோ மென்றாரே அது வரைக்கும் யிரு," வென்று சொன்னார். "அப்படியல்ல, முன்னே நான் செவ்வையாய் வருகிறதில்லை யென்று துரை ஆவலாதி (புகார்) பண்ணிக் கொண்டிருக்கிறார். ஆகையினாலே நான் போய் காண்பிச்சுக் கொண்டு யின்ன மொரு வேளை பார்த்து வருகுறேன்," என்று சொன்னேன்.

அதுக்கு, "முசியே லெறி யிருக்குறாரே, யிவர் வெள்ளைக்காரரை அடக்க மாட்டயில்லை. அதினாலே காரியங்களெல்லாம் கெட்டுப் போகுது," என்று சொன்னார். அதுக்கு, "நாங்கள் தமிழர். யெங்களுக்கு அதெல்லாம் தெரியுமா?" என்று சொல்லிப் போட்டு, அனுப்பிக்கொண்டு கோட்டைக்குப் போய் மெத்தை மேலிருக்கிற (துரையைக்) கண்டு ஆசாரம் பண்ணி, அங்கே யிருக்கிறதிலே, ஒரு ஒபிசியால் வந்தான். அவன் சட்டையிலே கலாம் போலே கோணக் கோண தைச்சுயிருந்தது. அதைப் பார்த்து துரையும் கோன்சேல்க்காரரும் ஒப்பிசியால்மார் சகலரும் நகைச்சு விளையாடிப் பரியாசம் பண்ணிக் கொண்டு யிந்தப்படிக்கி, ஒரு நாழிகை நேரமிருந்து அப்பால் துரை காம்பிராவிலே போனார். எல்லாரும் அவரவர் வீட்டுக்குப் போனார்கள். நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1756 வருசம், செப்த்தேம்புறு மாசம், தேதி 29; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 17; புதவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே பண்டிகையான படியினாலே துரையவர்களும் கோன்சேல்க்காரரும் ஒபிசியால்மார் சகலரும் மெத்தை மேலே யிருக்கையிலே, நாம் போய்க் காண்பிச்சுக் கொண்டிருக்கையிலே, முசியே கொற்னேத்து வந்து கும்பினீருக்குப் பணம் அவசரமானதினாலே பவழப்பெட்டி நிறுத்திப் (எடை) போடுவோ மென்று சொன்னார். அதுக்கு "ஒன்பதரை மணியாச்சுதே, பண்டிகையாகவும் யிருக்குதே, இனிமேல் அவர்களெல்லாரும் வருகிறதெங்கே? நிறுக்கிறதெங்கே? அனேகம் பேருதுதாச்சுதே," யென்று சொன்னேன். சரி, நாளைக் காகட்டும் யென்று சொல்லிப் போட்டுப் போனார். அதன் பிறகு ஒரு வெள்ளைக்காரன் கோட்டையிலே சொன்ன சேதி யென்ன வென்றால் : முசியே துப்பிளேயிக்சு பேரிலே கணக்கென்றும் வழக்கு யென்றும் சீமையிலே பிடிச்சிருக்கிறது. அதுக்கு யிந்த மாதம் 7 தேதி ஞாயித்துக்கிழமை சென்னப்பட்டணத்துக்கு வந்து சேர்ந்த இங்கிரேசுக்காரர் கப்பலிலே முசியே துப்பிளேயிக்சுக்கு பெருக்குதோறாயிருக்கப்பட்ட முசியே போஷேத்து (தெபொசேத்து), முசியே திலார்ஷு யிவர்களுக்கும் சம்பா கோவில் பாதிரிமாருக்கும் முசியே

துப்பிளேயிக்சு காகிதம் வந்த தாகவும், அதிலே முசியே பொஷேத்துக்கும் முசியே திலார்சுக்கும் வந்த காகிதத்திலே, யிங்கே (ஆவர்) காசா கொடுக்க வேண்டிய கடன் சம்மதிகளிலே சிறிது பேருக்கு அவர் சாகீர்[1] பணம் வந்து யிருக்கிறதிலே சம்மதி பண்ணச் சொல்லியும், சிறிது கணக்குகள் அனுப்பி விக்கச் சொல்லியும் எழுதி வந்ததாகவும், அது நிமித்தியம் முசியே பொஷேத்து வீட்டிலே உள்ளாகப் பத்து பேர் கணக்கரை வைத்துக் கொண்டு கணக் கெழுதி வைக்கிறாரென்றும் யிது மூன்று பிரதி யெழுதி தரங்கம்பாடிக் கப்பல் சீர்மைக்குப் போறதிலே ஒரு பிரதியும், சென்னப்பட்டணத்திலே யிருந்து சீமைக்குப் போற கப்பலிலே ஒரு பிரதியும், புதுச்சேரியிலே யிருந்து சீர்மைக்குப் போற கப்பலிலே ஒரு பிரதியும் அனுப்பிவிக்கப் போராரென்றுஞ் சொல்(கிற) படியினாலே, முசியே துப்பிளேயிக்சு அவ்விடத்திலே தானே இந்தக் கணக்கைப் பற்றின அலவலிலே யிருக்கிறதாய்க் காணுதல்லாமல், இப்போதைக்கு இங்கே வருகிறதாய்க் காணவில்லை யென்று சொல்லி (அந்த வெள்ளைக்காரன் போனான்). அந்த மட்டிலே நாம் பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

### *1756 வருசம், செப்த்தோம்புறு மாசம், தேதி 30; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 18; குருவாரம்*

இத்தனாள் காலமே சின்ன துரை வீட்டுக்குப் போக வேணுமென்று போகையிலே நாம் போகு முன்னே அவரும் பிறப்பட்டு ஒரு அடி முன்னுதாய்ப் போனார். நாமும் பிறகே துடந்தாப் போலே போனோம். அவர் கோந்துவாரிலே விறகு போடுகிற திறம் பாற்க்கிற விடத்திலே போனபடியினாலே, கணக்குப் பார்க்கப் போனதாய் நான் யோசனை பண்ணிக் கொண்டு, மெத்தை மேலே துரையண்டைக்குப் போய் துரையைக் காண்பிச்சுக் கொண்டோம். இதிலே துப்பாக்கிக் கிடங்கு கப்பித்தானாயிருந்தவன் செத்துப் போனானென்றும் மங்கள மேஸ்திரி (தலைமை சர்ஜன்) கபுறு சொன்னான். அது கேட்டவுடனே துரை காம்பிராவிலே போனார். உடனே நான் பிறப்பட்டு பவழம் நிறுக்கிற யிடத்துக்கு வந்து ராமசிவ (ராமாஞ்சுலு) செட்டி வகையராக்களை அழைப்பிச்சு, நாலு பெட்டி நிறுக்கிற வரைக்கும் யிருந்து, மூன்று பெட்டியும் நிறுத்தி வந்து கபுறு சொல்லச் சொல்லிப் போட்டு பதினோரு மணிக்குப் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தேன். பிறகு வந்த கபுறு மூன்று பெட்டியிலே ரெண்டு பெட்டி நிறுத்துக் கொண்டதாகவும், ஒரு பெட்டி ரொம்ப பீடென்று நிறுத்துக் கொள்ளவில்லை யென்றும் ஆக பதினாலு பெட்டி நிறுத்தாச்சு தென்றும் ராமா சுல(ஞ்) செட்டியும் குருவப்பச் செட்டியும் சொன்னார்கள்.

---

[1] வழுதாவூர் சீமை அவரது ஜாகீர். அதிலிருந்து ஆண்டுக்கு ஒன்றே கால் லட்சம் ரூபாய் அவருக்கு வருவாய் கிடைத்தது.

## அக்டோபர் 1756

*1756 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 1; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 19; சுக்கிரவாரம்*

இந்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே துரையவர்களும் கோன்சேலியேர்களும் பிடவை பார்க்கிற சாலையிலே யிருந்தார்கள். நாமும் போய் துரையவர்களைக் காண்பிச்சுக் கொண்டு கூடயிருக்கிறதிலே, சம்பளமானதினாலே சின்ன துரை வழியில் நாற்பதுனாயிரம்[1] ரூபா குடுக்கிறதுக்கும் ரொம்ப யோசனையின் பேரிலே கொடுக்கச் சொன்னார்கள்.

அதன் பிறகு தைரியனாத முதலியார் வெளியிலே யிருந்து ஒரு பெண் கூட்டி வந்து வீட்டிலே வைத்துக் கொண்டு, நடத்த வேண்டியதெல்லாம் (சடங்குகள் எல்லாம்) நடத்தியி இப்போது வேறே பெண் கலியாணம் பண்ணுகிறதாய் யிருக்கிறது யென்று பித்திசாமெழுதி துரை கையிலே கொண்டு வந்து குடுத்தார். அதைப் பார்த்துக் கொண்டு தைரியனாத முதலியை அழைச்சுக் கேட்டவிடத்திலே, “பெண் வந்திருக்கிறது மெய்தான். யிதெல்லாம் பாதிரிமார் விசாரிச்சு இந்தப் பெண்ணுக்கு வேறே கலியாணம் பண்ணுகிற நிலவரம் பண்ணி, ரெண்டு கலியாணத்துக்கும் சுகாலிக் கால் நாட்டி விச்சார்கள்,” என்று சொன்னார். அதின் பேரிலே பாதிரிமாரை அழைப்பிச்சு அவர்களுடனே துரையவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். பங்காளத்துப் பிடவை யிருபத்து மூன்று கட்டுப் போட்டார்கள். அந்த மட்டுக்கும் பத்து மணிக்கு நாம் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

*1756 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 2; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 20; சனிவாரம்*

இந்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே கும்பினீர் வர்த்தகர் காரிக்கப் பிடவை பார்வையான படியினாலே, சின்ன துரை பிடவை பார்க்கிற சாலையிலே யிருந்து பிடவை பார்த்துக் கொண்டு யிருந்தார். அப்போது நாம் போய்க் கண்டு ஆசாரம் பண்ணிக் கொண்டோம். அப்போது அவர் சொன்னது : காரிக்கப் பிடவை பார்க்கிறாப் போலே யாச்சுதே, சலவைப் பிடவை சீக்கிரம் வரவேணுமென்று சொன்னார். அதுக்கு வண்ணாந்துறையிலே காரிக்கம் விட்டது சலவையாகுது, அதுவும் வருகுது யென்று சொல்லிப் போட்டு,

[1] 10,000 என்று ஆங்கிலத்தில் உள்ளது.

துரையவர்கள் மெத்தை மேலே யிருந்தபடியினாலே நாமும் மெத்தை மேலே போய் துரையவர்களைக் காண்பிச்சுக் கொண்டு திரும்பவும் பிடவை பார்க்குற சாலையிலே வந்திருந்தோம். அப்போ துரை அழைக்கச் சொன்னா ரென்று வந்து (சேவுகன்) அழைச்சான். உடனே மெத்தை மேலே துரையவர்கள் கிட்டப் போனோம். துரை சொன்னது : முசியே ஒம்மோ என்கிறவன் "மங்களூரிலே யிருந்து யெழுதி யனுப்பிவிச்சான். மங்களூர் பாளையக்காரனைப் பணங் கேழ்க்கிறார்கள் யென்று யெழுதி அனுப்பி வைத்தான். நீங்களேது பணம் கேழ்க்கிறது?" என்று கேட்டார். அதுக்கு, "யிதென்னையா யிப்படிக் கேழ்க்கிறது? முசியே ஒம்மோ நிமித்தியம் அமுல்தாரன் பணம் வாங்குறது. அதுக்கு அவன் அப்படிப் பண்ணினால் அமுல்தாரன் வந்து யிவருடனே (புகார்) சொல்லிக் கொண்டால் யிவரதுக்கு மத்தத்துப் பண்ண வேண்டியது. அதைவிட்டு யிவர் தானே யிப்படி எழுதினால் மெத்த நன்றாயிருக்குது. யிப்படித் தான் ... முன்னாலே கொம்மாந்தாங்க ளெல்லாம் நடத்தித் தானல்லவோ சீர்மைப் பணமெல்லாம் முழுகிப் போச்சுது. அது நீங்கள் அறிஞ்சு யிருக்கிறீர்கள். இனி நான் சொல்ல வேண்டிய தென்ன? குமுசேராய் யிப்போ விசாரிக்கிறது அவர்களானதுனாலே அவர்கள் வந்து சொல்லுவார்கள்," என்று சொன்னோம். "அது தேவையில்லை. முசியே ஒம்மோக்கு நீரந்த வழி போகக் காரியமென்ன? அமுல்தாரன் பணம் கேட்டு வாங்கிக் கொள்ளுவான். அமுல்தாரன் வந்து உம்முடனே சொல்லிக் கொண்டால், நீர் அமுல்தாரனுக் கோசரம் மத்தத்து பண்ணுகிறதே யல்லாமல், இப்படிக் கொத்த காரியம் நீர் நடத்த தேவையில்லை யென்று கண்டிப்பாய் யெழுதுகிறோம். நீரும் அமுல்தாரனுக் கெப்படி யெழுதவேணுமோ அப்படி யெழுதி அனுப்புவியும்," என்று சொன்னார்.

அதின் பேரிலே, செஞ்சியிலிருந்து கும்மாந்தாமுக்கு அரிசி வகையிரா சாமான்கள் குடுக்கயில்லை யென்று கொம்மாந்தா னெழுதினான். ஏன் குடுக்கயில்லை?" யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "கும்மாந்தாங்களுக்கு முன்னாலே நாங்கள் குடுத்துக் கொண்டு வந்தோம். யிப்பால் நீங்களும் சின்ன துரையும் யினிமேல்ப்பட கும்மாந்தாங்களுக்கு அரிசி வகையிரா ஒன்றுங் குடுக்கத் தேவையில்லை, அரும்பாத்தை குடுப்பானென்று சொன்னீர்கள். அந்தப் படிக்கி நாமெழுதி விட்டோம்," என்று சொன்னோம். அதுக்கு நாமப்படி சொன்னோமா வென்று கேட்டார். "நீங்களும் சின்ன துரையும் சொல்லியிருக்க யிப்போ மறந்து போனா லெப்படி? அதுவுமல்லாமல் குமுசேயர்களும் போய்க் காகித மெழுதிக் கட்டி யிருக்கிறார்க ளென்று சொன்னோம். அதுக்கு நகைச்சுக் கொண்டு, (அப்படியானால்) குடுக்கத் தேவையில்லை யென்று சொன்னார்.

அதன் பிறகு, உத்திரமநல்லூர் கொம்மாந்தாம் (commandant) யிருபது கூலிக்கார ஆள் கேட்டால், கூட்டிவந்து விடப்படாதா வென்று கேட்டார். "அது என் ஒடுதியல்லா, குமுசேயர்களுடனே (commisaire) சொல்லவேணும்," என்று சொன்னேன். அதுக்கும் நகைச்சுக் கொண்டு, "அப்படித் தேவையில்லை. நீ ஆள் கேட்டால் கூலியாள் கூட்டிவிடச் சொல்லி (நீ) யெழுதி அனுப்பு," யென்று சொன்னார்.

அதன்பிறகு வில்லியநல்லூர் சீர்மை, வழுதாவூர் திருவெண்ணை நல்லூர் இந்த சீர்மை களுக்கெல்லாம் ... நீரெழுதி யனுப்பி விச்சு, முசே பந்தோ (M. Fanteaume) மென்கிறவர் போயிருக்கிறார். அவர் கையிலே தேச சாடாவும் (விஸ்தாரமும்) குளப்பிறமாணமும் (குளங்கள், ஏரிகள் கணக்கும்) எழுதிவிக்கச் சொல்லி அமுல்தாரருக்கெழுதி அனுப்புமென்று சொன்னார். அதுக்கு குமுசேயருக்குச் சொல்லுங் கோளென்று சொன்னதுக்கு, "அது தேவையில்லை. நீர் தானே யெழுதி அனுப்பும்," என்று சொன்னார். நல்லதென்று, யெழுதுகிற வயணம் முசியே ஷெவிரோ கிட்ட ஒரு சின்ன காகிதத்திலே குறிச்சுத் தரச் சொல்லிக் கொண்டு, அந்த மட்டிலே அனுப்பிக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

***1756 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 3; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 21; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே நாம் பிடவை பார்க்கிற சாலையிலே போயிருக்கச்சே மதனாந்த பண்டிதர் பாரிசுக் கடுதாசி ஒன்று கொண்டு வந்து காண்பிச்சு சொன்ன சேதி : முசியே தொத்தேல் பேருக்கு இந்தக் கடுதாசி வந்தது. அவரிந்தக் கடுதாசி ஆர் (எழுதியது) பாரென்று சொன்னார். நான் படிச்சுப் பார்த்து உம்முடைய பேருக்கு மீரு படுதுல்லா கான் (மீர் பத்ருல்லா கான்) யென்கிறவன் யெழுதியிருக்கிறானென்று சொன்னேன். அதிலென்ன யெழுதியிருக்கு தென்று கேட்டார். அதுக்கு ... 'நாம் தாலூக்குகளுடனே சேர்ந்ததுக ளெல்லாம் பந்துபஸ்துப் பண்ணப் பிறப்பட்டோம். முசியே லம்பேரென்கிறவன் (Lambert) அவன் சேமத்துடுனே (கடுதுகளுடனே –guards) நம்மண்டைக்கு வருகுறான். அவனுக்கு நம்முடனே கூட அனுகூலமாயிருந்து கவை காரியங்களிலே சபுறு சாகிறதையாயிருந்து (கவனமாக) நடந்து கொள்ளச் சொல்லி தாக்கீது பண்ணி அனுப்பிவிக்கவும். இந்த சாகா வுங்களுதா (நான் உங்களுடைய சகா என) யெண்ணி கொண்டு தயவு பண்ணி வைக்க வேணு,' மென்று, பெரிய மனுஷர் தமக்குத் தாழ்ந்த மனுஷருக்கு யெழுதுகுற சாடையாகவுமெழுதி யிருக்குதென்று சொன்னதுக்கு, முசியே தொத்தே லிருந்து கொண்டு, அவனார், அவன் யெங்கே யிருக்கிற தென்று கேட்டார். யெனக்குத் தெரியாது. இந்தக் கடுதாசி கொண்டு வந்தவனைக் கேட்டால் தெரியும் என்று சொன்(னேன்). அவன் எங்கேயோ

தெரியவில்லை, தேடிப் போய் பார்த்தாலும் தெரியவில்லை, காணவில்லை யென்று சொன்னார். ஆகையினாலே மீரு பதருல்லா கான் இங்கிலீசுக்காரர் தரப்பிலும் பிரான்சுக்காரர் தரப்பிலும் யிருக்கிற சீர்மை யல்லோ பந்துபஸ்து பண்ண வரவேணும், அது ஆரென்று தோணவில்லை யென்று சொன்னதுக்கு, மெய்தான் யென்று தொத்தேல், துரை (ஆளுநர்) யண்டைக்கு வரச் சொன்னார். போறேனென்று அனுப்பிக்கொண்டு துரையண்டைக்குப் போனார். இனிமேல் யிந்தக் கடுதாசியை வைத்துக். கொண்டு முசியே லம்பேரைக் கேழ்க்கிறதிலே தெரியும் யென்று யோசனை தோத்தித்து. இதல்லாமல் மதனாந்த பண்டிதர் சொன்னது : சலாபத்து சங்கு கற்னாட்டக சுபா(வையும்) கந்தனூ(ரையும்) முனவர்கானுக்குக் குடுத்து, முசியே புசியையும் கூட அனுப்புகிறதாய் சேதி மமுதல்லி கானுக்கு வந்ததாகவும், மமுதல்லி கான் தட்டுமுட்டு சகலமும் சென்னபட்டணத்துக்கு அனுப்பிவிச்சு தாமும் சென்னப்பட்டணம் போறதாக யிருக்கிறதாகவும் ஆற்காட்டிலே யிருந்து சேதி வந்ததென்று சொன்னார்.

*1756 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 4; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 22; சோமவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே பிடவைப் பார்க்கிற சாலையிலே துரையவர்களும் சின்ன துரை முதலான கோன்சேலியேர்களுமிருந்து காங்குப் பிடவை பார்வையிட்டுக் கொண்டு யிருந்தார்கள். அப்போது நானும் போய் துரையைக் காண்பிச்சுக் கொண்டு யிருந்தவிடத்திலே துரையவர்கள் சொன்ன சேதி : இந்தக் காங்குப் பிடவை யாருது பார்வையிடுகிற தென்று கேட்டார். அதுக்கு நாற்பது கட்டு காங்குப் பிடவை(யும்) முசியே பெடுத்தல்மீ யிருந்து கட்டுப் போடுவிக்கிறாரென்று சொன்னேன். அதின் பேரிலே மய்யிலே (Mahe) சிறுக்கானாடு (Chirik Kanadu) குலாஸ்திரி ராசா கிட்டயிருந்து வந்த பிராமணன் அங்கே வந்திருந்தான். அவனைப் பார்த்து யென்னத்துக்கு வந்திருக்கிறீரென்று கேழ்க்கச் சொன்னார். அப்போது நானந்தப் பிராமணனைப் பார்த்து நீர் வந்து யிருக்கிற காரிய மென்ன வென்று கேட்டேன். அதுக் கவன் சொன்னது : மயே மூப்பனுடைய (தலைவன்) கடுதாசியும் எங்கள் குலாஸ்தரி ராசாவினுடைய கடுதாசியும் கொண்டு வந்து கொடுத்தேன். எதுக்காக வென்று கேட்டால், காவேரி தீரத்திலே பிராமணாளுக்கு அன்னங் குடுக்க வேணுமென்று ரொம்ப அபீஷையாயிருக்குது. ஆகையால் அங்கே அய்யாயிரம் ஆராயிரம் கலம் நெல்லு காணுகிறதாய் ஒரு கிராமம் யிருக்கிறது. அந்தக் கிராமம் துரையவர்கள் எழுதிக் குடுத்தால் தர்மம் நடக்கும். அது நிமித்தியம் என்னை அனுப்பிவிச்சாரென்று சொன்னான். அவன் சொன்ன சேதி

துரையுடனே சொன்னேன். அதுக்குத் துரையிருந்து கொண்டு எங்கள் மதம் (சமயம் வேறே. அதனால்) அப்படிக் குடுக்கப் போகாது. குடுத்தால் தோவு (குறைவு) முண்டென்று சொல்லச் சொன்னார். அப்படி அவர்களுடனே சொல்லப் போகாதென்று சொன்னேன். நான் சொன்னது, "சுவாமி ஒருத்தர் யிந்தப் பிரபஞ்சங்களிலே யிருக்கப்பட்ட சகல சீவகோடிகளுக்கும் பொதுவாயிருந்து, அந்தந்த தேசங்களிலே யிருக்கிற செனங்களுக்கும் உடுபாவனை வேறே, அவரவரம் தம் (சமயம்) வேறே, யிப்படி யிருந்தாலும் சகலருக்கும் தாம் பொதுவாயிருந்து கொண்டு அவரவர் மனோ பீஷ்டைப்படிக்கி அவரவருக்குப் பலன் குடுத்துக் கொண்டு வருகுறாப்போலே, நீங்கள் சுவாமிக்கு இரண்டாவதாய் உங்களுக்குள்ளே நடக்கிற இராச்சியம் மட்டுக்கும் நீங்கள் ராசா வாயிருக்கிறதினாலே, உங்கள் கீழே சகல மதக்காரரும் யிருப்பார்கள். யெல்லாரையும் நீங்கள் சமனாய்ப் பார்க்கத் தக்கதாகவே யல்லாமல் பேகமாய் (இருத்தல் கூடாது)[1] இதை நீங்கள் ஒருத்தர் நீங்கலாக சின்னதுரை கோன்சேலியோர்கள் யென்னைப் போலெக் கொத்தவர் பேர் நாங்கள் சொல்லலா" மென்று சொன்னதுக்கு, ரொம்ப சந்தோஷமாய் நகைச்சுக் கொண்டு, அவர்கள் என்னமா எண்ணிக் கொண்டு அனுப்பினார்கள் என்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது : "நீங்கள் மயேயிலே யிருக்கிறபோது அவர்கள் பேரிலே ரொம்ப சினேகமாயிருந்தீராமே, இப்போ உங்கள் கையிலே அன்பது லக்ஷம் ராச்சியம் யிருக்க அதுக்கு ராசாவாயிருக்கிறதினாலே ... ஒரு கிராமம் தர்மம் பண்ணுகிறதுக்கு இரண்டாயிரம் ரூபாய்க் காரியம் ஒரு பார்வையா யிருக்கப் போகுதா, குடுப்பீர்கள். அதினாலே தங்களுக்கு வெகு பிறதிஷ்டையாயிருக்குமென்று யோசனை பண்ணி அனுப்பினார்க" ளென்று சொன்னேன். அதுக்கு நாம் குடுக்கலாமா வென்று சொன்னார். "அதேது குடுக்கிற மனதிருந்தால் நன்றாய் குடுக்கலாம். உங்கள் வாக்கிலே யிருந்து யென்ன பிறப்படுகிறதோ அந்தப்படிக்கி நடக்கிறதே யல்லாமல் அதுக்குத் தடையுண்டா? முசே லெனுவார் யிருக்கிற போது இந்த குண்டு கிராமம் மட்டுக்கும் அவர் நாவனசஞ்சால் நாடசையும். அந்தப்படிக்கி நடக்க யில்லையா? முசியே துப்பிளேயிக்சு யிருக்கிறபோது அவர் பேச்சல்லாமல் வேறே ஒருத்தர் பேச்சு நடக்குமா? அப்படியிருக்கிற காரியமாச்சுது. இப்போ நீங்கள் சாடையாயிருக்கிறதினாலே அவரவர் சரிப்போன படிக்கெல்லாம் நடக்குறது. இப்போ பார்த்து உங்கள் வாக்கினா லொரு வார்த்தை பிறந்தால் ஆராலே தள்ளப்படும்?" என்று சொன்னதுக்கு, அதுவுஞ் சந்தோஷமாய்க் கேட்டு, யிவனுக்குப் போக்கா யென்ன சொல்லலாமென்று கேட்டார். அதுக்குப் போக்காய்

[1] இந்துக்களின் கடவுள் தத்துவத்தைப் பிள்ளை அப்படியே பிரதிபலிப்பதைக் காண்க.

சொல்லுகிறதானால் "நாம் குடுத்தால், உங்களுக்குச் சாசுதமாய் நடக்க வேணும். யிதுக்கு நந்திராசாவுக்கும் நமக்கும் சம்மதி தீந்தல்லோ (முடியும்?) யிதல்லாமல் சீர்மைக் கப்பல் வரவு பார்த்துக் கொண்டிருக்கிறோம். அதிலென்னமாய் வருமோ தெரியாது. யெல்லாம் பார்த்துக் கொண்டு செய்யலா"மென்று சொன்னேன். நல்லது அப்படித்தானே சொல்லச் சொன்னார்கள். அந்தப்படிக்கி அவர்களுக்குச் சொன்னேன்.

அதன் பிறகு தமக்கு யேறுகிறதுக்கு அதுக்கேத்த குதிரையாய் ஒரு குதிரை வேணுமென்று சொன்னார். அதுக்கு, நல்லது சாயங்காலம் ஒரு குதிரை அனுப்பிக்கிறே னென்று சொன்னேன். அதுக்கு உன் கிட்டயிருக்கிற கறுப்புக் குதிரை வேண்டாம். அது வெகு துருசு. நான் கிழவனாய்ப் போனேன். ஆகையாலே அமந்தமாய் கால் தூக்காததாய் ஒரு குதிரை வேணுமென்று சொன்னார். அதுக்கு, "நீங்கள் கிழவனென்று சொல்லப் போமா? யென்ன வயதாச்சு? ஆனாலும் சுவாமிகள் யில்லாமல் துரைத்தனம் வறாது. உங்களிடத்தில் சுவாமிகள் யிருக்கிறதிலே நீங்கள் கிழவனென்று சொல்லுகிறதெப்படி? யிப்போது அந்தக் கறுப்பு குதிரை அல்லாமல் அமந்தமாய் நல்ல குதிரையிருக்கிறது, அனுப்பிவிக்கிறேன்," என்று சொன்னேன். அந்தப்படிக்கி சாயங்காலம் குதிரையு மனுப்பிவிச்சுப் போட்டேன். அதைப் பார்த்து வெள்ளைக்காரரை யேறச் சொல்லி, ஓட்டம் மத்ததெல்லாம் பாத்து மனதுக்குச் சம்மதமாய் அந்தக் குதிரையைத் தங்கள் லாயத்திலே கொண்டுபோய் கட்டச் சொல்லி திட்டம் பண்ணினார்.

***1756 வருசம், ஒக்தோபர் மாசம், தேதி 9; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 27; சனிவாரம்***

இத்தனாள் காலமே கோட்டையிலே வற்தகர் பிடவை பார்வையாகு தென்று சொன்னார்கள். அங்கே போனவிடத்திலே தொரையவர்கள் மெத்தைமேலே தென்பிறம் சாலையிலே ஒலாத்திக் கொண்டிருந்தார். அங்கே போய் அவரைக் கண்டு நான் சொன்னது: "மதுராந்தகத்தில் இங்கிலீசுக்கார மனுஷர் யிருந்தார்களே அவர்களிலொருத்தர் ரெண்டு பேர் கணக்குப்பிள்ளை காரியக்காரர் (மட்டும்) யிருக்கிறார்களென்றும், மைத்தப்படி சேவுகர், பாறுக்காரர் சகலரும் பிறப்பட்டு சென்னப்பட்ணத்துக்குப் போனார்களென்றும், செங்கல்பட்டிலே யிருந்த சேவுகரும் பாறாக்காரரும் பிறப்பட்டுப் போனார்களென்றும் சேதி வந்தது. யிதல்லாமல் சென்னப்பட்டணத்திலே அஞ்சுக் கப்பலும் அஞ்சு பிறக்கட்டும் (frigates) பயணமா யிருக்கு தென்றும், அப்பால் போகயில்லை யென்றுங் கேழ்விப்பட்டுது" என்று சொன்(னேன்). அது யெதுனாலே போனார்கள். தெரிய வேணுமென்று துரை (கேட்டார். அதை நான் கேழ்விப்படவில்லை, போய்விட்டார்களா, திரும்பி வருவார்களா என்பதும் தெரியாது என்று நான் சொன்னேன்).

முசியே தொத்தேல் வந்து தம் குதிரை முன் கால் மடக்குமென்றும், முசியே ஒமோ (M. Aumout) வசத்திலே எண்ணூறு ரூபாயிருக்கு ஒரு குதிரையிருக்கு தென்றும் சொன்னார். அதுக்கு துரை நமக்குத் தேவையில்லை யென்று சொன்னார். அப்பால், நம்மைக் கேட்டார். நமக்கும் தேவையில்லை யென்று சொல்லிப்போட்டு, பிடவை பார்க்கிற விடத்திலே வந்து பார்க்குமிடத்திலே, சின்ன துரை முசே மொற்சேனுக்குக் காங்குப் பிடவையும், முசியே லெனுவார் ஒன்பது கால் பிடவையும், முசியே மீராவுது கமீசு முதலானதும் யிப்படியாக வெள்ளைக்காரருதாய்த் தானே கட்டுப் போட்டார்கள். அப்போது முசியே கொற்ணேத்து யிருந்து, யிப்படி வெள்ளைக்காரர் தானேற்பட்டு வற்தகரைத் தங்கள் கையில் வைச்சுக் கொண்டு பிடவை போடத் தலைப் பட்டுவிட்டால், கும்பினீருக்கு யென்ன ஆதாயங் கூடி வரப்போகுது என்று சொன்னார். அதுக்கு முசியே பெடுத்தல்மீ முசியே துப்பியேக்சு நாளையிலே கொஞ்சம் யேற்பட்டுது, யிப்போ முசே லெறி நாளையிலே முழுதுங் கெட்டுதென்றும், யிப்படி நானாவிதமாய் பேச்சும் பேசிக் கொண்டிருந்தார்கள். இதிலே வற்தகர்கள் வந்தார்கள். அவர்களை யேன் பிடவை போடாமல் யிப்போ வந்ததென்ன வென்று கேட்டதுக்கு, பிடவை வந்திருக்குது ... (என்றும், பின்னர்) வரவில்லை யென்றும் ஒளறினார்கள். "உங்களுக்குச் சில்லரையிலே (சிறிய சிறிய அளவிலே) வெள்ளைக்காரர் கொண்டு வந்து கட்டுப் போடுகிறார்கள். உங்களுக்கு தாஷ்சி யென்ன?" வென்று சொன்னோம். அந்தப்படியே கொற்னேத்துஞ் சொன்னார். அதிலே பத்து மணியாச்சுது. சில்லரை கூட்டுக் கட்டு முப்பத்தி ரெண்டு போட்டாச்சுது. முன்னாலே 1756 வருசம் ஒக்தோபர் மாசம் 3 தேதி வரைக்கும் யிருப்புக் கட்டு 279; 4 தேதி போடப்பட்ட கட்டு 40; மசுக்கரைக் கட்டு 35; ஆக கட்டு 354; நேத்து 8 தேதி கட்டு 48; ஆக கட்டுகள் 402.[1] ஆக யின்றைக்கு விழுந்த கட்டு 434. யிதல்லாமல் யெல்லாம் விசாரிச்சுக் கொண்டு, பத்தரை மணிக்கு பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

### *1756 வருசம், ஒயிக்தோபர் மாசம், தேதி 12; தாது வருசம், பிறட்டாசி மாசம், தேதி 30; செவ்வாய்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போகாமல், முசியே பொஷேத்து (?) அழைக்குறாரென்று சேவுகன் வந்து வந்து அழைச்சபடியினாலே, ... அவரை வீட்டுக்குப் போய்க் கண்ட விடத்திலே அவர் சொன்ன சேதி: "உமக்கு செய்யூர் சம்மதி பணம் நாம் தரவேணும். (நீர்) நமக்குத் தரவேண்டியது ஆறாயிரத்து முன்னுறு ரூபாயும், முசே லயே

[1] இத்துணிகள் மசுக்கரைக்கும் பிரெஞ்சுக் குடியேற்றங்களுக்கும்–அங்கு வேலை புரிந்த கூலிகளுக்கென அனுப்பப்பட்டன.

(M. La Haye) சம்மதி முவ்வாயிரம் ரூபாயும், முசே ஷாக்குறு (Chagru) சம்மதி ஆறாயிரம் ரூபாயும், யிதுக்கு வட்டியும், தியாகப்பச் செட்டி முத்து சங்கதியிலே அன்னூறு விராகனுங் குடுக்க வேணும்," மென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது : "தியாகப்ப செட்டி முத்து சங்கதி அன்னூறு வராகனும் நமக்கு அக்கறை யில்லை. குறை ரூபாயிக்கி ரெண்டு வருஷமாய் வட்டி யேறுது," என்று சொன்னோம். அதுக்கு முசியே பொஷேத்து சொன்னது : "நீரென்னத்துக்கு யோசனை பண்ணுகுறீர்? தாது வருசத்தோடே மூன்று வருஷம் செய்யூர் குத்தகைப் பணம் உமக்குச் சென்றதாய் நமக்கு ரசீது குடுத்துவிடும். நாமிந்தக் கடன் சம்மதி பதினாயிரத்து முன்னூறு ரூபாய்க்கும் சீட்டுக் குடுத்து விடுகுறோம். இதல்லாமல் கோன்சேலிலே நாமும் முசியே திலார்ஷும் கூட பேசி யிந்த ரெண்டு வருஷத்துக்கும் சீமை பயிர் தாழ்வானதினாலே நஷ்ட்டம் வந்தது யென்று ஆறு லக்ஷம் ரூபாய்க்கிக் குறையாமல் பத்து லக்ஷம் ரூபாய்க்கி யேறாமல் பேசித் தள்ளிவிச்சுத் தருகுறோம். முன்னுக்கும் தாது வருசம் முதலிந்தப் படிக்கி பேரீசுங் குறைச்சுப் போடுகுறோம். இப்படி கெட்டியாய்ப் பண்ணித் தருகுறோம். நீ தருவார்களோ, தரமாட்டார்களோ வென்று யோசனை பண்ணத் தேவையில்லை. யிப்படி சீட்டெழுதி(யும்) தருகுறோம். அப்படிப் பண்ணிவிச்சுக் குடாமல் போனால், செய்யூர்ப் பணம் நாம் தந்துவிடுகுறோம்," யென்று சொன்னார். அதுக்கு நான், "எல்லாத்துக்கும் பெரியண்ண முதலியாரை அனுப்பிவையுங்கோள். யோசனை பண்ணிக் கொண்டு சொல்லுகுறோம்," என்று சொல்லிப்போட்டு கோட்டைக்கு வந்தேன். அவர் சொன்னதுக்கு நான் சம்மதிச்சுக் கொண்டதாயுமில்லை, சம்மதி அல்லவென்று சொன்னதுமில்லை.

அதன் பேரிலே தொரை அவர்கள் மெத்தை மேலே யிருந்ததினாலே, அங்கே போய் அவர்களைக் கண்டோம். அப்போது அவர்கள் கப்பல் பயணத்துக்குக் காகிதம் யெழுதிக் கொண்டிருக்கிற காரிய(மாக) திரும்பவும் காம்பிராவிலே போனார். அதன் பிறகு நான் பிடவை பார்க்குற சாலையிலே லெக்குருவா (Le Gloire) யென்கிற கப்பலிலே வந்த கப்பித் தான், செத்துப் போனவன், தட்டு முட்டுகளை யேலம் போட்டுக் கொண்டிருந்தார்கள். அங்கே கூட வந்திருக்கையிலே முசியே மீராவும் முசியே கொற்ணேத்தும் வந்து, தாங்கள் கும்பினீயிலே ஆயிரத்து நானூத் தொன்பது வராகனுக்கு சரக்குப் போட்டு, "கணக்கிலே உன் வரவு வைச்சு யிருக்குறோம். அது உன் பேருக்கு வரவு வைச்சிருக்கிறதினாலே நீ யெங்களுக்கு ஒரு சீட்டுக்குத் தந்துயிருக்க வேணும்," யென்று கேட்டார்கள். அதுக்கு, "அது நம்மு தென்றும் உங்களு தென்றும் நமக்குத் தெரியாதே. நீங்கள் கணக்கிலே யெழுதினப்படிக்கி ஒரு சாப்பிதா யெழுதி அனுப்பி வைச்சால் நம்முடைய கணக்கைச் சரி

பார்த்துக் கொண்டு நம்முடைய கணக்கிலே யில்லாமலிருந்தா லப்படியே ஆகட்டும்," என்று சொன்னோம். அவர்களும், "நியாயந்தான் அதைப் பார்த்து ஒரு சாப்பித் தாவிலே யெழுதி அனுப்பி வைக்குறோம்," யென்று சொன்னார்கள்.

யிதல்லாமல், இந்த நாள் உதயத்திலே நாம் வீட்டிலே யிருக்கிறதிலே (இருந்த போது) காகிதம் பார்த்த சேதி யேதென்றால், சலாபத்து சங்கு கிட்ட யிருந்து முன்னாலே, யிபராம் அல்லி கான் என்கிறவர் ஆற்காட்டிலே மமுதல்லி கான் கிட்ட வந்திருந்தவருக்கு, யிப்போது சலாபத்து சங்கு அவர்கள் யெழுதி அனுப்பின காகிதத்திலே, "முன்னாலே மமுதல்லி கானும் யிங்கிலீசுக்காரரும் ... பிரான்சுக்காரர் பொல்லாதவர்கள், (அவர்கள்) சினேத்தை விட்டு விடும், நாங்கள் ரெண்டாயிரம் சொலுதாதுகளும் பதினாயிரம் பாறுக்காரரும், அதுக்கேத்த சரன்சாமும் அனுப்பிவிச்சு பிரான்சுக்காரரைப் பெலயீனம் பண்ணிப் போடுகிறோமென்றும் யெழுதி (னார்கள்); உம்மையும் கூட்டிப் போன(ார்கள்); இதுவரைக்கும் (அவர்கள் அப்படி) ஒன்றும் அனுப்பாததினால் நமக்குச் சீமைகளி(லிருந்து) பாளையக்காரர் பணம் வராமலும் தண்டு சிலவு மனுஷர் சாவிலும் வெகு நஷ்ட்டம் வந்திருக்குது. யிந்த நஷ்ட்டம் அவர்கள் கிட்ட நாம் வாங்காமல் விடத்தக்கதில்லை. ஆகையாலே தாமங்கே யிருக்கிறது தேவையில்லை. அவர்கள் நம்மை மோசம் பண்ணினதுக்கு நாமுவர்களை மோசம் பண்ணாமல் விடத்தக்கதில்லை. ஆகையாலே நீர் வந்து விடவும்," என்று யெழுதி வந்ததாக ஆற்காட்டிலே யிருந்து காகிதம் வந்தது. யிது நாம் பார்த்தோம். யிந்த சேதி சோதிச்சுப் பார்த்துக் கொண்டு பத்தரை மணிக்கிப் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

### *1756 வருசம், ஒக்தோபர் மாசம், தேதி 17; தாது வருசம், அற்பிசி மாசம், தேதி 5; ஆதிவாரம்*

இத்தனாள் திரேகம் சுவஸ்தமில்லாததினாலே வெளியே போகயில்லை. வீட்டிலே யிருக்கையிலே, ஆற்காட்டிலே யிருந்து வந்த காகிதத்திலே யெழுதியிருந்த செதி யேதென்றால், பார்சா விடமிருந்து பக்கீர் சயிது கானுக்கு (Baqir Saiyid Khan) யெழுதி வந்த சேதி: பார்சா (பாதுஷா) ரெண்டு லெக்ஷம் குதிரையுடனே பங்காளத்து மேலே போறதாய்ப் பிறப்பட்டு யேழு மசில் (மஜில்) வந்ததாகவும், யிதிலே பங்காளத்து நவாபு ரெண்டு கோடி திரவியம் அனுப்பிவிச்சு சமாதானம் பண்ணினதாகவும், அதின் பேரிலே பார்சா சந்தோஷப்பட்டு, பங்காளத்து நபாபுக்குத் தானே பங்காளம் நிலவரம் பண்ணி, அதல்லாமல் சீக்காகுளம், ராசமகேந்திரம் முதலான ஸ்தலங்களும் பங்காள நவாபுக்குக் குடுத்ததாகவும், பங்காளத்திலே யிருந்து சீக்காகுளம், ராசமகேந்திரம் அதுகளுக்குத் தண்டு வருகிற தென்றும், பாற்சா[1] சலாபத்து சங்கு பேரிலே கோபம்

பண்ணி அவரங்காபாத்து மேலே வருகிறதாயிருக்குறாரென்றும் யெழுதி வந்தது.

***1756 வருசம், ஒக்தோபர் மாசம், தேதி 25; தாது வருசம், அற்பிசி மாசம், தேதி 13; சோமவாரம்***

இத்தனாள் காலமே யெட்டு மணிக்கு துரையைப் பேட்டி கண்டோம். அவர் முகம் யித்தனை நாளும் போலே தெளிவாய் யிருக்கயில்லை. அதைப் பார்த்தால் சீமைக் காகிதத்திலே யென்ன யெழுதியிருக்குதோ தெரியவில்லை; யிந்த மட்டுக்கும் கோன் சேலியேர்களையும் அழைப்பிச்சு காகிதங்களைக் கூடிப் பார்த்துதுமில்லை.

அதன் பேரிலே பத்து மணிக்கிச் சின்ன துரை வீட்டுக்கு வந்தோம். அவரென்ன சமாசாரம் யென்று கேட்டார். அதுக்கு, சீமையிலிருந்து மசுக்கரைக்குக் கப்பல் வந்ததாகவும் அங்கே யிருந்து சுலுப்பிலே கடுதாசி வந்ததென்றும் கேழ்விப்பட்டோம்; அது சமாச்சார மென்ன? உங்களுக்கன்றோ தெரியும்," யென்று சொன்னேன். அதுக் கவர் சொன்னது: "சீமையிலுஞ் சண்டை யுண்டு; சண்டையுமில்லை. யேனென்றால் சண்டை யென்று பிரசித்தம் பண்ணினால் யிவர்கள் கப்பலை அவர்கள் பிடிக்குறார்கள், அவர்கள் கப்பலை யிவர்கள் பிடிக்குறார்கள். சண்டையும் அங்கே நடக்குது, சமாதானமும் பேசுகுறார்கள். அதினாலே கப்பல் வர அட்டிப்பட்டுது. அதன் பேரிலே கப்பலுஞ் சேகரித்துப் பயணம் பண்ணி நாலு கப்பலும் மசுக்கரை வந்து சேர்ந்தது. பின்னையுஞ் சிறிது கப்பல் வருகிற தாயிருக்கிறது. மசுக்கரையிலும் சிறிது கப்பல் பயணமாகுது. அதெல்லாம் மார்கழி மாசம் வரையிலே வந்து சேரும். அதிலே வருகிற சமாச்சாரம் ஆருக்குந் தெரியாது," யென்றும் சொன்னார். அதுக்கு, "கும்பினீர் கடுதாசி கோன்சேலியேர்களுக்கு வந்திருக்குமே, நீங்கள் போகவில்லையா?" வென்று கேட்டதுக்கு, "நாமா யேன் போக வேணும்? கும்பினீர் கடுதாசிப் பார்க்கிறதினாலே தொரை அழைச்சு வர விடாரா? அவர் அழையாதே யிருக்கிற மட்டுக்கும் நாமாய்ப் போறதில்லை," என்று சொன்னார்.

யிதல்லாமல், "வினாயகனண்டை யிலிருக்கிற ராமலிங்கனை முசியே புலோ (?) கொண்டு போய்க் காவலிலே வைச்சான். அதுக்கு நான் போய், தொரையுடனே சீமா மூலம் விசாரிப்பானதினாலே சீமா மூலச் சம்மதிகள் யேதாகிலுமுண்டானால் முசிய புலோ (?) காவல் வைக்கிறது சரி. ஒருத்தருக்கொருத்தர் விவகாரங்களாய் வந்தால் அது நான் விசாரிக்கிற நியாயமாச்சுதே? ஆகையினாலே அவனைக் காவல்

[1] பார்சா, பாற்சா என இருவிதமாக எழுதப்பட்டுள்ளது.

விட்டு நான் விசாரிக்குறேன் என்று சொன்னேன். அதுக்கு வாயை மூடிக்கொண்டு யிருந்தார். யென்ன நான் சொன்னதுக்கு வாயை மூடிக் கொண்டு யிருக்கிறீர் யென்று கேட்டேன். அதுக்கும் வாயை மூடிக் கொண்டு யிருந்தார். அதன் பேரிலே நான் வந்துவிட்டேன். யிவரைத் தொட்டு கும்பினீருக்கு வெகு நஷ்ட்டம் வந்தது. சீமா மூலத்திலு மித்தனை நஷ்ட்டங்களும் யிவரைத் தொட்டு வந்து போச்சுது. யிவர் கும்பினீருக்கு யென்ன உத்திரவாதம் பண்ணுவாரோ? அவர்கள் கேழ்வி யெப்படியோ?" வென்று பின்னையும் சிறிது முச்சட்ட (கடுமையான) வார்த்தைகளையும் பேசியிருந்தார். அதன் பேரிலே நான் யெல்லாம் சுவாமிக்குத் தெரியுமென்று சொல்லிப் போட்டு, அவரை அனுப்பிக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

***1756 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 31; தாது வருசம், அற்பிசி மாசம், தேதி 19; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே துரையவர்களும் கோன்சேலியோர்கள், ஒப்பிசியால்மார்கள், சின்ன துரை யெல்லாரும் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு மெத்தையின் பேரிலே வந்தார்கள். நாமும் மெத்தை மேலே போய் தொரை அவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணி யிருக்கிறதிலே, பேதிக்கி வந்தது. உடனே பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம். அங்கே வந்து மலவாதை தீத்துக் கொண்டு யிருக்கையிலே தொரை அவர்கள் அழைக்குறார்களென்று அழைச்சார்கள். உடனே பிறப்பட்டுப் போனோம். அப்போது துரையவர்கள் காம்பிராவிலே ஒண்டியாயிருந்தார்கள். நான் போய்க் கண்டவுடனே அவர்கள் சொன்ன சேதி: "திருக்கோவிலூரிலிருந்து கோந்துவார் (Contoir) யெழுதி அனுப்பினார். அதிலே ராமலிங்க மென்கிறவன் ஆராயிரம் ரூபா உம்முடைய வசத்திலே செலுத்தினதாக எழுதி அனுப்பினாரென்று முசியே கில்லியார் வந்து சொன்னார். அது யென்ன?" வென்று கேட்டார். அதுக்கு நான், "அந்த ராமலிங்க மென்கிறவன் என் கிட்ட ரூபா செலுத்தினதில்லை. ஆகையினாலே அங்கே தானே அமுல்தாரனைத் துடர்ந்து ரூபாய் வாங்கி அனுப்பச் சொல்லி நான் அவ்விடத்துக்கு யெழுதி அனுப்பிவிட்டேன்," என்று சொன்னேன். ஆனால் ராமலிங்கனென்கிறவன் பொய்யல்லவோ சொன்னானென்று சொன்னதுக்கு, அவன் பொய்தான் சொன்னானென்று சொன்னேன். நாமும் அப்படியே யெழுதி அனுப்பிவைக்குறோமென்று (துரை சொன்னார்).

அதன் பிறகு ராவுத்தநெல்லூர் கில்லேதாரன், சந்தா சாயபு தம்பி மகன் காத(ர)ல்லி கான் (Gadir Ali Khan) என்கிறவன் காகிதம் அனுப்பி வைச்சான். அந்தக் காகிதத்திலே தாங்கள் சீலி நாயக்கன் கலாபம் (செய்து) இருநூறு பேர் ராணுவமும் சிறிது குதிரையும் சேகரித்து

கல்லக்குறிச்சயுடனே சேர்ந்த கிராமம் ஒன்று யிருக்குதாம், அது நூத்திருபது பொன் யெடுக்குமாம். அதிலே நமக்கு ஒரு பங்கு, அவனுக்கு ரெண்டு பங்கு ... (சீலி நாயக்கன்) அந்தக் கிராமத்திலே (சில) குதிரையும் (200) ராணுவும் தாணயம் (தண்டு) வைச்சிருந்தாராம். அப்படியிருக்கையிலே அந்த அமுல்தாரன் முசே ஒம்மாவுடனே தப்பும் தாறுமாய்ச் சொல்லி, ராத்திரியிலே ஒம்மோ வந்து விழுந்து (காதிர் அலி கானின்) பதினைந்து குதிரையும் கேசாலங்களும் (துப்பாக்கிகளும்) பின்னையுஞ் சிறிதுகளும் யெடுத்துக் கொண்டு போனார்களென்று, அது(க்கு) சாப்பித்தாவும் அனுப்பி வைச்சானென்று சொன்னார். அதுக்கு, "உள்ளது தான். அந்த (கிராமத்து விஷயத்தில்) நமக்குண்டான பங்கு பணம் குடாமல், குடிகளையும் (நாசம் செய்து), அந்த வூரிலேயிருக்கிற மகசூலையும் அனுபவிக்கிறார்கள். அதுக்கு நம்முடைய அமுல்தாரனிப்படி சோராவாரியாய்ப் பண்ணுகிறதென்ன வென்று (அவனைக் கேட்டனுப்பினால், அதுக்கு சாபாய் (ஒழுங்காய்) உத்தாரம் குடாமல், பயந் தோணப்பண்ணி குதிரையும் ராணுவும் அந்த வூரிலே அனுப்பி மறிப்பைத் தள்ளி மகசூல் விட்டுப் பலன் கையாடினான். அதன் பேரிலே அமுல்தாரன் முசியே ஒம்மோவுடனே வந்து சொன்னார். அப்போ முசியே ஒம்மோ (ஒரு) மனுஷரை அனுப்பினார். அந்த மனுஷரை முன்னுதாகக் காயப்படுத்தினார்கள். அதின் பேரிலே ஒம்மோ போய் சுடச் சொன்னார். அதிலே நம்முடையவாள் முன்னே நிற்கமாட்டாமல் ஒடிப்போனார்கள். ஆகையாலே அவர்கள் பேரிலே மூன்னுதாய்க் காயம் (கலகம்) பண்ணின குத்தமிருக்குது," என்று சொன்னேன். அதுக்கு அவன் (காதிர் அலி கான்) சீலி நாயக்கன் நிமித்திய மாயனுப்பினேனென்று யெழுதினானென்று சொன்னானாம். அதுக்கு, "மெய்தான். சீலிநாயக்கன் நிமித்தியம் (அவன் கலகத்துக்கு அஞ்சி) அவன் ராணுவம் குதிரையும் வைச்சான். யிப்போது நம்முடைய கிராமத்திலே மகசூலைக் கையாடினதும் கொண்டு போற நிமித்தியம் நமக்குப் பயந் தோண வேணுமென்று அனுப்பினான். ஆகையினாலே இப்போதும் நீங்களெழுதுகிறது, "நீ அந்தக் கிராமத்(துக்) குடிகளையும் கொண்டு போய், மகசூலையும் (அறுப்பு செய்து) ... நம்முடைய மனுஷரையும் முன்னுதாய்க் காயப்படுத்தினாய். யிப்படிச் செய்ததுக்கு உன் கோட்டையைக் கட்டிக் கொள்ளவோம். நீ வந்து சந்தா சாயபு மகன் தம்பி (தவறு. தம்பி மகன்) யானதினாலும், வெகுநாளாய் உங்களைச் சேர்ந்தவ னென்று யெழுதினதின் பேரிலேயும், யிந்த ஒரு குத்தம் மனம் பொறுத்தோம். அப்படி யேதாகிலும் உண்டானால் ரங்கப்பனுக்கு யெழுதி அனுப்பி வைச்சு அவன் ஒடுதிப் படிக்கு நடத்த வேணும். யிந்தக் குத்தம் மனம் பொறுத்தோம். யினிமேல் அப்படி நடந்தால் கோட்டையை வாங்கிப் போடுவோம். இப்போதும் நம்முடையவர்கள் கொண்டு வந்துதுக்கு சாப்பித்தா அனுப்பி வைச்சார்கள். அந்த சாப்பிதா

படிக்கி எடுத்து வந்ததைக் குடுத்து விடச்சொல்லி யெழுதி அனுப்பினோம். ஆகையாலே அந்தப்படிக்கி வாங்கிக் கொண்டு, யினிமேல் பயபக்தியாய் நடந்துக் கொள்(ள வேணு)" மென்று யெழுதி அனுப்புங்கோளென்று சொன்னோம். அப்படி யெழுதி அனுப்புகுறோ மென்று சொ(ன்னார்).

அதன்பிறகு, "முன் சித்திரை மாசம் நாம் செஞ்சியிலேயிருந்து வந்தவுடனே, சீமைக் கப்பல் வந்த சமாச்சாரத்(தைச் சொல்லி), மயிசூருக்குக் காகிதமெழுதி நந்திராசா அண்டைக்கு அனுப்பி வைச்சோம். யிதுவரைக்கும் போன கடுதாசியும் மனுஷனையும் அனுப்பி வைக்கயில்லையே யேது?" என்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது : "நந்திராசா மயிசூர் ராசாவைத் தானே கொன்று போட்டு வேறே பட்டம் வைக்கிறதாய் உள்ளுக்குள்ளே வெகு கலாபம் நடந்து கொண்டேயிருந்து வருகுது. யிது நிமித்தியம் நானாவுக்கு நந்திராசா (தவறு. மயிசூர் ராசா) யெழுதி அனுப்பி வைச்சு, அவன் வருகிறதாகவும் கேழ்க்கப்படுகிறது. ஆகையாலே யிப்போது (நந்திராசாவுக்கு) நீங்களொரு காகிதமெழுத வேணும். அதிலே யிப்போதும் சீமையிலே யிருந்து பனிரெண்டு கப்பலும் மெத்தவுஞ் சொலுதாதுகளும் மகுக்கரைக்கு வந்து சேர்ந்தார்கள். பிறக்கிற மாசம் வந்து சேருவார்கள். உங்கள் பேரிலே வர வேண்டிய பணம் வாங்கச் சொல்லி எழுதி வந்திருக்குது. நீங்களானால் முன் அனுப்பின காகிதத்துக்குப் பதில் காகிதமும் மனுஷரும் கூட அனுப்பாமல் போனீர்கள். இனியாகிலும் எங்களுக்குண்டான பணம் சீக்கிரம் அனுப்பி வைக்க வேணும்," என்று யெழுதி அனுப்பிவிக்க வேணுமென்று சொன்(னேன்). நல்லது அப்படியே யோசனை பண்ணிக் கொண்டு யெழுதி அனுப்பி விப்போமென்று (துரை) சொன்னார். அதுக்கு நான் சொன்னது. இப்போ இராவுக்கும் நந்திராசாவுக்கும் கலாபமானதினாலே மயிசூர் இராசா நானா மட்டுக்கும் மனுஷரை அனுப்பிவிச்சு தனக்குச் சகாயமாய் பெலன் வரவும், நானாவுக்கு அறுபது லக்ஷம் ரூபா மட்டுக்கும் குடுக்கவும், யிந்தப் படிக்கி நானா வக்கீல் யிவர்கள் கிட்ட ஸ்தானாபதியாயிருக்கிற பிராமணனுக்குப் பேசிவிச்சு, அவரந்தப்படிக்கு எழுதி யனுப்பிவிச்சு, அதன் பேரிலே நான் (தவறு. நானா) வருகிறதாயிருக்குது. ஆகையாலே இந்தக் கலாப வேளையிலே நாமுஞ் சுறுக்கிலே காகிதங்களெழுதிப் பணம் அனுப்பச் சொல்லிக் கண்டிப்புகளாய் நந்திராசா அண்டைக்கு மனுஷரை (அனுப்பி) அவரைக் கண்டிச்சுப் பணம் கேட்டால், அப்போது 'யிவர்கள் நந்திராசாவைக் கண்டிக்கிறபடியினாலே, யிவர்களைக் கொண்டு நந்திராசாவைக் கண்டிப்பு பண்ணி, அவனைப் பத்திரப் படுத்திக் கொள்ளலாம் (அடக்கிவிடலாம்)' யென்று ராசாவுக்குத் தோணி, அவனு(ம்) ... நம்முடனே பேசி, நம்முட பணத்துக்குச் சம்மதி சொல்லி உபரியாயும் நானாவுக்குப் பேசினாப் போலே நமக்கும் பேசி நடத்துவான் போலே தோணப்படுகிறது. இந்த அடி ராசா மனோபாவம் நந்திராசாவை அடிக்கிற

நிமித்தியம் பெலன் தேடி நம்முடைய பெலனையும் கோரி யிருக்கிறான் என்கிறதாய்ச் சேதி கேழ்விப்படுகிறது. ஆகையாலே உங்கள் மனோபாவம் யெப்படியோ வென்றிருக்கிறேன். இப்போது காகிதமும் மனுஷரும் சீக்கிறமதுக்கு அனுப்பி விச்சால் அந்த வழியிலே நமக்குக் காரியமுண்டு," என்று சொன்(னேன்). அப்படியே யோசனை பண்ணிக் கொண்டு எழுதி அனுப்புவோமென்று சொன்னார்.

அதன் பேரிலே நான் சொன்னது : "ஆற்காட்டிலே யிருந்து சேதி வந்த தென்ன வென்றால் சலாபத்து சங்கு முனுவரு கானுக்கு (Munawar khan) முதல்லிகான் பேரிலே பதினெட்டு லெக்ஷம் ரூபாய்க்கு தனாக்கா (ஆணை) யெழுதிக் குடுத்ததாகவும், அது நிமித்தியம் முனுவரு கான் அந்த தனாக்கா காகிதமும் குடுத்து பத்து சுவார்களையும் பயணம் பண்ணி மமுதல்லி கானண்டைக்கு அனுப்பினதாகவும், அந்தப் பத்து சுவாரும் ஆற்காட்டிலே மமுதல்லி கான் அண்டையிலே வந்து காகிதம் குடுத்துப் பணம் கேட்டதாகவும், அதுக்கு மமுதல்லி கான் நம்முடைய பேரிலே தனாக்கா யெழுதின தென்ன, பாதி சீர்மை இங்கிரேசுக்காரனும் பாதி சீர்மை பிரான்சுக்காரனும் ஆக சீமை யெல்லாங் கட்டிக் கொண்டார்கள். நான் இங்கிலீசுக்காரரை அனுசரிச்சுக் கொண்டு யிருக்கிறேன். என்னா லென்ன யிருக்குது? இங்கிரேசுக்காரரைக் கேழ்க்கத் தக்கது (கேட்க வேணும்) யென்று சொன்(னான்). வந்தவர்கள் "நீ பணம் குடுத்தா லாச்சுது. யில்லாவிட்டால் முனுவரு கானும் (அவரது) பவுன்சும் உம்முடைய பேரிலே வருவார்கள்," என்று சொன்னதாகவும், வந்தால் வரட்டுமென்றும் சொல்லி பதில் காகிதமெழுதிக் கொடுத்து அனுப்பிவிச்சதாகவும், அவர்கள் போகப் பயணம் யிருக்கி(றார்கள்). முன்னாலே வந்திருக்கிற யிபறாம் அல்லி (இப்ரகீம் அலி) கான் என்கிறவரைப் (மமுதல்லிகான்) பயணம் பண்ணி அனுப்பாமல், சலாபத்து சங்குவுக்கு இங்கிரேசுக்காரரை (தாங்கள் சரியாய்ப் புரிந்து கொள்ளவில்லை. அவர்களுக்கு) பாறுக்காரர் வைச்ச சிலவும் சொலுதாதுகள் சிலவும் மருந்துச் சிலவும் ரொம்ப சிலவாயிருக்குது. (அவர்கள் தங்கள் பெலத்தை) சேகரிச்சு அனுப்பு முன்னே (தாங்கள்) பிரான்சுக்காரரைச் சமாதானம் பண்ணிக் கொண்டீர் என்று அவர்கள் தாவா போட்டுக் கொண்டிருக்கிறார்கள் (என்று எழுதினார். ஏது செய்வோம் என்று தெரியாமல்) அவர் இபறாம் அல்லி கானை ஆற்காட்டிலே தானே வைச்சுக்கொண்டு யிருக்கிறதாகவும் யெழுதி வந்த தென்று சொன்னேன்.[1]

அதன் பிறகு சேத்துப்பட்டுக் கில்லேதாரன் குதிரையும் ராணுவும் வைச்சு வெளியிலே பாளையம் யிரங்கினதாகவும், கோட்டை மேலே

[1] தமிழ்ப்பிரதியில் இப்பகுதி விளங்காதபடி எழுதப்பட்டுள்ளது.

யிருந்து இரெண்டு பீரங்கி யிறக்கினானென்றும், யேணிகள் பண்ணிவிக்கிறானென்றும், ஆற்காட்டிலே யிருந்தும் நாலு இரெண்டு பீரங்கி வந்ததாகவும், சிறிது சட்டைக்காரரும் சிறிது பறங்கிகளும்[1] வந்ததாகவும், அவன் வந்தவாசிக் கோட்டை மேலே வருகிறதாகவும், அது நிமித்தியம் வந்தவாசி சீர்மைக் குடிகளெல்லாம் பயந்து கலையுறதாயும் யெழுதி வந்தது. ஆனாலவன் நம்முடைய சீர்மையிலே கலாபம் பண்ணப் போறதில்லை யென்று குடிகள் பயமின்றிலே யிருக்கமாட்டார்களே, ஆகையாலே முன்னூறு பேர் சிப்பாயிகளுக்கு உத்தாரங் கொடுக்கவேணும். உத்தாரம் குடுத்து அவர்கள் அங்கே போயிருந்தால் குடிகளுக்கும் பயந் தீர்ந்து யிருக்கும்," என்று சொன்னோம். அதுக்கு நல்லது நாளை உத்தாரங் கொடுக்கிறோமென்றும் (சொன்னேன்).

அதன்பேரிலே சலாபத்து சங்கு கிட்டயிருந்து வந்து யிருக்கிறானே முகுலன், அவனை அனுப்ப வேண்டாமென்று சொன்னேன். அப்போது சலாபத்து சங்குக்குக் காகிதமும், கொலத்து நாட்டு ராமராசா கிராமத்து நிமித்தியம் அனுப்பின காகிதத்துக்குப் பதில் காகிதமும் பிரான்சிலே யெழுதியிருந்ததை யெடுத்து வந்து, அதிலெழுதின வயணமெல்லாம் நமக்கு வாசித்துக் காண்பித்து, இந்தப் படிக்கு பார்சிலே சலாபத்து சங்குக்குக் காகிதமும், ராமராசாவுக்குத் தமிழிலே காகிதமும் எழுதிவிக்கச் சொல்லி, என் கையிலே பிரான்சிலே எழுதின காகித மிரெண்டும் குடுத்தனுப்பினார். அதை வாங்கிக் கொண்டு வெளியே வந்து மதனாந்த பண்டிதர் கையிலே சலாபத்து சங்குக் கெழுத வேண்டிய காகிதத்தைக் குடுத்து பார்சிலே யெழுதச் சொல்லிப் போட்டு, ராமராசாவுக் கெழுதவேண்டிய காகிதத்தைக் கையிலே யெடுத்துக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

---

[1] இச்சொல் வழக்கமாகப் போர்த்துக்கீசியரைக் குறிக்கும்.

## நவம்பர் 1756

### *1756 வருசம், நொவம்பர் மாசம், தேதி 1; தாது வருசம், அற்பிசி மாசம், தேதி 24; ஆதிவாரம்*[1]

நேத்து முசே (பொலாவுடனே) அய்யண் சாஸ்திரி சொன்னது : சேத்துப்பட்டு கில்லேதாரன் குதிரையும் ராணுவும் சேர்த்து வைச்சு, கோட்டை மேலே யிருந்ததிலே இரெண்டு பீரங்கி யிறக்கி, யேணிகள் பண்ணச் சொல்லி தயாறு ஆகிறதினாலே, வந்தவாசி சீர்மையிலே யிருக்கிற குடிகளெல்லாம் பயந்து அங்கங்கே ஒடித் திரியுறார்களென்று சொன்னதுக்கு, முசே பொலோ யிருந்து, "நல்லது நாளை உதயத்திலே ரங்கப்பனையும் கூட்டிக் கொண்டு கோட்டையிலே வா. நாமும் வந்து துரையவர்களுக்கு (பெலனாகச்) சொல்லி விக்குறேன்," என்று சொன்னார். அந்தப் படிக்கி (இன்று) நாமுங் கோட்டைக்கு வந்தோம். அய்யண்ண சாஸ்திரியுங் (துவறு. முசே பொலோவும்) கோட்டைக்கு வந்து, நம்மையும் அய்யண்ண சாஸ்திரிகளையும் அழைச்சுக் கொண்டு, மெத்தை மேலே போனார். நாமும் போய் துரையவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணினோம். அப்போது முசே புலோ (?) துரையுடனே அய்யண்ண சாஸ்திரி சொன்னபடிக்கி, சேத்துப்பட்டுக் கில்லேதாரன் சேதியும், குடிகள் பயந்து யிருக்கிறதும், அதுக்குச் சிப்பாயிகள் அனுப்பவேணும் என்றும் சொன்னார். அப்போ துரையிருந்து "இந்தச் சேதி யெல்லாம் நேத்து தானே ரங்கப்பன் சொன்னான். அதுக்கு நாமெப்படி அந்தப்படிக்கு சிப்பாயிகளை அனுப்பி வைக்(குறது) யென்று சொல்லி யிருக்கிறோம். இங்கிலீசுக்காரருக்கும் நமக்கும் பதினெட்டு மாதம் வாயிதா ஆயிப் போச்சுதே. கப்பலானால் வரயில்லையே. இங்கிலேசுக்காரர் சங்கதி யென்னமோ தெரியவில்லையே?" என்று சொன்னார். அதுக்கு முசியே புலோ இங்கிரேசுக்காரருக்கு யெழுதி யனுப்ப வேணுமென்று சொன்னார்.

துரையிருந்து, வந்தவாசி சீர்மையிலே அறுபதினாயிரம் ரூபாயிக்கி நெல்லுயிருக்குதே. அந்த அறுபதினாயிரம் ரூபாயும் அய்யண்ண சாஸ்திரியைக் குடுக்கச் சொல்லிக் கேட்டார். அதுக்கு முசியே புலோ மார்கழி மாசம் வரையில் அய்யண்ண சாஸ்திரி வாயிதா படிக்கி நூத்திருபதினாயிரம் ரூபாய் வரவேணும். அதுக்கு லக்ஷம் ரூபாயாகிலும் கொடுக்க வேணுமென்று சொன்னதுக்கு, துரையவர்கள் அறுபதினாயிரம் ரூபா நெல்லு வித்துக் குடுக்கச் சொல்லிக் கேழ்க்க, முசியே புலோ லக்ஷம் ரூபா யென்று சொல்லி யிப்போ தானே பேசினார்கள். (அதனால்)

---

[1] ஆங்கிலப் பிரதியிலும் இவ்வாறே உள்ளது. இது திங்கட்கிழமை, தமிழ் 20 ஆம் தேதியாக இருக்க வேண்டும். முந்திய தேதியைப் பார்க்க.

நான் அய்யண்ண சாஸ்திரி சொன்ன வயணம் துரைக்குத் தெரியச் சொன்னோம். அதிலே துரையவர்கள் அறுபதினாயிரம் பேச்சு பேசினார். அது பார்த்தால் இந்த அய்யண்ண சாஸ்திரி கந்தப்பன் வழியிலே சொல்லி, அவனைக் கொண்டு வந்தவாசியிலே கார் நெல் லக்ஷம் கலம் உண்டு; அதுக்குக் குடிவாரம் போக மேல் வாரம் அறுபதினாயிரம் ரூபாய் காணும் யென்று துரைக்குச் சொல்லி வைச்சாப் போலே நமக்குத் தோணுது. இப்படி யிருக்கையிலே இரெண்டு நாழிகை நேரம் துரையும் முசியே புலோவும் உலாத்திக் கொண்டே பேசிக் கொண்டிருந்தார்கள். அது வரைக்கும் நாமும் அங்கே தானே யிருந்தோம்.

அப்படி யிருக்கையிலே முசியே புலோ துரையை அனுப்பிக்கொண்டு, பிடவைப் பார்க்கிற சாலையிலே போயிருந்து கொண்டு நம்மை அழைக்கச் சொன்னார். நாமும் போனோம். அப்போ முசியே புலோ, "நம்மைப் பார்த்து உனக்கும் துரைக்கும் பேச்சு நடத்திப் போட்டோம்," என்று சொன்னார். ஆமா மென்று சொன்னோம். அதின் பேரிலே நீ யேன் துரைக்குக் கணக்கு காண்பிக்கவில்லை யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது : துரை முசியே தெவோ கணக்கு குடுத்த போது என்னையுங் கணக்குக் கொண்டு வரச்சொல்லிச் சொன்னார். அதன் பிறகுக் கணக்குப் பிரஸ்தாபமே துரையவர்கள் கேட்டதில்லை. அதின்பேரிலே சீர்மை கூட தோரணங்கள் கட்டினார்கள். யிப்படி யிருக்கையிலே நானென்ன கணக்கு குடுக்கப் போறேன் என்று சொன்னேன். அதுக்கு முசியே புலோ சொன்னது: நானானால் துரையுடனே கணக்கு தயாராயிருக்கு தென்று சொன்னேன். அவருங் கணக்கு கொண்டு வரச் சொல்லிச் சொன்னார். ஆகையினாலே யெனக்குக் காண்பிச்சியே அந்தக் கணக்குக் கொண்டு வா, துரைக்குக் காண்பிக்க வேணும்," என்று சொன்னார். அதுக்கு நானந்தக் கணக்குக்கு கொப்பி (copy) எழுதவில்லையே. கொப்பி யெழுதிக் கொண்டல்லவோ கணக்குக் குடுக்க வேணுமென்று சொன்னதுக்கு, அதுக்கு கொப்பியில்லையா என்று கேட்டார். கொப்பியில்லை யென்று சொன்னதுக்கு, இன்று தானே கொப்பி யெழுதி விச்சுக்கொண்டு, நாளை உதயத்திலே கணக்கு கொண்டு போய் துரை கையிலே கொடுக்க வேணுமென்றும் சொன்னார். அதுக்கு, "இன்று (ஒரு நாளிலே) கொப்பி யெழுதியாமா? இரெண்டு நாளாகிலும் பிடியாதா?" வென்று சொன்னதுக்கு, கோபமாய், "அப்படிக் கூடாது. நான் துரையுடனே கணக்கு தயாராயிருக்கு தென்று சொல்லியிருக்கிறேன். ஆகையாலே யின்று தானே கொப்பி யெழுதிக் கொண்டு நாளை உதயத்திலே கணக்குக் கொண்டு வரவேணு," மென்று சொல்லிப்போட்டு வீட்டுக்கு போனார். அதன் பேரிலே நாமங்கே தானே யிருந்தோம்.

அப்போது துரை அழைக்கச் சொன்னாரென்று வந்து அழைச்சார்கள். அதன் பேரிலே நாம் துரை அண்டையிலே மெத்தை மேலே போனோம். போனவுடனே துரை சொன்னது : "வந்தவாசிக்கு சிப்பாயிகள் அனுப்பவேணுமென்று கேட்டியே அதுக்குத் தண்டலையிலே யிருக்கிற வெள்ளைக்காரனுக்கு முன்னூறு பேர் வந்தவாசி சீமை(க்கு அனுப்பும்படி) யாயும், அய்யண்ண சாஸ்திரி சொன்னபடிக்கு நடந்து கொள்ளும்படியாகவும் யெழுதியிருக்கிறோம். யிதல்லாமல் உத்திரநெல்லூர் கும்மாந்தாம் கடைக்காரர் கிட்ட மாதம் ஒன்றுக்கு நாற்பது ரூபா வாங்குறானாம். அப்படி வாங்கத் தேவையில்லை யென்று அவனுக்குக் காகித மெழுதி யிருக்குறோம்." யிந்த ரெண்டு காகிதமுங் கொடுத்தனுப்பிவிக்கச் சொல்லி தந்தார். நல்லது யென்று அதை வாங்கிக் கொண்டோம்.

அதன் பிறகு கொலத்து நாடு கொலஸ்துரி ராசா மனுஷனுக்கு யென்ன குடுக்க வேணுமென்று கேட்டார். அதுக்கு நூறு ரூபாய், நாலு கெசம் சகலாத்தும் குடுக்க வேணுமென்று சொன்னோம். அதுக்கு நல்லதென்று முசியே பெடுத்தராம் (M. Bertrand) பேருக்கு நாலு கெசம் சகலாத்துக்கு ஒரு சீட்டும் கொடுத்து, இதை வாங்கிக் கொண்டு, அரும்பாத்தை பேருக்கு ஒரு நூறு ரூபாய்க்குச் சீட்டும் வாங்கிக் கொண்டு, நாளை உதயத்திலே வந்தால் கொடுத்தனுப்பி விடுவோமென்று சொன்னார். இதின் பிறகு கணக்கு முஸ்தீப்பாயிருக்குதா, வென்று கேட்டார். முஸ்தீப்பாயிருக்குது நாளை நன்றைக்குக் கொண்டு வாரேன்று சொன்னேன். நல்லதென்று சொன்னார். அந்த மட்டுக்கும் அனுப்பு விச்சுக் கொண்டு பதினொன்றரை மணிக்கு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

*1756 வருசம், நொவம்பர் மாசம், தேதி 2; தாது வருசம், அற்பிசி மாசம், தேதி 21; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே இன்றைக்கு வெள்ளைக்காரருக்கெல்லாம் மாளய பக்ஷமான படியினாலே, துரையவர்கள் முதலான பேரெல்லாரும் கறுப்பு போட்டுக் கொண்டு பிதுருகளுக்குப் பிரீதியாகக் கோயிலுக்குப் போய் பூசைகேட்டுத் திரும்பி வருகையிலே, நான் போய் துரையைக் கண்டு சலாம் பண்ணினோம். அதின்பேரிலே துரை மெத்தை மேலே போனார். அப்படிப் போகையிலே முசியே பொலோ கணக்கு வந்ததா வென்று கை சமிக்கையாய்க் கேட்டார். அதுக்கு நாமும் சமிக்கினையாய்த் தானே வந்து தென்று சொன்னோம். எல்லாரும் மெத்தை மேலே போன பிறகு, துரைக்கு சலாம் பண்ணிக் கொண்டு, யிப்பாலே நிற்கிறதிலே முசியே புலோ வந்து கணக்கு கொண்டு வந்ததெங்கே யென்று கேட்டார். இருக்கிறதென்று சொன்னோம். அதை வாங்கி கக்கத்திலே யிடிக்கிக் கொண்டு, துரை கிட்டப் போவோம்

வாருமென்று சொன்னார். அதுக்குக் கக்கத்திலே யிடிக்கிக் கொண்டு வருகிறதென்ன, கணக்கு கையிலே வந்திருக்கிறது. துரையவர்கள் பேசிக் கொண்டிருக்கிறார்களே, பேசித் தீரட்டுமென்று சொன்னோம். நல்லதென்று போனவர் திரும்பவும் உடனே வந்து, நான் துரையை அழைச்சுக் கொண்டு அப்பாலே வருகுறேன். நீர் கொண்டு வாரும் யென்று சொன்னார். "அப்படி உண்டா? துரையவர்கள் பேசி ஆகட்டும். பதறுவார்களா?" யென்று சொன்னோம். நல்லதென்று போனார். உடனே முசியே புலோ பண்ணுகிற துருசுக்கு யினி பார்க்கப்படாதென்று அப்பாலே போயிருந்து கொண்டு, அந்தக் கணக்கிலே என் கையெழுத்து எங்கே போடவேணுமோ அங்கே கையெழுத்துப் போட்டுக் கொண்டிருந்தோம். இதிலே இருபது தரம் கொண்டு வரச் சொல்லி துருசு பண்ணி அழைச்சார். யிதிலே துரை பேசிக் கொண்டிருந்து, காம்பிராவிலே போனார். முசியே திலார்சும் மாசாந்திரம் சம்பளத்துக்குக் கையெழுத்து வாங்கிற நிமித்தியம் கூடப் போய்க் கையெழுத்து வாங்கிக் கொண்டு வெளியே வந்தபிறகு, முசியே புலோ நம்மைக் கூட்டிக் கொண்டு துரையண்டைக்குப் போனார். நாமும் போனோம். அப்போது துரையவர்கள் கணக்கு வந்ததா வென்று கேட்டார். கொண்டு வந்தேனென்று சொல்லிக் கணக்கை யெடுத்து துரை முன்னே வைச்சோம். அந்தக் கணக்கை வாங்கிப் பிரிச்சுப் பார்த்தார். பார்த்தவுடனே "கொம்மாந்தாம் பத்து, (பற்று). பாளையக்காரர், உடையான் கையாடல், கலீல் சம்மதிகள் சகலமும் கும்பினீருக்குச் செல்லாக எழுதி யிருக்குது. இது நான் ஒத்துக் கொள்ளுகிறதில்லை" யென்று உசந்த குரலாய்க் கூப்பிட்டார்.

அப்போது முசியே புலோயிருந்து, "ரங்கப்ப னென்ன வீட்டிலிருந்து குடுப்பானா? சீமையிலே வந்த பணம் அதை யெல்லாம் பேருக்குச் சத்தாய் (சற்றாய்க்) கொண்டு போகவும், பாளையக்காரர் பணம் வராமல் போனதுக்கும், இங்கிலீசுக்காரர் கலீலாய்க் கிடக்கிறதுக்கும், சாமீன் தாரரென்று வெள்ளைக்காரர் பத்திக் கொண்டதுக்கும், ரங்கப்பன் கையிலே யிருந்து கொடுப்பானா? யிது யென்ன நியாயம்?" என்று சொன்னார். அதுக்கு எல்லாந் தள்ளிக் குடுக்கிறது தானென்று கூப்பிட்டுச் (கூச்சலாய்ச்) சொன்னார். நியாயம், கணக்காசாரம் தள்ளித் தான் கொடுக்க வேணும்," மென்று முசியே புலோ சொன்னதுக்கு, முசியே புலோ பேரிலே துரை கோபமாக உத்தாரஞ் சொல்லி, (இதுவெ)ல்லாம் நானொன்று மறியே னென்று சொன்னார். அப்போ முசியே பொலோ யிருந்து யிதுக்கு, முன் கணக்கு துரை கையிலே கொடுத்த தில்லையா வென்று கேட்டார். துரை அப்படிக் கோபம் பண்ணிச் சொல்லுகிறதிலே, நாமிந்த வேளையிலே எதித்து நியாயஞ் சொல்லுகிறதல்லவே (நல்லதல்லவே) யென்று, யெல்லாம் குடுத்திருக்கு தென்று மெள்ளச் சொல்லிப் போட்டு யிருந்தோம். அப்போதும்

தாமறியமாட்டோம் என்று (கூச்சலிட்டு), முசியே புலோவைப் பார்த்து வெகு கோபமாய்க் (கூச்சலிட்டார்). அத்தோடே முசே புலோ கோபிச்சுக் கொண்டு, பிறகு ஒன்றுஞ் சொல்லாமல் உடனே பிறப்பட்டு வீட்டுக்குப் போய்விட்டார். அந்த மட்டிலே நாமும் வெளியிலே வந்து யோசனை பண்ணினது, முசியே புலோ போனாப் போலே நாம் போறதல்ல. கோலத்து நாடு ராமராசா மனுஷனுக்கு வெகுமானங் குடுத்தனுப்ப நாலு கிசம் சகலாத்தும் நூறு ரூபாயும் பாக்கு வெத்திலையும் அழைப்பிச்சு வைச்சிருக்குதே, அதைக் குடுத்தனுப்ப வேணுமே, எல்லாத்துக்கும் யிருக்கவேணு மென்று யிருந்தோம்.

அப்படி யிருக்கையிலே பின்னையும் சத்து நேரத்துக் கெல்லாம் துரை தானே அழைச்சார். உள்ளே போனவுடனே அந்தக் கோபமெல்லாம் விட்டு குளுந்த பேச்சாய் ராமராசா மனுஷனை அனுப்ப வேண்டாமா என்று கேட்டார். அனுப்பிகிறது தானென்று சொல்லி, ராமராசா மனுஷனை அழைச்சு அவன் கையிலே நாலு கெசம் சகலாத்தும் ரூபாய் நூறும் பாக்கு வெத்திலையுங் கொடுத்து அனுப்பிவிச்சோம்.

அதின் பேரிலே சலாபத்து சங்கு கிட்டயிருந்து வந்திருக்கிற முகிலனை அனுப்ப வேண்டாமா வென்று கேட்டார். அனுப்பவேணு மென்று சொன்னேன். காகித மெழுதியிருக்குதே, அவனுக்கென்ன குடுக்கவேணு மென்று கேட்டார். அதுக்கு, "முன்னாலே சலாபத்து சங்கு வெகுமானம் கொண்டு வந்த (போது) அவனுக்கு ஆயிரம் ரூபாயும் ஒரு துப்பாக்கியும் இரெண்டு பிஸ்தோலும் இரண்டு சிப்பம் சகலாத்தும் குடுத்திருக்குது. இப்போது யிவன் அபறங்காபாத்து மட்டுக்கும் போய்ச் சேரவேணும். ஆகையாலே, எனக்குத் தோணுகிறது, ஒரு சிப்பம் சகலாத்தும் நானூறு ரூபாயும் கொடுத்தனுப்ப வேணுமென்று தோணுகிறது. இப்பால் தேவரீர் சித்தத்திற்கு சரிப் போனபடி," யென்று சொன்னேன். அதுக்கு மறு உத்திரம் சொல்லாமல் முசியே பெடுத்தராம் பேருக்கு ஒரு சிப்பத்துக்குச் சீட்டும் முசியே திலார்சுக்கு நானூறு ரூபாய்க்குச் சீட்டும் எழுதி, ரெண்டு சீட்டும் என் கையிலே தந்து இதை வாங்கி வந்து நாளை உதையத்திலே அவனை அனுப்பி விடென்று சொன்னார்.

அப்போ நான் சொன்ன சேதி : "நான் வந்து உங்கள் அடிமை (அடுமை) யாயிருக்கிறவன். கணக்கேதாகிலும் தப்புக் கணக்காய் ஞாயந் தப்பிதமாய் யெழுதித் தரவில்லை. இது மெய் பொய்யென்கிறதுக்கு கோனசேலியேர்கள் போய் ஊருக்கு வூர் விசாரித்து கணக்கு யெழுதி வந்திருக்கிறார்கள். தேவரீர் கோபம் பண்ணினால் நான் உங்களைப் பார்த்து எதிர்த்து உத்தரஞ் சொல்ல மாட்டுவேனா (முடியுமா?) என்னை இரெட்சிக்கிற பாரம் உங்களுது. நானுங்கள் உபகாரம் சென்மத்திலும்

மறக்கத்தக்கதில்லை. உங்கள் மனதுக்குச் சந்தோஷம் வரும்படியாய் அதுக்கேத்த படிக்கி நான் நடந்து கொள்ளுவேனல்லாமல், உங்கள் மனதுக்கு சந்தோஷம் பண்ணாமல் நான் நடந்து கொள்ளத்தக்கவனன்று. உங்கள் அடிமை (அடுமை) யாயிருக்கிற என்னை இரெட்சிக்கிற பாரம் உங்களுது," என்று ரொம்ப அவர்களுக்குத் தயவு வரும்படியாகவும் காரியம் தோணும்படியாகவும் வணங்கிச் சொல்லிப் போட்டு, பதினோரு மணிக்கு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

*1756 வருசம், நொவம்பர் மாசம், தேதி 3; தாது வருசம், அற்பிசி மாசம், தேதி 22; புதவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு முசியே புலோ அவர்கள் வீட்டுக்கு யேழு மணிக்குப் போனவிடத்திலே அவரிப்போ தான் நித்திரையிலிருந்து எழுந்திருந்து வந்து உளுக்கார்ந்தார். நாமும் போயிருந்தோம். அப்போதவர் துரை யென்ன ரொம்பவும் கோபம் பண்ணினாரென்று கேட்டார். எனக் கெப்படித் தெரியு மென்று சொன்னேன். அதுக்கு முந்தாம் நாள் அய்யண்ண சாஸ்திரியையும் அழைச்சுக் கொண்டு வந்தவாசிப் பேச்சு பேசின போது, நான் துரையுடனே, "இதென்ன சீர்மைப் பேச்சு ஏதாகிலும் ஒரு கணக்கு வழக்குப் பார்த்து ஒருபடி தீத்துப் போடாமல் இப்படி அபந்தரையாய்ப் போட்டுக் கொண்டிருந்தா லெப்படி?" யென்று கேட்டேன். அதுக்கு துரை, "மெய்தான். முன்னாலே ரங்கப்பனைக் கணக்குக் கொண்டு வரச் சொல்லிச் சொன்னேன். அவன் கொண்டு வரவில்லை," யென்று சொன்னார். அதுக்கு நான், "கணக்கெல்லாம் சேகரம் பண்ணியிருக்கிறான். நானும் பார்த்தேன். யிப்போதும் நான் சொல்லிச் சொல்லுகிறே," னென்று சொன்னேன். அதுக்கு நல்லது யென்று சொன்னார். அப்படிச் சொன்னவர் இன்றைக்கு அந்தக் கணக்கைப் பார்த்தாப் போலே யித்தனை கோபம் பண்ணினார். அது யென்னத்தினாலேயோ தெரியவில்லை," யென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "அவர் மனதிலே உமக்குக் காண்பிச்சு, உம்மைக் கொண்டு சொல்லிவிச்சு நீரும் கூட வந்து கணக்குக் குடுக்கலாமா வென்கிற கோபத்தினாலே (இருக்கலாம்). "நானொன்று மறியேன்," யென்கிறதாய் உம்முடைய பேரிலே கூட கோபம் பண்ணினார். இவரொன்று மறியார். உடையார் (உடையார் பாளையம்) சம்மதிக்கு முன்னாலே என்னுடைய ஸ்தானாபதி போய் முசியே மேசெனுடனே கண்டு பேசி, அரியலூர், உடையார்பாளையத்தார் பேஷ்கஷும் வாங்கச் சொல்லி யெழுதி யனுப்பிவிச்சு, அவர்கள் போய் உடையார்பாளையத்தாரைக் கேட்டவிடத்திலே மமுதல்லி கான் கொடுக்க வேண்டா மென்று சொன்னானென்று சொன்னான் யென்று எழுதிவந்தது. அதுக்கு வெறுமனே இருந்து விட்டார். இப்பால் முசியே தேவோ அந்தப் பணம்

வாங்கிற நிமித்தியம் பாராக்காரரை அனுப்பச் சொல்லி யெழுதி அனுப்பிவிச்சார். இதல்லாமல் திருமுட்டத்துச் சம்மதி போன வருஷம் கணக்கு கொடுத்தபோது, அதிலே கொம்மாந்தாம் பத்தும் (பற்றும்) சாமீன் தாரர் பத்தும் சகலமும் எழுதிக் கொடுத்து வைக்கவில்லையா? அதுகளுக் கெல்லாம் வயண மவர் கேழ்க்க, சகலத்துக்கும் வயணம் நான் சொல்லவில்லையா? இதெல்லாம் நீங்களறிவீர்கள்," யென்று சொன்னதுக்கு, "இவர்கிட்ட அப்போதைக் கப்போ எழுதிக் கொடுத்தீரே, அந்தப் படிக்கி ஒரு பிரதி யெழுதி கப்பலிலே (கம்பெனிக்கு) அனுப்பினீரா?" வென்று கேட்டார். அப்படிக்கெல்லாம் ஒரு பிரதி யெழுதிவிச்சு கப்பலிலே அனுப்பினேன் யென்று சொன்னேன். அதன் பேரிலே, "அந்தப்படி அனுப்பினது நல்லதாச்சுது. கணக்கு அவர் கையிலே குடுத்தாப் போலே ஆச்சுதே. யினி நான் விடப் போறதில்லை. ஒவ்வொரு சங்கதிக்கும் அங்கே நிறுத்திப் பேசுவே," னென்று ரொம்பவுந் தம்முடைய மனோரதமெல்லாம் சொன்னார்.

அதன் பேரிலே அவரை அனுப்பிக் கொண்டு முசியே பொஷேத்து வீட்டுக்குப் போனவிடத்திலே அவர் யெதிரே வந்து கட்டிக்கொண்டு அழைச்சுக் கொண்டு போய், அவர் சொன்ன சேதி : "தாம் சீர்மையிலே பெரிய மனுஷனாக்கும். முசியே கொதே வந்தவர் ஆர் வீட்டிலேயும் யிறங்காமல் யென் வீட்டிலே வந்து யிறங்கினார். முசியே துப்பியேக்சு யென் வீட்டிலே விருந்து சாப்பிட்டுப் பயணம் போனார். அப்படி யெல்லாம் யெல்லாரும் என் பேரிலே தயவாயிருக்கிறது (உனக்குத் தெரியும்). உனக்கும் யெனக்கும் இருபத்தஞ்சு வருஷமாய் சினேகமாயிருக்கிறது. நான் உன் காரியத்திலே அனேகம் பிரயாசைப் பட்டிருக்கிறேன். நடுவிலே செய்யூர் நிமித்தியம் உனக்கும் யெனக்கும் பொல்லாப்பு வந்து போச்சுது. இனி யதெல்லாம் எண்ணத் தேவையில்லை. இனிமேல்ப்படி உன் காரியத்திலே நானாரரார் வீட்டுக்குப் போகவேணுமோ அவர்கள் வீட்டுக்கெல்லாம் போய், பேசி காரியம் அனுகூலம் பண்ணி உனக்கு நான் சொன்னபடிக்கி லக்ஷாந்திரம் தள்ளிவிச்சுத் தருகுறேன்," என்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது : "இப்போது எழுதிக் கொடுத்தக் கணக்குலே பவ—யுவ ரெண்டு வருஷத்துக்கும் யிருபதினாயிரம் ரூபாயும், ருசுமு வகையரா இரண்டாயிரம் ரூபாயும் ஆக யிருபத்திராயிரம் ரூபா யெழுதிக் கொடுத்திருக்கிறேன். அதுக்கு நீரங்கே ஒன்றும் தடைசொல்ல வேண்டாம். கணக்குப்படிக்கி இருபத்திராயிரம் ரூபாயும் ஒத்துக் கொள்ளும். நானும் உமக்குத் தரவேண்டிய கடன் ரூபா போக மத்தது தள்ளித் தருகிறேன். தாது வருசத்துக்கு உண்டானதும் தள்ளித் தருகிறேன். நீரென்னுடனே சொன்னபடிக்குக் கணக்குத் தீத்துப் போடும். ஏனென்றால் வேறே கணக்கு யெழுதவில்லை. குமுசாயர்கள் போய் ஊருக்கு ஊர் குடிகளை அழைப்பிச்சு, சீட்டுகள் (ஒப்பந்தங்கள் எழுதி

வாங்கும் அமுல்தாரர்களைக் கட்டி அடிச்சு), நம்முடைய மனுஷருடனே குடிகள் ஆரும் பேசாதபடிக்குப் பண்ணி கச்சா, வசூல் விளங்கி கணக்கெழுதிக் கொண்டு வந்தார்கள். அந்தப்படிக்கி நான் கணக்கெழுதின தல்லாமல் அதிகமாய் ஒன்றும் யெழுதினதில்லை. ஆகையாலே அந்தக் கணக்குப் படிக்கு யெனக்குச் சிலவுகள் கும்மாந்தாம் பத்துகள், சாமீன்தார் பைத்துகள், பாளையக்காரர் வகையிரா சம்மதிகள் இதுகளுக்கெல்லாம் கணக்காசாரம் யெனக்குக் கூடிவர வேணும். யிதல்லாமல் (என் குத்தகை) யின்னும் மூன்று வருஷ மிருக்குது. அதுக்கும் ஒரு பேரீசு டராயிச்சுத் தள்ளிப் பண்ணவேணும். ஆகையாலே யிப்படி யெல்லாம் பண்ணித் தருகுரோமென்று நீர் சொன்னபடிக்கு உம்முடைய கைப்பட எழுதித் தரவேணும்," யென்று சொன்னேன். அதுக்கு முசியே பொஷேத்து சொன்னது : "யிந்தப்படிக்கித் தள்ளிவிச்சுப் பண்ணித் தருகுறேன். இப்போ நீ எழுதிக் கொடுத்தக் கணக்குப்படிக்கு கணக்குந் தீந்துவிச்சுத் தருகுறேனென்று யிப்போ என் கையி(னா)லே நானெழுதித் தருகுறேன், வாங்கிக்கோ. இப்போ உன் கணக்குப்படிக்கு ரொக்க செல்லுபோக, உனக்கு கணக்குலே செல்லு கூட வேண்டியதுகளை இன்னென்ன பத்துக்களை யென்று என் கையிலொன்றை எழுதிக் கொடு. அதை நான் கையிலே வைச்சுக் கொண்டு பேசி அந்தப் பைத்துக்களை யெல்லாம் உன் கணக்குப் படிக்குத் தீத்துக்குடுக்கிறே," னென்று சொன்னார். அதுக்கு "குமுசாயர்கள் கணக்கு கொண்டு வந்திருக்கிறார்களே, அந்தக் கணக்குப் பார்த்தால் தெரியவருமே," யென்று சொன்னேன். அதுக்கு, "அப்படியாமா? யென் கையிலே பேசவேண்டியதுகளுக் கெல்லாம் வயணமிருந்தால் அதைப் பிடிச்சுக் கொண்டு நான் அவரவர் வீட்டுக்குப் போய் அவரவருக்குத் தெரியப்படுத்திப் பண்ணுவேன். ஆகையால் என் கையிலே ஒரு படி கூடி வர வேண்டிய பைத்துக்களுக்கு ஒன்று யிருக்கவேணும். எழுதிக்கொடும்," யென்று சொன்னார். "நல்லது, சாயங்காலம் பெரியண்ண முதலியாரை வரச் சொல்லுங்கோள். அவரும் நாமும் பேசி அந்தப்படிக்கி யெழுதிவிச்சு அனுப்பிவிக்கிறேன்," என்று சொன்னேன்.

(முசே துபோசேத் அப்பால் சொன்னதாவது :) "அதன் பேரிலே ஸ்ரீரங்கம் சம்மதி (சீமையை) துரை தரங்கம்பாடி வீரராகவச் செட்டி தம்பிக்குக் குத்தகையாய்க் குடுக்க வேணுமென்று குமுசேலிலே சொன்னார். அதுக்கு நானப்படி அவன் கையிலே கொடுக்கப் போகாது. வீரராகவச் செட்டி கிரகஸ்தானியா (நேர்மையானவனாய்) யிருந்தான். யிப்போ அவன் தம்பி நிசஸ்தர் அல்ல. இந்தவூரிலே இத்தனை நாளிலே (அவனைத் தவிர) கும்பினீர் வர்த்தகனை ஆரைச் சாவடியிலே (சிறையிலே) வைச்சார்கள்? ... ஆகையாலே யிவன் திருடன். இவனை நம்பி இவன் கையிலே குடுக்கப் போகாது. இப்போது நீர் சீர்மைக்கு

அனுப்பின கடுதாசியிலே ஸ்ரீரங்கம் முசியே பிளாக்கூர் குத்தகை பண்ணிக் கையாடி யிருக்க, பாலி செட்டி பேருக்குக் குத்தகையாக (அச்சீமை கொடுக்கப்பட்டது என்று) நீர் எப்படி யெழுதினீ ரென்று கேட்டதுக்கு வெறுமனே யிருந்தார். ஆகையாலே யிப்போது யிவன் பேருக்குக் குத்தகை குடுக்கப் போகாதென்று சொல்லிவிட்டேன். யின்னம், பாலிச் செட்டியையும் யிவனையும் சேர்த்துக் குடுத்தால் ஒரு மட்டுக்குக் குடுக்கலாம், இல்லாவிட்டால் இவன் கையிலே மாத்திரம் குடுக்கப் போகாது. இந்த துரைக்கு வொன்றுந் தெரியாது... இன்றைக்கு ஒரு சேதி சொன்னால் மூன்று மாதத்தைக்குப் பிறகு மறுசேதி சொல்லுவார். இதினாலே எந்தக் காரியம் நடக்கும்? முசியே துப்பிளேயிக்சு இரெண்டு நாழிகையிலே ஆயிரங் காரியம் உண்டு இல்லை யென்று தீத்துப்போடுவார். அப்படித் துரைத்தனம் பண்ணுகிறவன் பார்க்கவேண்டிய (திறமை) ... (இவரிடத்திலே) ஒன்றும் யில்லை. யேது சொன்னாலும் வாயைக் கெட்டியாய் மூடிக் கொண்டு யிருப்பார். இவராலே கும்பினீர் காரியமெல்லாம் கெட்டுப்போறதல்லாமல், காரியம் நடக்கத் தக்கதில்லை. யிந்தச் சேதியெல்லாம் நானும் சீர்மைக்கு யெழுதியனுப்பிவிச்சேன். எப்போதும் யிங்கே தான் துரைத்தனம் பண்ணுகிற பேருக்குச் சீர்மையிலே யிருந்து ராசாவின் காகிதம் வருகிறது. குமுசெல்காரருக்குக் கும்பினியார் காகிதம் வருகுறது. இவரை முசியே கொதே வைச்சுப் போட்டுப் போனதல்லாமல், யிது வரைக்கும் ராசாவின் காகிதம் வந்ததில்லை. அதினாலே வேறே துரைத்தனத்துக்கு ஆர் வருகுறார்களோ யென்கிற யோசனை அவருக்கு யிருக்குது. யிப்போது சீர்மையிலே யிருந்து முசியே துப்பிளேயிக்சு காகிதம் வந்ததிலே அவர் பேரிலே ராசாவும் மினிஸ்தருகளும் வெகு பிரீதியாய் யிருக்கிறார்கள். அவரை யிவ்வடத்துக்கு அனுப்புகிறதாய் யிருந்தார்கள். யிவர் (துய்ப்ளேக்சு) தமையன் பிள்ளைகளுக்கும் மதாம் துப்பிளேயிக்சு மகளுக்கும் கலியாணம் பண்ண வேணுமென்றும், தமக்குந் தேகம் ஆசோதா (நலம்) பண்ணிக் கொள்ள வேணுமென்றும் அவர் வராமல் நின்றிருக்கிறார். இவ்விடத்திலே கலாப மேது உண்டானால் முசியே துப்பிளேயிக்சு வருவார். யில்லாவிட்டால் அவர் வரப்போறதில்லை" யென்றிப்படி யெல்லாஞ் சொன்னார். அதுக்கு நானொரு உத்தாரமுஞ் சொல்லாமல், அவர் சொன்னதெல்லாம் கேட்டுக் கொண்டிருந்து, நாமொன்றுஞ் சொல்லப் போகாதென்று யோசனை பண்ணிக் கொண்டு அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு கோட்டைக்கு வந்(தேன்).

துரை மெத்தை மேலே யிருந்தார். அங்கே போயவரைக் கண்டு ஆசாரம் பண்ணிக் கொண்டேன். அப்போது முசியே தொத்தேல் மாத்திரம் யிருந்தார். அப்போ நான் துரை கிட்டப் போய், "சென்னப்பட்டணத்து வர்த்தகர் பட்டு நூல் நிமித்தியம் மனுஷரனுப்பினார்கள். அங்கே பட்டுநூல்

கிராக்கி மெத்த[1]. இங்கிலீசுக்காரர் வழியிலே வரத்தக்கதில்லை. ஆகையாலே நீங்க ளனுப்பிச்சால் தாங்கள் வாங்கிக் கொள்ளுகிறோமென்று சொல்லி அனுப்பினார்கள்," என்று சொன்னோம். அதுக்கு, "நாமழைப்பிக்கிற தெப்படி? யென்ன நூத்துக்கு நாற்பது ஆதாயங் கூட்டிக் கொடுப்பார்களா?" வென்று கேட்டார். அதுக்கு, "அவ்வளவு வருமா? கொள்முதலுஞ் சிலவுக் கணக்கும் போக ஆதாயம் நூத்துக்கு யிருபத்தஞ்சு கொடுப்பார்கள்," என்று சொன்னேன். அதுக்குக் கப்பல் வரவேணும் என்று சொன்னார். இப்போ கிராக்கி ரொம்ப வானதினாலே கரைவழிக்கி ஆளனுப்பி சீக்கிரத்துக்கு அழைப்பிச்சால் காரிய முண்டென்று சொன்னேன். ஆனால் (அதுக்கு) வேணும் தினிசு (sample) வயணமென்ன வென்று கேட்டார். அதுக்கு நான் அவர்களைக் கண்டு பேசி யெழுதிக் கொண்டு வருகுறேனென்று சொல்லிப் போட்டு, மெத்தையை விட்டுக் கீழே வந்து, சலாபத்து (சங்கு) முகிலனை அனுப்பிவிக்கிற நிமித்தியம் நேத்து துரை யவர்கள் யெழுதிக் கொடுத்த சீட்டுப்படிக்கி இரெண்டு சிப்பம் சகலாத்தும் நானூறு ரூபாயும் வாங்கி வரச்சொல்லி அழைப்பிச்சேன். அப்போது மதனாந்த பண்டிதர் வந்து யிவ்வளவு அவனுக்குக் கொடுத்தனுப்புகிறது போருமா வென்று கேட்டார். அதுக்கு துரை மனது அப்படியிருக்குதே, நாம் செய்ய வேண்டியதென்ன வென்று சொன்னோம். அதுக்கவர் ஆயிரம் ரூபாயிகிலும் கொடுத்தனுப்ப வேணும், யில்லாவிட்டால் நன்றாயிராது என்று சொன்னார். ஆனால் துரையுடனே நீர் சொல்லுமென்று சொன்னோம். அதுக்கு இன்றைக்கு குடுத்தனுப்புகிறதை மோக்கூப்புப் பண்ணினால் (தள்ளிப் போட்டால்) நானதுக்கானபடிக்குத் துரைக்குச் சொல்லி உத்தாரம் வாங்குறேனென்று சொன்னார். நல்லதென்று யின்றைக்கு அனுப்பிவிக்கிறதை மோக் கூப்பு பண்ணி பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

### *1756 வருசம், நொவம்பர் மாசம், தேதி 4; தாது வருசம், அற்பிசி மாசம், தேதி 23; குருவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு முசியே கில்லியார் வீட்டுக்குப் போனவிடத்திலே (அவர்) சொன்னது : "நான் துரை அண்டைக்குப் போனவிடத்திலே தொரை, உம்முடைய சீமைக்கு மனுஷர் போட்டீரா வென்று கேட்டார். ஆகையினாலே திருக்கோவிலூருக்கு ஒருத்தனும் விருத்தாசலத்துக்கு ஒருத்தனும் அனுப்பி வைக்குறேன்," என்று சொன்னார். அதுக்கு, "நல்ல காரியம். இது வரைக்கும் அந்தச் சீர்மையிலே உம்முடைய ஒடுதிப் பிரகாரம் நடக்கிறதே அல்லாமல் அதில் வித்தியாசமில்லை. நீர் கோந்துவாரை (Contoir) நேமிச்சீர். சகலமும்

[1] கல்கத்தாவை சிராஜ்–உத்–தவுலா பிடித்துக் கொண்டதால் அங்கிருந்து பட்டு நூல் வருவது நின்றுபோயிற்று. (பார்க்க. ஆங்கிலப் பதிப்பு, பக். 256)

கோந்துவாரல்லாமல் வேறில்லை," யென்று சொன்னேன். அதுக்கு, "முசியே தெவோவைப் போலே பதிலாமை (பொறுப்பை) என் பேரிலே போட்டுக் கொள்ளத் தக்கதில்லை. என் மனுஷன் ஒருத்தன் அங்கே யிருந்து கொண்டு அன்றாடம் நடக்கிற சமாச்சாரங்களும் (வசூலாகும்) பணங்களும் அனுப்புகிறதும், அவனவன் கையாடுகிறதும் நமக்கெழுதி அனுப்பிக் கொண்டிருக்கிறது மிவ்வளவே யல்லாமல் வேறில்லை," யென்று சொன்னார். அதுக்கு, "நீரெப்படி வைச்சாலும் அவ்விடங்களிலே சகலமும் உம்முடைய ஒடுதிப் பிரகாரம் நடக்குதே அல்லாமல் வேறில்லை," யென்று சொன்(னேன்).

"விருத்தாசலத்திலே சிப்பந்தி (செலவு) வருஷ மொண்ணுக்கு பதிமூவ்வாயிரம் ரூபாயா," என்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "அது துலுக்கர் நாளையிலே (லக்ஷ ரூபாய் ராச்சியம்). அதிலே கால்வாசி சிலவு ஆகும். யிப்போ மட்டுக்கட்டி (சிக்கனம் செய்து) யிந்த மட்டிலே பண்ணியிருக்கிறது. யிப்போதும் நீங்களெப்படித் திட்டம் பண்ணுகிறீர்களோ அந்தப்படிக்கி நடக்கும்," என்று சொன்னோம்.

அதின் பிறகு, "நீங்கள் ஸ்ரீரங்கத்துக்குப் போற பயண மென்ன?" வென்று கேட்டேன். அதுக்கு, "யெனக்கானால் உடம்பு சுவஸ்தமில்லை, பேதி காணுது. ஆனாலும் நான் ஸ்ரீரங்கத்துக்குப் போகாமல் போனால் காரியம் பின்னை ஆர்னாலேயும் ஆகாது," என்று சொன்னார். "அது மெய்தான். நீர் அங்கே போனா லெப்படி? யிவ்விட்டத்துக் காரியம் யெல்லாம் அலைஞ்சு போகுதே. யிதிலே வயணம் அறிஞ்சவர் நீர் ஒருத்தரல்லாமல் மைத்தப் பேருக்கு வயணங்கள் நன்றாய்த் தெரியாதே. நீர் போனாலெப்படி?" யென்று சொன்னேன். அதுக்கு, "நான் ஸ்ரீரங்கத்துக்குப் போகாவிட்டால் அவ்விடத்துக் காரிய மெல்லாம் கெட்டுப்போம்," என்று சொன்னார். அதின் பேரிலே, "முசியே லெகு (M. Legou) யேழாயிரத்துச் சில்வானம் ரூபாய் தர வேணுமே. அதுக்கு யெப்படி?" யென்று கேட்டார். அதுக்கு முசியே லெகு குமாரன் ஆயிரம் ரூபாயும் முன்னூறு விராகனும் பத்திக் கொண்டிருக்கிறான். அது ரெண்டாயிரத்து சில்வாணம் ரூபாயாச்சுது. குரை குடுக்க வேணும்," என்று சொன்னதுக்கு, குறையும் ரூபாய்க் கெப்படி யென்று கேட்டார். அதுக்கு, வண்டி, குதிரை ரெண்டு மூவாயிரம் ரூபாயாச்சுது யென்று நாமனதிலே வைச்சுக் கொண்டு, நீங்கள் சொன்னபடிக்கி யென்று சொன்னேன். அதுக்கு சீமா மூலத்திலே சீட்டுத் தந்தால் நான் வரப் பண்ணிக் கொள்ளுகிறேன் என்று சொன்னார். சீமை உங்களுதே ஆச்சுதே, (ஆதலால்) சரிப்போனபடி (செய்யுங்கோள்) யென்று சொன்னேன். அதுக்கு மேல் நீர் தொரை அண்டைக்குப் போம். நானும் வருகுறோம் யென்று சொன்னேன் (சொன்னார்). நல்லதென்று அந்த மட்டிலே அனுப்பிக் கொண்டு கோட்டைக்கு வந்தேன்.

அப்போது துரை வுடுப்பு வுடுத்திக் கொள்ளாமல் காம்பிராவிலே யிருந்தார். மெத்தை மேலே நாமும் முசே தொத்தேலும் முசே லெனுவாரும் பேசிக் கொண்டிருந்தோம். யிப்படி யிருக்கையிலே தொரை வெளியே வந்தார். நாங்கள் மூன்று பேரும் கண்டு ஆசாரம் பண்ணினோம். அவரும் ஆசாரம் பண்ணி முசியே தொத்தேலுடனே பேசிக் கொண்டு யிருந்தார். அப்படி யிருக்கையிலே முசியே புலோ (போயலோ) தாம் வெளியிலே போயெழுதிக் கொண்ட கணக்கெல்லாம், ஒருத்தனெடுத்துக் கொண்டு பின்னாலே வர, தாம் வந்தார். வருகிறதைப் பார்த்து நான் குருவப்பச் செட்டியுடனே "முந்தாம் நாள் தொரை காச்சின (கடுப்பாய்ப் பேசின) தென்ன? அப்படி யிருக்க நேத்து நானந்தப்படி யெல்லாம் யிவருக்குத் திறந்து சொல்லியிருக்க, இன்றைக்கு யது வெல்லாம் விட்டுப் போட்டு முட்டாள் புத்தியாய்க் கணக்கெல்லாம் யெடுப்பிச்சுக் கொண்டு யென்ன வென்று வருகுறான்? தொரை அவன் வருகுறதைக் குரூர திருஷ்ட்டியாய்ப் பார்க்கிற பார்வையைப் பார்," என்று சொல்லி, விழுப்புரம் மகாசெனங்கள் குடிகள் வந்திருக்குறார்களோ வென்று பார்த்து வரச் சொன்னோம். யிப்படி யிருக்கையிலே முசே புலோ கிட்ட வந்து தொரைக்கு ஆசாரம் பண்ணிப் போட்டு, அவர் முசே தொத்தேலுடனே பேசிக்கொண்டிருக்கிறதினாலே அப்பாலே வந்து சத்து நேரம் ஒலாத்திக் கொண்டிருந்தான். யிதிலே விழுப்புரம் மகாசெனம் குடிகளெல்லாரும் கீழே வந்திருக்குறார்க ளென்று சொன்னார்கள். அப்படி யிருக்கையிலே முசியே புலோவைத் தொரை திரும்பி திரும்பி குரூரப் பார்வையாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார். அவரப்படிப் பார்க்கிறதை குருவப்பச் செட்டியைப் பார்க்கச் சொல்லி காண்பிச்சுக் கொண்டிருந்தோம்.

அப்படி யிருக்கையிலே முசியே புலோ துரைகிட்டப் போய், கணக்கு வந்திருக்குதென்று சொன்னார். சொன்னவுடனே தொரை காம்பிராவிலே போனார். முசே புலோ கணக்குங் கொண்டு காம்பிராவிலே போய் நம்மை உள்ளே யிருந்து அழைச்சார். நாமும் காம்பிராவிலே போனோம். போனவுடனே அங்கே நடந்த சேதி : முசே புலோ தொரையைப் பார்த்து விழுப்புரம் கணக்கெல்லாம் பார்த்ததிலே மகாசெனம் குடிகளும் அன்பது வாரங் (விழுக்காடு) கேழ்க்கிறார்கள். ரங்கப்பன் முப்பது முப்பத்தஞ்சு குடுக்கச் சொல்லி யெழுதி அனுப்பி வைச்சிருக்கிறான். பாப்பய்யப் பிள்ளை நாற்பது நாற்பத்தஞ்சும் விட்டிருக்கிறான்," என்று சொன்னார். அதுக்குத் தொரை அதென்ன வென்று என்னைப் பார்த்துக் கேட்டார். அதுக்கு நான் சொன்னது : "பாப்பய்யப் பிள்ளை நாற்ப்பத்தஞ்சு நாற்பது வீதம் வாரங் குடுத்து நூத்துக் கிருபத்தஞ்சு தபரீக்கு (tafrik—கூடுதல் வரி) போட்டான். அப்போ கலக வேளை வந்து தென்று விட்டான். ஆகையாலே இவர்களுக்கு ஆதியந்தம் துலுக்கர் நாளையிலே அனந்தய்யன் நிலவாரம் பண்ணினது முப்பது முப்பத்தஞ்சு வாரம் (எனத்)

தீத்துவிட்டு வந்தா னாகையிலே, அந்தப்படிக் கவர்க(ளுக்கு) விட்டு வரச் சொல்லி நானெழுதி அனுப்பினேன். அப்படி யிருந்தும் அந்த சீமைக்கு இசாரா பேரீசு லக்ஷத்தன்பதினாயிரம் ரூபாயிக்கி யென்பதினாயிரம் ரூபாயி பேரீசு கண்டிருக்குதென்றும் சொன்னேன். அப்போது கந்தப்பன்[1] மோடு காடு கிராமங்களானால் நாற்பது நாற்பத்தஞ்சு விடவேண்டியது. ஆத்துக்கால் பாய்ச்சல் சீமையானபடியினாலே யிதுக்கு முப்பது வாரம் போராதா வென்று சொன்னான்.

அதின் பேரிலே துரை மகாசெனங்கள் குடிகளை அழையென்று சொன்னார். உடனே மகாசனங்களும் குடிகளும் வந்தார்கள். அவர்களைப் பார்த்து தொரை நாற்பது வாரம் விடச் சொல்லுகுறோமென்று சொன்னார்கள். அதுக்கு மகாசனங்கள் யெங்களுக்கு நாற்பது வாரமும் பண்ணைக் கட்டும் குடுக்கவேணுமென்று கேட்டார்கள். பண்ணைக் கட்டென்ன வென்று (துரை) கேட்டார். பண்ணைக் கட்டு நூத்துக்கு இரு கலம் உண்டென்று சொன்னார்கள். அப்போ முசியே புலோ அன்பது வாரம் சரியாய்க் குடுக்கவேணுமென்று சொன்னார். அதுக்கு நாற்பது வாரம் போறாதா வென்று தொரை சொல்ல, அதன் பேரிலே முசியே புலோ, யிவர்களுக்கு அதுதா னென்னத்துக்கு, யிவர்களை அடி தண்டமாய் அடிக்க வேண்டுமென்று சொன்னார். அதின் பேரிலே தொரைக்குக் கோபம் வந்து மகாசனங்கள் குடிகளைப் பார்த்து உங்கள் பேரிலேயுள்ள காரியம் நாங்கள் தீத்துப் போடுகுறோம். (நீங்கள்) வெளியே போ(ங்களென்று) சொன்னார். அத்தோடே அவர்கள் வெளியிலே போய்விட்டார்கள். நாமும் அந்த மட்டிலே வெளியிலே வந்தோம்.

பின்னையும் அரை நாழிகை முசியே புலோ அங்கே யிருந்து தொரையுடனே பேசினார். அப்போது அவருக்குந் துரைக்கும் என்ன பேச்சு நடந்துதோ? கணக்கெல்லாந் தொரைக் கிட்டப் போட்டு விட்டு கோவிச்சுக் கொண்டு போனார். அப்போது மகாசனங்கள் குடிகள் பின்னோடே போனார்கள். “யினி மேல் நம்மண்டைக்கு வரத் தேவையில்லை. நாம் விட்டு விட்டோம். உங்கள் காரியம் துரையுடனே தீர்ப்பார். தொரைகிட்டப் போங்கோள்,” என்று சொல்லிப் போட்டு வீட்டுக்குப் போனார்.

நாமும் பதினோரு மணிக்கிப் பூந்தோட்டக் கச்சேரியே வந்திருக்கையிலே, முடிப்பீர் விராகுவுக்குப் பேச்சு மூச்சுயில்லை, சுவாசம் வாங்குதென்று வந்து சொன்னார்கள். உடனே அவன் வீட்டுக்குப் போய்ப் பார்க்கு மிடத்தில், நம்மைக் கண்ட பிறகு சொஞ்சந் தெளிஞ்சு வாயி பேசி, அண்ணாசாமிக் கென்று பொன் கரண்டி ஒன்று குடுத்து, தன்

[1] லெறியின் துபாசி. லெறி நம் பிள்ளையை விட்டுவிட்டு, சிறிது சிறிதாக இவன் மூலமே தன் காரியங்களைச் செய்ய ஆரம்பித்தார்.

தாய் தகப்பனைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிச் சொன்னான். நல்லதென்று சொல்லிப்போட்டு வீட்டுக்கு வந்தோம். சாயங்காலம் யிருபத்தாறு நாழிகைக்கு மேலே யிருபத்தேழு நாழிகைக்குள்ளாக வீரராகவு வைகுண்ட பிராப்தி யானான். அந்த சேதி வந்து சொன்னார்கள். உடனே திருமலைப் பிள்ளை அவர்களையும் சேவுகர், அறக்கார்களையும் யெல்லாரையும் அனுப்பி வைச்சோம். உடனே ஏழு மணிக்கெல்லாம் தகனமாச்சுது.

முன் விழுப்புரம் மகாசனங்கள் சமாசாரமெழுதி(னதி)லே மறந்து எழுதாமல், யிதின் கீழே யெழுதின வயண மென்னவென்றால் : கடசியிலே கோபால நாராயணப்பய்யன் பிள்ளை (யின் குமாரன் தனக்கு மானியம்) முண்டென்று சொல்லிக் கொண்டான். அது யேதென்று தொரை யென்னைக் கேட்டார். அதுக்கு, (அவர்கள்) மானியத்துக்கு சந்தா சாயபு கையிலே சன்னது வாங்கினார்கள். சீமையிலே சிறிது கொள்ளையாடிக் கொண்டு யிங்கிலீசுக்காரர் கிட்டப் போய் அனேகம் யெத்தினங்கள் பண்ணின பேரென்று சொன்னோம். அதிலே தொரைக்குக் கோபம் வந்து மகாசெனம் குடிகள் யெல்லாரையும் வெளியிலே போகச் சொல்லிவிட்டார்.

### *1756 வருசம், நொவம்பர் மாசம், தேதி 5; தாது வருசம், அற்பிசி மாசம், தேதி 5;[1] சுக்கிரவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே மெத்தையிலே தொரை காம்பிராவிலே யிருந்தார்கள். நாமும் மெத்தை மேலே போனோம். முசியே லெனுவாரும் யிருந்தார். அப்போது முசியே லெனுவார் என்னண்டையிலே வந்து, "நான் ஒரு கிராமங் கேட்டேன். அது எனக்கு தீத்துக் குடுக்க வேணும்," என்று கேட்டார். அதுக்கு, "சீமை என் கஸ்தலிலே (வசத்திலே) யில்லாமலிருக்கிறதினாலே நானெழுதிக் குடுத்தால் அந்தப்படிக்கி நடக்கவேணும். அதுக்குத் தப்பிதம் வரலாகாது. இப்போதிருக்கிற (நிலையிலே) நானெப்படி யெழுதிக் குடுக்கிறது?" என்று யென்று சொன்னேன். அதுக்கு, முசியே லெனுவார், "ஒருக் காலுஞ் சீமை வுன்னை விட்டுப் போறதில்லை. முசியே லெறி உன் பேரிலே வெகு தயவாயிருக்கிறார். அஞ்சு வருஷத்துக்கு ஆரு(ம்) உன் சீமையைப் பிடுங்கக் கூடாது. ஆனால் நீ முசியே போஷேத்து பேரிலே வரவேண்டிய யிருபத் தீராயிரம் ரூபாயும் கும்பினீ செலவோடே சேர்த்து யெழுதலாமா?" வென்று கேட்டார். அதுக்கு, "மெய்தான். அவர் கோன்சேலியேர். அவர் கிராமம் சம்மதி துரை அவர்கள் முன்னே தீந்தது. ஆகையினாலே யெழுதினேன்," என்று சொன்னேன். அதுக்கு சாமீன்தாரர் (துரவேண்டிய பணத்தையும் மற்றதையும் உன் கணக்கில்) சேர்த்து

[1] 24 ஆம் தேதி

யெழுதினது என்ன? இது தொரை பார்த்து, யிதெல்லாம் தம்முடைய பேரிலே அல்லோ பொறுப்பு வருமென்று சொன்னார். அப்படி யெழுதலாமா?" வென்று கேட்டார். "அது மெய்தான். முசியே கொதே அவர்கள் சீமையை என் கையிலே குடுத்தார். அதுக்கு முசியே லெறி அவர்கள் என்ன சொன்னாலும், நானதுக(ளுக்கு) யெல்லாம் (துரை) அவர்களுக்குப் (பதில் சொல்லவேணுமே. அதே போல) ... என் கையிலே வாங்கின பேர் எனக்குச் சம்மதி பண்ண வேணுமோ, வேண்டாமோ? அப்படி இருக்க துரை அவர்கள் நான் ஒருத்தரையுங் கண்டிக்கத் தேவையில்லை யென்று சகலமும் தங்களுடனே வந்து சொல்லிக் கொள்ளுகிறது. தாங்கள் அதெல்லாம் விசாரிச்சுக் கொள்ளுகிறது யென்றும் திட்டம் பண்ணினார்கள். அதினாலே ஒரு சின்ன காரியமாகிலும் அவனும்[1] நானும் சரியாய் தொரை அவர்களுடனே வந்து சொல்லிக் கொள்ளலாச்சுது. அதினாலே சீமையிலே எல்லாருக்கும் நம்மைத் தொட்டு (பேரிலே) பயமெடுப்பட்டுப் போச்சுது. அதுவுமன்னியிலே, சாமீன்தாரர் ஒரு வருஷம் நாலு மாசமும் சீமையை வைச்சுக் கொண்டு பணஞ் செலுத்தாமல் போனார்கள். அதுக்கவர்களைக் கண்டிச்சுப் பணம் வாங்காமல், அவர்கள் குடுத்த (முன்) பணத்தை மாத்திரம் குடுத்து விடு, சீமையாச்சு, நீயாச் சென்று சொன்னார்.[2] அதுக்கு நல்லதென்று சொன்னேன். அதன் பேரிலே அவர்கள் தங்களுக்குப் பணம் வரவேணுமென்குறார்க ளென்று சொன்னார். இல்லை, அவர்கள் சீர்மையிலே பணம் அதிகமாய்க் கையாடி யிருக்குறார்கள். அவர்கள் பேரிலே தான் பணம் வரவேணுமென்று சொன்னதுக்கு, அதைக் கேட்டு விசாரணை பண்ணாமல் அவர்கள் சொன்ன படிக்கி என்னைப் பணங்குடு யென்று சொன்னார்.......... நீர் குடுக்கச் சொன்னால் குடுக்கிறேனென்று சொன்னேன். குடுத்துவிடு யென்று சொன்னார். அதின் பேரிலே நான் குடுத்தேன். கொம்மாந்தாம் பத்துகளும் (பற்றுகள் பற்றியும் நான்) அப்போதைக் கப்போது துரை அவர்களுக்குச் சொன்னதுக்கு, அதையும் மட்டுப் படுத்தாமல் யிருந்து விட்டார். அதுகளுக்கெல்லாம் நான் சொன்னது பொய்யாய்ப் போகாமல் குமுசாயர்கள் தானே போய்க் கண்டு கணக்கு விளங்கிக் கொண்டு வந்தார்கள். சில்லரைகளிலே அவரவர் பேரிலே வரவேண்டியதுகளுக்கு கணக்குக் எழுதிக் கொடுத்தேன். அவர்களையுந் தெண்டிச்சு வாங்காமல் விட்டு விட்டார். இப்படி எல்லாம் சீமா மூலத்திலே கும்பினீருக்கு வருகிற பணங்கள் நானாவிதமாய்ப் பேருக்கு சத்தாய் (ஒவ்வொருவரும் சிறிதாய்க்)

---

[1] இது ஜாமீன்தாரனாக இருக்கலாம்.

[2] ஜாமீன்தாரரும் வெள்ளையரான படியிலே வெள்ளை ஆளுநர் இப்படிச் சொன்னார். பிள்ளை நஷ்டமடைவதைப் பற்றியோ, கம்பெனி நஷ்டமடைவதைப் பற்றியோ அவர் கவலைப் படவில்லை.

கொண்டு போனால், ஒன்று தாம் சொல்லித் திட்டம் பண்ணினபடிக்குத் தாம் தெண்டிச்சு வாங்கி, கும்பினி கணக்கிலே சேர்க்க வேணும், அல்லாதே போனால், நீயாச்சு, அவன் வசமாய் யிருக்கிற சீமையாச்சு, உன் அமுலாச்சு. ஆரார் பேரிலே உன் பணம் வரவேணுமோ அவர்களை சரிப்போனபடிக்கித் தெண்டிச்சுப் பணம் வரப்பண்ணி வாங்கிச் செலுத்திப்போடு என்றும் உத்தாரங் குடுத்துவிடவேணும். ரெண்டும் யில்லாமல் இங்கிலீசுக்காரர் கலிலில் சிறிது சீர்மை போக, மைத்த சீர்மைகளுக்கு சாமீன்தாரரென்றும் கும்மாந்தாம்களென்றும் சில்லரைகளிலேயும் யிப்படிப் போனால், நான் செய்ய வேண்டிய தென்ன?" வென்று சொன்னேன். அதுக்கு "நீ சொன்னதெல்லாம் மெய்தான். உன் சீமை சம்மதி உனக்கே சரிப் போனபடிக்கு நடக்கத் தக்கதாகவும், பணம் காசு வராத யிடத்திலே நீ தெண்டிச்சு வாங்கத் தக்கதாகவும் பணம் வசூல் செய்ய உத்தாரங் குடுத்து நடத்த வேணும். சீமை உன்னைவிட்டுப் போறதில்லை. உன் மனசுப் படிக்கி நடத்த வேணும்," யென்று சொல்லிப் போட்டு, காம்பிராவிலே துரை அண்டையிலே போய், தொரையும் முசியே லெனுவாரும் காம்பிராவிலே உலாத்திக் கொண்டு பேசிக்கொண்டு யிருந்தார்கள். அப்படிப் பேசிக் கொண்டு வெளியிலே வராமலிருக்கிறதினால் பத்து மணிக்கு நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் சாயங்காலம் முசியே புலோ அழைத்து வர விட்டதினாலே, ராமாஞ்சி பண்டிதரை முன்னுதாய் அனுப்பி வைச்சு, நாமும் அஞ்சு மணிக்கு முசியே புலோ அண்டைக்குப் போனவிடத்திலே, சீமா மூலத்திலே நம்முடைய குத்தகை வாங்கின பேர் யெழுதிக் குடுத்தப்படிக்கு யிசாரா பேரிம், அதுக்கு அவர்கள் செலுத்தினதும், அவர்கள் பேரிலே வர வேண்டிய பாக்கிக்குத் தம்முடைய விசாரிப்பு (விசாரிப்பிலிருந்த) சீமைக்கு தாம் போய், அவரவர்கிட்ட கணக்கு வாங்கி வந்தபடிக்கி அந்தக் கணக்கிலே நம்மை கையொழுத்துப் போடச் சொன்னார்கள். நல்லதென்று கையெழுத்துப் போட்டேன். அதன்பிறகு, "தொரை என்ன இப்படிக் கோபம் பண்ணினார்," என்று கேட்டார். அதுக்கு, "அவர் பேரிலே தோஷம் சொல்வானேன்? என் பேரிலே அவருக்கிருக்கிற கோபத்தை யிப்படி காண்பிச்சார். ஆகையாலே நீரும் சத்து மனம் பொறுத்துப் பார்க்க வேணும்," என்று சொன்னேன். அதுக்கு, "உனக்குத் தெரியாது. நான் ஒருக்காலுமப்படிப் பொறுக்கத் தக்கதில்லை. நாளை உதயத்திலே போய் யென் கணக்கைத் தாரும். அவர் கையிலே என் கணக்(கையும் இந்தக்) கணக்கையும் (கொடுத்துவிட்டு) என் கணக்கு மோசுபரீசு (சரியானதுதான்) யென்று போட்டு வந்து விடுவேன்" என்று சொன்னார். யிவர் (நாம்) சொன்னாலும் கேளார் யென்று போட்டு, அந்த மட்டிலே அனுப்பிக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

***1756 வருசம், நொவம்பர் மாசம், தேதி 8; தாது வருசம், அற்பிசி மாசம், தேதி 27; சோமவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் மெத்தை மேலே தொரை அவர்களைக் காண்பிச்சுக் கொண்டவித்திலே, அவர் சத்து நேரம் நின்று ... முசே கில்லியாரும் முசியே லெனுவாரும் (உடன் வர) காம்பிராவிலே போய்ப் பேசப் போனார்கள்.

அதன் பேரிலே பிறகு நாம் பிடவை பார்க்கிற சாலையிலே வந்திருந்து, சலாபத்து சங்கு (விடமிருந்து) வந்திருந்த முகிலனை என்னத்துக்கு வைச்சிருக்க வேணும் யென்றும், இன்றைக் கனுப்பிவிடுவோ மென்றும் யிவனுக்கும் சொல்லி அனுப்பிச்சுக் கொண்டு, சகலாத்தையும் ரூபாயையும் அனுப்பிச்சுக் கொண்டு, அவனையும் கூட்டிக் கொண்டு மெத்தை மேலே போகையிலே முசியே லெனுவார் தொரையுடனே பேசியிருந்து எனக்கெதிராக வந்தார். அவரென்னை அழைச்சு, இப்போது தொரை எனக்கு குமுசாயருக்கு குமுசாராகிய (தலைமைக் கொம்மிசேர்)[1] உத்தியோகம் தந்து, நீ யெழுதிக் கொடுத்த கணக்கும் என் கையிலே தந்து, (கு)முசாயர்கள் விசாரிச்சு வந்த மூணு கணக்கும் யென்னை விசாரிக்கச் சொல்லிச் சொன்னார். நீ சகலமுஞ் செல்லாய் (செலுத்திப்போட்டு விட்டதாக) யெழுதிப் போட்டியே, அப்படி யெழுதுவார்களா? தொரைக்கு உன் பேரிலே தயவிருக்குது. இப்போதும் அந்தக் கணக்கிலே ரொக்கம் செல்லு (செலுத்தின தொகை) தானிருக்குதே இதல்லாமல், முத்தண்டல் சம்மதி (வசூலான தொகை விவரங்கள்) ... முகாரா பத்துக் கணக்கும் குமாந்தாங்கள் பத்துகள், சாமீன்தார் பத்துகள், யிதுகளெல்லாம் நன்றாய் விசாரிச்சு, கூடு மினமெல்லாங் கூட்டி, தகராறு சம்மதிகளெழுதிக் கொடுக்க, கோன்சேலிலே தீர்க்க வென்று சொல்லி யிருக்கிறார். நான் உன்னவனாச்சுதே. நீ ஒன்றுக்கும் ஆலோசனை பண்ணத் தேவையில்லை," யென்று சொன்னார். அதுக்கு நான் அவருக்கு உபசாரமாய் சொல்லிப் போட்டு அப்பால் போகையிலே முசியே கில்லியார் யெதிராக வந்தார்.

அவரென்னைப் பார்த்து, ராமாஞ்சி பண்டிதரை அனுப்புமென்று சொல்லிப் போட்டுப் போனார். நல்ல தென்று சொல்லி, ராமாஞ்சி பண்டிதரை முசியே கில்லியார் வீட்டுக்கு அனுப்பிப் போட்டு, நான் இவனையுங் (முகிலனையும்) கூட்டிக் கொண்டு துரை அண்டைக்கு போனேன். அப்போது துரை அவர்கள் முகிலனுக்கு ஒரு சகலாத்து சிப்பமும் நானூறு ரூபாயும், கூடவந்த பேருக்கு நூறு ரூபாயும் குடுத்து,

[1] கொம்மிசேர் என்றால் விசாரணை அதிகாரி.

சலாபத்து சங்குக்கு யெழுதின காகிதமும் கொடுத்து, அவனைப் பயணம் போகச் சொல்லி அனுப்பிப் போட்டு, என்னை அழைச்சு "உன் கணக்கும் குமுசாயர்கள் யெழுதி வந்த கணக்கும் முசியே லெனுவாரை விசாரிக்கச் சொல்லி நேமிச்சிருக்கிறோம். அந்தப்படிக்கி நீயும் கணக்கெல்லாம் அவருக்கு ஏற்க ரூசு பண்ணித் தீத்துப் போடெ" ன்று சொன்னார். "நல்ல காரியம் நான் உங்களை நம்பினவன். உங்கள் தயவுக்குப் பாத்திரமாயிருக்கிறவன். உங்கள் தயவு வர நடந்து கொள்ளத் தக்கனவன்," என்று சொல்லிப் போட்டு நான் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தேன்.

அதன் பேரிலே ராமாஞ்சி பண்டிதர் முசியே கில்லியாரண்டைக்குப் போய்க் கண்டு பேசி வந்து சொன்ன சேதி : முசியே கில்லியார் தாம் துரையவர்களுடனே சொன்னார் : "முன்னுதாய் ஸ்ரீரங்கம் சங்கதி பேசி வீராகவு செட்டிக்குத் தானே நிலவரம் பண்ணி தஸ்திரத்திலே கையெழுத்துப் போடுவிச்சார். அதின் பேரிலே நம்முடைய பேரிலே உள்ள சீர்மைக்கு (நீரானால்) வெள்ளைக்காரர் பாரிசமாய் நடத்துகிறீர். வெள்ளைக்காரருக்கு இந்த சீர்மைச் சேதி தெரியாது. அதினாலே பணமெல்லாம் சிதறிப் போய் விடும். ரங்கப்பன் பெரிய மனுஷன். இவர்கள் வந்து மூன்று தலைமுறை யாச்சுது.[1] வந்த துரைகளெல்லாம் அவர்கள் பேரிலே மெத்தவும் தயவாக நடத்(தினார்கள்). சீர்மை வரைக்கும் போய் அனேக வெகுமதிகள் (வந்தன). மத்தப் பேர்கள் துரைகள் மனது வர நடக்கிற பேரென்று மெத்தவுஞ் சொன்னேன். துரையும் தயவாக யிருக்கிறார். மூன்று நாளையிலே சீர்மை ரங்கப்பன் வசமாகுது. வேறொன்றும் யோசனை பண்ணத் தேவையில்லை. யிப்படி நடந்துதே யென்று முசியே தெவோ வீட்டுக்கு ரங்கப்பனும் போகத் தேவையில்லை. அவன் கூட்டி வரச் சொன்னால் நீ மாத்திரம் பிறப்பட்டுப் போய் வா. எல்லா மிரெண்டு மூன்று நாளையிலே திரும்பப் போகுது. முசியே புலோவுக்குந் துரைக்கும் வேறே மனதிலே குரூரம் பிறந்து யிருக்குது. அதினாலே அவர் பேரிலே துரை கோபம் பண்ணுகிறார். இந்த யிடஞ்சலிலே உங்கள் காரியமும் பாதியிலே வந்து மாட்டிக் கொண்ட(து) ... இது கூட அலைஞ்சு இனி சீக்கிரமாய் தீந்துப் போகுது. விசாரப்பட வேண்டாம் என்று கெட்டியாய்ச் சொல்லென்று," சொன்னதாக ராமாஞ்சி பண்டிதர் வந்து சொன்னார்.

நான் முகிலனை அனுப்பப் போயிருக்கையிலே, சென்னப்பட்டணம் வர்த்தக (ர்களுக்காக) பட்டு நூல் அன்னூறு மணங்கு துரையவர்கள்

---

[1] 'ரங்கப்பன் குடும்பம் மூன்று கவர்னர்கள் கீழே பணிபுரிந்துள்ளது' என்று ஆங்கிலத்தில் உள்ளது. அது சரியல்ல. தலைமுறை என்று எடுத்துக் கொண்டால் தமிழ்ப் பிரதியில் உள்ளது சரியே. நயினியப்பன், அவர் மகன் குருவப்பன், பின்னால் திருவேங்கடம் பிள்ளை, ரங்கப்பிள்ளை என்று எடுத்துக் கொள்ளலாம்.

அழைப்பிக்குறது, அதுக்கு அந்த வர்த்தகர் கணக்குபடப் படிக்கு கொள்முதலும் சகல சிலவும், இதல்லால் நூத்துக்கு யிருபத்தஞ்சு லாபமும் கூட்டி பட்டு நூல் வாங்கிக் கொண்டு துரைக்குக் குடுக்கிறது, அந்தப் பட்டு நூல் சயிதாபாது நூல் இரெண்டு ராசி, மூன்று ராசி ராதாங்கா[1] நூல், இரெண்டு ராசி மூன்று ராசி சூரத்து பிராயி (முறுக்கு நூல்) யிந்தப்படி அழைப்பிக்கிறதென்று கடுதாசி கொடுத்துப் பேசி தீந்தது.

நேத்து உதையத்திலே துரையவர்களும் வெள்ளைக்காரரும் சீனாக்குழலெ[2]டுத்துக் கொண்டு சூரியன் பேரிலே புதன் ஒடுகிறதைப் பார்த்துக் கொண்டு யிருந்தார்கள்......... அப்போது புதன் கறுத்து இருக்கிறாரென்று பார்த்துச் சொன்னார்கள். புதன் கறுப்பா யிருப்பா(னேன்)னென்று கேட்டதுக்கு சூரியன் பேரிலே ஒடுகிறதினாலே கறுத்துப் போகுதென்று சொன்னார்கள்.

***1756 வருசம், நொவம்பர் மாசம், தேதி 10; தாது வருசம், அற்பிசி மாசம், தேதி 29; புதவாரம்***

இத்தனாள் காலமே பேதி கண்டு கொண்டிருக்கிறதினாலே வீட்டிலே தானே யிருந்தோம். அப்படி யிருக்கையிலே நேத்து சின்ன துரையை பெரிய துரை அழைப்பிச்சுப் பேசின சம்மதி யெல்லாம் சின்ன துரை (யின்) துபாசி ராமய்யப் பிள்ளைக்குச் சொன்னதாக மேலுகிரி செட்டி வந்து சொன்ன வயணம் : சின்ன துரை நேத்து பெரிய துரையண்டைக்குப் போனவிடத்திலே, துரை சொன்னது : "முசியே தெவோ வசமாயிருக்கிற சீர்மைக்கு அவர் எண்பத்தய்யாயிரம் செலுத்தி விச்சார். முசியே புலோ தம்முட வசம் (இருக்கிற) சீமைக்கு யிருபத்தய்யாயிரம் ரூபா யெல்லாம் செலுத்தினார். முசியே தெவோ சீர்மை(யை விட) யிவர் வழிச் சீமை அதிக சீர்மை. அப்படி யிருக்க இருபத்தையாயிரம் ரூபாய் செலுத்தினார். அப்படி யிருந்தும் நாமொன்றுஞ் சொன்னது யில்லை. அப்படி யிருக்கத் தாம் தானே கணக்கையும் நம் மண்டையிலே கொண்டு வந்து போட்டு, அந்தச் சீமையும் முசியே தெவோ வசத்திலேதானே குடுத்து பணத்தை .... அழைப்பிச்சுக் கொள்ளுமென்று சொல்லிப் போட்டுப் போனாரென்று சொன்ன(ாராம்). அதுக்குச் சின்ன துரை சொன்னது, 'முசியே புலோவுக்குத் தான் சீர்மையைத் தொட்டு நிமித்தியம் என்ன? முசியே தெவோவுக்குத் தான் நிமித்தியமென்ன? சீர்மை வந்து ரங்கப்பனுது. அவன் செல்லு பாக்கி என்னமோ அதைப் பார்த்து நாம் தீத்துக் கொள்ள வேண்டியது. முன்னாலே குமுசேலிலே சீர்மை மேலே போய் கணக்கு மாத்திரம் விசாரிச்சுக் கொண்டு

[1] 'ராதாந்தகா' என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது. இது 'ராதாநகர்' என்று அதன் பதிப்பாசிரியர் ஊகிக்கிறார்.

[2] டெலஸ்கோப்

வரச்சொல்லி யிவர்களை அனுப்பி(னோம். இவர்களோ) சீர்மையைப் பங்கிட்டுக் கொண்டு ... அனுப்பிவிக்க (கிறார்கள்). நீரானால் சுயமாய் நடத்துகிறீர். குமுசேல் (முடிவுப்படியல்ல). நாளை நாங்கள் அறியோம் என்று சொல்லி விடுவோம். எங்களுக்கு அக்கறையில்லை. நான் நன்றாய்ச் சொல்லி விட்டேன். இந்தச் சீர்மை வந்து துலுக்கருது. யிவர்களாலே ஆனதல்லா. நீரானால் யிவர் கையிலே யிருக்கிறதை அவர் கையிலும், அவர் கையிலே யிருக்கிறதை இவர் கையிலும் யிப்படிச் செய்யுகிறீர். இதெல்லாமும் உம்முடைய பேரிலே வந்து நிற்கும். நானானால் (முன்பே பலமுறை) சொன்னேன். யெத்தனை சொன்னாலும் நீர் வாயைத் திறந்து உத்தாரஞ் சொல்லாமலிருந்தீர். நான் சொல்லுகிற தெல்லாங் கேட்டு உத்திர மேன் சொல்லவில்லை என்று கேட்டாலும் நீர் அதுக்கு உத்தாரமுஞ் சொல்லவில்லை. அதினாலே நாமேன் (மறுபடியும்) சொல்லவேணுமென்று நான் வெறுமனே ... யிருந்தேன். யிப்போதும் நீரா அழைப்பிச்சுச் சொன்னபடியினாலே நான் சொல்லுகிறேன். யிதெல்லாம் பணத்தோடே சேந்தது. வெறுமனே போகாது. சீமையானால் நானாவிதமாய்க் கலீலாய்ப் போகுது. இதெல்லாம் வந்து உம்முடைய பேரிலே கெட்டியாய் நிற்கும். ரங்கப்பனானால் அப்போதைக் கப்போது யென்னுடனே சேதி சொல்லிப் போட்டுப் போறான். நானானால் நீர் கேட்ட படியினாலே சொன்னேன். உமக்கு சரிப் போனபடி (செய்யும் என்று தான்) சொன்னதாகவும், யித்தனையும் துரை கேட்டு மறு உத்திரம் சொல்லாமல் வாயை மூடிக்கொண்டு யிருந்தார். அந்த மட்டுக்கும் சொல்லிப் போட்டு நாம் வந்து விட்டோம்," யென்று சின்ன துரை சொன்னதாக மேலுகிரி செட்டி வந்து சொன்னான்.

***1756 வருசம், நொவம்பர் மாசம், தேதி 12; தாது வருசம், கார்த்திகை மாசம், தேதி 1; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலமே மழை பிடிச்சு விடாமல் பேயுறபடியினாலேயும் பேதி கண்டு கொண்டிருக்கிற படியினாலேயும் வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருந்தோம். நேத்து மத்தியானம் பெரியண்ண முதலியார் வந்து முசே போஷேத்து சொல்லச் சொன்னாரென்று சொன்ன சேதி என்னவென்றால் :

முந்தாம் நாள் அற்பிசி மாசம் 29 தேதி முசியே பொஷேத்து சின்ன துரை வீட்டுக்குப் (போன போது) அங்கே சின்ன துரையும் வங்காளத்துக்கு குமுசேல்க்காரன் முசியே கொலேயும்[1] யிருந்தார்கள். அப்போ நாமும் அவர்களும் கூடயிருந்து பேசிக் கொண்டிருக்கையிலே, முசே லெனுவார் வந்து துரையிடம் .... ரங்கப்பன் கணக்கு கொண்டு

[1] கொலேர் என்று தமிழ்ப் பிரதியிலும், கொலே (Colle) என்று ஆங்கிலப் பதிப்பிலும் உள்ளது.

வந்து முன்னிரெண்டு வருஷத்துக்கும் யிசாராவுக்குச் செல்லு (வரவேண்டிய) பாக்கி கொண்டு வந்து குடுத்தான்; யிதிலே பைத்துக்கள் அவனுக்குச் செல்லு கூடவேணும் (சேரவேண்டும்) யென்று சொல்லி, செல்லிலே சேத்து எழுதிக் குடுத்தான். யிந்தக் கணக்கை துரை பார்த்து யிதெல்லாம் சரியா, ஒத்துக் கொடுக்கிறதா (ஒத்துக் கொள்கிறதா) வென்று உமக்கு காண்பிச்சுக் கேட்டுக் கொண்டு வரச் சொன்னாரென்று சொல்லி, கணக்கை முசே பெடுத்தல்மீ கிட்ட குடுத்தார். அந்தக் கணக்கை முசியே பெடுத்தல்மீயும் நாமும் முசியே கோலேரும் (கொலேயும்) மூணு பேரும் பார்த்தோம். அதிலே நம்முடைய பேரிலே இருபத்தீராயிரம் ரூபா யெழுதியிருந்தது. அப்போ நானிருந்து,[1] "மெய்தான் யிருபத்தீராயிரம் ரூபாய் நான் குடுக்க வேணும். அதுக்கு நானும் ரெங்கப்பனும் கணக்கு தீத்துக் கொள்ள வேணும் யென்று சொல்லி, மத்தப் பத்துகளை அவனுக்குக் குடுத்து ஒத்துக் கொடுக்க வேண்டியதுதான். அதே தென்றால் நாம் சீர்மை யிசாரா கொடுத்தோம். அந்தச் சீர்மையிலே கலீல் காரியம் வந்தாலும் மழையில்லாமல் நஷ்ட்டம் வந்தாலும் நாம் தள்ளிக் கொடுக்கத் தேவையில்லையா?" வென்று சொன்னோம். அதின்பேரிலே சின்ன துரையும் முசே கொலேரும் நாம் சொன்னபடிக்குத் தாமே தள்ளிக் குடுத்துத் தீரவேணும் யென்று சொன்னார்கள். அதின்பேரிலே முசியே லெனுவார் நாங்கள் மூணு பேரும் யேக வாக்கியமாய் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தபடிக்கு. துரையுடனே சொல்லுகிறேன் யென்று பிறப்பட்டுப் போனான். யின்னம் மூன்று நாளையிலே குமுசேல் கூடப் போறோம். அதிலே முசியே புலோ, முசியே பெடுத்தல்மீ, முசியே திலார்ஷூ, முசியே லசேர் (La Serre), நான் (ஆகிய) நாங்களஞ்சு பேரும் ஒன்றாய்க் கூடியிருக்கிறோம். முசியே கில்லியாரும் முசியே லெனுவாரும் உமக்கு சினேகமாச்சுதே ... துரையும் முசே தெவோவும் அல்லவோ கூடிப் பேசப் போறார்கள். அது நடவாது. இதிலேயும், துரை காரியம் நடத்தாமல் போனால் நாங்கள் சீர்மைக்குக் காயித மெழுதுவோம். அல்லாமல் விடத் தக்கதில்லை. முசியே கொதே பண்ணிப்போனது, இவரெப்படி யிந்த வூருக்குத் துரையோ அப்படி சீர்மைக்கு நீ (பிள்ளை) துரையாய்ப் பண்ணிப் போனார். இவரையும் (லெறி) முசே கொதே தானல்லோ வைச்சுப் போனார். இவராலே உம்முடைய சீர்மையைப் பிடுங்கப் போகாது. ஆனால் பணமாத்திரம் ஒன்று கேழ்க்கலாம். யிப்போதும் ஸ்ரீரங்கம் சம்மதிக்கு யெங்களை யல்லாமல் துரையும் முசியே கில்லியாரும் முசியே தெவோவும் முசே லச்சேனும் (அல்ல. La Serre), முசே கொலேரும் யிவர்களஞ்சு பேரும் கையெழுத்துப் போட்டு எங்கள் அண்டைக்கு அனுப்பினார்கள். அதுக்கு எங்களுக்குச் சம்மதி யில்லாமல் செய்ததினாலே நாங்கள் கையெழுத்துப்

[1] லெனுவார்.

போடத்தக்கதில்லை யென்று சொல்லி விட்டோம். ஆகையாலே நீர் விசாரமாய் வீட்டிலே யிருக்கிறதென்ன? அப்படியிருக்க வேண்டாம். சந்தோஷமாய் யெப்போதும் போலே வெளியே வரவேணுமே யல்லாமல் யென்ன யிருக்கு தென்று முசியே பொஷேத்து சொல்லச் சொன்னாரென்று பெரியண்ண முதலி வந்து சொல்லிப் போட்டுப் போனான்.

*1756 வருசம், நொவம்பர் மாசம், தேதி 14; தாது வருசம், கார்த்திகை மாசம், தேதி 3; ஆதிவாரம்*

தேகம் சுவஸ்தம் (இன்றி), அன்றியும் பேதியும் அன்ன துவேஷமுங் கண்டு மெத்தவும் பிலயீனமாய் நாளுக்கு நாள் கால் கை சரீரம் எல்லாம் ஒஞ்சுப் போறது (அதனால் கோட்டைக்குப் போகயில்லை). யிடுப்புக்கு மேலாக வலியும் ஆமசலனமும் கண்டபடியினாலே, முன் வைப்பூர் சீத்தாராம் சோசியர் நாறபத் தெட்டாம் வருசம் அற்பிசி மாசம் 19 தேதி நாழிகை 26–க்கு கெண்டம் யெழுதி யிருந்ததுக்கு, அற்பிசி மாசம் 22 வரைக்கும் அந்த தோஷங் காணாமல் 21 தேதி முதல் பிரபு கோபம் கண்டு, அது முதல் ராசதோஷம் ஒசந்து கொண்டு வந்தபடியினாலே, வைப்பூர் சுப்பா சோசியர் அற்பிசி மாசம் சொன்ன தோஷம் காற்திகை மாசம் 20 தேதி (வரை) உண்டென்றும் சொன்னபடியினாலே அந்த தோஷத்துடைய குணம் யிதென்று யோசித்து வீட்டிலே தானேயிருந்தோம்.

*1756 வருசம், நொவம்பர் மாசம், தேதி 28; தாது வருசம், காற்திகை மாசம், தேதி 17; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போறதுக்கு உடம்பு சொஸ்தமில்லா மலிருக்கிற தினாலே வீட்டிலே தானே யிருந்தோம். அப்படி யிருக்கையிலே முன்னாள் அற்பிசி மாசம் யிங்கே யிருந்து யீந்தியா யென்கிற கப்பலின் பேரிலே சீர்மைக்குக் கும்பினீர் கட்டு நூத்தறுபதும் மசுக்கரைக் கட்டு நாற்பதும் மயேயிக்கு அவரவர் ஆலோசனைக்காரர் (கவுன்சிலர்) சனத்துக்கு யிருபது முப்பது நாற்பது கட்டு யிந்த வீதம் போட்டு செம்மரமும் பலகரையும்[1] (சங்கு) சாக்கு அன்னூறு, முளகு சாக்கு அன்னூறு, போட்டு மையேயிக்குப் போய் மிளகு ஏத்திக் கொண்டு சீமைக்குப் போகச் சொல்லி அனுப்பின கப்பலை இங்கிலீசுக்காரர் மயீ துறைக்குச் சமீபத்திலே ரெண்டு கப்பலுடனே வந்து பிடிச்சுக் கொண்டு தலைச்சேரிக்குப் போனதாய் நேத்து 16 தேதி சனிவாரம் நாள் ராத்திரி

[1] 'பாலாடை' என்பது இவ்வாறு எழுதப்பட்டுள்ளது.

மயேமிலே யிருந்து காகிதம் வந்துதென்று, யித்தநாள் காலமே கோயிலுக்குப் போயிவந்து குமுசேல் கூடி காகிதம் பாத்துக் கொண்டார்களென்று சேதி வந்தது. முன் 14 தேதி வியாழக்கிழமை நாள் சென்னப்பட்டத்திலிருந்து மேஸ்தர் லாரென்சு (Mr. Lawrence) யென்கிறவரும் முன்னூறு பேர் சொலுதாதுகளும் கப்பல் மேலே தேவனாம் பட்டணம் வந்து சேர்ந்தார்கள்.

## டிசம்பர் 1756

### *1756 வருசம், தெசம்பர் மாசம், தேதி 1; தாது வருசம், காற்திகை மாசம், தேதி 20; புதவாரம்*

இத்தனாளும் தேகம் சுவஸ்தமில்லாததிலே வீட்டிலே தானே யிருந்தோம். மழையும் பேஞ்சு கொண்டிருந்தது. யிப்படி யிருக்கையிலே, பாப்புராயன் சொல்லச் சொன்னதாக கெண்டியப் பிள்ளை வந்து சொன்ன சேதி : பாப்புராயன் உதயத்திலே கோட்டைக்குப் போனவிடத்திலே துரையவர்கள் முசே தெவோவைக் கூட்டி வரச் சொன்னதாகவும், அவர் மெத்தை மேலே வந்து துரைக் கிட்டப் போகச் சந்தோஷமாய்த் தானே காம்பிராவிலே போனதாகவும், அவரும் துரையும் ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்ததாகவும், யிதிலே முசியே தெவோ மெள்ள மெள்ளப் பேசினதாகவும் துரையவர்கள் மெத்தவும் உசந்து சத்தத்துடனே பேசினார் யென்றும், அப்போது நாலு மூன்று தரம் நம்முடைய பேர் யெடுத்துச் சொன்னதாகக் கேழ்க்கப்பட்டு தென்றும், யித்தனை நாள் வரையிலே துரை யிப்படி உசந்த குரலாய்ப் பேசினதில்லை யென்றும், மெத்தை யெல்லாம் அதிரப் பேசினார் யென்றும், அதன் பேரிலே முசியே தெவோ முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு வெளியே வந்து தம்முடைய வீட்டுக்குப் போனதாயும் பாப்புராயன் சொன்னதாய் கெண்டியப் பிள்ளை வந்து சொன்னார். அதன்பேரிலே நாம், யின்றைய தினம் யெல்லாருக்கும் சம்பளம் குடுக்க வேண்டியதானதினாலே சீமா மூலம் பண நிமித்தியம் கோபம் பண்ணிராரென்றும் யோசனை பண்ணினோம்.

அதன் பிறகு சேதி கேழ்வியான தென்ன வென்றால் : இத்தனாள் உதயத்திலே முசியே தெவோ கொண்டு போய் முசே லெனுவார்[1] வசத்திலே மூவாயிரத்தி யெழுநூத்தி நாற்பத்தி மூன்று விராகனும் யெண்ணா யிரத்தி அறுபத்தேழு ரூபாயும் சீர்மை சம்மதிக்கச் செலுத்தினதாகவும், அந்தச் சேதி வந்து முசே லெனுவார்[1] சொன்னவுடனே துரையவர்கள் முசே தெவோவை அழைப்பிச்சுக் கோபிச்சுக் கொண்டாரென்றும் கேழ்க்கப் பட்டுது.

### *1756 வருசம், டிசம்பர் மாசம், தேதி 10; தாது வருசம், காற்திகை மாசம், தேதி 29; சுக்கிரவாரம்*

இத்தனாள் சுவஸ்தமன்றியிலே வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி யென்ன வென்றால் : துரையவர்களண்டைக்கு

---

[1] M. Le Noir என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது. இது M. Lenoir ஆகவே இருத்தல் வேண்டும்.

இத்தனா ளுதையத்திலே முசியே கில்லியார் போனதாகவும், "திருக்கோவிலூர் சம்மதிக்கு நான் மனுஷருனுப்பி ஒடுதியு மனுப்பிக் கொடுத்து யிருக்க, அந்தக் கோந்துவார் என்கிறவன் என் ஒடுதியும் தள்ளி, தப்பிதமான சேதிகளாய் உங்களுக்கு யெழுதியனுப்பினான்; நீர் அவனைத் தானே பணம் அனுப்பச் சொல்லி யெழுதினீர். முசியே ஒம்மோ (M. Aumont) வானால் மெத்தவுஞ் சரிப்போன படியெல்லாம் நடத்துகிறான். யிது என்ன காரியம்? நியாயம்?" என்று கேட்டாராம். (அதன் பிறகு) துரை முசே ஒம்மோவை செஞ்சிக்கு[1] (போக)ச் சொல்லியும் கோந்துவாருக்குத் தாக்கீதுக் காகிதமும் அனுப்பிவிச்சா ரென்றும், அதின் பேரிலே முசியே கில்லியார் பேசிப் போ(னாராம்).

(பிறகு) முசியே புலோ துரையவர்களண்டைக்கு வந்து, முன்னாலே கங்கிப்பட்டி வீரராகவச் செட்டி தம்பி ஸ்ரீரங்கம் சீர்மை மொகத்தமா நிமித்தியம் ஒரு வெள்ளைக்காரன் கிட்ட புதுச்சேரி ரூபாய் முப்பதினாயிரம் ரூபாய்(க்குச்) சீட்டு யெழுதிக் கொடுத்து, அதுக்கு ஆற்காட்டு ரூபாய் முப்பதினாயிரம் வாங்கி, அதிலே துபாசி கந்தப்ப முதலிக்கு அய்யாயிரங் குடுத்து வந்ததாகவும், அந்த குறை யிருபத்தையாயிரமும் துரையவர்களுக்குக் குடுத்ததாகவும், அந்த ரூபாயை துரையவர்கள் டங்காசாலைக்கு அனுப்பிவிச்சு புதுச்சேரி ரூபாய்[2] அடிச்சுக் கொண்டு வரச்சொல்லிச் சொன்(னாராம்); முசியே புலோ துரையவர்கள் கிட்ட வந்து அந்த ரூபா யடிக்கிறதுக்கு சாசனிக்கு (ஒடுதியில்?) கையெழுத்து வாங்கிக் கொண்டு போனதாகவும், அதின்பிறகு முசியே தெவோ வந்து துரையவர்களுடனே பேசியிருந்து பிறப்பட்டு முசியே கில்லியார் அண்டைக்குப் போய், திருக்கோயிலூருக்கும் விருத்தாசலத்துக்கும் துரையவர்கள் என்னை மனுஷரை அனுப்பச் சொன்னார்; யெனக்கும் உமக்கும் சினேகமான தினாலே நான் மனுஷர் அனுப்பயில்லை," என்று சொன்னதாகவும், அதுக்கு முசியே கில்லியார் "யென் வசமாய் யிருந்ததை யென்ன நியாயத்தினாலே உம்முடைய வசம் பண்ணினார்? நல்லதே ஆச்சுதே! நீர் வேண்டிய மனுஷரை அனுப்பிவியும்," யென்று பின்னையுங் கோபமாய் உத்தாரஞ் சொல்லி அனுப்பினாரென்றும், அதின் பேரிலே முசியே தெவோ வீட்டுக்குப் போனார் யென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1756 வருசம், தெசம்பர் மாசம், தேதி 13 முதல் 16; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 2 முதல் 5 வரைக்கும்; சோமவாரம்[3]*

இத்தனாள் 2 தேதி முதல் 5 தேதி வரை சரீரம் சொஸ்தமில்லாத

[1] செஞ்சிக்கு ஒரு வரை நியமிப்பது 'தண்டனை' யாகக் கருதப்பட்டதாம்.

[2] புதுச்சேரி ரூபாய் ஆற்காட்டு ரூபாயைக் காட்டிலும் 15 அல்லது 16 சதம் மாற்று உயர்ந்ததாகக் கருதப்பட்டதாம்.

[3] 13 ஆம் தேதி சோமவாரம்; 16 குருவாரம்.

படியினாலேயும் வலபத்த (மலச்சிக்கல்) மான படியினாலேயும் வெளியே போகயில்லை. ஆனால் கேள்விப்பட்ட சேதி : நாராயண சாஸ்திரியும் அய்யண் சாஸ்திரியும் ரெண்டாந் தேதி வந்து, சவரிராயன் முகாந்திரமாய் முசியே தெவோ(வைப்) பேட்டி கண்டு வந்ததாகவும், அவர் கணக்கு வழக்கு எழுதி வைக்கச் சொன்னதாகவும், நல்லதென்று வந்து அஞ்சாந் தேதி கணக்கெழுதி வைச்சுக் கொண்டதாகவும், சிதம்பர் (சிதம்பரம்) அங்கப் பிள்ளை வந்ததாகவும் இப்படி யெல்லாஞ் சேதி கேள்விப்பட்டது. யிதுவுமல்லாமல், சென்னப்பட்டணத்திலே கலாபம் வருகுற (போர் ஏற்பாடு செய்யப்படுகிறது) தென்றும், மோர்சா போடுகிறதும் (கொத்தளங்கள் கட்டுகிறதும்) வீடுகளிடிக்கிறதும் இப்படி யெல்லாம் முஸ்தீப்பு பண்ணுகுறார்களென்றும் முன் வராகன் (அல்ல. முனவர் கான்) பதினாயிரங் குதிரையுடனே கணவாய்த் தாண்டி வருகுறார்களென்றும், முசியே புது (அல்ல. புசி) முதலான பேர் கரைவழியாய் வருகுற தாகவும், மமுதல்லி கான் திரிச்சிராப்பள்ளிக்குப் போனதாகவும் போகயில்லை யென்றும் சொல்லுகுறார்க ளென்றும் சேதி கேழ்க்கப் பட்டுது...

*1756 வருசம், தெசம்பர் மாசம், தேதி 20; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 9; சோமவாரம்*

இத்தனாளுந் திரேகத்துக்கு சுவஸ்தமில்லாத படியினாலே கேழ்வியான சேதி யாதென்ன வென்றால்: முசியே தெவோவும் சவரிராயப் பிள்ளையும் தொரை அவர்களுடனே சீமா மூலம் சம்மதி யென்ன யென்ன சொன்னார்களோ அதுக்குத் தொரை யென்ன ஒடுதி குடுத்தார்களோ, யிவர்களானால் சீமா மூலம் அமுல்தாரருக்கு எல்லாம் சொல்லிக் காகிதங்கள் யெழுதி, பாராக்காரரையும் சிப்பாயிகளை(யும் கொண்டு வரச்சொல்லி) அழைப்பிச்சார்கள். அப்போது வந்தவாசி அய்யண் சாஸ்திரி, செஞ்சி நாராயண சாஸ்திரி, திண்டிவனம் முத்துமல்லா ரெட்டி, கருங்குழி முத்து வெங்கிட்டராம ரெட்டி, சிதம்பரம் அங்கப் பிள்ளை, புவனகிரி நாட்டார் இவர்கள் எல்லாரும் வந்தார்கள். வந்த விடத்திலே அய்யண் சாஸ்திரி, (நாராயண சாஸ்திரி) ரெண்டு பேரும், முன்னாலே ருசுமு சாதல்வார்[1] நிமித்தம் சில்வானத்துக்காக அவர்கள் இவ்விடத்துக்கு அனுப்பின பணத்திலே சிலவு தள்ளி, மைத்தது குத்தகைக்குச் செல்லு யெழுதி வைக்கச் சொல்லி, நாமெழுதி அனுப்பியிருந்த காகிதத்தை முசியே தெவோ கையில் குடுத்து, ருசுமு சாதல்வாருக்கு செலுத்தியிருந்ததையும் அவர்கள் கிட்ட யெழுதி வைச்சார்கள். மைத்தப் பேர்களையும் யிந்தப்படிக்கு யெழுதி வைக்கச் சொல்லுகிறார்கள் என்றும் கேழ்க்கப்பட்டுது. யிவர்கள் ருசுமு சாதல்வார் சம்மதிக்காகத் தள்ளியிருந்ததை யெழுதி வைச்சதினாலே நமக்கென்ன (வந்தது)? அது

[1] இனாம்கள், சில்லரைச் செலவுகள்.

வந்தது முண்டு, நம்முடைய சிலவானது முண்டு. ருசுமு சாதல்வார் சம்மதிக்கு வந்த தெல்லாம் நாம் முசியே புலோ கையிலே கணக்கெழுதிக் குடுத்து கையெழுத்தும் போட்டு முன்னாலே தானே குடுத்திருக்கிறோமே. யிவர்க ளெழுதிக் குடுத்ததினாலேன்னு தொரை அவர்களும் குமிசெலியர்களும் சகலமான பேருமறிஞ்சுதே ... யல்லாமல் வேறில்லை யென்றும் யெண்ணிக் கொண்டோம். அப்படியிருக்கையிலே முசியே தெவோ யிதை ஒரு பாபத்தாய் தாம் வெளிப் பண்ணினதாய்த் தொரை அவர்களுக்குச் சொல்லி, நம்முடைய காகிதம் அமுல்தாரர் அய்யண்ண சாஸ்திரி கிட்ட வாங்கினதை, தொரை அவர்கள் கையிலே குடுத்ததாகவும், அதை தொரை அவர்கள் வாங்கி தம்முடைய கையிலே வைச்சுக் கொண்டு, "யிது யிருக்கட்டும். நீர் சொன்னபடிக்குப் பண மெங்கே?" யென்று கேட்டதாகவும், அதின் பேரிலே முசியே தேவோ அமுல்தாரரை யெல்லாம் பணத்துக்கு வெகு துருசு பண்ணதாகவும், அப்போது அய்யண்ண சாஸ்திரி ... தொரை அவர்களுக்கு யிருபதினாயிரம் ரூபாயும் முசியே தெவோவுக்குப் பதினாயிரம் ரூபாயும் சவரிராயப் பிள்ளைக்கு நாலாயிரம் ரூபாயும் சில்லரையிலே (மற்ற சிலருக்கு) ஆயிரம் ரூபாயும் ஆக முப்பத்தையாயிரம் ரூபாய் கொடுக்க (ஒப்புக் கொண்டார் என) முசியே தெவொ தொரைக்குச் சொல்லி, அய்யண்ண சாஸ்திரி குத்தகைப் படிக்கி செல்லுபோக பாக்கி குடுக்க வேண்டியத்திலே ருசுமு சாதல்வார் தேவையில்லை யென்று தள்ளிப் போட்டோமென்று தொரை அவர்கள் காகிதங் கொடுக்க, ருசுமு சாதல்வாருக்கு உண்டான பணத்தைப் பாக்கியிலே தள்ளிக் குறை பாக்கிக்கு சம்மதி பண்ணவென்று (பண்ணினார் என்று) பேசினதாகவும், யிந்தப்படிக்கி சீமா மூலத்திலே யெல்லாம் தள்ளிப் போட தொரை அவர்கள் அதுக்குண்டான பிரயோசனமெல்லாம் சேரப் பண்ணி தங்கள் சுயகாரியமும் பார்த்துக் கொள்ள வேணுமென்று பேசித் தீந்ததாயும், அந்தப்படிக்கு நடக்கத் போறதென்றும் கேழ்விப்பட்டுது.[1]

அதுக்கு நாம் யோசனை பண்ணினது யேதென்றால், "யிது மெத்தவும் ஆச்சரியமாயிருக்கிறது. சீமா மூலம் பணம் வந்து கும்பினீருக்கு செல்லுகிறதாமே. இதிலே முன்னாலே பிணைக்காரர் யென்று ஒபிசியால்மார்கள் பிலவந்தமாய் பணம் கேழ்க்க அவர்களுக்குப் பணம் குடுக்கச் சொல்லி துரை சொன்னார். அதுவுமல்லாமல், கொம்மாந்தாங்கள் பணம் வாங்கிக் கொள்ளுகிறார்கள். சீமையுஞ் சாகுபடி ஆகாமல் கெடுத்துப் போடுகிறார்கள். அதினாலே கும்பினீர்ப் பணம் போறதென்று துரையுடனே சொன்னதுக்கு, அதை விசாரணை பண்ணாமல் போனார். அதின் பிறகு சாகுபடி ஆகிற நாளையிலே

[1] சம்பளம் கொடுக்கப் பணம் இல்லாத நேரத்திலும், கம்பெனியின் வருவாய்ப் பணம் இப்படி சுயநலமாகப் பங்கு போடப்பட்டது.

கோன்சேலியோர்களை சீமா மூலங்களுக்கு அனுப்பி வைச்சு, அதினாலே கும்பினிப் பணத்துக்கு வெகுசேதம் வரத்தக்கதாகப் பண்ணி, அவர்கள் வசமாகத்தானே சீமையும் பண்ணி, பிறகு முசியே தெவோ வசத்திலே எல்லாத்தையுங் குடுத்தார். யிப்போது பாக்கியுந் தள்ளிப் போட்டார்." ஆனால் மெத்தவும் நல்லதே ஆச்சுதென்றும் வெறுமனே இருந்தோம். யித்தனாள் முசே தெவோ சீமா மூலம் சம்மதிக்கு (வருவாய்ப் பணம்) கும்பினியிலே செலுத்தினது, ஆறணி விராகன், நக்ஷத்திர வராகன் பறங்கிப்பேட்டை விராகன் ஆயிரத்தி நானூத்தி சில்வானம் வராகனும், பதினேழாயிரத்தி சில்வானம் ரூபாயுஞ் செலுத்தி வைச்சுதாக ரசீது வந்தது.

ஆற்காட்டிலே மமுதல்லி கான் நாலு லங்கணம் (நாலுநாள் விரதம்) பண்ணினதாகவும், அப்துல் வகாபு கானும் மமுதல்லி தாயாரும் பிழைக்கமாட்டார்களென்றும் மமுதல்லிகானுக்குப் பிள்ளை ரெண்டும் பெண் ரெண்டும் செத்துப் போச்சுது என்றும், யிங்கிலீசுக்காரர் பாதி பேர் செத்துப் போனார்களென்றும், ஆற்காடு வேலூர் லாலாப்பேட்டை யிந்த வட்டங்களிலே பதினாயிரம் பேர் செத்துப்போனார் களென்றும், யிதல்லாமல் கொள்ளை (நோயும் காய்ச்சலும்) கண்டு யிப்படிச் சாகுறார்களென்றும், அந்தவூரிலே யிருக்கிற அனேகம் பேர் வூரைவிட்டுப் பிறப்பட்டு அப்பாலே போனார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

ஆனால் பாப்பய்யப் பிள்ளையை முன்னாலே காவலில் வைச்சு யிருந்துதே, அப்போ காசித் தம்பிரானுக்கு சரீரம் சுவஸ்தமில்லை, (அவரைப்) பார்க்க வேணு மென்று தானும் தன் குமாரன் அலங்காரப் பிள்ளையும் சின்னக் குழந்தையும் அரிகை, பல்லக்கு வகையிரா பரிட்டவணையுடனே வந்து பண்டாரத்துக்கு அஞ்சு விராகன் நசர் வைச்சுக் கண்டவிடத்திலே, அவர் பாப்பய்யப் பிள்ளைக்கு ஆறு (ஒரு) சாலுவையும் சின்னக் குழந்தைக்கு ஒரு சரிகை ஒடுணியும் குடுத்து, வெகுமதி பண்ணி அனுப்பி வைச்சார். அதை வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போனான். யிதை துரை துபாசி கந்தப்பன் கேட்டு தான் பாப்பய்யப் பிள்ளை மாடுகளும் எருதுகளும் கும்பினியிலே ஒட்டிக் கொண்டவிடத்திலே (ஜப்தி), தான் திருப்பிக் குடுத்ததுக்குத் தனக்குச் சிறிது மாடுகளைத் திருப்பிக் கொடுகிறோமென்று சொன்னான். அதைக் குடுக்காமல் போனானென்றும், பின்னையும் அனேக காரியம் அனுகூலம் பண்ணிக் குடுத்தவிடத்திலே ஒன்றுங் குடுக்காமல் போனா னென்றும், அந்த அக்கசுனாலே காவலிலே யிருந்தவனை பரிட்டவணை யோடே வெளியே போகலாமாவென்றும், வீட்டிலே வருகிற பேரும் சதி பண்ணிக் கொண்டு காறுபாறு பண்ணுகிறது மிப்படி எல்லாம் பண்ணலாமா வென்றும் கந்தப்பன் தொரையுடனே சொல்லித் திட்டம் பண்ணின விடத்திலே, தொரை காவலிலே யிருந்தவனை வெளியே விடலாமா

வென்று கோபம் பண்ணி, சொலுதாது கப்பித்தானையும் அங்கே யிருந்த ஒப்பிசியாலையும் ஒப்பிசியாலுகளுக்கு யெசமானையும் அழைப்பிச்சு 'காவலிலிருந்தவனை யெப்படி வெளியே விடுவார்கள்' யென்றும், 'அவரவர் வந்து கண்டு பேசத் தக்கதாக எப்படி பார்த்துக் கொண்டிருந்தீர்கள்,' என்றும் மெத்தவும் கோபம் பண்ணி, முன்னிருந்த சொலுதாது ஒப்பிசியாலுகளையும் கசோத்திலே போடுவிச்சு, வேறே ஒப்பிசாலையும் நேமிச்சு சிப்பாயிகளையும் நேமிச்சு, "இனி மேல் இவனை வெளியே விடவுந் தேவையில்லை, ஒருத்தரையும் வந்து கண்டு பேச (அனுமதிக்கவும்) கவையும் யில்லை, வீட்டு வாசற்படி விட்டுவித் தேவையில்லை," யென்று ஒடுதி குடுத்தனுப்பினா(ர்); அதின் பேரிலே பாப்பய்யப் பிள்ளை முசே தெபோஷேத்துக்கு யிப்படி கந்தப்பன் விஷமம் பண்ணி விச்சானென்று சொல்லி அனுப்பி வைச்சவிடத்திலே, அவர் கோட்டைக்கு வந்த விடத்திலே கந்தப்பனைக் கண்டு யிப்படியெல்லாம் பண்ணலாமா வென்று கேட்டதுக்கு, கந்தப்பன் "நான் அவனுக்கு முழுகிப் போன மாடு வகையிராக்களைத் திருப்பிக் கொடுத்தேன், அதுக்குக் குடுக்கிறோம் யென்று சொன்னதை (அவன்) கொடுக்கயில்லை, பின்னையும் அனேகம் காரியம் உண்டு. அதுகளுக்கெல்லாம் ஒன்றுஞ் சொன்னபடிக்கி நடவாமல் போனான். அப்படி யிருக்கச்சே நானும் தொரையுடனே சொன்னதில்லை. அவர் பராபரியிலே (பிறர் வாயிலாகக்) கேட்டு மெய்தானா வென்று கேட்டார். மெய்தானென்று சொன்னேன்," என்று சொன்(னானாம்). அதன்பேரிலே முசியே தெபொஷேத்து பாப்பய்யப் பிள்ளை மனுஷனை அழைப்பிச்சு, மெத்தவும் கோபிச்சுக் கொண்டு கந்தப்பனுக்குச் சொன்ன உடன்படிக்கைப் படிக்குக் குடுத்துவிடச் சொல்லித் திட்டம் பண்ணினதாகவும், யிப்படி யெல்லாஞ் சேதி கேழ்வியாச்சுது.

### *1756 வருசம், தெசம்புரு மாசம், தேதி 21; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 10; செவ்வாய்வாரம்*

இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி யேதென்றால், முன்னாள் ஆறாந் தேதி முசியே லம்பேர் என்கிறவரையும் முசியே ஷோபுரென்கிறவரையும் (M. Chaubourg)[1] சொலுதாதுகளைக் கலைச்சு வடக்கே கூட்டிப் போகயிருக்கிறதாய்ச் சேதி கேட்டு, கோட்டையிலே காவல் பண்ணி யிருந்தார்களே, அவர்களை காவல் விட்டு முசியே ஷோபுரென்கிறவருக்கு இஸ்பத்தால் (மருத்துவ மனையில்) உத்தியோகம் குடுத்தார்கள். முசியே லம்பேர் (M. Lambert) என்கிறவருடனே நூறு பேர் சொலுதாதுகளையும் கூட்டி ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பினார்கள். இன்றைய தினம் (துரை) துபாசி கந்தப்ப முதலியாருக்கு

[1] இவர்கள் ஜெர்மென் படைத் தலைவர்கள்.

பல்லக்கும் முத்திரை மோதிரமுங் கொடுத்து, பதினைந்து பேர் சிப்பாயிகளும் பதினைந்து பேர் சேவுகர்களும் கூடக் கூட்டி அரும்பாத்தை வினாயகப் பிள்ளை மனுஷன் தரகு நல்லதம்பி முதலியார் குமாரன் குமாரசாமி யென்கிற பிள்ளையாண்டானையும் கூடக் கூட்டி வெளியே பயணமாய் தொரை அனுப்பினாரென்றும், அந்தப்படி கந்தப்ப முதலியார் வினாயகப் பிள்ளை(யின்) பல்லக்கு வாங்கி யேறிக் கொண்டு யிவர்களையும் கூட அழைச்சுக் கொண்டு கோட்டைக்கு வெளியே பயணமாய்ப் போனார்க ளென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது. இவர்கள் யென்ன நிமித்தம் பயணம் போறார்களென்று யோசிக்கு மிடத்தில், முன்னாலே ஸ்ரீரங்கத்துக்கு முசியே லம்பேர் நூறுபேர் சொலுதாது களுடனே போனதினாலேயும், இப்போது கந்தப்ப முதலியார் தொரை கையிலே முத்திரை (மோதிரம்) வாங்கிக் கொண்டு யின்னயிடத்துக்குப் போறோம் என்று (எவருக்கும்) சொல்லாமல் பயணம் போறதினாலேயும், ஸ்ரீ ரெங்கனாதர் கோயிலிலே போய் உடமை தட்டு முட்டுகள் திரளாய்க் கிடக்குதென்று ஆரோ கோள்சொல்லி யிருக்கவேணும், அதைக் கேட்டு தொரை அவர்களதை யெடுத்தனுப்பச் சொல்லி யிவர்களை அனுப்பியிருக்கவேணும், அதின் பேரிலே யிவர்கள் போயிருக்க வேணும் யென்று நம்முடைய மனசில் யோசனை யெண்ணிக் கொண்டோம்.

இப்படி யிருக்கையிலே, யித்தனாள் ராத்திரி அம்பலத்தாடி அய்யர் ஸ்தானத்துக்கு ஒரு பண்டாரத்தைப் பட்டம் கட்டி பல்லக்கிலே வைச்சுக் கொண்டு நூறு தீவட்டியும் மத்தாப்பு மேளங்களும் ஆலவட்டங்களும் குடை முதலானதும் பிடிச்சுக் கொண்டு அனேகம் சிஷ்யாள் சூழ்ந்து வர தெருவிலே வூர்கோலம் வந்தார்கள்.

### *1756 வருசம், தெசெம்பர் மாசம், தேதி 23; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 12; குருவாரம்*

இத்தனாள் காலமே வீட்டிலே யிருக்கச்சே, ஆனை மாவுத்தன் வந்து ஆனைக்கு[1] மதமானதினாலே வெளியே விடாத(தால்) கால்வீக்கங் கண்டு யிருக்குது, வெளியிலே விட்டு கொஞ்சந் திருப்பிக் கொண்டு வந்து கட்ட வேணுமென்று கேட்டான். இந்த மாவுத்தன் நாலு நாளைக்கு முன்னே கேட்டதுக்கு, நமக்குப் பதினாலாந் தேதி வரைக்கும் காலம் போறாது, பதினைஞ்சு பதினாறாந் தேதியிலே வெளியே ஆனையை விட்டுத் திருப்பலாம் யென்று சொல்லியிருந்தோம். அப்படி யிருந்த நாம் யின்றைய தினம் அவன் கேட்டவுடனே முன் சொன்னதுக்கு மறிது (மறதி) வந்து ஆனையை விடச்சொல்லி உத்தாரம் குடுத்தோம். உடனே அவன் போய் ஆனையை விட்டு வீதியிலே நடத்துகிற போது ஆனை

[1] இது பிள்ளையின் சொந்த யானை.

முத்தையப் பிள்ளை வீடு தாண்டி கிழக்கே போகு தென்று வந்து சொன்னார்கள். அதைக் கேட்டவுடனே நமக்கு யோசனையாய், யிதை அங்கென்ன வைத்துக் கொண்டு போறான். தொரையானால் முன்னாலொருத்தனை (ஒரு ஆனை) கொன்றபோது சுட்டுப்போடச் சொன்னார். அப்படி யிருக்கையிலே யிது யிப்போ கோட்டைக்குச் செவ்வே போனால் துரை காண்பார். இது ஆரை யாகிலும் விஷமம் பண்ணும். அவர் சுட்டுப் போடச் சொல்லுவார் யென்று உடனே நாம் வெளியிலே வந்து நின்று கொண்டு, மனுஷனை ஓடவிட்டு ஆனையை மேற்கே திருப்பச் சொன்னோம். அப்போது மாவுத்தன் ஆனையைத் திருப்பி நம்முடைய வீதியுடனே கொண்டு வந்து, நாம் யிருக்கிறதுக்கு மேற்கே கொண்டு போய் திரும்பவும் நம்முடைய வீதியிலே தானே கிழக்கே கொண்டு போய் திரும்பவும் மேற்கே கொண்டு வருகையிலே, நாம் நிற்கிறதுக்கு வடபிறமாய் பாதிரிக் கோயில் வாசலிலே வந்து நின்றது. அப்போது நாம் ஆனையைக் கொண்டு போய்க் கட்டிப் போடுவோம் யென்று மாவட்டியானுடனே? கோபிச்சுச் சொன்னோம். உடனே நம்முடைய பேரிலே ஆனை திரும்பி வந்தது. அப்போ நாம் மேல் பிறமாய் நாலடி நடந்தோம். அப்போது ஆனை நம்முடைய வீட்டு வாசலிலே வந்து பாஞ்சது. உடனே வாசல் தூண் பொதியில் திரும்பி ஓடெல்லாம் ஒடைஞ்சு கீழே விழுந்து போச்சுது. அதன் பிறகு மேற்கே திரும்பி திரும்பவும் கிழக்கே திரும்பி அதன்பேரிலே கொண்டு போய்க் கட்டுகிற விடத்திலே கட்டினார்கள். அதன் பிறகு வூரிலேயிருக்கிற சகல செனங்களும் வந்து விசாரிக்க வந்தார்கள்.

அப்போ நாமவர்களுடனே சொன்னது : முன் குரோதன வருத்திலே சீதாராம சோசியர் நாற்பத்தெட்டாம் வயதில் அற்பிசி மாசம் 16 தேதி யிருபத்தாரு நாழிகைக்கு கெண்டம் சொல்லியிருந்தார். அதன்பிறகு அவர் தமயன் பிள்ளை சுப்பா சோசியர் சொன்னது, நாளது வருசம் சித்திரை மாசம் மங்கத்தாய் விழுந்து போனபடியினாலேயும், சீதாராம சோசியர் கெண்டம் தப்பும், (என் ஆயுள்) தொண்ணூத்தாறு வயது[1] மட்டும் நடக்குமென்றும் சொல்லியிருந்த தினாலேயும், அற்பிசி மாசம் கண்டம் தப்பிப்போம் (தப்பித்தோம்), அற்பிசி மாசம் 20 தேதிக்கு மேல் மார்கழி மாசம் 14 தேதி வரைக்கும் தோஷமிருக்குது. அதுக்கு (ப் பின்) தோஷமில்லை. மார்கழி மாசம் 13 தேதி (முதல்) பிரகஸ்பதி ரொம்ப பலஹீனப்படுகிறானென்றும் சொன்னார். அந்தப்படிக்கு சனி பகவான் ஆனை முகாந்திரமாய் நடத்தினார். தப்புமென்று சொன்னபடிக்குத் தப்பியது. யிவ்விடம் கெண்ட காலத்துக்கு சீமா மூலம் பணமெல்லாம் நம்முடைய கை சேராமல் கலீலாய் அவரவர் தோணின மட்டுக்கும்

[1] இது பொய்த்துப் போய், பிள்ளை 52ஆம் பிராயம் நடக்கையிலே காலமாகிப் போனார்.

பணங்களும் கையாடிக் கொண்டு, சாகுபடிகளையும் நஷ்டம் பண்ணி வைக்கவும், அதினாலே கும்பினீருக்கு நிலுவை விழவும், துரையவர்கள் விசாரிச்சு நடத்தயில்லாமல் சீமை யெல்லாம் முசியே தெவொ பாரிசம் பண்ணவும், அவர் சவுரிராயப் பிள்ளையைக் கொண்டு சீமைப் பாக்கிகளையும் முழுக்கடிச்சு, தாது வருஷத்துக்குப் பணம் காணாமல் பண்ணவும், யிப்படி யெல்லாம் வந்துதே, யிதோடே போச்சாக்கு மென்றிருந்தோம். கடைசியிலே கெண்(டம் ஆனை மூலம்) வந்தது.

யிப்படி யிருக்கையிலே நேத்து 12 தேதி முசியே தெவோ பதினேழாயிரம் ரூபா கும்பினீருக்குச் சீமா மூலம் சம்மதிக்குச் செலுத்தி விச்சதாக ரசீது வந்தது. இப்படி யிருக்கையிலே சின்னபாபுசமுத்திரமும் பெருமுக்கலும் முசே தெவோ சப்த்தி பண்ணினாரென்று வந்து கபுறு சொன்னார்கள். அதன் பேரிலே முசியே பொஷேத்து கோட்டைக்குப் போயிருந்து தம்முடய வீட்டுக்கு வந்தவுடனே, தம்முடைய கிட்ட விருக்கிற கணக்கனை அழைத்து, "பாப்பய்யப் பிள்ளை கணக்கையெல்லாம் என்ன செய்தானோ தெரியவில்லை. நா முன்னாலே அறியாமல் கணக்கை அவன் வீட்டிலே கொண்டு போய் வைக்கச் சொன்னோம். இனிமேல் அதைச் சொல்லி யென்ன? யிப்போது நீ போய்ப் பார்த்து கணக்கையெல்லாம் என்ன பண்ணினானோ, அதை யெல்லாம் பெட்டியிலே யிருக்கிறதைப் பார்த்து, போனது போக யிருக்கிறதை யெல்லாம் பெட்டியிலே போட்டு பத்திரமாய், நன்றாய் அரக்கு முத்திரை போட்டு பத்திரமாய் (வைக்கச்) சொல்லிப் போட்டு வா," (என்று) சொல்லி, தம்முடைய கைமுத்திரையுங் குடுத்து அனுப்பிவிச்சதாகச் சேதி கேழ்க்கப்பட்டுது.

வளவிலே அண்ணாசாமிக்கு 12 தேதி சுரம் கண்டுது. அதுக்கு லங்கணம் (பத்தியம்) வைச்சு நாலு தரம் கருக்கும் (கஷாயம்) கொடுப்பிச்சோம். இன்றைக்கும் லங்கணம் வைத்து மூணுதரம் கருக்கும் குடுப்பிச்சோம்.

### *1756 வருசம், தெசெம்பர் மாசம், தேதி 26; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 15; ஆதிவாரம்*

இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி யென்ன வென்றால் இராச்சியத்திலே சுவாமி சித்தத்திலே வெகு செனம் ... ஷாமம் (பஞ்சம்) மூலமும் டாம்பீர (தொத்துநோய்) மூலமாகவும் ஊழிக்காச்சல் (பிளேக்) ஸோபட (சிறிய அம்மை) மூலமாகவும் ஊழிக்காச்சல் (பிளேக்) ஸோபட (சிறிய அம்மை) மூலமாகவும் குடுக்கிறது (பீடிக்கப்பட்டிருக்கிறார்கள்). அப்படி யிப்போது ஆற்காடு வேலூர்

லாலாப்பேட்டை சுத்துக் கிராமங்கள் வந்தவாசி முதல் சீமா மூலங்களிலே ஊழிக்காச்சலும் ஸோபடகங்களும் கண்டு, வெகுசெனம் ஷோபம் (மரணம்?) வந்ததாகச் சேதி கேழ்க்கப்பட்டுது. யிதுக்கு ராச்சியத்திலே யிருக்கிற பேர் பிறப்பிச்ச ஆச்சரிய மென்னவென்றால் : கடன்மையிலிருந்து[1] ஒரு அம்மன் பிறப்பட்டு ஆற்காட்டுக்கு வந்து, அங்கங்கே அவரவருக்கு சொற்பனத்திலேயும் சன்னதமாகவும் வந்து தானெல்லாரையும் சங்காரம் பண்ணுகிற நிமித்தம் வந்ததாகவும், தனக்கு ஆனை ஒன்றும் பத்துக் குதிரையும் பெலி கொடுத்து நூத்திருபது பல்லா அரிசி பொங்கி, நூறு ஆட்டுக் கிடாவும் அன்பது கிடாவும் (எருமைகள்) யிதல்லாமல் மதுமாங்கி (மது மாமிச) சாதிகளும் பெலி குடுத்துப் பூசையிட்டுக் குடுத்தால் தான் போறேன் யென்று சொன்னதாகவும், அதுக்கு துலுக்கர், இங்கிலீசுக்காரர் இவர்களெல்லாரும் யெகத்தாளியாய்ச் சொன்னார்கள் யென்றும், அதின் பேரிலே வெள்ளைக்காரர், துலுக்கர், பறையர், யிந்துஸ்தானிகள், சில்லரை சாதிகளிலே யிவர்களிலே வெகு செனம் ஆற்காட்டிலே மாத்திரம் பதினையாயிரம் பேர் விழுந்து போனார்களென்றும், சுத்து கிராமங்களிலேயும் வெகுசனங்கள் விழுந்து போனார்களென்றும், அதினாலே அவரவர் துலுக்கர் வெள்ளைக்காரர் முதல் சகல சாதியும் வேப்பிலை கட்டுகிறதும், யிப்படியாக நடக்குது. அப்படிச் செய்த பேருக்கு சாவில்லை யென்றும் சொன்னார்கள்.

யிதல்லாமல் மயிசூர் சீமையிலே யிருந்து ஒரு அம்மன் பிறப்பட்டு லக்ஷம் குதிரையும் ஆனையும் காலாலும் நகார் மேளதாளம் தீவட்டி பகல்வத்தி ரானா பாகா (?) இதுகளுடனே பாளையம் பிறப்பட்டு சமுத்திர ஸ்நானத்திற்குப் போறதாய்த் திருவண்ணாமலை முதலான சீர்மையிலே வந்ததாகவும், மத்தியான மெல்லாம் வெளவ்வால் போலே மரங்களிலே தொங்குகிறதென்றும், ஊருக்கு மனுஷரைக் கொன்று போடுகிறதும், ராத்திரி மயிதானம் பார்த்துத் தங்குகிறதும், அந்த ஊர்த் தேவதைகள் யெங்கள் காவல்களிலே நீ வருகிற தென்னவென்று சண்டை குடுக்கிறதாகவும், அப்போது குதிரைத் தலை ஆனைத் தலை புளியமரத்திலே தொங்குகிறதென்றும், வெடிஞ்சு (விடிந்து) பார்த்தால் அங்கே யெல்லாம் ரெத்தமாய்க் கிடக்கிறதென்றும், யின்னம் அனேகம் விஸ்தாரமாகப் பிறப்பிச்சார்கள்.

யிது சேதி யிந்த வூரிலே யிருக்கிற துரையவர்கள் கோன்சேலியேர்கள் முதலான சகல செனங்களும் கேட்டு வீதிக்கு வீதி, (வீட்டுக்கு வீடு) வேப்பிலை தோரணங்களும் கட்டச் சொல்லி, வீடுகள் ஊரிலே யிருக்கிற துலுக்கர் வெள்ளைக்காரர் கூட ஆனை குதிரைகளுக்கும் வேப்பிலை கட்டி தலை மேலே பாகைகளிலேயும்

[1] ஒரூர். பெயர் தவறாக உள்ளது. கடம்பை, கடம்பூர்?

வேப்பிலை சொருகிக் கொண்டு, யிப்படியாகப் பட்டணமெல்லாம் யிதுவே பிரசித்தமாய்ச் சொல்லிக் கொண்டார்கள்.

சூணாம்பேடு (இசாராதாரராக) உவானிசுக்கும் (வையும்) (Ioannes) அசுப்பூருக்குப் பெரியண்ண முதலியையும் முசியே தெவோவைவும் சவரிராயப் பிள்ளையையும் (நேமிச்சார்கள்) யென்றும், விழுப்புரம் முசியே திலார்சு முகாந்திரமாய் பாலி செட்டி (க்கும்) பாளாசி பண்டிதனுக்கும் யெழுபத்தய்யாயிரம் ரூபாய்க் குத்தகை குடுக்கப் போறார்களென்றும் கேழ்விப்பட்டுது. தாது வருசத்துக்கு விழுப்புரத்துக்கு கும்பினி பேரிலே பேரிசு லக்ஷத்து யெண்பத் தையாயிரம் ரூபாய். யிதுக்கு லக்ஷத்துப் பதினாயிரம் ரூபாய் யிசாரா தீத்துக் கொடுக்கிறார்களென்றும், முசே தெவோவுக்குப் பதினாயிரம் ரூபாயும் சவரிராயப் பிள்ளைக்கு அய்யாயிரம் ரூபாயும் குடுக்கிறார்களென்றும், இதுக்கு ஆசித்து யிப்படிப் பண்ணுகிறார்களென்றும் கேட்டு யெனக்கு மெத்த ஆச்சரிய மாயிருக்கிறது.

### *1756 வருசம், டிசம்பர் மாசம், தேதி 27; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 16; சோமவாரம்*[1]

இத்தனாள் வில்லியநெல்லூரிலே யிருந்து அய்யாப் பிள்ளை யெழுதி அனுப்பின காகிதப்படிக்கு இதன் கீழே யெழுதியிருக்குது.

இராசமானிய மகாராசராச ஸ்ரீ அவர்கள் சமூகத்துக்கு அய்யாப் பிள்ளை தெண்டனிட்ட விண்ணப்பம். இத்தனாள் மத்தியானம் இருபத்தஞ்சு நாழிகைக்கு மேல் மாரியம்மை நிச ஸ்வரூபமாய் மனுஷ ரூபமாய் வில்லியநெல்லூருக்குத் தென்னண்டை சுந்திரவினாயகர் கோவிலிலே வந்திருந்தாள். நாங்கள் போயிக் கண்டோம். அம்மன் சொன்னது: "அஞ்சு பேர் பிறப்பட்டோம். நாலு பேர் தெற்கே போனார்கள். நாமொருத்தி யிப்படி வந்தோம். நமக்கு இன்னேரம் பட்டுப் பிடவையும் ஒரு பாடகமும் கொலுசும் ஒரு பொட்டும் காவும்[2] குப்பமும் (கிராமமும்) ஒரு நாழிகைக்குள்ளே அழைப்பிச்சுக் குடுத்தாலாச்சுது. இல்லாவிட்டால் இந்தக் கிராமம் யென்னமாய்ப் போமோ பாருங்கோள்," என்று சொன்னாள். அப்படியே அழைப்பிச்சுக் கொடுக்குறோமென்று அம்மச்சியார் கோவிலிலே அழைச்சு வந்து விட்டு, பத்து முழத்திலே ஒரு பட்டுச் சேலையும் அழைப்பிச்சுக் குடுத்து, பாடகம் கொலுசு யின்னேரம் ஆகாது ரூபாயாய்க் குடுக்குறோமென்று சொன்னோம். நமக்கு ரூபாய் யென்ன செய்ய? பண்ணிக் குடுத்தால் தரிச்சுக் கொள்ளுகிறோம். யில்லையென்றால் போய் விடுகுறோம் யென்று சொன்னாள். அது பண்ணி ஆகிறதுக்கு மூணு

[1] இத்தலைப்பு தமிழ்ப் பிரதியில் விடப்பட்டுள்ளது,
[2] ஒரு கூடை மாவு என்று ஆங்கிலத்தில் உள்ளது.

நாள் ஆகுமென்று சொன்னோம். அந்த மூணு நாளும் யிருக்குறோமென்று சொன்னாள். தட்டான் கையிலே போய்க் குடுத்திருக்கிறது. யிதுகளுக்கு நான் நடந்து கொள்ளவேண்டியது யின்னபடி ... யென்று நீரும் யெழுதி யனுப்பிவிக்கக் கட்டளையிடவு மென்று (எனக்கு அவர்) எழுதினார்.

(இதற்கு நாள்) பதில் யெழுதினதென்ன வென்றால், "தாது வருசம் மார்கழி மாசம் 16 தேதி அய்யாப் பிள்ளைக்கு (எழுதினது) ... "தாம் அனுப்பின காகிதம் பார்த்துக் கொண்டு மெத்தவும் ஆச்சரியம் ஆச்சுது. ஆற்காடு அந்த வட்டங்களிலே வந்த அம்மை சொற்பனத்திலே கண்டதாய்ச் சொன்னதல்லாமல் நிச ரூபமாய்க் கண்டதாய்ச் சொன்னதில்லை. அப்படிப்பட்ட அம்மை தாங்கள் பண்ணின புண்ணிய விசேஷத்தினால் நிச ரூபமாய்த் தானே தாங்களும் அந்தப் பட்டணத்திலுள்ள செனங்களும் கண்டு உபசாரம் பண்ணத்தக்கதாகக் கிடைச்ச மட்டுக்கும் தாங்களெல்லாரும் யினி தேவ ரூபமாகிற தல்லாமல், தங்களுக்கு இனி மனுஷ சென்ம மில்லை. ஆற்காட்டிலே யிருந்து வந்தவர்கள் சொன்னதிலே மூன்று முலையும் ரெண்டு உபத்தமு மிருக்கிறதாகவும், அதுக்கு ரெண்டு பிறசாபதி உள்ளவனிருந்தால் நாம் பிறப்பட்டுப் போறோம் யென்று அந்த அம்மை சொன்னதாகவும் சேதி கேட்டோம். ஆகையால் அதை நன்றாய் பரிசோதிச்சுப் பார்த்து அப்படியிருக்கக் கண்டால் நீங்கள் பார்த்த பேரெல்லாம் மகானுமாக்களானதினாலே உங்களிலே ரெண்டு பிறசாபதி யிருக்கிற பேர்களாய்ப் பார்த்துக் காண்பிச்சால் அந்த அம்மை போய் விடுவாள். அந்த வில்லியநெல்லூரிலே யிருக்கிற பேர்களும் நீங்களும் தீர்க்க தெரிசிகளாமே. ஆகையாலே அதை நன்றாய் சோதிச்சுப் பார்த்து யெழுதியனுப்பிக்கவும் யென்று யெழுதி அனுப்பினோம்".

துரையவர்கள் ஒழுகரைக்குப் போய் வந்தார். சின்ன துரை அவர் தோட்டத்திலே தானே யிருக்கிறார். மத்தப்படிக்கு ஒரு சேதியும் கேழ்விப்படயில்லை.

### *1756 வருசம், தெசம்பர் மாசம், தேதி 28; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 17; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலமே வீட்டிலே யிருக்கையிலே நடந்த சேதி : உதிச்ச பதினோரு மணிக்கு இரெண்டு பேர் அலமாங்கிக் (அலுமாஞ்சிக்) காரர் வந்து, நம்முடைய குதிரை லாயத்திலே யிருக்கிற குதிரை யெல்லாம் துரையவர்கள் பிடிச்சு வரச் சொன்னார்(கள் என்றும்), வினாயகப் பிள்ளை வீட்டிலே போய்க் குதிரைப் பிடிச்சுக் கொண்ட விடத்திலே அவன் வந்த வெள்ளைக்காரனுக்குப் பத்துப் பணம் குடுத்து இரெண்டு குதிரை மாத்திரம் குடுத்ததாகவும், அதையுங் கொண்டு நம்முடைய லாயத்திலே வந்து குதிரை அவிழ்த்தார்கள். அப்போது நாம் போய் துரையவர்களுக்குச்

சொல்லி அனுப்பிவிக்குறோமென்று சொல்லி, அவர்களை அனுப்பிவிச்சு, துரை அவர்களுக்குச் சொல்லிக் கேட்டு வர குருவப்பச் செட்டியாரையும் முத்துச் செட்டியையும் அனுப்பிவிச்சோம். அவர்கள் போய் துரையவர்களுடனே சொல்லப் பயந்து வந்துவிட்டபடியினாலே, அதன் பிறகு பனிரெண்டு மணிக்கு பத்து பேர் அலமாங்கிக்காரர் வந்து லாயத்திலே யிருக்கிற குதிரைகளெல்லாங் கட்டவிழ்த்துப் பிடிச்சுக் கொண்டு போய், நம்முடைய வீட்டுக்குள்ளே கட்டியிருந்த குதிரைகளையும் அவிழ்த்துக் கொண்டு போய் சாயங்காலம் வரைக்கும் வைச்சிருந்து, அதின் பேரிலே யிருந்து துரையவர்கள் வந்து பார்த்து, துறையூர் வைக்கீல் கோனேரி நாயக்கன் கையிலே ஆயிரத்திர நூறு ரூபா யொன்று (கொடுத்து வாங்கினது) கருவாலி (Carvalho) யேலத்திலே அறநூறு ரூபாய்க்கு வாங்கின வண்டிம் நிலாகு திரை ஒன்றும், மச்சிலிபந்தர் சின்னிய நாயக்கன் கையிலே ஆயிரம் ரூபாய்க்கு வாங்கின குதிரை ஒன்றும் ஆக மூணு குதிரையும் வைச்சுக் கொண்டு, மத்தக் குதிரைக ளெல்லாம் அனுப்பிவிட்டார்கள். நம்முடைய குதிரைகள் ஒன்றும் (துவறு. மூன்றும்) (மற்ற) யேழு குதிரையும், ஆகப் பத்து குதிரையும் வைச்சுக் கொண்டு ஸ்ரீரங்கத்துக்குப் போகப் போனார்களென்று கேழ்க்கப்பட்டுது.

### *1756 வருசம், தெசம்பர் மாசம், தேதி 29; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 18; புதவாரம்*

இத்தனாள் வீட்டிலே தானே யிருக்கையிலே நடந்த சேதி : சிரஞ்சீவி அண்ணாசாமிக்கு அம்மை ஸோட்டகம் கண்டு அஞ்சு நாளாச்சுது. இந்த நாள் நிறை பாராமாய் நீர் கொண்டிருக்குது. வில்லியநெல்லூரிலே மாரியம்மை வந்தாளென்று அங்கே யிருந்து யெழுதி வந்ததும், அதுக்கு நாம் மறு உத்திரவு யெழுதினதும் (முன்னே எழுதப்பட்டது). இத்தனாள் கேழ்வியானது, ஏவம்பலத்தில் ஒரு ரெட்டி மகன் வெங்கிடாசலபதி யென்று சொல்லிக் கொண்டு, இரெண்டு நாளாய் வில்லியநெல்லூரிலே வந்திருக்கிறானென்றும், (ஒருத்தி மாரியம்மை என்று சொல்லிக் கொண்டு வந்திருக்கிறாள் என்றும்), இந்த சேதியும் வில்லியநெல்லூரிலே யிருக்கிற வெள்ளைக்காரன் கேட்டு கும்பினி சேவுகனை அனுப்பிவிச்சு மாரியம்மை யென்று வந்திருந்தவளை வில்லியநெல்லூர் ஆத்துக் கப்பாலே கொண்டு போய் விட்டு விடச் சொ(ன்னானாம்). வெங்கிடாசலபதி யென்று வந்த ரெட்டிப் பிள்ளை யாண்டான் ஒளிச்சு ஓடிப் போனானென்றும், மாரியம்மையாய் வந்தவளை ஆத்துக் கப்பாலே கொண்டு போய் விட்டு விட்டார்களென்றும், அவள் போறபோது தான் வந்தவாசியிலே ஒரு ரெட்டி வீட்டு வெள்ளாட்டி தன் பேரிலே மாரியாத்தாள் ஆள்க் கொண்டதினாலே தான் வந்தேனென்று சொல்லிப் போட்டுப் போனானென்றும் கேழ்விப்பட்டுது.

இத்தனாள் ராத்திரி யேழு மணிக்கு முசியே துலோராம் (M. Dulaurens) மருமகன் தம்முடைய துபாசியுடனே சொல்லி யனுப்பின சேதி யேதென்றால், "நம்முடைய சேதியாக ஒரு காரியம் துரைக்கு யெழுதி வந்திருக்குது. அந்தச் சேதி துரை முசே சொபினேயுடனே சொன்னார். அவர் நமக்குச் சொன்னார். அது யின்னம் யிரண்டு மூணு நாளையிலே வெளிக்கு வரும். அப்போது நீர் முசியே புலோ, முசே பெடுத்தல்மீ, முசியே பொஷேத்து யிவர்கள் வழியிலே நடத்துவீர். அப்படி நடத்தாமல் என் முகாந்திரமாய் நடத்துகிறோம் என்று நம்பிக்கை வார்த்தைப்பாடு சொன்னீரானால் நானந்த சேதியும் உமக்குச் சொல்லுகிறேன். அந்தக் காரியமும் நான் தானே பேசிக் கொண்டு வருகிறேன். நீர் சொன்னபடிக்கு உம்முடைய கையின் கீழேயிருந்து நடந்து கொள்ளுகிறேனென்று சொன்னதாகவும், மத்தப்படி அந்தக் காரியத்தினுடைய சாரம் தனக்கு வேறொன்றும் தெரியாது," என்றுஞ் சொன்னான். அதன் பேரிலே நாமும் அப்படியே நடத்திவிக்கிறோமென்று சொல்லி, அந்தச் சேதி யெல்லாம் நன்றாய்த் தெரிஞ்சு வந்து சொல்லு என்று அனுப்பிவிச்சு, நாமும் ஆலோசனை பார்த்தோம். அதிலே யொன்றுக் கொன்று யிசையாம லிருந்ததினாலே நாமா யோசனையும் பண்ணிக் கொண்டிருந்தோம்.

### *1756 வருசம், தெசம்பர் மாசம், தேதி 31; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 20; சுக்கிறவாரம்*

இத்தனாளும் வெளியே போகாமல் வீட்டிலேதானே யிருந்தோம். யின்றைய தினம் முசியே கில்லியார் ராமாஞ்சி பண்டிதரை அழைப்பிச்சு, மொகதீன் கான் சாயபுவை நம்முடைய உத்தாரமில்லாமல் யேன் அனுப்பிவிட்டீர் யென்று கேட்டார். ராமாஞ்சி பண்டிதர், "முசியே ஒம்மோ எல்லாரையும் போகச் சொல்லிவிட்ட படியினாலே (அனுப்பி) விட்டார். அவர் பெண்சாதிக்கு உடம்பு சுவஸ்தமில்லை யென்று சேதி வந்தபடியினாலே யெட்டு நாளையிலே வருகுறேன் யென்று சீட்டெழுதிக் குடுத்துப் போயிருக்கிறான். யெட்டு நாளையிலே வருவான்," என்று சொன்(னார்). நம்முடைய உத்தாரமில்லாமல் அனுப்புவானேனென்று, கொண்டு போய் (ராமாஞ்சி பண்டிதரை) நயினார் வீட்டிலே காவல் பண்ணச் சொல்லிச் சொன்னதாகவும் சேதி கேழ்க்கப்பட்டுது. அப்பால் பாப்புராயனை (நான்) முசியே கில்லியாரைக் கேட்டு வரச் சொன்னயிடத்திலே, அவர் கணக்குக் கேட்டவிடத்திலே யின்னங் குடுக்கயில்லை யென்றும், ஆகையாலே காவல் பண்ணினோ மென்று சொல்லி அனுப்பினபடியினாலே (தும்) துபாசி (யின் பேச்சைக் கேட்டு) யிப்படி யெல்லாம் பண்ணினார் யென்று யெண்ணிக் கொண்டோம்.

## ஜனவரி 1757

*1757 வருசம், ஜனவரி மாசம், தேதி 2; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 22; ஆதிவாரம்*

இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி: முசியே தெவோ அண்டைக்கு சவரிராயப் பிள்ளை அமுல்தாரரை யெல்லாங் கூட்டிப் போய் நசர் வைப்பிச்சுப் பேட்டி பண்ணி வைச்சயிடத்திலே, யெல்லாத்துக்கும் அய்யண்ண சாஸ்திரி முன்னின்று முசியே தெவோவுக்கு உபசாரஞ் சொல்லி, “நாங்களெல்லாருஞ் சவரிராயப் பிள்ளைக்குப் பல்லக்கு குடாததினாலே கால்நடையாய் வரவேண்டியிருக்கிறது. நீங்களவருக்குப் பல்லக்கு தயவு பண்ண வேணு” மென்று சொன்னான். அதுக்கு முசே தெவோ தலையை அசைச்சுக் கொண்டு யிருந்தார். அதின் பேரிலே தொரை அவர்கள் பேட்டியாக வேணுமே, அதுக்கு நசர் யென்ன வென்று முசியே தெவோ பேசி, அமுல்தாரருக்குத் திட்டம் பண்ணினது லக்ஷத்துக்கு யிருபத்தஞ்சு விராகன் வீதம் நானூத் தெழுபது விராகனுக்குத் துகை பண்ணிக் கொண்டு வரச் சொல்லி, யித்தனாள் ராத்திரி தொரை அவர்களை முசியே தெவோ வீட்டுக்கு வரச் சொன்னதாகவும், முசியே தெவோ சீட்டுக் கண்டவுடனே தொரையவர்கள் முசே தெவோ வீட்டுக்குப் போனதாகவும் அங்கே அமுல்தாரரை யெல்லாரும் கொண்டு போய் நசர் வைச்சுக் கண்டார்களென்றும், அப்போது அதை பண்ணிப் பார்க்க 461 விராகன் கண்டு தென்றும், ஒன்பது விராகன் காணாதே போச்சுதென்றும், அய்யண்ண சாஸ்திரி தொரை அவர்கள் முன்னே சொன்ன சேதி: “நாங்கள் தீவானத்திலே அனேகந் துலுக்கர் அமுல் பண்ணினதும் பாத்தோம். மராட்டியர் அமுல் பண்ணினதும் பாத்தோம். முசியே தெவோ சாயபு அவர்களைப் போலே சீமை புலந் தெரிஞ்சு கணக்குகளைப் பார்த்து குடிக்கும் அமுல்தாரருக்கும் ஆருக்கும் நோவுயில்லாமல் கும்பினிக்குப் பணம் வரும் படியாகப் பண்ணின பேர் யாரையும் யிவர்களைப் போலே கண்டதில்லை. நாங்களானால் சீமா மூலத்திலே ஆமுதனிக்குப் படிக்கு(?) பார்த்து யிசாறு ஒப்புக் கொள்ளவில்லை. யெங்களுக்கே தாகிலும் கம்பத்தங் காடிகள் (லாபம்) மானியங்கள் போறாதென்று யிசாறா ஒப்பயில்லை. கும்பினியார் பேரீசு போட்டபடிக்கு நாங்கள் கும்பினி உடமை தின்ற (வர்கள்). கும்பினீ காரியந் தாஷ்சி வராமல் பார்க்கிறோம். நாங்கள் தின்றதுஞ் சிலவு ஆனதும் போக மைத்ததெல்லாம் கொண்டு வந்து கும்பினிக்குச் செலுத்தி வைக்குறோம்,” யென்று சொன்(னாராம்). அதைக் கேட்டு தொரை அவர்கள் சந்தோஷமா யிருந்தா ரென்றும் கேழ்க்கப்பட்டுது.

சீமா மூலத்திற்கு தாது வருஷத்துக்கு (1756–57) யிசாறா பேரீசும் ருசுமுவும் உள்பட இருபத்தேழு இருபத்தெட்டு லக்ஷத்துக்கு பர்ணாவுக்குப் பேரீசு பிரிச்சு, ஒரு கணக்கு எழுதி முசியே தெவோ கையிலே சவரி ராயப் பிள்ளையும் அமுல்தாரருங் கொண்டு போய்க் குடுத்ததாகவும், அந்தக் கணக்கை அவர் தொரை அவர்கள் கையில் குடுக்கப் போறாரென்றும், யிதல்லாமல் பவ வருஷம் (1754–55), யுவ வருசம் (1755–56) குடிகள் பேரிலே நிக்கிற பாக்கிகளை அவர்கள் (அமுல்தார்கள்) சரிப் போனபடி தள்ளி யெழுதிக் குடுக்க அந்தப் படிக்கி யவர்கள் சம்மதிச்சுக் கொள்ள யிதுக்கு நசர் தொரை அவர்களுக்கு வேறே, முசியே தெவோவுக்கு வேறே, சவரிராயப் பிள்ளைக்கு வேறே, தாண்டவராயப் பிள்ளைக்கு வேறே, சவரிராயப் பிள்ளை தம்பிக்கு வேறே, யிப்படியாகப் பேசி அந்த நசர் வேறே குடுக்கிறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1757 வருசம், சனேர் மாசம், தேதி 3; தாது வருசம், மார்கழி மாசம், தேதி 23; சோமவாரம்***

இத்தனாள் காலமே நாம் குருவப்பச் செட்டியுடனே துபாசி கந்தப்ப முதலியாருக்குச் சொல்லி அனுப்பின சேதி : கும்பினீர் வர்த்தகர் மகாநாட்டார் யெல்லாரும் பண்டிகைப் பேட்டிக்கு தொரை அவர்களைக் காண இருபத்தஞ்சாந் தேதி புதன்கிழமை நாள் வரத் தக்கதாக யெல்லாருக்குஞ் சொல்லி அனுப்புமென்று சொல்லி வைச்சிருக்கிறோம். நமக்கும் திரேகம் கொஞ்சம் சொஸ்தமாயிருக்குது. நாமும் நாளை (அல்லது) நாளை நன்று தொரை அவர்களைக் காண வருகுறோமென்றும் சொல்லி அனுப்பிவைச்சோம். அந்தப்படிக்கு குருவப்பச் செட்டி போய் கந்தப்ப முதலியாருடனே சொன்னதுக்கு, உடனே குருவப்பச் செட்டியை தொரை அண்டைக்கு அழைச்சுப் போய் சேதி சொன்னதுக்கு, தொரை அவர்கள் நல்ல மனதாகத் தானே அந்தப்படிக்கு வரச்சொல்லிச் சொன்னதாகவும் குருவப்பச் செட்டி வந்து சேதி சொன்னார். நாமும் பாளையக்கார நயினாரை அழைப்பிச்சுக் கொண்டு, முன்பின் (நடந்)தபடிக்கு உள்ளூரார், குண்டு கிராமத்தார், சகலமான பேரையும் செவ்வாய்க்கிழமை ராத்திரிக்குத் தானே சேர்க்கச் சொல்லித் திட்டம் பண்ணி கும்பினீர் வர்த்தகருக்கும் சொல்லி அனுப்பிவைச்சு, வில்லியநெல்லூரார் வருகிறதுக்குக் குண்டூர் ராமாசுலு (ராமாஜுலு) செட்டியாருக்குச் சொல்லி அனுப்பி வைச்சோம்.

இத்தனாள் கும்பினிக்கு முசியே தெவோ கொண்டு போய் ரூபாய் 2,790ம், வீராகன் 5,130ம் செலுத்தி வைச்சதாகக் கேழ்க்கப்பட்டுது.

ராத்திரி யேழு மணிக்கி மய்யே யிலே யிருந்து சோடாக்காரர் காகிதங்கள் கொண்டு வந்து தொரை அவர்கள் கிட்ட குடுத்ததாகவும்,

பிறுதிகீசு (போர்த்துக்கீசுக்) கப்பல் ரெண்டு மய்யேயிலே யிருந்து வந்து தென்றும், அதிலே சீமைக் கடுதாசிகள் வந்து தென்றும், அதுவும் சோடாக்காரர்கள் கொண்டு வந்து கொடுத்தார்களென்றும், தொரை அதை யெல்லாம் வாங்கி வைச்சுப் போட்டு முசியே தெவோ வீட்டுக்குப் போனாரென்றும் கேழ்க்கப்பட்டுது. யிதுவு மல்லாமல், விருத்தாசலம் யிசார்தாரன் சுப்புராயப் பிள்ளை சனேரி பண்டிகைக்கு முசியே கில்லியாரைப் போய்க் கண்டு, அறுபது ரூபாய் நசர் வைச்சுக் கண்டான். அதின் பிறகு முசே கில்லியார் சுப்புராயப் பிள்ளையைத் தொரை அவர்களண்டைக்குக் கூட்டிக் கொண்டு போய் நூத்திப் பதினோரு ரூபாய் நசர் வைப்பிச்சுப் பேட்டி பண்ணி வைச்சானென்று சேதி கேழ்க்கப்பட்டது.

இதெல்லாமல் அய்யண்ண சாஸ்திரி தான் வூரை விட்டுப் பிறப்படுகிற போது, (இங்கு) வந்தவிடத்திலே தான் நினைச்சப்படிக்கிக் காரியம் அனுகூலமானால், வில்லியநெல்லூரிலே ஆயிரம் பேருக்கு பிராமண போசனம் பண்ணுகிறதுக்கு, நூறு விராகனும் கோகிலம்பாளுக்கு[1] நூறு விராகன் பொறுமான ஆபரணம் பண்ணிப் போடுறோம் யென்றும், தன் பெண்சாதிக்கு அன்னூறு விராகனுக்கு உடமை பண்ணிப் போடுறோமென்றும் பிரார்த்திச்சுக் கொண்டு வந்தபடிக்கி, யிவ்விடத்திலே தன் மனதுக் கேற்க நினைச்ச காரியம் அனுகூலமானாப் போலே, அது நிமித்தியம் ஆயிரம் பேர் பிராமணருகளுக்கு போசனம் வில்லியநெல்லூரிலே மயிசூர் வெங்கிட்ட நாராயணப்பய்யன் வீட்டிலே பண்ணத்தக்கதாக முஸ்தீப்பு பண்ணி, நாளை நன்றைக்கு பண்ணப் போறதுக்கு ஒருநாள் முன்னே தானே வில்லியநெல்லூருக்குப் பயணமா போனானென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது.

### *1757 வருசம், சனேர் மாசம், தேதி 12; தாது வருசம், தை மாசம், தேதி 3; புதவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் தொரை அவர்களைக் கண்டு பத்து மணி வரைக்கும் மெத்தை மேலே யிருந்துப் போட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்(தேன்). பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தவிடத்திலே, முசியே பொலோ சொல்லி அனுப்பின சேதி: தாம் அற்பிசி மாசம் 26 தேதி (நவம்பர் 7) சீமை விசாரிப்(பை) தொரை முன்னே விட்டு (விட்டபோது), அப்போ தாம் தொரையைப் பார்த்துச் சொன்ன சேதி : "முசியே கொதே அவர்கள் யிவ்விடத்துக்கு வந்தபோது யிந்தப் பட்டணத்திலே முசியே துப்பிளேயிக்சு அதிகாரத்திலே யிந்த வூரிலே

---

[1] வில்லியனூர் ஆலயத்திலுள்ள அம்மன்.

நடந்த அனியாயங்களும் வெளிச் சீமைகளிலே நடந்த சங்கதிகளும், கோன் சேலியேர்கள் ஒப்பிசியால்மார்கள் வகையிரா வெள்ளைக்காரர் நடத்துகிற சங்கதிகளும், இந்த வூருக்குள்ளே உத்தியோகஸ்தர் நடத்தைகளும் சலகமும் நன்றாய் சோதிச்சுப் பார்த்து, அதன் பேரிலே சீமா மூலம் முசியே திலார்ஷும் ரெங்கப்ப முதலியாரும் யிசாரா தீத்துக் குடுத்ததின் பேரிலே, உபரியாய் லக்ஷத் தன்பதினாயிரம் ரூபா ஒசத்தி ரங்கப்பன் கையிலே சீமாயைக் கட்டி, சகலமான உத்தியோகஸ்தரும் ரங்கப்பனுக்கு அன்னாடம் கணக்கு கபுறு சகலமும் சொல்லி, அவர் ஒடுதிப் படிக்கி நடக்கிறது. வெள்ளைக்காரர் தவிர மைத்த சகலமான பேருக்கும் ரங்கப்பன் கோவர்ணதோர். யெல்லாரும் அவன் சிக்ஷை ரக்ஷையிலே அடங்கி நடந்து கொள்ளுகிறதென்று அவருக்கு அதிகாரமுங் குடுத்தார். உமக்குத் துரைத்தனத்தைக் குடுத்தார். எனக்கிந்த சீமா மூலத்துக் காரியங்களைத் தொட்டு ஆருக்காகிலும் யேத்தக் குறைச்சலாய் நடவாமல் அதுக ளெல்லாம் நன்றாய் விசாரிக்கவும், அதிலே வித்தியாசங்களிருந்தால் குமுசேலிலே சொல்லித் தீத்துக் குடுக்கவும், அந்தப்படிக்கு எனக்கு ஒடுதிக் குடுத்துக் காகித மெழுதிக் குடுத்தார். அந்தக் காகிதம் என் கையிலே யிருக்கிறதினாலே அந்த அதிகாரம் எனக்கு அவர் குடுத்தபடியினாலே, நான் உம்முடனே பேசு(கிறேன்). சீமா மூல காரியமெல்லாம் நான் நன்றாய் விசாரிக்க வேண்டியது எனக்குப் பொறுப்பு. யிப்போ என் கை கணக்கைத் தந்து விட்டேன். (இருந்தாலும்) யினி மேல் நானிது காரியமெல்லாம் விசாரியாமலும் குமுசேலிலே பேசாமலும் யிருப்பேனென்று நீர் எண்ணத் தேவையில்லை யென்று சொன்னேன். அதுக்கு 'ரெங்கப்பன் காரிய நிமித்தியமா (கத்தான் நீர்) கும்பினியிலே சம்பளம் வாங்கிக் கொண்டு இங்கே யிருக்கிறீரா?' என்று (துரை) கேட்டார். அதுக்கு, மெய்தான். உமக்கு யெப்படி முசியே கொதே யிந்தத் தொரைத்தனங் குடுத்தாரோ, அப்படித் தான் யெனக்கும் குடுத்திருக்கிறார். நான் நன்றாய் விசாரிப்பேன். பேசுவேன் யென்று சொல்லிப் போட்டு வந்தே," னென்று சொல்லி அனுப்பினார்.

அது வந்து சொன்ன துபாசியுடனே நாம் முசியே புலோவுக்குச் சொல்லி அனுப்பினது யேதென்றால், "நீரானால் முசே கொதே கொடுத்திருக்கிற ஒடுதி மேலே சொன்னீர். அதுவே துரை மனதிலே குரோதமாய் வைச்சு, நான் பண்டிகைக்குக் காணப் போனவிடத்திலே நான் தம்மை மோசம் பண்ணினதாகவும் கணக்கெல்லாம் தப்புக் கணக்கெழுதிக் குடுத்தே னென்றும் சொன்னார். அதுக்கு நான், "உமக்கு ஒன்றும் மோசம் பண்ணினதுமில்லை, கணக்கு தப்பிதமா யெழுதிக் கொடுத்ததுமில்லை. நான் குப்பினியிலே குத்தகை வாங்கினேன். அவரவர் கையிலே குத்தகை குடுத்தேன். அவரவர் என்கிட்ட செல்லு ஒத்துக்கொள்ளுகிற நிமித்தியம் அவரவர் என்கிட்ட எழுதி வைச்ச

கணக்கை நான் உம்முடைய கிட்ட யெழுதிக் குடுத்தேன். அதிலே வித்தியாசங்களுண்டானால் அந்தந்தக் குத்தகைக்காரர் உத்திரவாதம் பண்ணவேண்டியதே யல்லாமல், என்னைத் தொட்டு ஒரு தப்பிதமும் வராது. யிது வரைக்கும் வந்த துரைகளுக்கெல்லாம் என் பேரிலே தயவு வரும்படியாக நடந்து கொண்டேனே யல்லாமல், தப்பிதமாய் நடந்தவனல்ல. யிப்போதும் நான் தப்பிதமாய் நடந்ததில்லை. உம்முடைய தெயவு மாத்திரம் (இல்லை). என்னுடைய பொல்லாத காலத்தினுடைய குணம் உம்முடைய வாக்கிலே யிப்படிப் பட்ட சொல் பிறந்தது. நான் உம்முடைய தெயவைக் கோரியிருக்கிறவன், நீ ரென்னிடத்திலே தெயவு பண்ண வேண்டியது," என்று சொன்(னேன்). "என் தெயவு உனக்கென்ன செய்யும்? நான் தவிர யெல்லாரும் (உன் பக்கம்) பேசுகுறதிலே அவர்கள் பெலன் (உனக்கு இருக்கிறபடியினாலே) என் தெயவு உனக்கு வேண்டிய தென்ன?" (என்று) யிப்படியெல்லாம் அனேகம் உத்தாரங்கள் குரூரமாய்த் (கோபமாய்த்) தானே சொன்னாரென்று துபாசியுடனே மறு சேதி சொல்லி அனுப்பினேன்.

அதன் பிறகு, "முசியே கில்லியார் பேச வேணுமென்று சாயங்காலம் வீட்டிலே தானே யிருக்குறேனென்று உங்களுடனே சொல்லி உங்களை வரச் சொன்னார்," என்று முசியே கில்லியாருடைய துபாசி வந்து சொன்னார். அதுக்கு நமக்கு சாயங்காலம் வரக்கூடாது. நாளை உதயத்திலே வருகுறோமென்று சொல்லி அனுப்பினோம்.

அதன் பிறகு திரும்பவும் ராத்திரி முசே புலோவுட துபாசி வந்து சொன்ன சேதி, தான் போய் நாம் சொன்ன சேதி யெல்லாம் சொன்னதாயும் அதுக்கு முசியே புலோ, "தொரை யிப்படிச் சொன்னாரென்று விசாரப்பட வேண்டாம். அவர் சொன்னது நிசம் தான். யெதுனாலே என்றால், நானவருடனே சொன்னது மல்லாமல் முசியே லெனுவாருடனே நாலு தரஞ் சொல்லி அனுப்பினேன். அதிலே கண்டிப்பாய் சீமா மூலம் பேச்சு வந்ததால் ... நான் முன்னே வந்து நின்று நன்றாய்ப் பேசுவேனென்று சொல்லி அனுப்பினேன். அதெல்லாம் அவர் மனதிலே வேகம் பிறந்து யிருக்கும். அதினாலென்ன? அவராலே (உம்மையோ என்னையோ) எதுவும் செய்ய முடியாது," என்று சொன்னாராம். (மேலும்) யின்னம் யிருபது நாளையிலே கப்பல் வருகுது. அந்தக் கப்பலிலே தமக்கு (பொலோவுக்கு) முசே கொதே பண்ணிப் போனபடிக்கி சகலதிகாரமும் திட்டம் பண்ணிப் போனபடிக்கி சகலதிகாரமும் பின்னையும் விசேஷமாய் அதிகாரமும் திட்டம் பண்ணிக் கும்பினியார் காகிதமும் மினிஸ்தருகள் காகிதமும் வெகுமதியும் வரும். தாமிந்த வூரிலே சகல தொரைத் தனமும் பண்ணப் போறார். என் மனதினாலே யானால், யிதுக்கு முன்னே வந்த காகிதத்திலேயேயும் உம்முடைய சேதிக்குச் சிறிது ஒடுதிகள் வந்திருக்க வேணுமென்று

தோணுது. யெல்லாத்துக்கும் யிருபது நாளை காரியம். மனம் பொறுத்துக் கொண்டு யிருக்கச் சொல்லு. அப்பால் தாமே தொரைத் தனம் பண்ணுவார் இந்த வூருக்கென்று சொல்லி அனுப்பினார், யென்று பின்னையும் சாரமான பேச்சுக்களாக வந்து சொன்னான்.

### *1757 வருசம், சனேர் மாசம், தேதி 13; தாது வருசம், தை மாசம், தேதி 4; குருவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு முசியே கில்லியார் வீட்டுக்குப் போய் அவரைக் கண்டவிடத்திலே, அவர் சொன்ன சேதி : "திருக்கோவிலூரிலே யிருந்து காகிதம் வந்தது. அதிலே கோந்துவார் என்கிறவன் உம்முடைய கையிலே 25,000 ரூபாய் கடன் குடுத்திருக்கிறானாம். அந்தச் சேதி யென்ன?" வென்று கேட்டார். அதுக்கு நாம் சொன்னது: "அவன் முகத்தை ஆர் ஆறிவார்? அவனெப்படிக் கொத்தவன்? அவன் நமக்குக் கடன் குடுக்கவாவது? நாம் அப்பு (அபு) மகம்மதுவுக்குக் குத்தகை கொடுத்தோம். அவனுக்குத் திருச்செல்வராய முதலியார் சாமீன் யெழுதிக் கொடுத்தான். யிது சேதி அறிவோம். மைத்தப்படி யிவன் கையிலே கடன் வாங்கினதுமில்லை. யிவனை அறியவுமறியோம்?" என்று சொன்(னேன்). அவனானா லப்படி யெழுதி அனுப்பினான் யென்று சொன்னார்.

அதின் பேரிலே, "நீர் யெந்த நியாயத்திலே ராமாஞ்சி பண்டிதனைக் காவலிலே வைச்சீர்?" என்று கேட்டோம். அதுக்கு, "நாம் திருக்கோவிலூருக்குச் சேவுகரை அனுப்பிக் கூட்டி வந்து மோதீன் (மொகிதீன்) சாயபுவை நயினார் வீட்டிலே காவல் வைச்(சோம்). ராமாஞ்சி பண்டிதன் சீட்டனுப்பி வைச்சு, நம்முடனேயும் சொல்லாமல் விட்டு, வூருக் கனுப்பி விட்டான். அதினாலே அவனை அழைப்பிக்கச் சொல்லி காவலிலே வைச்சோம்?" என்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது: "யிந்த நியாயமிப்போது நான் உம்முடனே பேசத் தக்கதில்லை. அது பேசிகிற வேளையிலே பேசுகிறேன். அப்போது நீரெந்தப்படி நியாய மெய்ப்பிக்கிறீரோ அப்போது தெரியவந்ததும் வராதும் அறிய வேணும். இப்போ என்ன?" வென்று சொன்னோம். அதுக்கு நான் காவலிலே யிருந்தவனை விட்டு விடச் சொல்லி இவனனுப்பின சீட்டு யென் கையிலே யிருக்குதென்று சொன்னார். அதுக்கு, "அந்தச் சீட்டு யென்ன செய்ய? யிதுக்கு முன் சகலமான பேரும் வெளியே போக வேணுமானால் நம்முடைய சீட்டுக் குடுக்கிறது. இப்பால் பாப்பய்யப் பிள்ளை விசாரிப்பில் அது நின்றுது. இப்போது சீமா மூலம் நம்முடைய வசமான பிற்பாடு உத்தியோகஸ்தராயிருக்கிற பேர்கள் வெளியே போறதானால் ராமாஞ்சி பண்டிதன் சீட்டுக்குடுத்தால், அதைக் கட்டிக் கொண்டு நயினாரைச் சீட்டுக் கொடுக்கச் சொல்லித் திட்டம் பண்ணினோம். அந்தப்படிக்கி

ராமாஞ்சி பண்டிதன் குடுத்து வந்தான். அந்தச் சீட்டைப் பார்த்து காவலிலே வைச்சீர். யிந்த நியாயம் (பின்னாலே) பேசலாம். திருக்கோவிலூரிலே யிருக்கிற ஒம்மோ அங்கே யிருந்த பேரை யெல்லாம் பிறப்பட்டுப் போகச் சொல்லித் துரத்திவிட்டான். அப்போது மொகதின் சாயபு பிறப்பட்டு வூருக்குப் போறவன் நம்மை வந்து கண்டு சேதி சொல்லிப் போட்டுப் போறோ மென்று நம்மண்டைக்கு வந்தான். இதிலே அவன் பெண்சாதிக்கு உடம்பு சுவஸ்தமில்லை யென்று சேதி வந்தது. அதினாலே ஊர் மட்டும் போய் வர வேணு மென்று சொன்னான். அதுக்கு எட்டு நாளையிலே வரத்தக்கதாய் அவன் கையிலே சீட்டு வாங்கிக் கொண்டு ஊர் மட்டும் போய் வரச் சொல்லி அனுப்பிவிச்சோம். யிப்படி நடந்த தல்லாமல் உம்முடைய மனுஷர் அவனை மறிச்சுக் கூட்டி வந்துதும் யில்லை. அவனைக் கூட்டி வந்து நயினார் வீட்டிலே வைத்ததுமில்லை. அப்படி யிருக்க நீர் யிப்படிச் செய்தீர்," யென்று சொன்னோம். அதுக்கெல்லாம் நான் விசாரிக்கிறோமென்று சொன்னார். "நீர் வேணத்தை (விரும்பியவாறே) விசாரியும். யிந்தக் காரிய நியாயம் நான் (பிறகாலே நேரம் வரும்போது) பேசுகிறேன்," என்று சொன்னேன். அதன் பிறகு இந்தக் காரியம் வந்து தம்முடைய தலையை உடைத்துப் போடுகிறது. நான் (இது) எனக்குத் தேவையில்லை யென்று துரையுடனே சொல்லிவிட்டு விடுகுறேனென்று சொ(ன்னார்). பின்னையும் நானாவிதப் பேச்சுக்களாய் ஒரு நாழிகை பேசியிருந்தார். அதன் பிறகு நாம் அவரை அனுப்பிக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

## பிப்ரவரி 1757

### *1757 வருசம், பெவிறியேர் மாசம், தேதி 1; தாது வருசம், தை மாசம், தேதி 23; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே துரை பாறு பார்க்கப் பிறப்பட்டுப் போகையில், நாமும் கும்பினீர் வர்த்தகரும் போய் காண்பிச்சுக் கொண்டு சலாம் பண்ணினோம். அவரும் பார்த்தபடியே போனார். அவர் முகம் பார்த்தால் மெத்தவும் வாடிக் கண்டுது. என்னத்தினாலே யித்தனை வாட்டமாய் யிருக்குதென்று வர்த்தகரும் நாமும் பேசிக் கொண்டு பிடவை பார்க்கிற சாலையே வந்து, நேத்து சாயங்காலம் சூரத்திலே யிருந்து (ஒரு) சோடாவும் சலாபத்து சங்கு கிட்ட யிருந்து ஒரு சோடாவும் வந்துதே, அதிலே சூரத்து சோடாவிலே சீர்மைக் காகிதம் வந்ததாகவும், அதிலே சீமையிலே இங்கிலீசுக்காரருது போர் முகும் (Port Mahon) யென்கிற பட்டணமும் பின்னை ஒரு பட்டணமும் ரெண்டு பட்டணமும் மெத்தவும் பெரிய பட்டணமாய் இங்கிலீசுக்காரருக்கு வெகு பிலனாயிருந்தது; அந்த விரெண்டு பட்டணமும் பிரெஞ்சுக்காரர் பிடிச்சுக் கொண்டார்களென்று எழுதி வந்ததாகவும், அதிலே துரையவர்கள் நேத்து ராத்திரி வெகு சந்தோஷமாக யிருந்தாரென்றும் சேதி கேழ்க்கலாச்சுது.

அப்படி யிருக்கையிலே, இன்றைக்கு முகத்திலே இத்தனை வாட்டங் காட்ட வந்த தென்ன? ஆனால், துரைக்குச் சொந்த காரியத்திலே உச்சாகமான சேதியாக யெழுதி வரயில்லையோ தெரியாது. அதினாலே முகம் வாடி யிருக்கையிலே யேதென்று யோசனை பண்ணினோம். யிப்படி யிருக்கையிலே மதாம் புலோவினுடைய பிள்ளை அங்கே வந்தான். அவன் சொன்ன சேதி : "நேத்து ராத்திரி சூரத்து சோடா வந்ததிலே சீர்மைக் கடுதாசிகள் வந்தது. அதிலே முசியே புலோ தம்பி, தமையர்மார் காகிதமும், தன்னுடைய மச்சினன் காகிதமும் வந்தது. அதிலே யெழுதி யிருந்த சேதி, முசே புலோவின் பேரிலே முசே கொதே வெகு பிரீதியாயிருக்கிறார். முசே கொதே மகா நன்றாய் யிருக்கிறார். கும்பினியிலே அவர் பேச்சு மெத்தவும் அனுகூராய் நடக்குது. முசே கொதேயும் ... அதிக பிரீதி (யுடனே) முசே புலோ பிரஸ்தாபம் கும்பினியார் முன்னே ரொம்பச் சொல்லிக் கொண்டு வருகுறார். ஆகையாலே உமக்கு (பிள்ளைக்கு) மெத்தவும் சந்தோஷமான காரியங்கள் அடையலாமென்று யெழுதி யிருந்தது. இதல்லாமல் முசியே கொதே காகித(த்திலே) முசே பொலோவுக் கெழுதி வந்திருக்குது. அதி லென்ன யெழுதி வந்திருக்குதோ யெனக்குத் தெரியாது. நீர் போய் முசியே புலோவைக்

கண்டு பேசினால் அப்போ அவர் சொல்லுவார். இதுக்கு முன் மாயு மாசம் சீர்மையிலே யிருந்து ஆறு கப்பல் பயணமாய்ப் பிறப்பட்டுது. அது யிந்தக் கலாபத்தினாலே யெங்கே யிருக்குதோ தெரியாது... யிதுக்கு யிப்பால் யெத்தனைக் கப்பல் பிறப்பட்டுதோ தெரியாது," யென்று சொன்னான். அதின் பேரிலே நாமெல்லாச் சேதியும் கப்பலிலே யெழுதி வரும், கப்பல் வந்தால் தெரியுமென்று யோசனை பண்ணினோம்.

இதல்லாமல் நாலு நாளாய் யிங்கிலீசுக்காரர் சுலுப்பு ஒன்று சமுத்திரத்திலே கிழக்கே மேலாக வடக்கே யிருந்து தெற்கே போறதும், தெற்கே யிருந்து வடக்கே போறதும் யிப்படியாகத் திரிஞ்சு கொண்டிருக்குது. யோசனை (பண்ணிப்) பார்த்தால் புதுச்சேரிக்குக் கப்பல் வருகிறதாய் இங்கிலேசுக்காரருக்குக் கபுறு வந்திருக்க வேணும், ஆனதினாலே கப்பல் வந்த சேதிக்குக் கபுறு கொண்டு போற நிமித்தியம் யிந்த சுலுப்பு யிப்படி யிங்கே தானே திரிகிறதென்று யோசித்தோம்.

தஞ்சாவூர் மானாசியப் பிள்ளையும் கிழாநெல்லிக் கோட்டை மேலே லெக்கை (மதில்) யேறப் போனதாகவும், அதிலே தொண்டமான் கூட்டம் மருந்து பொதையல் போட்டு வைச்சு அதைக் கொளுத்தி விட்டதாகவும், அதிலே வெகு சனங்கள் மடிஞ்சு போனார்க ளென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது. முசியே கில்லியார் திருக்கோவிலூர் விருத்தாசலம் வகையரா சீமைக்குச் செலுத்தி, நம்முடைய பேருக்கு கும்பினீர் ரசீது வந்த வயணம் நக்ஷத்திர விராகன் 1,772; வட்ட வீ 3; பறங்கி வீ 11; (ரூபாய்) 5,063; பணம் 9; காசு 24.

### *1757 வருசம், பிப்றவரி மாசம், தேதி 2; தாது வருசம், தை மாசம், தேதி 24;* புதவாரம்

இத்தனாள் காலமே சத்தியனாதப் பிள்ளை வீட்டிலே கலியாணத்துக்கு நாள்க் கால் நாட்டுகிறோமென்று அழைத்துப் போனபடியினாலே, அவர்கள் வீட்டுக்குப் போயங்கே யிருந்து பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம். நேத்து மத்தியானம் முசியே புலோ அவர்கள் தம்முடைய துபாசி முத்தப்பனுடனே சொல்லியனுப்பின சேதி யென்ன வென்றால்: "தமக்குச் சென்னப்பட்டணத்திலே சினேகிதனாகிய ஒரு இங்கிலீசுக்காரன் வழியிலே மாயு மாதத்தில் நம்முடைய வையாசி மாசம், சீர்மையிலே யெழுதின முசியே கொதே காகிதம் தமக்கு வந்தது. அதிலே யெழுதி யிருந்த வயணமே தென்றால் : யுவ வருசம் அற்பிசி மாசம் (1755 அக்டோபர்–நவம்பர்) புதுச்சேரியிலே யிருந்து முசியே தெவோ (அல்ல. கொதே) யேறிப் போன கப்பல் ஒன்றும், பங்காளத்திலே யிருந்து பிறப்பட்ட கப்பலொன்றும், மசுக்கரையிலே யிருந்து பிறப்பட்ட

கப்பலொன்றும் ஆக கப்பல் நாலும்[1] சீர்மையிலே ரேவுக்குச் சமீபத்திலே போகையிலே இங்கிலீசுக்காரர் பசுக்காத்துப் (Squadron) பனிரெண்டு கப்பல் வழியிலே யிருந்து சண்டை குடுக்கிறதென்று, சுவிசுக் (Swiss) கப்பல்க்கார னொருவனிவர்களுக்குக் கபுறு சொன்னதாகவும், அதின் பேரிலே இவர்கள் நாலு கப்பலும் வெகு தூரம் உசந்து போய் சுரக்ஷிதமாய் (பத்திரமாய்) மாயி மாசம் 17 தேதி ரேவு பிடிச்சு சீர்மைக்குப் போய்ச் சேர்ந்தார்களென்றும், அதின் பேரிலே ஆறு கப்பல் பயணமாய்ப் பிறப்பட்டது, யிங்கிலீசுக்காரர் கப்பல் வழிக்கட்டி சண்டை குடுக்கிற தினாலே பெலன் போராதென்று (திரும்பி விட்டதாகவும்) யெழுதி வந்தது. அதினாலே நமக்கு ரொம்ப சந்தோஷமாச்சுது. யெதினாலே என்றால், முசே தெவோ போய் சீர்மைக்குச் சேர்ந்த படியினாலே இவ்விடத்திலே நடக்கிற சேதி சகலமும் நன்றாய் முசே கொதேக்கும் கும்பினியாருக்கும் சொல்லுவார். இதல்லாமல் நாமெழுதி அனுப்பின காகிதங்களும் போய்ச் சேர்ந்து அந்த மத்தலப்பையும் அவர்கள் அறிஞ்சாப் போலே யாச்சுதே யென்கிற சந்தோஷம் நமக்கிருக்கிறது. அதினாலே வருகிற கப்பலிலே வெகு திட்டமாய் வரும். முசே கொதே மனதிலே தாம் திட்டம் பண்ணிப் போட்டபடிக்குக் காரியத்தை இவர் (லெறி) நடவாமல், யெல்லாம் விபரீதங்களாய் நடத்துகிறதெல்லாம் முசே கொதே மனதிலே லெகு குறை தோணியிருக்குது. நான் கோன்சேலியோரா யிருக்க, என்னைக் கண்டவுடனே முகத்தைத் திருப்பிக் கொள்ளுகிறார். ருசுமு சாதல்வார் சம்மதி முன்னால் தீர்ந்திருக்குது. இவர்கள் கோன்சேல் கூடி பேசித் தீர்ந்திருக்குது. அப்படியிருக்க இவர்கள் தஸ்தவேசு வைச்சுக் கொண்டிருக்கிறது கொண்டு பயமில்லை யென்றும் சொல்லச் சொன்னார்," யென்று சொன்னான். அதுக்கு நாம் சொன்னது, "ருசுமு சாதல்வார் வேறே, யிசாராவுக்குச் செல்லு வேறே யென்று எழுதச் சொல்லி யெழுதி யனுப்பினதுக்கு, அதையுந் தள்ளி தஸ்தவேசும் கட்டினார்களே, யிந்த வருஷத்துக்கு அமுல்தாரர் பேரிலே யிசாரா வாயிதா ... தீத்து யெழுதுகிறதிலே, ருசுமு சாதல்வாரும் கூடச் சேர்த்து யெழுதியனுப்பி யிருக்கிறார்கள். யிந்தச் சேதியும் முசியே புலோவுடனே சொல்லச் சொல்லி அனுப்பிவிச்சோம். யிதல்லாமல், சீமா மூலத்துப் பணங்கள் வருகிறதுக்கு அமுல்தார் மாரியம்மன் கலகத்தைச் சாக்கிட்டுப் பணங்களும் அனுப்பாமல், ராச்சிய மெல்லாம் குபாற் பண்ணுகுறபடியினாலே, நேத்திய தினம் அன்பது பேர் பாறுக்காரரும் முப்பது பேர் கிறிஸ்தவர் சேவுகரும் உபதேசிகளும் பயணம் பண்ணி விழுப்புரம் முதலான சீர்மை (க்குப்) போய், ஆர் சன்னதம் என்று கொண்டாடுகிறார்களோ, அவர்களைப் பிடிச்சு யிங்கே அனுப்பிவிச்சார்களென்று சேதி கேழ்க்கப்பட்டுது.

---

[1] மற்றுமொரு கப்பலும் சேர்ந்து நான்கு போலும்.

*1757 வருசம், பிப்றயிரே மாசம், தேதி 10; தாது வருசம், மாசி மாசம், தேதி 3; குருவாரம்*

இத்தனாள் சரீரத்திலே மந்தங்கண்டு வெளியே போகாமல் சாயங்காலம் வரைக்கும் போசனம் பண்ணாமல் ராத்திரி பத்தியம் வாங்கிக் கொண்டு வீட்டிலே தானேயிருந்தேன்). ராத்திரி பாளையக்கார நயினார் வந்து சொன்ன சேதி : கூனிமேட்டுக்குத் தெற்காகப் புத்துப் பேட்டுக்கு வடக்காக சமுத்திரக் கரையிலே ஒரு மீன் செத்துப் போனது வந்து சேர்ந்தது. அந்த மீன் சாதி அடியிலே நூத்தறுபது அடி நீளமும், சாதி அடியாலே பதினாறடி அகலமும், சாதி அடியினாலே யிருபத்தஞ்சு அடி உயரமும் யிருக்குது. பனைமரம் போலே மேல் தோலிருக்குது. அதினுடைய காதின் கீழே வரிசையாய் நூறு நூத்திருபது (தடிப்பான சதை) தொங்குறது யென்று ஒன்று கொண்டு வந்து காண்பிச்சான். அதைப் பார்த்தால் ஆனைக் காது போலே தடிப்பாய் கறுப்பாய் மரம் போலே கெட்டியாய் ஒரு முழ அகலம் ஒன்றரை முழ நிகளம் யிரு(க்குது). அதுகளிலே முளைச்சிருக்கிற மயிர்களைப் பார்த்தால் உருக்குக் கம்பிகளைப் போலே பெரும் பயத்தங்காய்ப் பெருமன் ஒரு முழ நிகளம் கறுப்பாயிருக்குது. அதை நெருப்பிலே போட்டால் நாத்த மெடுக்குது. அந்த மீனுக்கு நடு முதுகிலே ஆனைத் துப்பிக்கை பெருமன் ஒரு ஆள் புருஷம் உசரம் உருக்குக் கம்பம் (கம்பி?) போலே முளைச்சிருக்குது. அந்த மீனைத் தின்கிற நிமித்தம் ஆயிரம் பதினாயிரம் மீன்கள் ஆனை போலும் குதிரை போலும் பெரிய பெரிய மீன்களாக வந்து சுத்திக் கொண்டு அதைப் பிடுங்கித் தின்னுகிறது. பட்டனவரைப் படகு கொண்டு கிட்டப் போகச் சொன்னால் அவர்கள் சொன்னது, "படகுக் கொண்டு போகப்படாது, சுத்திக் கொண்டு தின்னுகிற மீன்கள் படகையும் அடிச்சுப் பிடுங்கிப் போடும், எங்களையும் கொன்று போடும்," என்று எத்தனை சொல்லியும் போகமாட்டோமென்று வரையறவாய்ச் சொல்லி விட்டார்கள். நாத்தமானால் சகிக்கக்கூடாது. துரையானால் படகு கட்டு மரங்கள் கொண்டு போய்க் கயறு கட்டியிழுத்துக் கொண்டு வரச் சொல்லுகிறார்கள். மலையாகிலும் யிழுக்கலாம், யிது யிழுக்கக்கூடாது. மீன்கள் கிட்டவுஞ் சேர வொட்டாது. எல்லாரையும் கொன்று போடும்," என்று சொன்னான். இதைப் பார்க்கிற நிமித்தியம் பட்டணத்திலுள்ள பேரிலே முக்கால் வாசி வெள்ளைக்காரர், துலுக்கர், சோனகர் (லப்பைகள்), பறையர், சூத்திரர் நானா சாதியும் போய்ப் பார்த்து வருகுறார்க ளென்றும் யிந்தப் புதுமை யெங்கும் காணோம் என்றும் கலச சனங்களும் சொல்லுகுறார்கள்.

முன்னாலே பிரபவ வருசத்திலே (1747–48) முசியே துப்பிளேயிக்சு அவர்கள் துரைத்தனத்திலே முப்பதடி நிகளம் அஞ்சடி உயரம் ஒரு மீன் செத்து, புதுச்சேரிக் கோட்டைக்கு வடபிறமாய் கரையிலே ஒதுங்கி

யிருந்தது. அது ஒதுங்கிய தோஷம் விப வருசம் (1748–49) இங்கிலீசுக்காரர் வந்து சுத்திக் கொண்டு வெகு ஆபத்து வந்து, அதன் பிறகு அன்வர்திகான், நாசர் சங்கு சகலமான பேருஞ் செத்து மிகவும் கலகமுஞ் சண்டையும் உண்டாயி, ராச்சிய மிறந்து போயிற்று. ஆகையாலே யிப்போ அதிலும் மெத்தவும் ஆச்சரியமாய்க் கண்டதுக்கு என்ன புதுமைகள் காணுமோ? இனி மேலறிய வேண்டியது.

*1757 வருசம், பிப்றயி மாசம், தேதி 16; தாது வருசம், மாசி மாசம், தேதி 9; புதவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே, சின்ன துரை காலிலே சிறங்கென்று வரயில்லை. மத்தப் பேர் வந்து பிடவை பார்த்துக் கொண்டிருந்தார்கள். நாமுங் கூட யிருந்து பார்த்தோம். யிப்படி யிருக்கையிலே அரியாங்குப்பம் சம்மதிக்குக் கட்டுக்கார (துணிப்பொதி கட்டுபவன்) மேஸ்திரி இரெண்டாயிரம் ரூபா கடன் வாங்கிக் கொடுத்ததுக்கு, அந்தக் கிராமம் தன் பாரிசமாய் வாங்கிக் கொண்டதாயும், அது குடிகளுக்குச் சம்மதியில்லாமல் துரையுடனே வந்து சொல்லிக் கொண்டதாவும், அதுக்குத் துரை மேஸ்திரியை அழைப்பிச்சுக் கிராமத்தை விட்டுவிடச் சொல்லி சீட்டைக் கொண்டு வரச் சொல்லிச் சொன்னதாகவும், அதுக்கவன் கடன்காரன் கிட்ட வைச்சிருக்குதென்று சொன்னதாகவும், அந்தச் சீட்டைக் கொண்டு வரச் சொல்லி அவனைச் சாவடியிலே வைக்கிறதுக்குக் கொண்டு போனார்கள். இந்தச் சேதி முசியே கொற்னேத்தும் முசியே லெனுவாரும் கேட்டு, அவர்களுக்குக் கோபம் வந்துக் கட்டுக்காரரை யெல்லாம் கட்டுப் போடாமல் வெளியே போகச் சொல்லி, “துரைக்குப் பயித்தியம் பிடிச்சுப் போச்சு. கந்தன் பேச்சைக் கேட்டு யிப்படி அனியாயமாய்க் காரியமெல்லாம் பண்ணுகிறார், சீர்மைகளையும் கெடுத்தார். கும்பினீர் பணமும் முழுகிப் போச்சு. பட்டணத்திலேயும் கந்தன் பண்ணுகிற அனியாயம் கொஞ்சமல்ல,” வென்று யிப்படி நானாப் பேச்சும் பேசி, அதின் பிறகு ரெண்டு பேரும் துரைகிட்டப் போய் பேசினவிடத்திலே அவர் மறு உத்தாரம் குடாமல் கட்டுக்கார மேஸ்திரியைக் கோட்டைக்குள்ளே தானே கட்டுக் கூடத்திலே யிருக்கச் சொல்லிச் சொன்னார் என்று, திரும்ப வந்து அவனை அழைப்பிச்சுக் கட்டுக் கூடத்திலே தானே யிருக்கச் சொன்னார்கள்.

அதின் பிறகு முசியே கில்லியாரும் (ர் மனுஷர்) ராமச்சந்திரராயர் வந்து சொன்ன சேதி: விருத்தாசலங் கொம்மாந்தாம் முன்னாலே கில்லியார் போய் திட்டம் பண்ணினபடிக்கி அந்த அத்திலே யிது வரைக்கு மிருந்தது. (அப்போது) விருத்தாசலம் சுவாமியைத் தெருவீதியிலே யெழுந்தருளப் பண்ண வேணுமென்று கேட்டதுக்கு, நல்லதென்று சொல்லி உத்தாரங் கொடுத்தார். அந்தப்படிக்கி எழுந்தருளப் பண்ண வேணுமென்று

(இப்போது கொம்மாந்தாமைக்) கேட்டு, அந்தப்படி எழுந்தருளப் பண்ணிக் கொண்டு, பாதி தெரு வருகையில் கொம்மாந்தாம் போய் சேவுகரை விட்டு அடிக்கச் சொன்ன விடத்திலே எல்லாரும் சுவாமியைப் போட்டுவிட்டு ஓடிப் போனதாகவும், தேவடியாக்களை எல்லாம் கெடுத்து, நாட்டார் குடிகளையெல்லாம் பிடித்துக் கோயிலிலே அடைச்சு அபராதம் தீட்டி விட்டதாகவும், அவரவர்கள் அபராதந் தீத்துக் கொண்டு வெளியிலே வந்ததாகவும், உடனே எல்லாரும் ஓடிப் போனதாகவும், அதன் பேரிலே அவர்கள் பெண்டுகள் குஞ்சுகளைப் பிடித்து வந்து கோட்டையிலே அடைத்துக் கொண்டதாகவும், அதன் பேரிலே நாட்டார் வந்தார்களென்றும், அவர்களைப் பிடித்து பாராக்காரர் வசம் பண்ணி வழியிலே சோறு திண்ணாமல் இங்கே கொண்டு போய் விடச்சொல்லி அனுப்பினதாகவும், அவர்கள் வில்லியநெல்லூருக்கு வந்ததாகவும், அமுலுக்குப் (பிரச்னையைத் தீர்க்கப்) போன சீனிவாசராயனைக் கையிதிலே (கைதியாக) வைச்சுயிருக்கிறா னென்றும், இப்படி யெல்லாம் சொன்னார்கள். சீர்மையிலே நடக்கிற அனியாயமிப்படி யிருக்குது.

இத்தனாள் கேழ்வியான சேதி யென்ன வென்றால், வந்தவாசியிலே அய்யண்ண சாஸ்திரி அரண்மனைக்கு (கோட்டைக்கு)ப் பணம் முடிப்புக் கட்டி அனுப்ப வேணுமென்று யிருக்கிறதினாலே, “மாரியம்மனிருந்து கொண்டு நான் ஒன்பது வருஷத்துக்கு ராச்சிய பாரம் பண்ணப் போறேன், யெனக்குப் பணம் செலுத்துகிறதே யல்லாமல், அரண்மனையானுக்குப் பணம் அனுப்பத் தேவையில்லை,” யென்று சொன்னதாகவும், அதின் பேரிலே அய்யண்ண சாஸ்திரி (சும்மா) யிருந்துவிட்டதாகவும், அவ்விடத்துக்குப் போயிருந்த சேவுகன் அந்த முடிப்பை யெடுக்கப் போனதாகவும், அவனுக்கு மூக்கினாலேயும் வாயினாலேயும் ரெத்தம் விழுந்ததாகவும், அந்த மட்டிலே முடிப்பை வைச்சுக் கொண்டு சவரி ராயப் பிள்ளைக்கு யெழுதி அனுப்பினதாகவும், அதின் பேரிலே சவரி ராயப் பிள்ளை தம்பி அம்மனை நித்தனை பண்ணி பாராக்காரரைக் கூட்டி அனுப்பவேணுமென்று யோசனை பண்ணின மாத்திரத்திலே, சங்கை யில்லாத கழிச்சல் எடுத்து மெத்வும் கடினமாயிருக்கிற சமையத்திலே, சவரிராயப் பிள்ளை தங்கள் பாதிரி அறியாமல், தன் தம்பி பிழைச்சால் ஆயிரம் ரூபாய் தருகிறேன் என்று வேண்டிக் கொண்டு முடிஞ்சு வைச்ச மாத்திரத்தில் குண முகமா யிருக்கிறதாகவும் கேழ்க்கப்பட்டுது. இதெல்லாம் மயிலத்திலே கண்ட புதுமை. எல்லாரும் சுவாமியைச் சேவிச்சு கேளிக்கைப் பார்த்துக் கொண்டிருக்கிறதிலே, நாலு ரெட்டிகள் பேரிலே அம்மன் சன்னதம் வந்து சுவாமிக்கு நைவேத்தியம் பண்ணினதைச், சில வழிக்கத் தேவையில்லை (என்று) அறையிலே வைக்கச் சொன்னதாகவும், யெல்லாரையும் கையிலிருக்கிற பணங்களை கேளிக்கைக்குப் போடச் சொல்லி விடியந்தனையும் கேளிக்கைப் பார்த்து,

அப்போ சொன்ன சேதி, "தன்னை புதுச்சேரியிலே அடிச்சார்களே நான் புதுச்சேரிக்குப் போறதில்லை. ரெண்டு வெங்கலத் தேரையும் யெஃகுனாலே போட்டது, இரண்டாயிரம் பேர் இராட்சதாளையும் புதுச்சேரிக்கு அனுப்பி விக்குறேன் யென்று சொன்னதாகவும், இராச்சியமெல்லாம் ஒன்பது வருஷத்துக்கு ஆள வந்திருக்கிறேன், சீர்மை என்னுதாக்கும் என்று சொல்கிறதாகவும். சிறிது யிடத்திலே அறுப்புவிட்டு அறுப்பு அறுக்கச் சொல்லி, பாதி வாரம் குடிகளுக்கு விட்டுப் பாதிவாரம் களத்திலே தானே போட்டு வைக்கச் சொன்னதாகவும், ஒரு பிரம்மச்சாரிக்கு அறுபது விராகன் குடுத்து விவாகம் பண்ணிக் கொள்ளச் சொல்லி அனுப்பினதாகவும், ஆனை குதிரை சதுரங்க சேனைகளுடனே தீவட்டி மத்தலப்புடனே போறதாய் அவரவர் கண்ணிலே வந்து காண்பிச்சுக் கொள்ளுகிறதாயும், ஆராகிலும் குத்தங்களாய் நடந்தாலும் சொன்னாலும் உடனே ரெத்தம் கக்கி, வாந்தி பிராந்தி கண்டு சாகிறதாகவும், அனேகம் பேர் செத்துப் போறார்கள் யென்றும், ஒரு ரெட்டி தூஷிச்சவன் மாடெல்லாம் கட்டுத் தரியோடே செத்தாப் போலே கிடந்த தென்றும், உடனே வேண்டிக் கொண்ட பிறகு மஞ்சளும் சுண்ணாம்பும் கரைச்சு மாட்டு மேலே தெளிக்கச் சொன்னதாகவும், எல்லா மாடும் பிழைச் செழுந்து யிருந்ததாகவும் பின்னையும் அனேக புதுமைகளாய்க் கேழ்க்கப்பட்டுது.

### *1757 வருசம், பிப்றயேரி மாசம், தேதி 22; தாது வருசம், மாசி மாசம், தேதி 15; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போக வேணுமென்று யிருக்கையிலே மழை பேஞ்சு யிருக்கிறது. மேலும் பேஞ்சுக் கொண்டிருந்ததினாலே வீட்டிலேதானே யிருக்கையிலே, மத்தியானம் பனிரெண்டு மணிக்கு ராமய்யப் பிள்ளை வந்து சொன்ன சேதி: முசியே துப்பிளேயிக்கு இந்தவூரிலே ஆராருக்குக் கடன் குடுக்க வேணுமோ விசாரிச்சு அவரவர் கையிலே யிருக்கிற சீட்டைப் பார்த்து எழுதி அனுப்பி வைக்கச் சொல்லி கும்பினியார் காகிதம் வந்தது. ஆகையாலே கும்பினீர் வர்த்தகர் முதலான பேர் அவரவர் கையிலே யிருக்கிற சீட்டுகளைக் கொண்டு வந்து எழுதி வைக்கிறார்கள். உங்கள் கையிலே சந்தா சாயபுவும் ராசா சாயபுவும் ஆமூர் (ஆம்பூர்). வாணியம்பாடிக்கி தாசுமான் பிறகே போன அரும்பாத்தை முத்தய்யன் பேருக்கு யெழுதிக் கொடுத்தது முப்பத்தி நாலாயிரத்தி அன்னூறு ரூபா கடன் முறிரெண்டு யிருக்குதே, அதை யெழுதிவிச்சு சீமைக்கு அனுப்புகிற நிமித்தியம் சின்னதுரை உங்களுடனே சொல்லி வாங்கிக் கொண்டு வரச்சொன்னாரென்று சொன்னான். நல்லது, அனுப்பி விக்கிறோமென்று சொல்லி அனுப்பிப்போட்டு, அந்த ரெண்டு முறியுமெடுத்து மேலுகிரிச் செட்டி

கையிலே கொடுத்து, சோலையப்பனையுங் கூடக்கூட்டி, காசி (Kazi) அண்டைக்கு அனுப்பிவிச்சு காசி மொகறோடே (முத்திரை) நகல் யெழுதிவிச்சுக் கொண்டு வரச் சொன்னோம். அந்தப்படிக்குப் போய் நக்கல் எழுதிவிச்சுக் கொண்டு மேலுகிரிச் செட்டியும் சோலையப்பனும் வந்து அந்த ரெண்டு முறியும் ரெண்டுக்கும் நக்கலும் நம்முடைய கையிலே கொடுத்தார்கள். அதின் பேரிலே இரெண்டு முறியும் நம்முடைய கையிலே வைச்சுக் கொண்டு, ரெண்டு நக்கலையும் மேலுகிரிச் செட்டி கையிலே கொடுத்து, ராமய்யப் பிள்ளை யிடத்திலே கொடுக்கச் சொல்லி அனுப்பி(னோம்).

திரும்ப ராத்திரி யேழு மணிக்கு மேலுகிரிச் செட்டியும் மாதவராயன் வைக்கீல் சேஷா பண்டிதனும் இரெண்டு பேரும் நம்முடைய கிட்ட வந்து இரெண்டு நக்கலையும் நம்முடைய கிட்டத் தந்து சொன்னது : யிந்த ரெண்டு நக்கலையும் துரை பார்த்து மதனாந்த பண்டிதரை வாசிக்கச் சொன்னதாயும், அவர் வாசித்துச் சொல்லி இது நக்கல் என்று சொன்னதாகவும், அதின் பேரிலே துரை அசலை வாங்கிக் கொண்டு வரச் சொன்னார். ஆகையாலே, ராமய்யப் பிள்ளை சொன்னது, அந்த அசலைத் தம்மண்டைக்கு வாங்கி வாருங்கோள், தாம் துரைக்குக் காண்பிச்சு, உங்களண்டைக்கு அனுப்பி வைக்கிறோமென்று சொல்லி வாங்கி வரச் சொன்னாரென்று சொல்லிக் கேட்டார்கள். அதுக்கு நாம் சொன்னது : "அசல் கொண்டு போய் காண்பிக்கிறது எங்கேயாகிலும் உண்டா? அதுக்காகத் தானல்லவோ காசி மோகறுடனே யெழுதிவிச்சு அனுப்பினது. இது வினாயகப் பிள்ளை பேச்சு மேலே அல்லவா ராமய்யப் பிள்ளை கேட்டனுப்பினார். ராமய்யப் பிள்ளை வினாயகப் பிள்ளை மேலே யிருக்கிற மனதும் நம்முடைய பேரிலே யிருக்கிற மனதும் தெரிய வந்தது. நல்லது, ஆகட்டும் யிப்போது நீங்களிரெண்டு பேர் வந்து கேழ்க்கிறீர்களல்லவா? உங்கள் கையிலே தருகிறோம். ராமய்யப் பிள்ளை உங்களுடனே சொல்லி யனுப்பின படிக்கு நீங்கள் அவர் கைப்பட துரைக்குக் காண்பிச்சு ரெண்டு சீட்டும் உங்களண்டைக்கு அனுப்பிவிக்குறோமென்று அவர் சீட்டு வாங்கிக் கொண்டு, அவர்கிட்ட குடுக்கச்" சொல்லி மேலுகிரிச் செட்டி கையிலே குடுத்து ராமய்யப் பிள்ளை அனுப்பிவிச்சு வைத்த சேஷா பண்டிதர் பிறகே கூட்டி அனுப்பி விச்சோம். திரும்ப ஒன்பது மணிக்கு ரெண்டு பேரும் வந்து சொன்ன சேதி: "இந்த ரெண்டு சீட்டும் ராமய்யப் பிள்ளை கிட்ட கொண்டு போய்க் கொடுத்தோம். அவர் வாங்கி சின்ன துரை கிட்ட குடுத்தார். அவர் வாங்கி வைத்துக் கொண்டு, நாளைக்குக் கொடுத்தனுப்பிக்குறோம் யென்று ராமய்யப் பிள்ளைக்குச் சொன்னதாக, ராமய்யப் பிள்ளை

நாளைக்கு வாங்கி அனுப்பி வைக்குறேனென்று உங்களுடனே சொல்லச் சொன்னார்," என்று சேஷா பண்டிதனும் மேலுகிரிச் செட்டியும் வந்து சொன்னார்கள். அதுக்கு, "நாமுங்களை ராமய்யப் பிள்ளைக் கிட்ட சீட்டு வாங்கிக் கொண்டல்லவா குடுக்கச் சொன்னோம். சீட்டு வாங்காமல் கொடுத்ததென்ன? இப்போது போய் ராமய்யப் பிள்ளை கைப்பட சீட்டு நாளை அனுப்புகிறே னென்று சீட்டு வாங்கி வாருங்கோள்," என்று திரும்பவும் அனுப்பி விட்(டோம்).

யிப்படி யிருக்கையிலே மைசூர் வெங்கிட்டநாராயணப்பய்யன் கிட்டயிருக்கிற ஆனந்தராயன் வந்து சொன்ன சேதி: வெங்கிட்ட நாராயணப்பய்யன் பெண்சாதி பிள்ளை பெத்திருந்தவளுக்கு வைச்சிருந்த கணப்புச் சாடியிலே (சட்டி?) கதம்பனார் (துங்காய் நார்) கட்டு மேலே யிருந்து விழுந்து, அது பத்திக் கொண்டு வீட்டிலே நெருப்பு பத்திக் கொண்டுதென்றும், வீட்டிலே ஆருமில்லை யென்றும், வெங்கிட்ட நாராயணப்பய்யன் மூத்தாள் வெகு சாகசம் பண்ணி, அவள் யிளையாள் புகையிலே அகப்பட்டுக் கொண்டு, உள்ளே விட்டு வெளியே வரமாட்டாமல் அகப்பட்டவளைத் தான் உள்ளே பூந்து யிழுத்துக் கொண்டு வெளியே கொண்டு வந்து போட்டதாகவும், கிழவியை(யும்) பிள்ளைகளை(யும்) கூட அவள் தப்பி விச்சாளென்றும், அவள் நெருப்பிலே நுழைஞ்சு சாகசம் பண்ணாவிட்டால் சீவகானி (ஜீவனுக்கு ஆபத்து வந்திருக்கும்). சகலமும் கிழவி ஆஸ்தி; அது வெல்லாம் பெரிய பெட்டியிலே யிருந்தது; உடமை தட்டு முட்டுகள் பிடவை சீலைகள் யெல்லாம் பெட்டிகளுடனே அந்த வீட்டிலே யிருந்தது; சலகமும் வெந்து போச் சென்றும், வெகு சேத மென்றும், கிழவி யிந்த விசாரத்திலே பிழைக்கத் தக்கதில்லை யென்றும், வெங்கிட்டநாராயணப்பன் உள் சேதி சொல்லுகிறதில்லை, ஆர் கேட்டாலும் யென்ன யிருக்குது போறதுக்கு யென்று சொல்லிக் கொண்டிருக்கிறாரென்றும் சொன்னான்.

*1757 வருசம், பெவுரியேர் மாசம், தேதி 24; தாது வருசம், மாசி மாசம், தேதி 17; குருவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் மெத்தை மேலே போன விடத்திலே அங்கே துரையவர்களுஞ் சின்ன துரையுஞ் சேர்ந்து முசியே புலோ, முசியே கில்லியார் முதலான கோன்சேலியேர்கள் யெல்லாரும் கூட யிருக் கையிலே, நாம் போய்க் காண்பிச்சுக் கொண்டு நாமும் அங்கே யிருக்கையிலே, கப்பல் பயண நிமித்தியம் துரையவர்களும் குமுசேலியேர்களும் குமு சலிலே போயிருந்து பத்து மணி அடிச்ச உடனே எல்லாருங் கோன்சேல் கலைஞ்சு அவரவர் பிறப்பட்டுப் போனார்கள். நாமுமந்த மட்டிலே பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

இதிலே கேழ்வியான சேதி: முசியே பெடுத்தல்மீ பெண்சாதி மருமகன்[1] முசியே புருனோ யென்கிறவனும், முசியே கொற்னேத்து மச்சான் முசியே மோரிசு (Mauricet) என்கிறவனும் முன்னாலே கப்பல் செப்பனிடுகிற நிமித்தம் பைகோவுக்கு (Pegou)ப் போயிருந்த விடத்திலே பைகோவு ராசாவுக்கும் சிறுயாங்கு (Syriam) ராசாவுக்கும் சண்டையாயிருந்த விடத்திலே, முசியே புருனோவும் முசியே மோரிசும் சிறுயாங்கு ராசாவுக்கு அனுசரியா யிருந்த தாகவும், அந்தச் சேதியை பைகோவு ராசா அறிஞ்சு இவர்களி ரெண்டு பேரையும் காவல் பண்ணி வைச்சதாகவும், அந்தச் சேதி யிவர்களுக்கு வந்து யிங்கே யிருந்து அன்பது பேர் சொலுதாதுகளும் ஒப்பிசியாலும் முசியே லபோம் (Le Beaume) மகனும் மருந்து குண்டு பீரங்கியுடனே ஒரு கப்பல் மேலே போனதாகவும், யிவர்கள் போய்ச் சேரு முன்னே காவலிலே யிருந்த ரெண்டு பேரும் பைகோவு ராசாவுக்கு நல்ல பேச்சுச் சொல்லி காவல் விடுவிச்சுக் கொண்டு யிருந்ததாகவும், அப்படி யிருக்கையிலே இவர்கள் போய்ச் சேர்ந்த பிறகு சொலுதாதுகளையும் மருந்து குண்டு பீரங்கிகளையும் யிறக்கிக் கொண்டு பிலன் பண்ணிக் கொண்டு, அதின் பேரிலே பைகோவு ராசா கிட்டப்போய் நீர் காவலிலே வைச்சதென்ன வென்று வித்தியாசங்களாய்ப் பேசினதாகவும், அதன் பேரிலே பைகோவு ராசாவுக்குக் கோபம் வந்து அன்பது பேர் சொலுதாதுகளையும் முசியே புருனோ வென்கிறவனையும் முசியே மோரிசு யென்கிறவனையும் வெட்டிப் போட்டதாகவும் முசியே லபோம் மகனையும் ஒரு ஒப்பிசியாலையும் (மற்றொரு) கப்பலிலே வந்தவனென்று விட்டு விட்டதாகவும், அவர்களி ரெண்டு பேரும் சீவனுடனே தப்பினார்களென்றும் சேதி வந்தது. அது நிமித்திம் மதாம் பெடுத்தல்மீக்குத் துக்கம் சொல்லுகிற நிமித்தம் கோன்சேலியேர்கள் அவரவர் சின்ன துரை வீட்டுக்கு வந்து விசாரிக்கிறார் களென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது.

யிப்படி யிருக்கையிலே முன்னாலே அலுமாஞ்சு கொம்மாந்தான் நம்மை ரெண்டு மரம் விலைக்குக் கேட்டதுக்கு, நமக்குச் சிலவு யிருக்கு தென்று சொன்னதுக்கு, கிரையமாகிலும் தருகுறோம், (அல்லது) மரத்துக்கு (மரம்) பார்த்துக் (கொடுக்) கிறோமென்று சொல்லியிருந் (தார். நாம் மரத்தைப் பார்க்காமல் ஒன்றுஞ் சொல்ல முடியாது என்று சொல்லிவிட்டோம்). அப்படி யிருக்க இத்தனாள் நம்மையும் கேளாமல் மனுஷரை அனுப்பி மரத்தை யெடுத்து வரச் சொன்னானாம். அப்போது நம்முடைய சோலையப்பன் போய் எசமானன் உத்தாரம் அன்னியிலே மரத்தை யெடுக்கக் கூடாதென்று தகஞ்ச விடத்திலே ஒருத்தருக் கொருத்தர் கையெணக்கமாய் சண்டை போட்டுக் கொண்டு வந்தார்கள்.

[1] மனைவியின் உடன்பிறந்தாள் மகன்.

இந்த சேதி சின்ன துரைக்குச் சொல்லச் சொல்லி அனுப்பிவிச்சதுக்கு, அவர் கும்மாந்தாம் மனுஷரையும் கூடக் கூட்டி ... நம்மண்டைக்கு அனுப்பி விசாரிக்கச் சொன்னார். விசாரித்துத் திரும்பவும் சேதி சொல்லி அனுப்பிவிச்சோம். அதின் பிறகு சின்ன துரை கும்மாந்தானுக்கு அதுக்கேத்த படிக்கு நியாயத்தைச் சொல்லி அனுப்பிவிச்சார். அப்படி யிருக்கையிலே முசியே புலோ துபாசி முத்தய்யன் வந்து சொன்ன சேதி: யிருபது நாளைக்கு முன்னே சின்ன துரை முசே பெடுத்தல்மீ பத்து யிருபது பேர் வெள்ளைக்காரர் முன்னே சீமா மூலம் பணம் முன்னாலே ரங்கப்பன் பேரிலே யிருந்ததை யிப்போது துரை மேல் வாங்கிக் கொண்டபடியினாலே, ரங்கப்பன் சுகப்பட்டான். ரங்கப்பனுக்கு யினிமேல் கும்பினியிலே யிருந்து பணம் குடுக்க வேண்டியிருக்கும். அப்படி வந்துதென்று சொன்னாராம். அது சேதி முசியே லெறியும் கேட்டாராம். நாமாத்திரம் அல்லவோ உம்முடைய பேரிலே பிரீதியாக யிருந்தோம், சின்ன துரையும் உம்முடைய யிடத்திலே பிரீதியாக யிருக்கிறாரென்று முசியே புலோ சொல்லி வரச் சொன்னாரென்று சொன்னான். அதுக்கு உம்முடய தயவு நம்முடைய யிடத்திலே பரிபூரணமா யிருக்கிறதினாலே, சுவாமியும் யிறங்கி அவர் மனதிலேயும் தயவு வரப்பண்ணினாரென்று ரொம்ப உபசாரஞ் சொல்லி அனுப்பிவிச்சோம்.

அதன் பிறகு அலுமாங்கி கொம்மாந்தான் முசியே பிளாம் (M. Blanc) (என்கிற) இங்கிலீசுக்காரனை —(இவன்) துலுக்க வேஷம் போட்டுக் கொண்டிரு(ப்பான்)—நம்முடைய கிட்ட அனுப்பி விச்சான். அவனுக்கேற்ப நடந்த சங்கதிகளெல்லாம் தெரியப்பண்ணி, அவனைத் தானே சின்னதுரை கிட்டப் போய் கொம்மாந்தான் மனுஷர் பேரிலே குத்தமென்று சொல்லத் தக்கதாய் நியாயம் ஒப்பிவிச்சு அனுப்பிவிச்சோம்.

இத்தனாள் மூணு சாமத்துக்கு மேலுகிரிச் செட்டி சந்தா சாயபு, ரசா சாயபு கடன் (ரசீது) ரெண்டும் முன் பதினஞ்சாந் தேதி நம்முடைய கையிலே வாங்கிக் கொண்டு போய் ராமய்யப் பிள்ளை வசத்திலே குடுத்த முறிரெண்டும் வாங்கி வந்து நம்முடைய கையிலே கொடுத்தான். நாமந்த முறி ரெண்டும் வாங்கி யெப்போதும் யிருந்த விடத்திலே வைச்சோம்.

யித்தனாள் ராத்திரி கேழ்விப்பட்ட சேதி: உலாந்தாக்காரர் முன்னாலே சாவு (Java) நாட்டிலே பிறிதுக்கிசுக்காரர் கோட்டை போட்டுக் கொண்டு யிருந்தவர்களை அடிச்சுத் துரத்திப் போட்டு, ஒலாந்தாக்காரர் மலாக்காவைக் கட்டிக் கொண்டு யித்தனாளும் அங்கே யிருந்து வியாபாரங்கள் பண்ணிக் கொண்டு யிருந்தவர்களை யிப்போது சாவு நாட்டார் பகைச்சு வந்து, உலாந்தாக்காரரிலே அனேகம் பேரை வெட்டிப் போட்டதாகவும், அதன் பேரிலே அவர்கள் நிறுவாகம் பண்ண மாட்டாமல் செத்த பேர் போக மத்த பேர்களைக் கோட்டைக்குள்ளே அடைச்சுக்

கொண்டிருக்கிறார்கள் யென்றும், அவர்களையும் கோட்டையையும் சாவு நாட்டார் வளைச்சுக் கொண்டிருக்கிற சேதி கேழ்க்கப்பட்டுது. இங்கிலீசுக்காரர் கல்க்கத்தா வாங்கிக் கொண்டு சமாதானமாய்த் தீத்துக் கொண்டு, கப்ப லிங்கே யிருந்து போனதுகளையும் பயணம் பண்ணி அனுப்பிவிட்டதாகவும், அதன் பிறகு திரும்பவும் பங்காளத்து நவாபு வந்து கல்க்கத்தாவைச் சுத்திக் கொண்டு அங்கே (யிருந்த) பேரையும் வெட்டிப் போட்டுக் கல்க்கத்தாவையுங் கட்டிக் கொண்டதாகச் சேதி கேழ்க்கப்பட்டுது.

## மார்ச் 1757

*1757 வருசம், மார்ச்சு மாசம், தேதி 4; தாது வருசம், மாசி மாசம், தேதி 25; சுக்கிறவாரம்*

இத்தனாள் வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருக்கையிலே சாயங்காலம் வில்லியநெல்லூரிலே யிருந்து அய்யாப் பிள்ளை ஓலை வந்ததிலே யெழுதி யிருந்த சேதி : வில்லியநெல்லூர் சுவாமியை மாசி மகத்துக் கெழுந்தருளப் பண்ணி யெப்போதையும் போலே திருக்காஞ்சித் துறைக்குப் போகாமல், வினாயகப் பிள்ளை கட்டிவைச்ச மண்டபத்துக்குப் போய் ஆத்திலே தீத்தங் கொடுத்து அந்த மண்டபத்திலே யெழுந்தருளப் பண்ணதாகவும், சுவாமிக்குப் பிறகே பிராமணாள் வேதபாராணம் பண்ணிக் கொண்டு வருகையிலே அவர்களுக்குப் பிறகே லோகனாத பண்டாரம் பாதக் குறடு போட்டுக் கொண்டு சுருட்டும் பிடிச்சுக் கொண்டு வருகையிலே பிராமணர் போய் அவர் மேலே விழுந்து, பாதக் குறட்டையும் உடைச்சு அவரையுங் காயப்படுத்தினதாகவும், அப்போது எங்கள் பய்யனும் நரசிம்மச் செட்டியும் போய் விழுந்து, பிராமணரை அடிச்சுத் துரத்தி விட்டுப் பண்டாரத்தண்டையிலே இரெண்டு பேர் சேவுகரை வைத்ததாகவும் யெழுதியிருந்தது.

*1757 வருசம், மார்ச்சு மாசம், தேதி 5; தாது வருசம், மாசி மாசம், தேதி 26; சனிவாரம்*

இத்தனாள் காலமே கேழ்வியானது கும்பினியிலே சேவிக்குற (சேவை பார்க்கிற) பாராக்காரர், சேவுகரெல்லாரும் சீர்மைப் பணம் இவ்விடத்துக்கு(க் கொண்டு) வரவும் இவ்விடத்திலே யிருந்து சம்பளம் கொடுக்கவுமாக யிருந்தது. யித்தனாள் முசியே தேவோ (அதை மாற்றி) எல்லாருக்கும் சம்பளத்துக்குச் சீர்மை மேலே தானே தனாகாப் (ஏற்பாடு) பண்ணி சீட்டுக் குடுக்கிறதாகவும், சீமா மூல. பணங்களுக்கு தனகா வாகுதென்றும் கேழ்வியானது. இது வெல்லாம் அல்லாமல், சேலத்திலேயிருந்து ஒரு பிராமணன் வந்ததாகவும், அவன் மயிசூரிலே தேவராசய்யனும் நந்திராசாவும் மயிசூர் துரையை[1] வெட்டிப் போட்டார்களென்றும், சொன்னதாகக் கேழ்க்கப்பட்டது. குமுசலிலே நம்முடைய சேதி நடந்ததாகக் கேழ்வியாக வில்லை. துரையவர்கள் ஆலம்புரைக்குப் போறார்களென்றும், அப்பால் சீர்மை பார்க்கப் போறார்களென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது.

---

[1] இவன் மயிசூரில் பிரெஞ்சுக் கம்பெனியின் பிரதிநிதி போல் இருந்து, உளவு பார்த்த மோனி (Monis) என்று ஆங்கிலப் பதிப்பு தெரிவிக்கிறது.

*1757 வருசம், மார்ச்சு மாசம், தேதி 8; தாது வருசம், மாசி மாசம், தேதி 29; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து பனிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்தோம். அதின்பேரிலே கந்தப்ப முதலி, ராயப்பன் சேர்வைக்காரனுடனே சொல்லி அனுப்பின சேதி (யானது), நாளைக்குத் துரையவர்கள் ஆலம்புரைக்கிப் போறார்கள், ஆகையாலே ஆனையும் வெள்ளி சகுடோலும் (அம்பாரியும்) பெரிய நீசானும் மயில் பிஞ்சமும் யீயோட்டியும் பைறக்கும் யீட்டியும் வெள்ளிக்குடையும் பன்னீர் சொம்பும் குதிரையும் வேணும், துரை கேழ்க்கச் சொன்னா ரென்று சொல்லி அனுப்பி விச்சான். அதுக்கு நாம் யோசிச்சது, "துரை யிப்போது நம்முடைய பேரிலே யிருக்கிற பகைக்கு அவர் கேழ்க்கச் சொல்லுகிறதேது? யிவனும் வினாயகப் பிள்ளையும் யோசனை பண்ணிப் போன வருஷம் பங்குனி மாசத்துக்குத் துரையும் நாமும் செஞ்சிக்குப் போன போது சகல வேடிக்கையுடனே போனதாச்சே, இப்போது அப்படி வேடிக்கையாய் அழைச்சுப் போகவேணும். அப்படிப் பண்ணிக் கொண்டு போகாவிட்டால், பாத்த பேரும் யெகத்தாளி பண்ணுவார்கள், துரை மனதிலேயும் குறையாகத் தோணப்படும். நமக்குப் பிரதிஷ்டை யில்லை யென்று யிவர்கள் பேசிக் கொண்டு, நமக்குத் துரை சொன்னாரென்று சொல்லி அனுப்பினார்கள். இதுக்கு நாம் ... துரை பேர் சொல்லிக் கேட்டனுப்பின மட்டுக்கும் நாமொன்றுந் தடையாய்ச் சொல்லுகிறதல்ல," வென்று யோசனைப் பண்ணினோம். நாம் சொல்லியனுப்பினது, "பெரிய ஆனை மதம் பிடித்திருக்கிறது. அது வெளியிலே விடப்படாது. வெள்ளி சகுபோல் (சகுமோல்?) எடுத்துக் கொண்டு பயணம் போகத்தக்கின ஆனையில்லை. முன் பயணத்திலே ஆனை யெடுக்க மாட்டாமல் காவடி கட்டி யெடுப்பிச்சுக் கொண்டு வந்தோம். ஆகையாலே வெள்ளி சகுடோல் போக மாட்டாது. பெரிய நீசான் கோட்டையிலே யிருக்கிற நிசானல்லாமல் நம்முடைய கையிலே வேறே பெரிய நீசானேது? சின்ன நீசான் வேணுமானால் தருகுறோம். மயில் பிஞ்சம் ஈயோட்டி பயிறக்கு வெள்ளைக் குடை பன்னீர்ச் சொம்பு யிது வெல்லாம் தருகிறோம். யீட்டி பாளையக்காரன் வசத்திலே யிருக்குது. அவன் கொண்டு (வருவான்). குதிரை அன்று தானே கும்பினியிலே பிடிச்சுக் கொண்டு போனார்களே, ரெண்டொரு மட்டம் யிருக்குது. அது வழிப் பயணத்துக்கு உதவாது யென்று," மறுசேதி சொல்லி அனுப்பிவிச்சோம்.

*1757 வருசம், மார்ச் மாசம், தேதி 18; தாது வருசம், பங்குனி மாசம், தேதி 9;*[1]

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போனவிடத்திலே தொரை அவர்கள் சீமா மூலத்துக்குப் போய் வந்த ஆயாசத்தினாலே உதிச்சும் ஒன்பது மணி மட்டும் உடுப்பு போடாமல் வீட்டுக்குள்ளே தானே படுத்திருந்தார். அதினாலே வெள்ளைக்காரர் வந்திருந்த பேரிலே வெகு பேர் பிறப்பட்டுப் போனார்கள். ஆகையினாலே நாமும் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

யிங்கே வந்தவிடத்திலே, ... சின்ன துரை முதலான கோன்சேலியேர்கள் யெல்லாரும் மெத்தை மேலே வந்திருக்கிறதாகவும் துரை வெளியே வந்த பிறகு கோன்சேல் கூடப் போறார்களென்றும் கேழ்விப்பட்டுது. யிதல்லாமல், ... முன்னாலே துராணி (Turania) சீர்மையிலேயிருந்து அகமது கான் அப்தல்லி கான்[2] யென்கிற பட்டாணியர் லட்சத்தன்பதினாயிரம் குதிரையுடனே பிறப்பட்டு லாகூர் கட்டிக்கொண்டு, டில்லி பார்ஷாவின் பேரிலே வருகுறார்களென்று கேட்டிருந்தோமே. யிப்போது வடக்கேயிருந்து சாவுக்காரருக் (சவுக்கர்) யெழுதி வந்த சேதி அமுது (அகமது) கான் அப்தல்லி கான் யென்கிற பட்டாணி டில்லியை வந்து கட்டிக்கொண்டு, ஆலங்கீர் பார்சா யென்கிற வரையும் பிடிச்சுக் கொண்டு, பட்டணமெல்லாம் மெத்தக் கொள்ளை யிட்டதாக எழுதி வந்து தென்று சேதி கேழ்க்கப்பட்டுது. யினிமேல் அங்கே நடந்த சேதிகள் விஸ்தாரமாய்க் கேழ்க்க வேண்டியது

*1757 வருசம், மார்ச்சு மாசம், தேதி 23; தாது வருசம், பங்குனி மாசம், தேதி 14; புதவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே தொரை அவர்களும் முசியே கில்லியாரும் ஒப்பிசியால்மாரும் மெத்தை மேலே யிருந்தார்கள். நாமு மெத்தை மேலே போய் தொரை அவர்களைக் காண்பிச்சுக் கொண்டு ஆசாரம் பண்ணி ஒன்பது மணி வரைக்கும் கூடவே யிருந்தோம். அவரும் நேத்து அத்தனை பார்வை யில்லாமல் கொஞ்சம் கொஞ்சம் பார்த்துக் கொண்டு முகம் வாட்டமாக யிருந்தா(ர். இ) ப்படி யிருக்கையிலே அவரவர் அனுப்பிக் கொண்டு போனார்கள். முசியே கில்லியாரும் அனுப்பி வைச்சுக் கொண்டு போறவர், நேத்து போலே நம்முடைய கையைப் பிடிச்சுக் கொண்டு பேசிக் கொண்டு போனார். அப்போது சேஷாசல செட்டியாரும் கூடவே பேசிக் கொண்டு

[1] இத்தலைப்பு தமிழ்ப் பிரதியில் விடுபட்டுள்ளது. மூன்று வரிகளுக்குப் பின் எழுதப்பட்டுள்ளது.

[2] சரியான பெயர், அகமது ஷா அப்தாலி.

வந்தார். அப்போது துரையவர்கள் நாங்கள் பேசிக் கொண்டு போறதைத் திரும்பிப் பார்த்துப் போட்டு காம்பிராவிலே போனார். நாங்கள் கீழே வந்து முசே கில்லியாரை அனுப்பிப் போட்டு, பிடவைப் பார்க்கிற சாலையிலே போயிருந்து பத்து மணி வரைக்கும் நாமும் சேஷாசல செட்டியாரும் பழய தொரைகளிருந்த கதைகளைப் பேசிக் கொண்டிருந்து, பத்து மணி அடிச்சாப் போலே பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

இங்கே வந்த விடத்திலே கேழ்வியான சேதி: முசியே புசி கிட்டயிருந்து துரை அவர்களுக்கு ... யித்த நாள் வந்த காகிதத்திலே யெழுதி யிருந்த சேதி, சீகாகுளத்திலே முசியே புசியும் விசயராமராசாவும் பாளையமிறங்கி யிருந்த விடத்திலே ஒருத்தருக் கொருத்தர் கலாபமாய்க் கை கலந்து சண்டையாய் பிரான்சு செனங்களிலேயும் விசயராமராசா செனங்களிலேயும் மிதமில்லாத செனங்கள் விழுந்து போனதாயும், அப்போது விசயராமராசாவும் வெட்டுப்பட்டுப் போனதாகவும், அதன் பேரிலே முசியே புசி விசயராமராசா வின் சீமை விசய (விசிய) நகரம் போய்க் கட்டிக் கொண்டு, அந்தப்பட்டணம் யெல்லாம் கொள்ளையிட்டதாகவும் யெழுதி வந்தது. (இதை) துலுக்க வேஷமாய் டில்லிக்குப் போய் வந்த பறங்கி சொன்னான். யினி மேல் செத்தவர்கள் போனவர்கள் பயாவாறியாய் அரியவேணும். ராசாவுக்கு நாற்பத்தொன்பது வயதுண்டு. யிந்த நாற்பத்தொன்பதாயிரம் வருஷ மிவருக்குக் கெண்டமென்று அறிஞ்சு, அவருடைய தமையன் பிள்ளைக்கி ஒன்பது வருஷத்துக்கு முன்னே தானே மூணு வருஷத்தியப் பிள்ளைக்குப் பட்டம் கட்டி, தாம் விசீராயிருந்து, யிது வரைக்கும் காறுபாறு செய்து கொண்டு வந்தார். வெகு திரவியஞ் சம்பாதிச்சார். தீவானத்துக்கும் லோகத்திலே வுள்ள சகல சனங்களுக்கும் மித்திரனாயிருந்தவர். சிரவண பங்குனி யின்றைய தினம் கிரீடம் வைச்சுக் கொண்டு, முத்துக் கொடை பிடிச்சுக் கொண்டவர். வெகு சனங்களை ரெட்சிச்சவர். வெகு சனங்களுக்கு உபகாரி, வெகு கீற்த்தி பெற்றவர். யிப்படிக் கொத்தவர் மறண மடைஞ்சதினாலே அவர் பிறகே வந்த செனங்களெல்லாரும் மடிஞ்சதல்லாமல் ஆரும் தப்பினதில்லை யென்றும் கேழ்க்கப் பட்டுது.

சாயங்காலம் அங்கே கேழ்வியான சேதி: தாது வருசம் ஆனி மாசம் முதல் (தேதி யிலிருந்து—ஜூன் 11) பங்குனி மாசம் 13 தேதி (நேற்றைய) வரைக்கும் முசியே தெவோ வசத்திலே சீமா மூலம் பணம் ரொக்கம் வந்து சென்றது ரூபாய் யெட்டு லட்சம். அதிலே சிப்பந்தி, சிலவார சிலவு யென்னமோ, கும்பினிக்குச் செலுத்தி வைத்துது யென்னமோ தெரியாது. யிதல்லாமல், முசியே கில்லியார் தாலூக்கு வேறே யென்றும் கேழ்க்கப்பட்டுது. யிந்த யெட்டு லக்ஷ(மானது) முசே புலோ முத்தண்டல் செல்லுள்பட யென்றும் கேழ்க்கப்பட்டது. வந்தவாசியிலே ருசுமுள்பட ரெண்டு லக்ஷத்தி நாற்பதினாயிரம் வரவேணும் என்றும்,

சிதம்பரம் புவனகிரி செஞ்சி யிதுகளிலே பணங்கள் வரயில்லை யென்றும், மைத்த சீமைப் பணங்கள் வருகுறதென்றும் கேழ்க்கப்பட்டது. யிது சேதி.

*1757 வருசம், மார்ச்சு மாசம், தேதி 24; தாது வருசம், பங்குனி மாசம், தேதி 15; குருவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே மெத்தை மேலே தொரையும் முசியே கில்லியாரும் ஒப்பிசியால்மார்களிலே சிறிது பேர்களுமிருந்தார்கள். நாம் போய் தொரையைக் கண்டு ஆசாரம் பண்ணி, அத்தரப்பிலே பக்கத்திலே நின்றோம். தொரையும் நம்மை விடாமல் பார்த்துக் கொண்டே ஒரு மணி நேரமிருந்தார். நாமும் அவரென்ன சொல்லி யிருக்கிறாரோ வென்று அவரைப் பார்த்த வண்ணத்திலே எட்டு மணிக்கு மேல் ஒன்பது மணி வரைக்கும் கிட்டவே யிருந்தோம். அதன் பேரிலே நாம் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம். துரை அவர்கள் யொழுகரைக்குப் போனார். அதின் பிறகு கேழ்வியான சேதி:

நானா சவா பாசி ராயன் என்கிறவன் அறுபதுனாயிரங் குதிரையுடனே கிருஷ்ணை நதி தாண்டி யிப்பாலே வந்து, சாவனூர், பங்காபுரம், கத்தவாலிலே (Gadawal) வந்து யிறங்கினதாகவும், கடப்பைக்கும் ஆற்காட்டுக்கும் நானாக் காகிதமும் மனுஷரும் வந்தார்களென்றும், சலாபத்து சங்கு ஆதிவெண்ணைக்கு முப்பதினாயிரம் குதிரையுடனே வந்து யிறங்கினதாயும், நானாவும் சலாபத்து சங்கும் தெக்ஷணம் ஆற்காட்டுக்கு வருகுறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

யிதல்லாமல் உலகனூர் கிராமங்களிலே சிறிது கிராமத்தை யெலவானசூரிலே யிருக்கிற மீர் சாயபு வந்து கொள்ளை யடிச்சதாகவும், அது நிமித்தியம் அன்பது பேர் சொலுதாதுகளும் முன்னூறு பேர் பாறுக்காரும் ஒப்பிசியாலும் அனுப்பினார்களென்றும், விருத்தாசலத்துக்கு முசியே இபியேர் (M. Hebert) என்கிறவரைக் கொம்மாந்தானாய் அனுப்பினதாகவும் கேழ்க்கப்பட்டுது. நேத்து மத்தியானத்தில் சீயாம் ராசா (Siam) வினுடைய கப்பல் ஆனை யேத்திக் கொண்டு வடக்கே ஓடிப்போச்சுது.

புதுச்சேரி தொரைத்தன வயணம் :

முசியே மரு(டு)த்தேன் துரைத்தன வயணம் : 1701 வருசம் பிவரேவ் மாசம் முதல் தேதிக்கு, விக்கிரம வருசம் தை மாசம் 21 தேதி, வர்த்தகர் கையிலே யிருந்து புதுச்சேரிப் பட்டணத்தை பிரான்சுக்காரர் வாங்கிக் கொண்டு முசியே மரு(டு)த்தேன் கொவர்ணதோராய் தொரைத்தனத்திலே யிருந்து, 1706 வருசம் சூலை மாதம் 15 தேதிக்கு பார்த்திப வருசம் ஆடி மாசம் 5 தேதி வரைக்கும் துரைத்தனம், பண்ணி மரணத்தை அடைஞ்சார்.

முசியே பிளாக்கூர் (Flacourt) தொரைத்தனம் 1706 வருசம் சூலை மாசம் 16 தேதிக்கு பார்த்திப வருசம் ஆடி மாசம் 6 தேதி முதல் பங்காளத்திலே யிருந்து முசியே துலுவியேர் (M. Dulivier) வருகிறவரைக்கும், யிங்கே சின்ன துரை யாயிருந்த முசியே பிளாக்கூர் யென்கிறவர் 1707 வருசம் பிப்ரேல் மாசம் 9 தேதிக்கு பார்த்திப வருசம் தை மாசம் 29 தேதி வரைக்கும் தொரைத்தனம் பண்ணிக் கொண்டு வந்தார்.

முசியே ஷெவல்லியேர் துலுவியேர் துரைத்தனம் : 1707 வருசம் பிபரேல் மாசம் 9 தேதி அன்றைய தினத்திலே பங்காளத்திலே யிருந்து முசியே ஷெவல்லியேர் துலுவியேர் என்கிறவர் வந்திறங்கி, சின்னதுரை முசியே பிளாக்கூர் என்கிறவரைத் தகீர் பண்ணி தாம் பகலியாயிருந்து 1708 வருசம் சூலை மாசம் 9 தேதிக்கு சர்வசித்து வருசம் ஆனி மாசம் 29 தேதி வரைக்கும் தொரைத்தனம் பண்ணிக் கொண்டு வந்தார்.

முசியே யிபேர் தொரைத்தனம் : 1708 வருசம் சூலை மாசம் 9 தேதி அன்றைய தினத்திலே சீமையிலே யிருந்து தொரைத்தனத்துக்கு வந்த முசியே ஷெவல்லியேர் இபேர் என்கிறவர் (M. Herbert) கோவர்ணதோர் கையிலே தொரைத்தனத்தை ஒப்பிவிச்சு முசியே ஷெவல்லியேர் துலுவியேர் என்கிறவர் அற்பிசி மாசம் சீமைக்குப் பயணம் போனார்.

மறுபடி முசியே ஷெவல்லியேர் துலுவியேர் துரைத்தனம்: 1713 வருசம் ஆகொஸ்து மாசம் 16 தேதிக்கு நந்தன வருசம் ஆவணி மாசம் 5 தேதி முசியே ஷெவல்லியேர் துலுவியேர் தானே தொரைத்தனத்துக்கு வந்து, நாளது வரைக்கும் தொரைத்தனம் பண்ணிக்கொண்டு யிந்த முசியே யிபரே யென்கிறவரைத் தகீர் பண்ணி தாம் பகலியாய்த் தொரைத் தனத்திலே யிருந்தார். முசியே யிபேர் தகீராய்ச் சீமைக்குப் போனார்.

மறுபடி முசியே யிபேர் தொரைத்தனம் வயணம் : 1715 வருசம் ஆகொஸ்து மாசம் 19 தேதிக்கு செய வருசம் ஆவணி மாசம் 7 தேதி முசியே ஷெவல்லியேர் துலுவியேர் கோவர்ணதோராயிருந்து கொண்டிருக்க, முசியே யிபேர் செனரலாய் வந்தார். யிவர்கள் ரெண்டு பேரும் 1718 வருசம் சூன் மாசம் 14 தேதிக்கு விளம்பி வருசம் ஆடி மாசம் 4 தேதி வரைக்கும் கோவர்ணதோரும் செனறாலாயுமாயிருந்து தொரைத்தனம் பண்ணினார்கள். யிதுக்கு முன் பெரிய துபாசியா யிருந்த நயினியப் பிள்ளை அவர்களை மன்மத வருசம் மாசி மாசம் 5 தேதி குருவாரம் நாள் கோவர்ணதோராயிருக்கிற முசியே துலுவியேர் மைத்து முடையான கொமுசேல்காரருடைய அனுமதி அன்னியிலே, முசியே யிபேர் செனறாலாயிருக்கிறவரும் சின்ன துரைத்தனத்திலே யிருக்கிற

தம்முடைய குமாரன் முசியே யிபேரும் சம்பா கோவில் பாதிரிகளும் அனுகூலமாய், நயினியப் பிள்ளை அவர்களைக் காவலிலே வைச்சு, சிறு பிள்ளையாய்ப் பதினெட்டு பத்தொன்பது வயதாயிருக்கிற கனகராய முதலியாருக்குத் துபாசித்தனம் குடுத்து, யிவரை அனியாயமாய் வெகு வுபாதிகள் பண்ணின நிமித்தியம், சீமையிலே ராசாவுக்குப் பிரதினிதியாய், ராசா சிறு பிள்ளையானதினாலே அவர் பட்டத்திலே வருமளவும், ராசரீகம் பண்ணிக் கொண்டு வருகிற மொன்சேர் தெ தூக்கு தோலியாமென்கிறவர் (Monsieur the Duke of Orleans, Regent) வரைக்கும் யிங்கே யிருந்து யெழுதிப் போன பித்திசாமுகள் அங்கே ஆச்சுப் போட்டு சகல செனங்களும் படிக்கையிலே அவர் மட்டும் அறிஞ்சு அதின் பேரிலே அவர் கோந்துலோர் செனாறாலா (comptroller general) யிருக்கிற யிங்கிலீசு சாதியான முசியே லாசுக்கு (M. Law) உத்தாரம் குடுக்க, அவர் கும்பினியாருக்குத் தாக்கீது பண்ணி, அப்போது கும்பினியார் மினிஸ்தருகள் உத்தாரப்படிக்கி நயினியப் பிள்ளை அவர்களை யித்தனை அனியாயமாய்ப் பண்ணலாமா வென்று, முசியே யிபேர் செனறாலாயிருந்தவரையும் சின்ன துரையாயிருந்த மேல்படி குமாரனையும் காவல் பண்ணி அவர்கள் தட்டு முட்டுகளையும் முத்திரிச்சு சீமைக்கு அனுப்பி வைக்கச் சொல்லியும், கோவர்ணதோராயிருக்கிற முசியே துலுவியேருக்கும் தகீரும் பங்காளத்திலே திரேக்த்தோரா யிருக்கிற முசியே அருதாங்கோருக்கு (Hardancourt) குவர்ணதோர் தொரைத்தனமும், முசியே யிபேர் நாளையிலே குமுசேல்லியேராயிருந்து தகீராயிருந்த முசியே லப்பீர்வத்தியேருக்கு (M. La Prevostiere) சின்னதுரைத் தனமாகவும், ஒரு வேளையிலே முசியே அருதாங்கோர் தெய்வீகமானால் முசியே லப்பீர்வத்தியோர் அவர் தானே கோவர்ணதோராயிருக்கச் சொல்லியும், அங்கே யிருந்து சீமைக் கப்பலிலே யெழுதி வந்தபடியினாலே, அந்தப்படிக்கு பங்காளத்திலே திரேக்குதோராயிருந்த முசியே அருதாங்கோர் யிந்தக் கடுதாசி வருமுன்னே போனார்கள். முசியே துலிவியோர் பின்னையும் ரெண்டு வருசம் வர்த்தகம் பண்ணிக் கொண்டு யிருந்து சீமைக்குப் போனார். 1718 வருசம் சூலை மாசம் 14 தேதிக்கு விளம்பி வருசம் ஆடி மாசம் 4 தேதி கோவர்ணதோராய் முசியே லப்பிரவத்தியோர் யிருந்து கனகராய முதலியார் வங்கிஷங்களுக்கு (குடும்பத்தில் யாருக்கும்) கூட கும்பினி குடுத்தியோர்தனம் குடுக்கத் தேவையில்லை என்று சீமையிலே யிருந்து கும்பினி யாரும் மின்ஸ்தர்களும் எழுதி அனுப்பின படிக்கி, கனகராய முதலியாருக்கு துபாசித்தனம் தகீர் பண்ணிப்போ(ட்டனர்). தொரைத் தனம் பண்ணிக் கொண்டிருந்தவர் 1721 வருசம் செப்தேம்பர் மாசம் 13 தேதிக்கு பிலவ வருசம் பிறட்டாசி மாசம் முதல் தேதி மரணத்தை அடைஞ்சார். யிந்த யிடத்துக்கு வங்காளத்திலே திரேக்குதோராயிருக்கிற முசியே புசியோர்

(Blancheliere) வரவேண்டியதானபடியினாலே, அவர் மகா பொல்லாதவர், செனங்களை ரக்ஷிக்க மாட்டார், ஆகையாலே அவர் யிந்தயிடத்துக்கு யோக்கியரல்ல வென்றும், புத்திசாலிகளுக்கு யெல்லாம் புத்திசாலியா யிருக்கப்பட்ட முசியே லெனுவார் (M. Lenoir) சின்ன துரைத்தனத்திலே யிருக்கிறவர் முசியே லெனுவாரை இந்த யிடத்துக்கு யிவர் யோக்கியரென்றும், முசியே லெனுவார் கையிலே கோவர்ணதோர் தொரைத்தனம் (குடுக்கலாம் என்று முசே லப்பிரவத்தியோர்) சீமைக் கெழுதி அனுப்பி வைச்(சார்) குமுசெல் லிபாச்சியோமுலேயும் . (தீர்மானத்திலேயும்) இப்படி யெழுதி வைச்சுப்போட்டு, முசியே லப்பிரவத்தியோர் மரணத்தை அடைஞ்சார்.

முசியே லெனுவார் தொரைத்தன வயணம் : மகாபுத்திசாலியாயும் மெத்தவும் நியாயமுள்ள சத்தியவந்தராயு மிருக்கிற முசியே லெனுவார் 1721 வருசம் செப்த்தம்பேர் மாசம் 13 தேதிக்கு பிலவ வருசம் புறட்டாசி மாசம் முதல் தேதி தொரைத்தனத்(துக்கு வந்து) சோபகிருது வருசம் பிறட்டாசி மாசத்தைக்கு 1723 வருசம் செப்தேம்பர் மாசம் வரைக்கும் தொரைத்தனம் பண்ணி(ய பின்) முசியே பொவல்லியோர் (M. Beauvoilier) யிவ்விடத்திலே தொரைத் தனத்துக்கு வந்தார். முசியே லெனுவார் தகீராய் அற்பிசி மாசம் கப்பலேறி சீமைக்குப் போனார்.

மறுபடி முசியே லெனுவார் தொரைத்தன வயணம் : 1726 வருசம் ஆகொஸ்து மாசம் 15 தேதிக்கு பராபவ வருசம் ஆவணி மாசம் 4 தேதி யிவ்விடத்துக்கு கோவர்ணதோராய் வந்தார். முசியே பொவல்லியோர் தகீராய் அற்பிசி மாசம் கப்பலேறி சீமைக்குப் போனார்.

இப்பால் (பிறகு) ராட்சஸ வருசம் பிறட்டாசி மாசம் 6 தேதி ஆதிவாரத்துக்கு 1735 வருசம் செப்த்தம்பர் மாசம் 18 தேதி மசுக்கரை தொரைத்(தனத்) தை முசியே லபோர்துனே கையிலே குடுத்து ஒப்பிச்சுப் போட்டு வந்து, யித்த நாள் சாயங்காலம் முசியே தும்மா வந்து யிறங்கி கோவர்ணதோர் தொரைத்தனம் முசியே லெனுவாரைத் தகீர் பண்ணி, தாம் கோவர்ணதோர் தொரைத்தனம் பண்ணினார். முசியே லெனுவார் தகீராயும் மகா விவேகத்துடனே சகல காரிய நியாயங்களையும் தம்முடைய நாளையிலே லோகத்துக்குள்ளே சூரியப் பிரகாசம் போலே விளங்கப் பண்ணி, புதுச்சேரியிலே காடாயிருந்ததை யெல்லாம் பட்டணம் பண்ணி, குடிசை வீடுகளெல்லாம் கல் வீடு மெத்தை வீடுகளுமாய் ஆக்கி, பட்டணத்துக்குப் பெலனாய் சுத்துக் கோட்டையும் கட்டிவிச்சு, ஒருக்காலும் அனுப்பாத மனிலா, மோக்கா, அச்சி, லாக்கா (மலாக்கா), கிட்டா (Quedah) போசு (பெராக் – Perak) முதலான தீவு திவாந்திர யிடங்களுக்கெல்லாம் கப்பலை யுண்டாக்கி (அனுப்பி), அதுக்கான வியாபாரங்களையும் அனுப்பி,

கும்பினிக்கும் நாலு லெட்சம் ஆறு லட்சம் ரூபாய்க்கு வியாபாரங்களை நடத்தி, யிதுகளைக் கொண்டு பட்டணத்துக்கு வெகு ஆதாயங்கள் வரவும் கும்பினிருக்கு வெகு ஆதாயங்கள் வரவும் பண்ணி வைச்சு, வெளிச் சீமை ஆதியந்தத்துக்கும் புதுச்சேரிப் பட்டணம் நியாயமுள்ள பட்டணம் என்றும் சத்தியமுள்ள பட்டணம் மென்றும் பட்டணத்திலுள்ள வர்த்தகர் யிதர செனங்கள் சகலமும் அயிசுரிய வந்தர்களென்றும் எந்த ராச்சியத்துக்கும் வேண்டிய சரக்கு புதுச்சேரியிலே கிடைக்குமென்றும், எந்த ராச்சியத்துச் சரக்கு போனாலும் புதுச்சேரியிலே விலையாகு மென்றும், பட்டணத்திலுள்ள செனங்களும் இதர ராச்சியத்துக்குள்ள சனங்களும் சீமையிலே கும்பினியார் மினிஸ்தருகள் சகலமான பேரும் செனங்களும் யிவர்தானே புதுச்சேரியிலே தொரைத்தனம் பண்ணி யென்றைக்கும் யிருக்க வேணுமென்றும் பிரார்த்திக்க இந்தப்படிக்கி பத்து வருஷம் காலம் தொரைத் தனம் பண்ணி, நிசாம் அண்டையிலே பிரயத்தனம் பண்ணி, புதுச்சேரியிலே ரூபாய் முத்திரைக்கு பர்வானாவும் யானத்துக்குக் கொட்டடிக்கு மூன்று பிரதமையான (உருவம் போட்ட ரூபாயும்) சென்னப்பட்டணத்துக் கருக்கு (விராகனுக்குச்) சமானமாய்ச் செல்லும் படியாய் புதுச்சேரி தங்காசாலையுலே போடும் படியாய் பற்வானாவும் அழைப்பிச்சு, புதுச்சேரிக்கு புஷ்டிப் பண்ணிவிச்(சார்). யிதல்லாமல், நிசாம் முதல் யிந்த ராச்சியத்திலே யிருக்கப்பட்ட துலுக்க தொரைத்தனக்காரர், வெள்ளைக்காரர் தொரைத்தனக்காரர், கற்னாட்டகத் தொரைத்தனக்காரர், சமஸ்தானாபதிகள் முதலான சகல செனங்களும் லோகத்திலுண்டான சத்திய நியாயம் விவேகம் சத்துபுத்தி விஸ்தாரம் முதலான சகல நன்மைக் குணங்களெல்லாம் சுவாமி முசியே லெனுவார் ரூபமாயுண்டாக்கி வைச்சாரென்றும், யிவர் டில்லி தக்குதத்திலே (அரியணையிலே) யிருந்து ராச்சியம் பண்ணுகிறதுக்கு யோக்கிய ரென்றும் சகல செனங்களும் கொண்டாடிக் கொண்டிருக்கும்படியாயும், தொரைத்தனம் பண்ணிக் கொண்டிருந்தவர் ராட்சஸ வருசம் பிறட்டாசி மாசம் 27க்கு சகல செனங்களும் தாய் தகப்பன் நிஷ்சேபம் (ஆஸ்தி) போக்கடிச்சுக் கொண்டவர்கள் கிலேசத்திலும் அதிகமாய் 1735 வருசம் அக்டோபர் மாசம் 8 தேதி ராத்திரி பதினேழரை நாழிகைக்கு லீசு (Lys) என்கிற கப்பலின் பேரிலேறி முசியே தாதலலென்கிற (M. Dordelin) கப்பித்தான் கப்பல் நடத்த சீமைக்குப் போனார்.[1]

முசியே தும்மா தொரைத்தனம் வயணம் : இப்பால் முசியே தும்மா தொரைத் தனம் பண்ணிக் கொண்டிருந்து, முன் முசியே லெனுவார் நிசாம் கிட்டயிருந்து ரூபாயும் விராகனும் போடத்தக்கதாக உத்தாரமும் பர்வானாவும் அழைப்பிச்சதுக்கு ஆற்காட்டிலே தோஸ்தல்லி கான் சுபை யாளுகையிலே யிமாம் சாயபு மாரிபத்திலே, யிவர் உத்தாரம்

[1] லெனுவார்தான் பறங்கிப் பேட்டைக் கொட்டடியினைப் பிள்ளையின் பொறுப்பில் விட்டவர்.

வேணுமாகையாலே யிவருக்கு பைகாம் (தூது) விட்டுப் பேசி, தோஸ்து அல்லி கான் உத்தாரமும் பெத்து புதுச்சேரி டங்காசாலையிலே ரூபாயும் விராகனும் அடிப்பிச்சு[1] அதினாலே கும்பினீருக்கு ஆதாயமும் வெகு சனங்களுக்குப் பொழைப்பும் ... ராச்சியமெல்லாம் செல்லு உண்டாக்கினார். பத்தே சிங்கு, ரகோசி பூசலா (வந்து) தோஸ்தல்லி கானை அவர்கள் வெட்டிப் போட்டு ஆற்காட்டுக்கு வருகையிலே, தோஸ்து அல்லி கான், சபுதறல்லி கான் குஞ்சு குழந்தைகள் முதல் கொண்டு ஆற்காட்டிலே யிருந்த பெரிய மனுஷர்கள் துலுக்கர் சகலமான பேரும் ஓடிவந்த விடத்திலே, அவர்களை யெல்லாம் பட்டணத்திலே அழைப்பிச்சு, அவர்கள் பயமும் தீத்து அவர்களைக் காப்பத்தி மராட்டியர் உபாதியில்லாமல் ரெக்ஷிச்ச படியினாலே, யிது சேதி டில்லி பார்சா வரைக்கும் அறிஞ்சு அங்கே யிருந்து நாலாயிரத்தன்னூறு குதிரைக்கு சுபாவும் பார்சா நீசானும் நவபத்தும் அனுப்பினதாய் பர்வனாவும் அழைப்பிச்சு, அழிசப்பாக்கம் முசியே தும்மா தமக்குச் சாகீராகவும் வாங்கி, காரைக்காலும் தஞ்சாவூர் ராசாகிட்ட வாங்கி, அங்கே கோட்டையும் போடுவிச்சு, வியாபாரங்களும் நன்றாகத் தானே நடத்தி வைச்சு, அதினாலே சகல செனங்களும் சுகப்படும் படியாய் ரெக்ஷிச்சு ஆறு வருசம் துரைத்தனம் பண்ணி(னார்). 1741 வருசம் ஒக்தோபர் மாசம் 18 தேதிக்கு துற்மதி வருசம் அற்பிசி மாசம் 6 தேதிக்கு 1737 வருசம் ஆண்டிலே சீமையிலே யிருந்து யிவருக்கு ரூபாய் முத்திரை முதலானதுகள் பண்ணி வைச்சதுக்கு சந்தோஷப்பட்டு கும்பினியாரும் மினிஸ்தருகளும் வெகுமானம் அனுப்பி வைக்கச்சே, முசே சென் முசேல் (St. Michael) என்கிற முத்திரை கறுப்புப் பிடவையிலே துரைக்குக் குடுக்கக் கோத்துவைத் (து வந்தது). முத்திரையுடனே கூட பங்காளத்திலே துரைத் தனமாயிரு(ந்த) முசே துப்பிளேயிக்சுக்கு யிந்த புதுச்சேரி துரைத்தனம் சீமையிலிருந்து (கொடுத்தனுப்பி), அவரையும் வரச்சொல்லி யெழுதி அனுப்பிவைச்சு, அவர் வரும் அளவிலும் இங்கே யிருந்து துரைத்தனம் பண்ணச் சொல்லி முசியே லெகு (M. Legou) வென்கிற சின்ன துரையை வைச்சுப் போட்டு கப்பலி லேறி சீமைக்குப் போனார்.

முசியே துப்பிளேயிக்சு துரைத்தனம் வயணம்: துற்மதி வருசம் தை மாசம் 4 தேதி ஆதிவாரம் நாள் பங்காளத்திலே யிருந்து முசியே துப்பிளேயிக்சு அவர்கள் வந்து முசியே லெகுவை சின்ன துரைத் தனத்திலே தானே வைச்சு, தாம் கோவர்ணதோர்த் தனத்திலே யிருந்து துரைத்தனம் பண்ணிக் கொண்டிருக்கையிலே நடந்த வயணம்.

1742 வருசம் ஆண்டு சனேரி மாசம் 14 தேதிக்கு துற்மதி வருசம் தை மாசம் 4 தேதி முதல் துரைத்தனம் பண்ணுகையிலே பார்சா அனுப்பி

[1] இதிலிருந்து தான் நம்பிள்ளையின் நாட்குறிப்பு தொடங்குகிறது.

வைத்த நாலாயிரத்தன்னூறு குதிரைக்கு மன்சுபா பர்வானாவும் நவபத்தும் நீசானும் (வந்தன). அது பெத்து யீந்தியாக் கரையிலே வெள்ளைக்காரர் ஆரும் அடிக்கக் கூடாமல் யிருக்கிற நவபத்தும் புதுச்சேரியிலே தினமானங் கொழிக்கத் தக்கதாகவும் பார்சா நிசான் முன்னுதாய்ப் பிடிக்கத் தக்கதாகவும் பேத்தார் (கீர்த்தி பெற்றார்). வூரிலே வியாபாரங்களும் வெகு விருத்தியாகத் தானே சகல செனங்களும் பிழைக்கும் படியாயும் நடத்தி விச்சார். கும்பினியாருக்கும் வெகு விஸ்தாரமாய் சரக்குகளும் அனுப்பி விச்சார். வெளியிலே ஆற்காட்டுத் துரைத்தனம் பண்ணுகிற நபாபு சபதறலிக் கான், தஞ்சாவூர் ராசா, பிரபுகளுக்கெல்லாம் யிவரிடத்திலே பயந் தோணி, இவர் சினேகம் பிரார்த்திக்கும் படியாகவும், திரிசாபுர (திரிசிரபுரம்) நிமித்தியம் நிசாம் வந்த போது அவரனுப்பி வைத்த புருசு (mace), பருதார்கள் (படுக்கும் வசதியான) கட்டில் மேலே வந்த பே(ர்களின்) கட்டிலையும் பிடிங்கிப் போட்டு, நிசாமுக்குப் பயம் தோணும்படியாய், அவர்கள் கால் நடையாய்ப் போய்ச் சொல்லத் தக்கதாகவும், நிசாம் யிவர் மகாசூரர் என்று சபையிலே புகழ்ந்து யிவருக்குச் சகல வெகுமதியும் அனுப்பி வித்ததாகவும் பேத்தார் (பெற்றார்). அதன் பிறகு காரைக்காலிலே தஞ்சாவூர் ராசா பவுன்சு அனுப்பி விச்சு சண்டை கொடுக்கச் சொன்ன போது, அந்தக் குதிரை ராணுவு யெல்லாம் அடிச்சு தஞ்சாவூர் கோட்டை வரைக்கும் துரத்தி அடிச்சு, அந்தச் சீர்மையிலே வெகு பேர் பெரிய மனுஷரையும் பிடிச்சு வந்து கஷோத்திலே போடுவிச்சு, அதின் பேரிலே தஞ்சாவூர் ராசா சகல வெகுமதிகளும் அனுப்பி பிரியஞ் சொல்லி நடந்து கொள்ளத் தக்கதாகவும் பெத்தார். அதன் பிறகு இங்கிலீசுக்காரர் கலாபிச்சு அச்சி, சீனா, மணிலா யிவடங்களுக்குப் போய் வருகிற கப்பல்களைத் தண்ணி மேலே பிடிச்சவுடனே, அவர்கள் பேரிலே கோபிச்சு 1746 வருசம் செப்தம்பர் மாசம் 21 தேதிக்கு அக்ஷய வருசம் பிறட்டாசி மாசம் 9 தேதி சென்னப்பட்டணத்தையும் முசியே லெகுவடுதேன (லபூர்தொனே) மாரிபத்திலே பிடிச்சு, மேஸ்திர் மாசு (Mr. Morse) துரைத்தனம் பண்ணினவர்களையும் சின்ன துரை முசே மான்சன் (M. Monson) வகையரா குமுசெல்காரர் ஒபிசியால்மார்கள் முதலான யிங்கிலீசுக்காரர் சகலரையும் பிடிச்சு வந்து புதுச்சேரியிலே வந்து காவல் வைச்சு, சென்னப்பட்டணம் முழுதும் கொள்ளை பண்ணி, பட்டணத்திலுள்ள வீடுக ளெல்லாம் யிடிப்பிச்சு கோட்டையும் இடிப்பிச்சு, பிரான்சு நீசானும் மூன்று வருஷம் போடுவிச்சு, அது நிமித்தியம் மத்தத்து வந்து ஆற்காட்டு நபாபு அன்வறதி கான் குமாரன் மாபூசு கான், மமுதல்லி கான் வந்து தண்டிலே யிறங்கின பேரையும் அவர்கள் பாளைய மெல்லாம் முறிஞ்சு கொள்ளையிட்டு, ஆற்காடு மட்டும் கொள்ளையிட்டு, தண்டையெல்லாம் முறிஞ்சு ஓட அடிச்சு, அதன் பிறகே அவர்களும் யிங்கிலீசுக்காரர்களும் சேர்ந்து வருகையிலே தேவனாம்பட்டணம் வரைக்கும் போய் அவர்கள்

தண்டெல்லாம் முறிய அடிச்சு, அவர்கள் வந்து வணங்கி வெகுமதிகளும் குடுத்து, அனேக பிரிய வசனங்களும் சொல்லத் தக்கதாகவும் பெத்தார். அதன்பிறகு இங்கிலீசுக்காரர் ஆட்டு மேலாட்டு(?) மேஸ்தர் புசுக்கவன் என்கிறவர் இங்கிலீசுக்கார ராசா அனுப்ப கோந்திரா அமிரால்[1] என்கிற பேருடனே இருபத்தேழு கப்பலுடனே சுலுப்பு, வெகு சண்டை சாமானுடனே வந்து, வெகு சண்டை குடுத்து புதுச்சேரிப் பட்டணமெல்லாம் வெம்பாய்க் (?) குண்டுனாலே நெருப்பு மயமாய்த் தினமானம் 1748 வருசம் ஆகொஸ்து மாசம் 16 தேதி வரைக்கும் (அதாவது ஆவணி 6 வரைக்கும்) தேதி வரைக்கும் அறுபது நாள், நாளொன்றுக்குப் பதினாயிரம் யிருபதினாயிரம் வெம்பாய்க் குண்டு வந்து கோட்டை, பட்டணம், குண்டு சாலை மட்டும் சண்டை குடுத்து குண்டும் விழும்படியாய்ப் போட்டு, தன்னாலேயான மட்டுக்கும் சண்டை குடுத்து, பிறட்டாசி மாசம் 26 தேதி செவ்வாயிக் கிழமைக்கு ஒயித்தோபர் மாசம் 8 தேதி நாளொன்றிலே உதய முதல் அஸ்தமனவரையில் முப்பத்தோராயிரத்து அன்னுறு குண்டு 24 ராத்தல், 36 ராத்தல், 48 ராத்தல் மட்டுக்கும்–பீரங்கிக் குண்டும் (அதற்கு மேல்) 240 ராத்தல் குண்டு மட்டுக்கும் வேம்பு (?) குண்டும் இந்தப் படியே போட்டு, யிதுகளுக்கெல்லாம் மனங்கலங்காமல்,[2] தயிரியத்துடனே பட்டணத்திலுள்ள சின்னதுரை குமுசலியோர்கள் ஒபிசியால்மார் முதலாகிய பேர்கள் சகலரும் 'நிறுவாக மில்லை, பட்டணத்தை விட்டு விடு?' யென்று கூக்குரல் போட, அதுக்குஞ் சலியாமல் அவர்களுக்கும் மத்தப்படி பட்டணத்திலுண்டான சகல செனங்களுக்கும் தைரியங்கள் சொல்லிக் கொண்டு அன்றாடம் விழுந்து போன கோட்டையை அந்த க்ஷணத்திலே கட்டிவிச்சு, ஊரிலுள்ள சகல செனங்களும் ரஸ்து யில்லாமல் அதிக சாகசமாயும் யுத்தம் பண்ணி, அற்பிசி மாசம் 6 தேதி யிங்கிலீசுக்காரரையும் கப்பலுகளையும் ஆட்டு மேலாட்டையும் (the Unlucky admiral) கூடலூர் வரைக்கும் துரத்தி, மகத்தான கீர்த்தி பூமியுள்ள வரைக்கும் நிறகத் தக்கதாகவும், சகல சனங்களும் கதைகளாய்ச் சொல்லிக் கொள்ளத்தக்கதாகவும், யித்தனைக்கும் சாதகமாய் மந்திரியாயிருக்கிற ஆனந்த ரெங்கப் பிள்ளையுடனே அத்தியந்தமான செயம் பெற்றார்.

அதன்பிறகு 1749 வருசம் ஆகொஸ்து மாசத்துக்கு சுக்கில வருசம் ஆவணி மாசத்திலே நிசாம் மருமகன் யிதாயித்து மொகதின் கானும் சந்தா சாயபும் ஆற்காட்டுக்குக் கப்பால் முப்பதினாயிரம் குதிரையும் நூறு ஆனையும் ஆயிரம் ஒட்டகையும் ஆயிரம் ஒயில் (பொதி) வண்டியும்

---

[1] Boscowen the unlucky Rear-Admiral!

[2] மிகவும் அஞ்சி மனந்தளர்ந்து விட்டார் என்று அந்நாளையப் பதிவுகளில் பிள்ளை எழுதியுள்ளார்.

அன்பதுனாயிரம் தோமும் ஆக வந்தவுடனே, புதுச்சேரியில் சந்தா சாயபு மகன் ரசா சாயபுக்கு ஆற்காட்டு சுபைக்குப் பட்டம் கட்டி, அவனுடனே சகல தௌளங்களும் கூட்டி அனுப்பிவிச்சு, யிதாயித்து மொகதின் கானும் சந்தா சாயபும் யிவ்விடத்துக்கு வராமல், நாற்பது சண்டை அன்பது சண்டையில் வெட்டி செயங்கொண்டு வெகு கீர்த்தி பெத்தவராய் யிருக்கப்பட்ட ஆற்காட்டு நவாபு அன்வர்தி கான் பகதூர் என்கிறவரை ... வெட்டி, அவர் தண்டெல்லாம் கொள்ளையிட்டு, ஆனை குதிரை சதுரங்க பிலன்களையும் பிடிச்சுக் கொண்டு, சந்தா சாயபு, யிதாயித்து மொகிதின் கானையும் சகல தௌளங்களுடனே புதுச்சேரிக்கு அழைப்பிச்சு ஆற்காட்டு சுபையெல்லாம் தோரணங்கட்டி, அவர்களுக்குப் பிலன்கூட்டி, தஞ்சாவூர் திருச்சிராப்பள்ளி யெல்லாம் அடிச்சு, அது நிமித்தியம் லெட்சம் குதிரையும் ரெண்டாயிரம் ஆனையும் பதினாயிரம் ஒட்டகையும் பதினாயிரம் வண்டியும் ரெண்டாயிரம் பீரங்கியும் முப்பதினாயிரம் சஞ்சாலும் (பீரங்கியும்) யிரண்டு மூணு லக்ஷம் எருது, அதுக்குத் தக்க சாமான்களுடனே 750 வருசம் மார்ச்சு மாசத்துக்கு சுக்கில வருசம் மாசி மாசம் நிசாம் குமாரர் நிசாம் பட்டத்திலே யிருக்கிற நாசர் சங்கு கடப்பை கந்தனூர் ஆதோணி முதலான சுபைதார்களுடனேயும், முராரி ராயன், ராசா சந்திரசேனன் முதலான மராட்டியருடனேயும் சா நவாசு கான், சயிது லசுக்கரு கான் (லஷ்கர் கான்) முதலான வசீர்களுடனேயும் வந்திறங்கி, யிதாயித்து மொகதின் கானையும் பிடிச்சுக் கொண்டு பத்து மாதம் வெகுவாய் யுத்தம் பண்ணின நாசர் சங்குவை 1750 வருசத்துக்கு பிறமோதூத வருசம் மார்கழி மாசம் 5 தேதி அப்படி சமுத்திரம் போலே இறங்கியிருக்கப்பட்ட தண்டிலே போய்ப் பிரவேசித்து நாசர் சங்குவையும் வெட்டி, யிதாயித்து மொகிதின் கானையும் விடுவிச்சு, அவனுக்குப் புதுச்சேரியிலே அவுரங்காபாத்து சுபைக்கு நிசாம் பட்டமும் கட்டி, இந்த ஜெகம் ஆத்தியந்தம் கோடி சூரியப் பிரகாசமாய்ப் பிரகாசிக்கும் படியாக பூமியுள்ள வரைக்கும் கீர்த்தி நிற்கும்படியாகவும், டில்லி பார்சா கிட கிடாயிக்கும்படியாயும், மகத்தான மகிமை பெத்து, கிஷ்ணை நதி முதல் கன்னியாகுமரி வரையில் சுயராச்சியம் பண்ணிக் கொள்ளும்படியாக வைத்து, யிதாயித்து மொகிதின் கானுக்கும் மத்தத்தாய் பிரான்சு தௌளம் கோல்கொண்டை அவரங்காபாத்து வரைக்கும் போய், அங்கே அவருக்குப் பிலனாகவும் அப்பால் சலாபத்து சங்குக்குப் பட்டங் கட்டி அவருக்குப் பிலனாகவுமிருக்கத் தக்கதாகவும் இப்படிக் கொத்த மகத்தான சாகச பராக்கிரம செயங்க ளெல்லாம் பிரெஞ்சு மகாராசா வரைக்கும் பிரகாசிச்சு, அவர்கள் வெகு சந்தோஷப்பட்டு ஷெவலியேர் தெ வோடுது ருதே சேமிஷேல் (Chevalier of the Order of St Michel) என்கிற முத்திரைக் கறுப்பு அகலப் பட்டை உத்திரதந்தியம் போடுகிறாப் போலே போட்டுக் கொள்ளுகிறதுக்கு வந்தது. ஒரு தரமும் சண்டையிலே செயிச்சால்

ஷெவலியேர் தெ லோடுது ருதே கொம்மாந்தோர் தேமிலி தொதே செம்லூயி (Chevalier of the order of St Louis and Commander) என்கிற முத்திரை செகப்பு அகலப்பட்டையிலே கோத்ததை உத்திர தந்தியமாய் போட்டுக் கொள்ளுகிறது ஒரு தரம் வரவும், பவுன்சு முழுதும் செயிச்சதுக்கும் (மர்க்கி–Marquis) பட்டமும் கொடுத்து, அதுக்கான முத்திரையும் அனுப்பிவிச்சு, சகல வெகுமதிகளும் ராச சின்னங்களும் வரவும் அதினாலேயும் வெகு கீர்த்தியடையப் பெற்றார். அபாரமாகிய திரவியங்களும் ... பூஷணங்களும் பெத்தார். மட்டில்லாத சிலவுகளும் பண்ணினார். மகத்தான மகிமைகளெல்லாம் அனுபவிச்சார். இப்படி பதிமூணு வருஷ காலம் சகல மகிமைப் பிரதாபங்களும் அனுபவிச்சுக் கொண்டு யிருக்கையிலே 1754 வருசம் சூலை மாசம் 30 தேதிக்கு பவ வருசம் ஆடி மாசம் 20 தேதி தகீராச்சுது.

***1757 வருசம், மார்ச்சு மாசம், தேதி 26; தாது வருசம், பங்குனி மாசம், தேதி 17; சனிவாரம்***

இத்தனாள் வீமலிப் பட்டணம் (Bimlipatnam) பீர் மகம்மது சாயபு விசாரிச்சுக் கொண்டு வந்து சொன்ன விபரமாவது : நேத்து ராத்திரி முசியே புசி வுடைய தானியப் படகு வடக்கே விசயராமராசா வுடைய தாலூக்கு வரதாதப் பூண்டி (Varadadapundi) மடுக்கையிருந்து (மடு?) வந்து வைத்துப் பிடித்துது. அந்தப் படகுக்காரர் பீர் மகம்மது சாயபுடனே சொன்ன தென்னவென்றால், வடக்கே நம்முடைய முசியே புசியும் (அவரது) பிறகே இவ்விடத்திலே யிருந்து போன சேக்கு யிபராமாகிய யிபராம் அலி கானும் (போனார்கள்). முன் சலாபத்து சங்குக்கும் முசியே புசிக்கும் ஆகாமலிருந்த போது, யிபராமலி கான் சலாபத்து சங்குவுக்கு உளவாயிருந்தான் யென்றும், தன் கர்தாவிலே யில்லாமல் பிரத்தியேகமாய்த் திரியுதிறன் யென்றும் இப்படியாக மனதிலே முசியே புசி ... வைச்சுக் கொண்டு, அந்த யிபராமலி கான் ஸ்ரீகாகுளத்து வாயு மூலை அன்காத வழியிலே பொப்பிலி யென்கிற கில்லா (ஒன்று இருக்குது). ஒரு தெலுங்கு வெள்ளாழ சாதியிலே ரங்கராய னென்கிறவன் மூணு லட்சம் (பெறும்) (அந்த ராச்சியத்தை ஆண்டான்). அந்த சமீன்தார(னுடைய) ஆசராவிலே யிந்த யிபராமலி கான் போய்ச் சேர்ந்து, அந்த சமீன்தாரனுக்கு நவபோத்து முதலானதுகளும் குடுத்து, அவ்விடத்திலே யிருந்து கொண்டு விசய ராமராசாவையும் அனுகூலம் பண்ணிக் கொண்டு யிருந்(தான்). அவன் பேரிலே முசியே புசி தன் பவுன்சை வெள்ளைக்கார சொலுதாதுகள் ரெண்டாயிரம் பேர், பாறு சிப்பாயிகள் பதினாயிரம் பேர், பீரங்கிகள் முதலான சண்டை சரன்சாமுகளுடனேயும், யிதல்லாமல் துலுக்கர்களிலே சயிதுல்லாக் கானும், சாபரலி கான் குமாரன் அ்யிதர் சங்கும் பின்னைபும் சிறிது பேர்

சறுதாறுகளும், ரெண்டாயிரம் குதிரையும், கால் ராணுவு நாற்பதினாயிரம் பேரும் யிந்த மட்டுக்கும் பவுன்சுடனே வேலூர் (எல்லூர்). ராசமகேந்திரம் பட்டணத்திலே யிருந்து பிறப்பட்டு, கசிமு கோட்டை (காசிம் கோட்டை) யென்கிற (விடத்திலே) போயிறங்கி (னார்கள்).

அவ்விடத்துக்கு வடக்கே அன்காத வழியிலே விசைய (விசிய) நகரத்திலே யிருக்கிற விசயராமராசா என்கிறவர் முசியே புசி வருகிற சேதி கேட்டு, யிவருடைய பேட்டி வாங்கிக் கொள்ளுகிற நிமித்தியமாய் பயணப் பட்டு பொப்பிலியிலே யிருக்கிற யிபராமலி கானுக்கு விசையராமராசா சொல்லி யனுப்பி(னார்). சகலத்துக்கும் காபந்தா யிருக்கிற முசியே புசி வருகிறார், இப்போ நாம் உமக்குச் சகாய மாயிருக்கிறது யுக்த்தமல்ல. ஆனபடியினாலே அவ்விடம் விட்டுப் பிறப்பட்டுப் போ(கும்படி) அந்த ரங்கத்திலே சொல்லி அனுப்பிவிச்சுப் போட்(டார்)... (அப்பால்) பரிவாரத்துடனே பிறப்பட்டு கசிமுக் கோட்டைக்கு முசே புசி அண்டைக்கு வந்து, விசயராம ராசா மிலாகத்து வாங்கிக் கொண்டார் (நட்பு செய்து கொண்டார்). யிதிலே பொப்பிலிக் கோட்டையிலே யிருக்கிற ரங்கராயன் யென்கிற சமீன்தாரனும் சேக்கு யிபராமுடனே காவந்தாகிய முசியே புசி வருகிறாரே, நீ யிவ்விடம் விட்டுப் பிறப்பட்டுப் போனால் தப்பிப் போவாய். யில்லாவிட்டால் உனக்கு மோசம் வருமென்று சொன்னதின் பேரிலே அவன் அவ்விடம் விட்டுப் பின்னையும் சிறிது தூரத்துக்கு அப்பாலே போய் அப்பிரகாசமா (மறைவாய்) யிருந்தானாம்.

அந்த சமாச்சாரம் அப்படி யிருந்துது. இந்த விசயராமராசா, பொப்பிலி ரங்கராயன் என்கிறவன் வெகு நாளாய்த் தன்னை சட்டைச் பண்ணாமல் யிருந்தான் என்கிற அஸ்ரக்கசு (பகை) விசயராமராசா மனதிலே வைத்துக் கொண்டு, யிந்த சமையத்திலே பவுன்சுடனே முசியே புசியையும் கூட அழைத்துக் கொண்டு போய், அந்த பொப்பிலி யென்கிற கோட்டையும் அந்த சீர்மையுங் கட்டிக்கொண்டு, அந்த ரங்கராயன் யென்கிறவனையும் சரிப்பிடிச்சுப் போட வேணுமென்று யெத்தனம் பண்ணி, முசியே புசிக்குச் சிறிது ஆசை வார்த்தை சொல்லி, அந்த சீர்மையுங் கோட்டையும் உங்கள் வசம் பண்ணிக் கொள்ளலாமென்று (சொன்னான்). முசியே புசியும் சம்மதித்தாராம். அப்பால் ராசாவும் தன் பவுன்சு ரெண்டாயிரம் குதிரையும் (நாற்பதினாயிரம் கால் ராணுவும்)[1] எண்ணாயிரம் பாறுக்காரர்கள் முதலான சறுதாறுகள் சிறிது பேரையும் நாற்பது ஆனையும் சிறிது பீரங்கி முதலான சண்டை சாமானையும் அழைப்பிச்சுக் கொண்டு, யிருவர் பவுன்சும் யேகமாய்ப் பிறப்பட்டு

[1] இது ஆங்கிலத்தில் இல்லை. பாறுக்காரர் என்ற சொல் சில சமயம் துப்பாக்கிக் காரரைக் குறிக்கிறது.

அவ்விடத்துக்குப் பதின்காத வழியிலே யிருக்கிற பொப்பிலிக் கோட்டையின் பேரிலே சண்டைக்கு ஸ்ரீகாகுளம் மார்க்கமாய்ப் போயந்தக் கோட்டை கிட்ட யிறங்கின மாத்திரத்திலே, அதிலே யிருக்கிற ரங்கராயனுக்கும் இவர்களுக்கும் சிறிது சவாபுகால் (சமாதானம் பேச்சு) நடந்து, அதுக்கு இவர்கள் சம்மதிப்படாமல், முசே புசி மாத்திரம் சிறிது பவுன்சுடனே கோட்டைக்குச் சமீபமாய் சண்டைக்குப் போனவிடத்திலே, கோட்டைகளிலே யிருக்கிற ரங்கராயன் தாலூக்கு பந்து செனமாய் அய்யாயிரம் பேர் நல்ல ராணுவா யிருந்துதாம். அதிலே சிறிது பேர் வெளியே பிறப்பட்டு முசே புசி பவுன்சுடனே முனைஞ்சு சண்டை பண்ணின விடத்திலே முசியே புசிக்கும் யிவருடைய பவுன்சுக்கும் நிறுவாகத்துக்கு வராமல் (புசி) பின்வாங்கிப் போன(னாராம்). இதிலே விசயராமராசா பார்த்து, யிப்படிப் பின்வாங்கிப் போகலாமா வென்று தன் காசா ஆனையின் பேரிலேறிக் கொண்டு தன் பவுன்சுடனே வந்து ரங்கராயன் ராணுவு சண்டை பண்ண வந்தவர்களையும் அடிச்சு முனைஞ்சு கோட்டையையும் நெருங்கி, வைக்கல் கட்டுகளை அழைப்பிச்சு அகழிலே போட்டு முசியே புசியும் அவர் பவுன்சும் ஒரு பக்கத்திலேயும், ராசாவும் ராசாவினுடைய பவுன்சும் ஒரு பக்கத்திலேயும் கோட்டையின் பேரிலே லக்கை யேறின விடத்திலே, கோட்டைக்காரருக்கும், யிவர்களுக்கும் நல்ல சண்டையாய், முசியே (புசியின்) பவுன்சிலே பதினெட்டு பேர் ஒப்பிசியால்மாரும் இரநூறு வெள்ளைக்கார சொலுதாதுகளும் ஆயிரம் பாறும் இரண்டாயிரம் பேர் ராணுவும் (artillery) ராசாவினுடைய பவுன்சிலே சிப்பாய்கள் பாறுக்காரர் கர்னாட்டக ராணுவு வகையிரா சறுதாறுகளுடைய அய்யாயிரம் பேரும், ஆக யிருவர் பவுன்சிலேயும் யெண்ணாயிரம் ஒன்பதினாயிரம் பேர் மட்டுக்கும் சண்டையிலே விழுந்து, அகிழ் (அகழி) முதலாய் ரெத்த வெள்ளமாயோட, யிப்படி சண்டை பண்ணி கோட்டையை செயிச்சு வாங்கிக் கொண்டவுடனே, முசியே புசி விசயராமராசாவைப் பார்த்து கோட்டையிலே யிருக்கிறவர்களிலே ஒரு குழந்தையை யாகிலும் உயிருடனே விட்டு விட்டால் உனக்கும் யெனக்கும் ஆகாமல் (மேலும் ஒரு சண்டை) வருமென்று சொல்லி, அவரவரையும் வெட்டிப் போடச் சொல்லி, வெள்ளைக்காரர் ஞாயமாய் உத்தாரம் குடுத்தாராம். அதன் பேரிலே ராசாவும் நல்லதென்று சொல்லிக் கோட்டையிலே தயாராயிருந்த ராணுவுத்தார், சமுசாரங்கள் முதலான பேர், கற்பிணி ஸ்திரீயையும் கூட, வெட்டிப் போடச் சொல்லிச் சொல்ல, அந்தப்படிக்கி கோட்டைக்குள்ளே யிருந்த சகலமான பேரும் – பதினாயிரம் பேர் மட்டுக்கும் யிருந்தார்களாம் – அவர்களை ஒருவர் கூட தப்பாமல் வெட்டி சரிக் கட்டிப் போட்டார்களாம். யிதிலே அந்த ரங்கராயன் என்கிறவன் வெட்டுப்பட்டுப் போனான். அவன் தம்பி மாத்திரம் ஒருவன் சாவு சாயங்களாய்ப் பட்டு உயிருடனே

யிருந்தானாம். அவனை மாத்திரம் காயங்கள் கட்டி வைக்க வேணும் மென்று விசயராமராசா முசியே புசியிடனே சொல்லி, ஒரு டேராவுக்கு யெடுத்து அனுப்பிப் போட்டு, அப்பால் கோட்டையைச் செயித்ததுக்குக் கோட்டை மேலே நம்முடைய பிரான்சுக்காரர் சண்டாவும் போட்டு, முபாற்கு பாதி (சொல்லி), நவப்போத்து பசாயிச்சு (அடித்து), லசுக்கரிலே சக்கரையும் வழங்கிப் பங்கிட்டு, யிப்படியாகப் பண்டிகை கொண்டாடி(னா). பிற்பாடு, விசயராமராசாவும் முசியே புசியும் அவரவர்கள் டேராவிலே போயிறங்கினார்களாம். அந்த ரங்கராயன் தம்பி காயங்களைக் கட்டிக்கொண்டு (யிருக்க மாட்டேன் என்று சொல்கிறான்) என்று சொல்லி, வெளியிலே யிருந்து தப்பிப் பிழைச்ச (ரங்கராசாவின் மனுஷன்) ஒருத்தன் விசயராமராசாவைக் குத்திப் போடவேணுமென்று கிறத்திமம் மனதிலே வைச்சுக் கொண்டு, விசயராமராசாவினுடைய டேராவிலே போய், அவ்விடத்திலே யிருக்கிற சவுக்கிதாருடனே 'ரங்கராயன் தம்பியை ராசா அபிமானிச்சு காயங்கட்டச் சொன்னார். அவன் கட்டிக் கொள்ளமாட்டோமென்று சொல்லுகிறான். இந்தச் சேதி நான் ராசாவுடனே சொல்லிக் கொள்ள வேணு,' மென்று சொன்னதாயும், அந்த சவுக்கிதாரர் அந்தச் சேதியை ராசாவினுடைனே போய்ச் சொன்னவுடனே, யிந்தச் சேதி சொன்னவனை உள்ளே விடச்சொல்லி உத்தாரம் குடுத்ததாகவும், அவன் கையிலே ஆயிதமில்லாமலும் பாத்துக் கொண்டு உள்ளே விட்டுவிட்டதாகவும், அவன் ஒரு சின்னதாய் ஒரு மடக்குக் கத்தி ஒன்று யெப்படியோ வைத்துக் கொண்டு உள்ளே போய் ராசாவைப் பார்த்து உம்முடைய கிட்ட வந்து நான் ஒரு சேதி அந்தரங்கமாய்ச் சொல்ல வேண்டியிருக்கு தென்று சொன்னதாகவும், அப்படி அவன் கிட்டப் போய் சேதி சொல்லுகிறாப் போலே சொல்லி, மடக்குக் கத்தியாலே விசயராமராசா வகுத்தைப் பூரிப் போட்டதாகவும், அதன் பேரிலே குடல் களெல்லாம் அறுந்து வெளியே (வந்து) ராசா செத்துப் போனதாகவும், அப்பால் காபிராவாய்ப் போனதாகவும், அவ்விடத்திலே யிருந்த பேர்கள் அந்த கிறித்திரம் (?) காரனை (துரோகியை) வெட்டிப் போட்டார்களாம்.

யிந்தச் சேதி முசியே (புசி) கேட்டு மகா விசாரப்பட்டு, அந்த (ஷணமே) விசியநகரத்திலிருக்கிற விசயராம ராசாவினுடைய தமையன் குமாரன் ஆனந்த ராசாவாகிய செகபதி ராசா வென்று கிதாப்பு பெத்தவரை வரச் சொல்லிக் காகித மெழுதி அனுப்பிவிச்சார்களாம். யிந்தச் சேதி விசயராம ராசா பெண்சாதி இளையாள் கேட்டு கிணத்திலே விழுந்து செத்தாளாம். மூத்தாளைக் கிட்டயிருக்கிற பேர்கள் பத்திரமாய் வைத்துக் கொண்டிருக்கிறார்களாம். அதின் பேரிலே அந்த செகபதி ராசா முசியே புசி அண்டைக்குப் போய்ப் பேட்டிப் பண்ணிக் கொண்டவிடத்திலே, முசியே புசி ஆதரிச்சு உபசமனங் குடுத்துச்

சொல்லி, சுவாமியினுடைய சங்கல்ப்பமாம் படிக்கி நடந்து போச்சுது. நீ பயப்பட வேண்டாம். உங்கள் தகப்பனார் பத்தே (செயம்) பண்ணி பொப்பிலிக் கோட்டையையும் அந்த சீர்மை சேர்ந்த இரண்டு லெக்ஷமும் காணுகிற கிராமங்களையும் உனக்கே குடுத்து விடுகுறோம் யென்று திலாசாச் சொல்லி பட்டங் கட்டி பெகுமதி பண்ணினாரென்று – அந்த மட்டுக்கும் அவ்விடத்திலே தானிருக்கிறார் களென்று சேதி சொன்னார்கள்.

ஆனால் இந்த விசயராமராசா (சனனம்) சறுவதாரி வருசம் முதல் யிந்த தாது வருசத்துக்கு நாற்பத்தொன்பது வருஷம் ஆச்சுது. யிவர் தகப்பனார் பேர் ஆனந்தராசா. யிவர்கள் சூரிய வமுசத்து ராசாக்கள். யிவருக்கு யேழாம் வருஷம் பட்டம் கட்டினது. நாற்பத்தி ரெண்டு வருஷம் பட்டம் ஆண்டார். இவர்கள் வீட்டுப் பேர் பூசப்பட்டவார் (பூசாப்பட்டிவார்). யிவர்கள் வமுசம் பாரம்பரியமாயி ஸ்ரீ பூசப்பட்டி மஸ்(தா) மண்டலராய மன்னே (சுல்தான்) னென்கிற பட்டப் பேர் உடையவர்கள். அபித்த ஸரசாரியு (7000 குதிரைக்கு) மனசுபாவாயுமாகி மறுத்தபு (மீன்கொடி), முத்துக் கொடை முதலான விருதுகள் உடையவர்கள் ... ராச்சியம் யிதிலே நாற்பது கில்லாவுகள், தேவாலயம் பிரபல்யம் விஸ்தாரமாய் நடக்கிறது. ஆனாலிந்த விசயராம ராசா வுருடைய தமையன் குமாரனுக்கு மூணாம் வருஷத்திலே தானே யிவராசி (யுவராசா) பட்டங்கட்டி விச்சு, செகபதி ராசா வென்கிற பேரும் வைச்சார். யிப்போது யிந்தப் பிள்ளையாண்டானுக்குப் பனிரெண்டாம் வயதென்று சொன்னார்கள். ஆனாலிந்த விசயராம ராசா யிந்த மட்டுக்கும் சுகமாய்ச் சகல ராச்சியத்திலேயும் கீற்த்தி பெத்து, சகல சத்தியும் சத்துரு நாசமும் பண்ணி தர்ம மாயி(ருந்து) ராச்சிய பரிபாலனம் பண்ணிக் கொண்டு மென் மேலாய் யிருந்தார். யினி மேலிப்போ பட்டங் கட்டிக் கொண்ட பிள்ளை யினுடய யோகம் யெப்படி யிருக்குதோ அறியவேண்டியது.[1]

### *1757 வருசம், மார்ச்சு மாசம், தேதி 29; தாது வருசம், பங்குனி மாசம், தேதி 20; செவ்வாய்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே துரை மெத்தை மேலே காம்பிராவிலே யிருந்தபடி யினாலே, நாமும் பிடவை பார்க்கிற சாலையிலே போயிருந்து அழகிய மணவாளச் செட்டியாருடனே பேசிக் கொண்டிருந்தோம். யிப்படி யிருக்கையிலே துரையவர்கள் வெளியே வந்தார்களென்று கேட்டுப் போவோமென்று யெழுந்திருக்க,

[1] வழக்கம்போல் இந்த வாக்கியங்களும் படித்துப் புரிந்து கொள்ள இயலாதவாறு எழுதப்பட்டுள்ளன.

(யாரோ) தும்பி(னார்). அதைப் பார்த்து, மலை தள்ளிக் கொண்டு போகவேண்டிய அகத்தியமான காரியம் என்ன யிருக்குதென்று யோசனை பண்ணி, அங்கே தானே திரும்பவும் யிருந்து அழகிய மணவாளச் செட்டி, குருவப்பச் செட்டியுடனே பேசிக் கொண்டிருக்கையிலே கேழ்வியான சேதி : மான்சூர் (மன்சூர்) மீர் சாயபு யென்கிறவன் யிதுக்கு முன் யிங்கே யிருந்து போன சொலுதாதுகள் பாறுக்காரர்கள் இவர்களுடனே சண்டை குடுத்ததாகவும், அந்தச் சண்டையிலே பாறுக்காரர்களும் சொலுதாதுகளும் முறிஞ்சதாகவும், அந்தச் சேதி துரையவர்களுக்கு வந்து துரையவர்களிப்போ முசியே பிஷேர் (Pichard) என்கிறவரையும் அவர் சனம் அறுபது பேர் சொலுதாதுகளையும் கெற்னேல் (Grenades) பீறங்கி முதலான ஆயுத சாமான்களும் மருந்து குண்டு சாமான் முதலானதுகளும் பீரங்கி குண்டு கற்னெல் சுடுகிறதுக்கு அன்பது பேரும் கூடக் கூட்டி, திருக்கோவிலூரிலே யிருக்கிற முசியே ஒம்மோவுக்கும் காயிதம் எழுதி, அவரையும் யிவருடனே கூடப் போய்ச் சண்டை குடுத்து செயம் பண்ணச் சொல்லி அனுப்பி விச்சதாக சேதி கேழ்க்கப்பட்டுது. அதின் பேரிலே பத்து மணி வரைக்கும் பிடவை பார்க்கிற சாலையிலே யிருந்து அப்பால் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

இத்தனா ளிந்தப் பட்டணத்திலே நடந்த தேதென்றால், நேத்து ராத்திரி கம்மாளர் யெப்போதும் போலே வருஷாவதி வருகிறாப்போலே தங்கள் தேவதைக்குக் கிண்ணித் தேர் கட்டி, யிடங்கைத் தெருவிலே எழுந்தருளப் பண்ணிக் கோவிலிலே கொண்டு போனார்கள். அதுக்கு யித்தனாள் கந்தப்ப முதலி அவர்களையும் (கம்மாளர்களையும்) தேவடியாள் மேளக்காரர் யெல்லாரையும் பிடிச்சு வரச்சொல்லி கிண்ணித்தேர் பின்னேயும் சத்து உசந்து கட்டுவானே யென்றும், வீதியிலே கேளிக்கையாடி விச்சு (வந்தது) என்னவென்றும் இப்படி அவர்கள் பேரிலே ஒரு குத்தம் போட்டு, அவர்களையும் தான்தானே யெழுந்திருந்து அடிச்சு, தேவடியாக்கள் மேளக்காரர் யிவர்களையும் பிடிச்சுக் காவலிலே வைச்சு, யிப்படி துரையவர்கள் உத்தாரமென்று சொன்னதாக நடந்தது. இப்படி ஊரிலே படு நிபந்தனைகள் போட்டு நடத்தினது யிது வரைக்கும் இல்லை. அப்படிக் கொத்தக் காரியம் நடத்துகிறதினாலே ஊரிலேயிருக்கிற செனங்கள் ஆருக்கு யென்ன வருமோ வென்று யோசனைப் பண்ணிக் கொண்டு யிருக்கிறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1757 வருசம், மார்ச்சு மாசம், தேதி 30; தாது வருசம், பங்குனி மாசம், தேதி 11 (22); புதவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே

துரையவர்கள் மெத்தை மேலே தென் பிறத்திலே வந்திருந்தார். அப்போது நாம் போய்க் கண்டு காண்பிச்சுக் கொண்டு கூடயிருக்கையிலே, ஒரு ஓடம் காணுதென்று சொன்னார்கள். உடனே துரையவர்கள் கீழ்ப் பிறமாய்ப் போய் ஓடத்தைப் பார்க்கிறபோது சின்னதாய் வடக்கே யிருந்து தெற்கே போச்சுது. அப்படி யிருக்கையிலே பாளையக்கார நயினார் யித்னாள் விடியக்காலம் ஒரு கோழி நாலு காலிலே குஞ்சு போட்டு தென்று, அந்தக் குஞ்சுவைக் கொண்டு வந்து துரைக்குக் காண்பிச்சுப் போட்டான். அதைத் துரையவர்களும் எல்லாரும் பார்த்த பிறகு துரையிருந்து யிந்தக் குஞ்சை சாராயத்திலே போட்டு வைக்கச் சொன்னார். அப்போது நாம் சொன்னது : "அது சீவனோடே யிருக்கிறதிலே சாராயத்திலே போடுகிறதுண்டா? அதை வளர்க்கச் சொல்லவேணு," மென்று சொன்னோம். அதுக்குத் துரை மெய்தான் என்று கந்தப்ப முதலியை அழைச்சு, அவன் கையிலே கொடுத்து வளர்க்கச் சொல்லிக் குடுத்தார். அதன் பிறகு நாமிருந்து, "முன்னாலே நாசறு சங்கு சாகிறபோது ஒரு பன்னி ஆனை போலே தும்பிக்கையுடனே குட்டிப் போட்டது. அப்போது ஒருத்தி நாலு பிள்ளை பெத்தாள். ஒரு மாடும் ஆறு காலுடனே கன்று போட்டது. இப்படி ஒரு அதிசெயம் (நடந்தால்) ஒவ்வொன்று (ஏதாவதொன்று) காணும்," யென்றும் சொன்னோம். அப்போது முசியே கில்லியார் யிருந்து, மெய்தான் நானும் பார்த்தேன் என்று சொன்னார். அதன் பேரிலே முசியே துப்பிளேயிக்சு நாளையிலே மசுக்கரையிலே யிருந்து ஒரு மாடு வந்தது. அதுக்கு காலு நாலு தான். கழுத்துக்கு நடுவிலே பிறப்பட்டு ரெண்டு தலையிருந்தது. அதைக் கும்பினியார் அண்டைக்கு அனுப்பிவிச்சார் யென்று யிப்படியாக முச்சட்டைகள் பேசிக் கொண்டு யிருக்கையிலே, முசே பொஷேத்தும் பாப்பய்யப் பிள்ளை குமாஸ்தாவும் வந்து தொரையுடனே பாப்பய்யப் பிள்ளை வசத்திலிருக்கிற மாடு ஆடு தட்டு முட்டு, முத்துமல்லா ரெட்டியுடயது, எடுத்து வந்தது தொரைகளும் துப்பிளேயிக்சும் அறிஞ்சு யிரு(ந்)தார்கள்) யென்று சொன்னார்கள். அப்போது பாப்பய்யப் பிள்ளை குமாஸ்தா பித்திசாம் யெழுதிக் கொண்டு வந்து தொரை கையிலே கொடுத்தான். அதை வாங்கி தொரை பார்த்துக் கொண்டார். அதிலென்ன எழுதி யிருந்ததோ தெரியாது.

அதன் பிறகு கந்தப்ப முதலியார் வந்து சொன்னது: நேத்து முசே திலார்ஷு வந்து துரையுடனே, "தக்கே (தக்கி) சாயபு சீர்மை சப்த்தி பண்ணச் சொன்னீர்களே, முன்னாலே நாசறு சங்கு வந்த போதும் அவன் வந்து கண்டதில்லை, ஆற்காட்டு நவாபு ஆர் வந்தாலும் அவன் வந்து கண்டதில்லை. அப்படி யிருக்க அவன் வந்து காணவில்லை யென்று

கோபம் பண்ணினாலெப்படி," யென்று அவர் ... சொன்னார். "தானும் அனுசாரியாய்ச் சொல்லுகுறேன், பாப்பய்யப் பிள்ளை சேதிக்கும் தான் அனுகூலமாய்த்தானே சொல்லுகுறேன். உங்களைக் கேட்டால் நீங்களும் அனுசாரியாய்ச் சொல்ல வேணு," மென்று சொன்னான். "நமக்கென்ன எந்தவேளைக்கி எப்படி நடக்க வேணுமோ அப்படி நடக்குது. நாம் சொல்லுகுறோ," மென்று சொன்(னேன்).

பிறகு குருவப்பச் செட்டி கையிலே யிருபத்தி ரெண்டு கோடி (கார்ஜ்-corge) குடுத்ததுக்கு ஏழரைக் கோடி (கார்ஜ்) எழுதிக் கொடுத்தானென்று சொன்னான். "அது நாமும் கேட்டோம். அவன் சொல்லுகிறது, நீயும் கூடயிருந்து கட்டுப்போட்டு அனுப்பினோம். ரேவு கணக்கிலேயும் யெழுதியிருக்குமே. தலங்கம்பாடி வீரராகவச் செட்டி கணக்கிலும் யெழுதியிருக்கும், பார்த்தால் தெரியு," மென்று (நான்) சொன்னோம். அதுக்கு நீங்கள் விசாரிச்சுச் அறிய (சொல்ல) வேணுமென்று சொன்னான். "விசாரிக்கிற தென்ன? நீ தானே விசாரி. அதிலே பிக்கிருந்தால் பார்த்துக் கொள்ளலாமே யல்லாமல் சரியாய் கணக்கிலே யிருந்து உனக்கு சமுசயமிருந்தால் உனக்கு தெளியப் பண்ணுகிறோம்," என்று சொன்னோம். நான் தானே விசாரிக்குறே னென்று போனான். அதன் பேரிலே தொரை உள்ளே போனார். அதன் பேரிலே நானும் பிடவை பார்க்கிற சாலையிலே வந்திருக்கிருத்திலே காவலிலே வைச்சிருக்கிற கம்மாளத் தேவடியாள் மேளக்காரர் மனுஷர் சிறிது பேர் வந்து, "யிந்த அனியாயமுண்டா? எப்போதும் போலே கட்டினோம், அதிகமில்லை. கேளிக்கை ஆடுகிறபோது யெங்கே பார்த்தாலென்ன?" வென்று சொன்னார்கள். அதுக்கு நல்லது அனுகூலமா(ய் நடக்கு) மென்று சொல்லிப்போட்டு பத்து மணிக்கு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

*1757 வருசம், மார்ச்சு மாசம்; தேதி 31; தாது வருசம், பங்குனி மாசம், தேதி 22; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே தொரை அவர்களுக்கு அண்டையிலே முசியே கில்லியாரும் அஞ்சாறு பேர் ஒப்பிசியால்மார்களும் மெத்தை மேலே யிருக்கையிலே, நாமும் போய் காண்பிச்சுக் கொண்டோம். அப்படி யிருக்கையிலே முசியே புஷேத்து வந்து காகிதமுங் கொடுத்துப் பேசிக் கொண்டிருந்தார். இப்படி யிருக்கையிலே கந்தப்ப முதலியும் கோனேரி நாயக்கனும் குருவப்பச் செட்டியு மங்கே கூடியிருக்கையிலே, தச்சக் கூடம் விசாரிப்பு முசே கலாரென்கிறவன் (Calard) வந்து, கந்தப்ப முதலியை பார்த்து, "நீ என்ன

இந்த ஊருக்குத் துபாசியா? உனக்கு தச்சரும் கருமாரும் கும்பிடுபோடயில்லை யென்று அவர்கள் பேரிலே இல்லாத குத்தத்தை உண்டு பண்ணி, அவர்களை யிழுத்து வரச்சொல்லி, அடிச்சுக் காவலில் வைக்கச் சொன்னாயே. உன்னை நான் கொஞ்சத்திலே விடுகுறேனா. அதுக்கு எதிராளி வுனக்கு நான்தான். ஆகட்டும் பார்," என்று சுறுக்காய்த் தானே வுத்தாரஞ் சொல்லி, அதின்பேரிலே தொரை கிட்டப் போய் யேதோ பேசினான். அதுக்கு தொரை இடங் குடுத்து வாய்க் காணயில்லை. அதின் பேரிலே திரும்பி வந்தும் கந்தப்ப முதலியை பார்த்து, "நல்லது. ஆகட்டும். உன்னை அதுக்கேத்தபடி பண்ணுகுறேன் பார்," என்று சொல்லி, மெத்தை விட்டுக் கிழே யிறங்கி, தச்சர் கருமார் எல்லாரையும் அழைக்கச் சொன்னார்.

அந்தப் படிக்கிருக்கையிலே கேழ்வியான சேதி : ஸ்ரீமுக வருசஷத்திலே மீரு அப்துலாயி மானென்கிற (மீர் அப்துல் ரகிமான்) துலுக்கனுக்கு பாப்பய்யப் பிள்ளை யெலவானசூர் சீமைக் குடுத்து அனுப்பின விடத்திலே, அவன் எலமான்சூர் (?) கோட்டையைப் பிலம் பண்ணிக் கொண்டு, இன்று முதல் அந்தச் சீமையுங் கட்டிக் கொண்டு உபரியாய்க் குதிரை ராணுவும் வைச்சு, கும்பினிக்குப் பணமும் அனுப்பியாமல், தான்தானே தொரையாய் யேற்பட்டு சுத்திலே யிருக்கப்பட்ட கிராமங்களை அரியலூர், உடையார்பாளையம் சில்லரை பாளையப்பட்டுக் கிராமங்களிலே போய்க் கொள்ளை யிடுகுறதும், வழிபறிக்கிறதும், யிந்த இடுக்கிலே மெத்தவும் ராச்சியமெல்லாம் கொள்ளையிட்டுக் கொண்டிருந்தான். அவன் பெண்டுகளை மறிக்கி துப்பிளேயிக்சு அவர்கள் யிங்கே தானே மறிச்சிருந்தார்கள். யிப்பால் முசே கொதே அவர்களும் அந்தப்படியே மறிச்சு வைச்சார்கள். யிப்பால் முசே லெறி அவர்களுக்குப் பிணை வாங்கிக் கொண்டு அவர்களை அனுப்பிவிட்டார்கள். உடனே பிணைக்காரர் கூட எலமான்சூர் (?) போய்ச் சேர்ந்து போய், அதின் பேரிலே மீரு அப்துல்லா ரயிமான் என்கிறவன் சீமையெல்லாம் வெகுவாய்க் கொள்ளை யிட்டுக் கொண்டு மெத்தவும் அனியாயங்களாய் நடத்திக் கொண்டு ஆரையும் எண்ணாம லிருந்தான். இப்போது அவனைப் பிடிச்சு வரச்சொல்லி, யிருபது நாளைக்கு முன்னே சிறிது பாறுக்காரரும் சொல்தாதுகளும் தொரை அனுப்பியிருந்தார். அவர்கள் போனவிடத்திலே அவன் அவர்களை எதிர்த்துத் துரத்தி விட்டதினாலே, திரும்பவும் யிங்கே யிருந்து ரெண்டு நாளைக்கு முன்னே அலமாங்கி (அலுமாஞ்சி) கும்மாந்தானையுஞ் சிறிது சொலுதாதுகளையும் பாறுக்காரர்களையும் அனுப்பி வைச்சார்கள். யிவர்கள் போய்ச் சேருமுன்னே திருக்கோவிலூரிலே யிருந்த முசியே ஒம்மோ

என்கிறவரங்கே தம்மண்டையிலே யிருக்கிற பேரையும் சேகரிச்சுக் கொண்டு, முன்னாலே யிங்கே யிருந்து போன பேர்களையும் கூட்டிக் கொண்டு, யெலவாஞ்சூரின் (?) பேரிலே வந்ததாகவும், முசே ஒம்மோ பிலத்துடனே வருகிற சமாச்சாரம் மீர் அப்துல் ரயிமான் கேட்டு, எதிர்த்துச் சண்டை குடுக்கயிடமில்லாமல் பிறப்பட்டு ஓடிப் போனதாகவும், முசியே ஒம்மோ யெலமாஞ்சூர் (?) கோட்டையை வாங்கிக் கொண்டதாகவும் சேதி கேழ்க்கப்பட்டுது.

## ஏப்ரல் 1757

***1757 வருசம், ஏபறல் மாசம், தேதி 9; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 1;[1] சனிவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : சவா பாசி ராயன், நாற்பத்தினாயிரங் (சவா பாஜி ராவ் பாலாஜி ராவ்) குதிரையுடனே மயிசூர் சீர்மை(யின்) ராசதானிப் பட்டணமாகிய ஸ்ரீரங்கப்பட்டணம் சீர்மைக்கு நார்க் (நாலு) காதவழி அங்காத வழியிலே போயிறங்கி யிருக்கிறாரென்றும், அங்கே யிருந்தும் ரெண்டு மூன்று கெடி துற்க்கங்கள்ள வாங்கிக் கொண்டதுமல்லாமல் சீமையெல்லாம் கொள்ளையிடுகுறார் களென்றும் மயிசூர் ராசா நானாவுக்கு ஒடம்படிக்கைச் சொல்லி வரச் சொன்னதும், தளவாய் தேவராச உடையாரையும் சறுவாதிகாரி பண்ணுகிற நந்திராசாவையும் பிடிச்சுக் காவல் வைத்து தன்வசம் ஒப்பிக்கிறது அல்லது வெட்டிப் போட்டுத் தன்வசம் ராச்சியம் பண்ணிக் கொண்டு கொடுத்தால் பாதி ராச்சியம் கொடுக்கிறோமென்றும், திரிச்சிராப்பள்ளி வாங்கிக் குடுத்தால் பாதி ராச்சியம் கொடுக்கிறோமென்றும், பவுன்சுடனே வருகுறதுக்கு ரோசு (நாட்படி) பதினய்யாயிரம் ரூபா கொடுக்கிறோமென்றும், பின்னையும் ஒடம்படிக்கைகள் சொல்லி யெழுதி அழைப்பிச்சானென்றும், அதினாலே நானாவும் மயிசூர் சீர்மை வந்து சேர்ந்தானென்றும், யினி மேல் யென்ன நடக்குமோ வென்று தெரியா தென்றும் அவ்விடம் விட்டு அறுக்காறும் பதினஞ்சாம் நாள் வந்து சேர்ந்தானென்றும் சேதி கேழ்க்கப்பட்டது.

முன் செஞ்சியிலே யிருந்த சுவரூப சிங்கு கூட்டமும் அய்யாயிரம் குதிரையுடனே கூட வந்திருக்கிறானென்றும் சொன்னார்கள்.

இதுவுமல்லாமல் நானா மயிசூரின் பேரிலே போனவர் சீராக் (Sira) கோட்டையும் வாங்கிக் கொண்டு, அதிலே யிருந்த சுபேதாரன் திலாபர் (திலாவர்) கானுக்கு அறுபதுனாயிரம் ரூபாயிக்கு சாகீர் விட்டுக் குடுத்து, மத்த பட்டனாங்களுக்கு எல்லாம் தம்முடைய மனுஷரைத் திட்டம் பண்ணி பந்து பஸ்துவாய் வைச்சுப் போட்டு, அப்பிறம் சாகிப் (அப்பால்) போனதாயும் சொன்னான்.

---

[1] இது பங்குனி 31 ஆக இருத்தல் வேண்டும் என்று Brown's Ephemeris தெரிவிப்பதாகவும், மே 9 வரை இப்படி ஒருநாள் கூட்டி எழுதப்பட்டுள்ளதாகவும் ஆங்கிலப் பதிப்பு கூறுகிறது. இது எவ்வாறு நிகழ்த்திருக்கக் கூடும் என்பது விளங்கவில்லை.

*1757 வருசம், ஏப்றல் மாசம், தேதி 10; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 2; ஆதிவாரம்*

இன்றைக்கு யெத்தனை பெரிய பண்டிகையாயிருந்தாலும் கோன்சேல் கூடி, பத்து பத்தரை மணி மட்டுக்குக் கலைஞ்சு போனார்கள். ஆனாலிந்த கோன்சேல் கூடினது, யிறைவாசநெல்லூரின் பேரிலே மறுபடி பவுன்சு அனுப்பிவிக்குற நிமித்தமா என்ன வென்று தெரியவில்லை.

மேஸ்தர் கிளேவிசு யிங்கே யிருந்து அஞ்சாறு கப்பலுடனே சொலுதாது மருந்து குண்டு வகையிரா சண்டை சாமான்கள் தயாறு பண்ணிக் கொண்டு முன் யிங்கிரேசுக்காரருது பங்காளத்திலே கல்க்கத்தா வென்கிற பட்டணத்தை மகுசுதாபாத்து (மூர்ஷிதா பாத்) நபாபு அசாயத்து கான் (Hasayat-Khan) பிடிச்சுக் கொண்டு, (பிற) கோட்டை முதலான பெத்திரிகளை யெல்லாம் யிடிச்சு மகுசூதாப் பண்ணி யிங்கிலீசுக் காரர்களை யெல்லாம் துரத்தி விட்ட நிமித்தியம் மேஸ்தர் கிளேவிசு முன் சொல்லப்பட்ட சண்டை (சாமான்கள்) முஸ்தீப்பு பண்ணிக்கொண்டு போனவர், பங்காளத்திலே, பிரான்சுறங்காம் (Firanjrana) என்றும் சந்திரநாகூர் என்றும் சொல்லுகிற (ஊரின் பேரிலே போயிருந்து கொண்டு) அந்தக் கல்க்கத்தாவைப் பிடிச்சுக் கொண்டதின் பேரிலே அந்த மகுசூதாபாத்து (?) நபாபுக்கும் யிவருக்கும் சமாதானமாய் யிவருக்கும் பதினாரு கிராமம் குடுத்து மேஸ்தர் கிளேவிசும் (Mr. Clivie) நவாபும் தலைப்பாகை மாத்திக் கொண்டதாயும் யிப்படி மெத்தவும் சினேகமாய்ப் போனார்கள் என்றும் ஒரு சேதி கேழ்க்கப்பட்டது.[1]

இதுவுமல்லாமல், அந்த நவாபைக் கைவசம் பண்ணிக் கொண்டு அவருடைய பவுன்சும் மேஸ்தர் கிளேவிசுனுடைய பவுன்சும் முஸ்தீப்பு பண்ணிக் கொண்டு, பிரான்சுக்காரருடைய பெத்திரியான சந்திரநாகூரை வாங்கத் தக்கதாக வருகுறார்களென்றும் ஒரு சேதி கேழ்க்கப்பட்டுது. அது நிமித்தியம் கோன்சேல்ப் பண்ணினார்களோ தெரியவில்லை. ஆனால் கிறமேணா (நாளடைவில்) விசிதமாய்ப்போம். (இது விளக்கமாகத் தெரிய வரும்)

இறைவாசநல்லூரிலே யிருக்கிற மீர் அப்துல் ரயிமான் யென்கிறவன் முதல் நாள் சண்டை பண்ணின போது அவனுக்குக் குண்டுக் காயம்பட்டு விழுந்து போனான் என்கிற சேதி கேழ்க்கப்பட்டுது. அதனாலே முசியே கில்லியாருடனே (நான்) இச் சேதியைச் சொல்லி, "யிவன் விழுந்து போன படியினாலே கோட்டை நம்முடயவர்களுக்குக்

---

[1] இங்கு இந்தப் பத்தியே பதிப்பாசிரியரால் மாற்றி அமைக்கப்பட்டுள்ளது. 'சந்திரநாகூரிலே கிளைவ் போய் இருந்து கொண்டு' என்ற கூற்றும் பொருத்தமில்லை.

கைவசமாகும். அவன் விழுந்து போகா விட்டாலும் நம்முடையவர்களுக்குக் கைவசமாகுறது ... அவனிருந்து வெகுசனங்களுக்கு நிற்பந்தமாயிருந்த படியினாலே அவன் விழுந்து போனது பீடை நிவாறணமாய்ப் போச்சு," என்றும் செனங்கள் சொல்லிக் கொள்ளுகிறார்களென்றும் பேச்சோடு பேச்சாய்ச் சொல்லி வைத்தேன்...

*1757 வருசம், அவறீல் மாசம், தேதி 11; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 3; சோமவாரம்*

இத்தனாள் காலத்தாலே முசியே லெபோம் ராமச்சந்திரய்யன் வகையிரா பேசிக் கொண்டிருக்கச்சே, பங்காளத்திலே யிருந்து ஒரு கப்பலாகிலும் வரயில்லை யென்று (துரை) கேட்டதுக்கு, முசியே லெபோம் யிருந்து கொண்டு, "இங்கிலீசுக்காரர்கள் பெகு மோசக்காரர்கள், ஆனபடியினாலே அவர்களுக்கு பங்காளத்திலே யிருந்த கல்கத்தா போனபோது நம்முடைய பிரான்சுக்காரர்களுக்கு ரொம்ப வந்தனை வழிபாடு உபசாரமாய்ச் சொல்லிக் கொண்டு, சீமையிலே சண்டை யானாலென்ன? நாம் யிங்கே யிருக்கிற பேர் சமாதானம் பண்ணிக் கொண்டுயிருக்க வேணுமென்று, இங்கே யிருந்து போன மேஸ்தர் கிளேவிசு ரொம்ப சினேகம் பாராட்டிக் கொண்டு வந்தவன், யிப்போ நவாபுக்கும் மேஸ்தர் கிளேவிசுக்கும் சமாதானமான பிற்பாடு யிப்போ இங்கிலீசுக்காரர்கள் யெப்போ (இங்கிலீசு) ராசா சண்டை பண்ணுகிறதற்கு ஆரம்பிச்சாரோ, நாமிவ்விடத்திலே ராசாவினுடைய ஒடுதியை மீறி சண்டை பண்ணாமல் நிறுத்தலாமா? சண்டை பண்ணித் தீரவேணுமென்று யிப்போ சொல்லிக் கொள்ளுகிற பேச்சும் அதுக்கான நடத்தைகளாய் நடக்கிறதும் யிப்படியிருக்கச்சே, நமக்கு யெப்படிக் கப்பல் வரும்?" யென்று யிப்படிப் பல பேச்சுகளாய் யிஷ்டட லாபமாய் பேசிக் கொண்டிருந்தார்.

இத்தை நாள் சாயங்காலம் முசியே சொபினேயும் சிறிது பேர் ஒப்பிசியேல்மார்களும் அலமாஞ்சு சொலுதாதுகளிலேயும் பிரான்சு சொலுதாதுகளிலேயும் முன்னூறு பேரும் மருந்து குண்டு சாமான்களும் முஸ்தீப்பு பண்ணிக்கொண்டு இறைவாச நெல்லூருக்குப் போனார்கள்.

*1757 வருசம், அவறீல் மாசம், தேதி 12; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 4; செவ்வாய்*

இத்தனாள் காலத்தாலே எட்டு மணிக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே முசியே லெறி கோவர்ணதோருடனே கோவில் பூசைக்குப் போக முசியே பெடுத்தல்மீ வகையிராக்கள் கோன்சேலியோர்கள் ஒப்பிசியால்மார்கள் இறைவாசநெல்லூர் மீர் அப்துல் ரயிமான் பேரிலே சண்டைக்குப் போனவர்கள் போக மைத்தப் பேர்களும்

கோயிலுக்குப் போய் பூசை கேட்டு மேல் வீட்டின் பேரிலே வந்தார்கள். அப்போ நானும் போய் ஆசாரம் பண்ணியிருக்கையிலே, முசியே லெறி குவர்ணதோருடைய வேலைக்காரன் கந்தப்பன் என்கிறவன் நாங்களிருக்கிறவர் களெல்லாரும் கேழ்க்க, முத்து சேர்வைக்காரன் என்கிற கிறிஸ்துவனை யழைத்து, "நீ போய் குண்டூர் பாலி செட்டிக்கிச் சொல்லுகிறது. உனக்குப் பல்லக்கு ஏற ஆர் உத்திரவு கொடுத்தார்கள்? ஆர் உத்தாரத்தின் பேரிலே நீ பல்லக்கு ஏறினாய்? சதுரங்கப் பட்டணத்திலிருந்து வரச்சே நீ யெப்படி பல்லக்கிலே யேறி வந்தாய்? இப்பவும் நீ பல்லக்கின் பேரிலே ஏறி ஊரிலே திரிஞ்சாலும் வெளியே போறோமென்று குண்டு சாலைக்கு அப்பிறம் போகச்சே யேறிப் போனாலும் பல்லக்கு முதலானது களெல்லாம் ஒடிய அடிக்கிறது மல்லாமலும், உன் முழங்காலும் தலையும் உடையப் போமென்று சொல்லுகுறது மல்லாமல், கோட்டைக்குக் கூட நீங்கள் கால்நடையாய் வரக்கவையில்லை யென்று துரை சொல்லச் சொன்னாரென்று சொல்லிப் போட்டு வா. வில்லியநெல்லூ(ர் வாசலில் உள்ள சேரு வைக்காரனுக்கும்) குண்டூர் பாலிசெட்டி கூட்டம் பல்லக்கு ஏறி வந்தார்களே யானால் பல்லக்கு முறிய அடிக்கிறதுமல்லாமல் அவர்களையும் அடித்துக் காவல் வைக்கச் சொல்லி அனுப்பு," என்று சொன்(னான்).

(அப்பால்) யென்னைப் பார்த்து, "முன் ஸ்ரீரங்கம் குத்தகை வாங்கிறபோது யிவர் ரொம்ப ஒடித் திரிஞ்ச(சார்). தலை விசுறுகிறோமே, யினி மேல் கழுத்து நோவு காணு மென்று தோத்தாமல், வாய் கொள்ளாதத் துகையாய்ச் சொல்லிப் போட்டு பல்லக்கேறிக் கொண்டு போனான். அதொன்றும் துரைக்குக் கொடுத்தவனல்ல. அதினாலே யிப்போது (இது) சம்பவிச்சது ... பெகு சின்ன மனுஷன், ஆய்க்காரி (அகங்காரி), பெடாய் கெொறு வதறுபோத் (வீண் டம்பம் அடித்துக் கொள்ளுபவன்) இன்னம் அவனுக் கனேகம் சம்பவிக்கப் போகுது," என்றும் யிந்தப்படிக்கி அனேகஞ் சொன்னான். (அதை நான் துரையுடனே சொன்னபோது), அந்த உச்சாகத்திலே துரை பத்திலே பதினைந்துலே உங்கள் பிரஸ்தாபமாய் யென்னைக் கே(ட்டார்). நான் சத்தியமாய்ச் சொல்லுகுறேனென்று (பலவற்றைச் சொன்னேன்). அதற்குத் துரை சொன்ன தென்ன வென்றால், ரங்கப்பிள்ளை யென்ன முன்னையைப் போலே சிலவழிக்கிறானா? அமுல்தாரர்களுக்கு காயித மெழுதிக் கொண்டிருக்கிறானா? யிப்படியாகக் (கேட்டார்). அதுக்கு நான் சொன்னது: "முன் சீமா மூலமிருக்கச்சே அதுக்குத் தக்கன சிலவு நடத்தினார். முசே லெனுவார் கோவர்ணதோர், முசே தும்மா குவர்ணதோர் முசே துப்பிளேயிக்சு கொவர்ணதோர் துரைத்தனத்திலே நபாசாகர்கள் (?) சேவுகர் சிலவுகளிருக்கிற திட்ட மென்னமோ, அந்தப் படிக்கித் தானே யிப்போ நடத்திக் கொண்டு வருகிறார். நானெப்படி உங்கள் காரியத்திலே அனுகூலமாய்ச் சொல்ல

வேணுமோ அந்தப்படிக்கி நான் சொல்லுகிறேன். அப்படி நான் அனுகூலமாய்ச் சொல்லாமல் வித்தியாசமாய்ச் சொன்னால் நான் கெட்டுப் போவேன்... ஆராரோ உங்கள் பேரிலே கோபம் வர அவருக்குச் சொன்னாலும் அவருக்கு உங்களுடைய பயம் மனதிலே கெட்டியாய்த் தோத்தியிருக்கிறது. நானறிவே," னென்று சொன்னான். அது வெல்லாங் கேட்டு, களவினாலாகிய வாழ்க்கை அளவறிந்தாவது அதுபோலக் கெடு[1] மென்று சொல்லி யிருக்கிறபடிக்கி, பொய்யும் மெய்யும் நீளத்தகும்[2] யென்று சொல்லியிருக்குதே ஆனபடியினாலே கிறேமேணா (உண்மை) யெல்லாம் விசிதப் படுமே யல்லாமல் விசிதப்படாமல் போகத் தக்கதில்லை," யென்று சொல்லிப் போட்டு நான் அப்பால் ஒன்றுஞ் சொல்லாமலிருந்தேன். யிதிலே துரை பார்க்கிறாரென்று யிவன் அப்பிறம் போனான். நான் பின்னையும் அரை நாழிகை தேச காலமிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு யென் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

ஆனால் பட்டணத்திலே நாளுக்கு நாள் ஒரு விபரீதமாய்ப் பிறக்கிறதும் நடக்கிறதும் பார்த்தால், முன் சீத்தாராம சோசியர் ஈசுவர வருசம் முதற்கொண்டு நடக்கப் போகிற ஏஷியத்துக்குச் சரிக்கட்டிக் காணுகிறது. ஆற்காடு, சென்னப்பட்டணம், திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், கோல்கொண்டை, டில்லி வகையிராவுகளுக்கு யோகம் யிறக்கம் காணுகிறது. யிந்த நாளையிலே கண்ட விபரீதங்களும் அனித்தியமும் அக்கிரமங்களும் முதலான துர்நடத்தைகள் நடக்கிறபடியினாலே, என்னமோ நடக்கப் போகுதென்று யோசனை பண்ணினதுமல்லாமல், இந்த வேளையிலே சுவாமி என்னை அப்பிறம் நீக்கி வைத்தானே யென்கிற உச்சாகமொன்று அனுபவத்தை யெல்லாம் பார்த்து நிஷ்கருஷைப் (முடிவு) பண்ணிக் கொண்டேன்.

இத்தனாள் மீர் அப்துல் ரயிமான் யென்கிறவன் முன் காயப்பட்டிருந்துதே, அந்தக் காயம் சொஸ்தப் படாமல் விழுந்து போனானென்றும், அங்கே யிருக்கிற குதிரைக்காரரெல்லாம் ஓடிப் போனார்களென்றும், அந்தக் கோட்டை யிப்போ நமக்குப் பிடிக்க சாத்தியமா யிருக்குதென்று மிப்படி யாக முசியே தொத்தேல் காகிதம் துரைக்கு வந்ததாய் சொல்லிக் கொண்டார்கள்.

---

[1] 'களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து ஆவது போலக் கெடும்' என்ற குறட்பாவினைப் பிள்ளை இங்கு எடுத்தாண்டுள்ளார். பிரதி எடுத்தோர் கையில் அது இப்படி சிதைவு பட்டுள்ளது.

[2] பழம் பாடல் ஒன்றின் ஈற்றடியோ, முதுமொழி ஒன்றோ ஆக இது இருக்கலாம். இதுவும் சிதைந்து எழுதப்பட்டுள்ளது.

*1757 வருசம், அப்றீல் மாசம், தேதி 13; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 5; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே முசியே லெறி குவர்ணதோர் அவர்கள் மேல்வீட்டின் பேரிலே யிருக்கச்சே, நான் போய்க் கண்டு சந்திச்சு ஆசாரம் பண்ணிப் போட்டு, அங்கே அரை நாழிகை தேசகாலம் யிருந்துப்போடடு, அப்பால் பிடவைப் பார்க்கிற சாலையிலே வந்திருக்கச்சே கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், முந்தாம் நாள் மூணாந் தேதி சாயங்காலம் முசியே சொபினே வகையிரா முன்னூறு பேர் சொலு தாதுகளுடனே இறைவாசநெல்லூர் மீர் அப்துல் ரயிமான் பேரிலே போறோமென்று போனார்களே, அங்கே போகயில்லை யென்றும், வந்தவாசிக் கோட்டையின் பேரிலே போனார்களென்றும் கேழ்விப்பட்டது.

*1757 வருசம், அவ்றீல் மாசம், தேதி 14; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 6; குருவாரம்*

இத்தனாள் காலமே யேழு மணிக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே முசியே லெறி கோவர்ணதோரும் முசியே சொற்னேயும் ஒப்பிசியால்மார்களும் கோன்சேல் வீட்டிலிருந்து கதவைச் சாத்திக்கொண்டு ஆரையும் வரவேண்டா மென்று திட்டம் பண்ணிப் போட்டு, அவர்கள் ஆலோசனை பண்ணுகிறார்களென்று வெளியிலே சொல்லிக் கொண்டபடியினாலே, நான் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன். (ஒரு) இன்சினீர் கோட்டை ஸ்தலங்களுடைய காகிதப் படங்கள் யெடுத்துக் கொண்டு போனதாயும், அதுவெல்லாம் பார்த்து யேதோ ஒரு திட்டம் கோட்டை ஸ்தலங்களை யெத்தனம் பண்ணுகிற நிமித்தியம் ஆலோசனை பண்ணுகிறார்களென்றுஞ் சொன்னார்கள்.

இந்தச் சாடை பார்த்தால் ஒரு சென்னப்பட்டணம் கோட்டையாவது திரிச்சிராப்பள்ளிக் கோட்டையாவது பிடிக்கிற சாடைக்கு ஆலோசனை பண்ணுகிற சாடையாய் யென் புத்திக்குத் தோணினதை யெழுதி வைத்தேன். அது கிறமேணா (பின்னால்) அறியவேண்டும்.

*1757 வருசம், அவ்றீல் மாசம், தேதி 16; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி (8); சனிவாரம்*

இத்தை நாள் காலத்தாலே கேழ்விப்பட்ட சேதி: இறைவாசநல்லூரிலே யிருந்த மீர் அப்துல் ரயிமான் செத்துப் போய் விட்டானென்றும், அவன் தம்பி முதுலான பேர்களும் குதிரைச் சுவார்கள் வகையிரா யிருந்தவர்கள் தட்டு முட்டு யிருந்ததுக ளெல்லாம் யெடுப்பிச்சுக் கொண்டு குஞ்சு குழந்தைகளை சமேத்து பிறப்பட்டுப்

போய் விட்டார்களென்றும், போன பிற்பாடு சமீபத்திலே தியாகதுற்கத்திலே யிருந்தவர்கள் வந்து இங்கிலீசுக் கொடியைக் கோட்டையிலே போட்டுக் கொண்டு பத்து பேர்கள் உளுக்கார்ந்து கொண்டு, நாங்கள் இங்கிலீசுக்காரர் மனுஷர்களென்று யிருந்த விடத்திலே, நம்முடையவர்கள் திருக்கோவிலூர் போய்ச் சேர்ந்து மறுபடி திருவெண்ணைநெல்லூருக்கு வந்து மறுபடி இறவாசநெல்லூருக்குப் போகவேணுமென்று கபுறு விசாரிச்சுக் கொண்டிருக்கிற விடத்திலே, மீர் அப்துல் ரயிமான் செத்துப் போய் விட்டானென்றும், கோட்டை யிலிருந்தவர்கள் யெல்லாரும் போய் விட்டார்களென்றும் சேதி கேழ்விப்பட்டு, அவ்விடத்துக்கும் யெழுதி அனுப்பிப்போட்டு அவ்விடத்துக்கும் பிறப்பட்டுப் போய் கோட்டைக்கி சமீபத்திலே யிறங்கி உள்ளே போய்ப் பார்க்கப் போனால் பத்துப் பேர் கோட்டையிலே யிருந்துக் கொண்டு இங்கிலீசுக் கொடியையும் போட்டுக் கொண்டு யிருக்கிறவர்கள்,நாங்கள் இங்கிரீசுக்கார மனுஷர்க ளென்று சொன்னவிடத்திலே, நாங்களவனுடனே சண்டை போட்டு கோட்டையைக் கட்டவந்தவிடத்திலே, அவன் சண்டையிலே செத்துப்போய் அவன் மனுஷரெல்லாம் ஓடிப்போய் விட்ட விடத்திலே, நீங்கள் வந்து கொடிபோட்டுக் கொண்டு யெங்களுதென்று சொல்லுகிற தேதென்று கேட்டதுக்கு, "நாங்கள் கோட்டைக்கும் சீமைக்கும் யெசமான்கள், பொல்லாதவனான அவன் ஓடிப் போய்விட்டான்," என்று சொன்னதுக்கு, உங்கள் கொடியை வாங்கிப் போட்டு நீங்கள் போங்களென்று போகச் சொன்னதுக்கு, பலவந்தமாய்த் துரத்திவிட்டால் நாங்கள் போறதே அல்லாமல் கொடியை வாங்கிப் போகத்தக்கதில்லை யென்று சொன்னதாயும், அவர்களைத் துரத்தி விட்டுக் கொடியையும் வாங்கிப் போட்டு வெள்ளைக் கொடியைப் போட்டு யெழுதியனுப்பினார்கள் என்றும், (ஆனால்) மனுஷர் மாத்திரம் போய்விட்டார்கள், கொடி போட்ட வாக்கிலே யிருக்கு தென்றும் சொன்னார்கள். இது நிமித்தியம் கோன்சேல் கூடினார்களென்று தோத்துது. முசியே சொபினே வகையிரா பவுன்சு புறப்பட்டு போனது, ஒடையார்பாளையம், துறையூர், ஸ்ரீரங்கம் அந்த மட்டுக்கும் போனதாயும், அதுக்கு கோன்சேல் பண்ணினதாயும் தோத்துகிறதென்று கிறமேணா தெரிய(வரும்). முதல் எழுதின (காரணமே சரியென்று) தோத்துது. யிதன் பேரிலே யெல்லா யோசனையும் நடந்திருக்குமென்றே யெண்ணினேன்.

***1757 வருசம், அவ்றில் மாசம், தேதி 19; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 11; செவ்வாய்***

இத்தனாள் காலமே குருவப்பச் செட்டியார் வந்து சின்னய்ய செட்டி தம்பி திருவேம்பலச் செட்டி வீட்டுக் கலியாணத்துக்குத் துரையவர்களுக்குப் பாக்கு வைக்கிறதுக்கு சகலரும் முஸ்தீப்பாக்

கும்பினீர் வர்த்தகர் யெல்லாரும் கூட வந்திருக்கிறார், தேவரீரவர்களும் வந்து துரையவர்களுக்கு பாக்கு வைப்பிக்க வேணுமென்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது, "மெய்தான், நாம் வருகுறோம். யிப்போது கந்தப்ப முதலி பிரபஞ்சம் துரைக்கிட்ட நடக்கிறது வெகுவிந்தையாய் நடக்குறதே. முன்னாலே நயினார் வீட்டிலே கலியாணத்துக்குப் பாக்கு துரைக்கு வைச்சவிடத்திலே, கந்தப்ப முதலி பாக்கு தேவையில்லை யென்று துரையவர்களைக் கொண்டு சொல்லி வைப்பிச்சு, அதின் பேரிலே தான் நயினாருடனே துரை பாக்கு யெடுக்கிறதுக்கு யென்ன குடுக்கிறாயென்று பேசி, அத்தனை யித்தனை யென்று துகை வகை பேசினோம். அதற்கு ரொம்ப போராடி அன்னூறு ரூபாய் கொடுக்கச் சொல்லித் தீத்து, அதன் பிறகல்லோ பாக்கு வைச்சதை யெடுக்கச் சொன்னான். அப்படி அல்லவா கந்தப்ப முதலி இப்போ நடத்திவிக்கிறான். இவர்கள் கலியாணம் பண்ணுகிற சேதி பத்து நாளைக்கு முன்னே தானே கந்தப்ப முதலி கேட்டு, இவன் கலியாணம் பண்ணுகிறானே இவன் கலியாணப் பந்தலிலே அதுக்கேத்த பேராய் ஒருத்தரை அனுப்பிவிச்சு (தான் போகையில்) தேவடியாள்கள் யெழுந்திருக்கவில்லை யென்றும், தேவடியாக்கள் கூட அவனையும் கூடக் காவலில் வைப்பிக்கிறே னென்றும், பின்னையும் தப்புந் தாறுமாய் கந்தப்ப முதலி சொல்லிக் கொண்டிருக்கிற சேதி திருவம்பலச் செட்டி கேட்டு இது வரைக்கும் கும்பினீர் வர்த்தகர், துரைக்கு பாக்கு வைக்கிறதும் மாத்திரமே யல்லாமல் மைத்தப்படி பணங் காசுகள் கொடுக்கிறதுண்டா? அப்படி யிருக்க யிப்போது யிவன் இந்தப் பட்டணத்திலே அனேகங் காரியங்கள் அன்னியாயங்களாய் நடத்தி வைக்கிறான். அப்படி யெங்களிடத்திலே நடத்திவிக்குறா னென்றால் நாங்கள் அப்படி மோசம் போறதில்லை. மகாராஜ ராஜஸ்ரீ பிள்ளை அவர்கள் மாத்திரம் தயவு பண்ணி கூட வந்து பாக்கு வெத்தலை வைப்பிச்சால் சரி. நான் சின்ன துரையையும் முசியே திலார்சையும் கூட்டி வந்து வைக்குறேன். அப்போது கந்தப்ப முதலி அன்னியாயம் எங்கே நடக்குதோ பார்க்குறே, னென்று திருவேம்பலச் செட்டி சொன்னா ரென்று ·முன்னாலே நீர் வந்து சொன்னீர். இப்போ அவர்களி ரெண்டு பேரும் – சின்ன துரையும் முசியே திலார்சும் – "எப்போதும் நடக்கிற மரியாதைப்படிக்கி ஸ்ரீஸ்ரீ பிள்ளை அவர்கள் முன்பாகக் கொண்டு போய் வை. அவரெடுத்துக் கொண்டு விட்டால் எடுத்துக் கொள்ளட்டும், யெடுத்துக் கொள்ளாவிட்டால் அதினாலே உனக்குக் குத்தமில்லை" யென்றும் சொன்னார்களென்றும், அவர்கள் ரெண்டு பேரும் வரயில்லை யென்றும், நீங்கள் மாத்திரம் அங்கே வந்திருந்தால் கொண்டு வந்து வைக்குறோமென்றும் சொல்லுகிறீரே. அப்படி கொண்டு வந்து வைத்த விடத்திலே அவர் யெடுத்து(க் கொள்ளாமல்) வேண்டாமென்றால் அது வந்து மெத்த யிளப்பமாகுமே! நாம் தள்ளிச் சொல்லுகிறதுக்கு நம்முடைய யிடத்திலே யவர் மோடியாய்

பேச்சுக் கூட பேசாமல் முகம் கூட நன்றாய்ப் பாராமல் அப்படி யிருக்கிறாரே, அதினாலே நாமுஞ் சொல்லைத் தள்ளிச் சொல்லப் போகாதே. திருவேம்பலச் செட்டியாகிலும் அவருக்குச் சமாதானம் வரத்தக்கதாய்ப் பத்துப் பணம் கொடுக்கத் தக்கதில்லையே. கந்தப்பனானால் அவருடைய மரியாதையும் நசரையும் கெடுத்து யிப்படி பண்ணிவைத்து யிருக்கிறானே இதெக்கெப்படி?" யென்று குருவப்ப செட்டியுடனே நாம் சொன்ன விடத்திலே, குருவப்பச் செட்டி அதுக்குச் சம்மதியாய் சொல்லுகிறதுக்கு வேறே தோத்தாலே யிருந்தபடியினாலே, அதின்பேரிலே, நாமும் கும்பினீர் வர்த்தகரும் நம்முடைய கையின் கீழே யிருக்கிற பேர் (களும்) போயிருந்து, வைப்பிக்க வேண்டிய விகிதம் (நடப்பிப்போம்). அப்பாலே நடக்கிறதுக்குத் தக்கதாய்ப் பார்ப்போம். நாமும் கோட்டைக்குப் போறோம். அவர்களையும் பாக்குக் கொண்டு வரச் சொல்லு," மென்று குருவப்பச் செட்டி(யிடம் சொல்லி), திருவேம்பல செட்டியை (பாக்கு, வெத்திலை கொண்டு வர) அனுப்பிவிட்டு, நாம் கோட்டைக்குப் போய் மெத்தைமேலே போனோம். திருவேம்பலச் செட்டியும் கும்பினீர் வர்த்தக(ரும்) கூட பாக்கும் கொண்டு வந்தார்கள். அப்போ துரையவர்கள் ஒண்டியாய் தென்பிறத்து காம்பிராவிலே வந்தார். யிது சமைய மென்றும் கும்பினீர் வர்த்தகர் பாக்கு கொண்டு வந்து துரை முன்னே வைத்தார்கள்...

அப்போ துரையவர்கள், இதே தென்று யென்னைப் பார்த்துக் கேட்டார். அப்போ நாம், "திருவேம்பலச் செட்டி வீட்டிலே கலியாணம் உங்களுக்கு அறிக்கை பண்ணி வைக்கிற நிமித்தியம் பாக்கு வெத்திலை கொண்டு வந்து வைத்தார்கள்," யென்று சொல்லி, ஒரு பூச்செண்டு யெடுத்து துரை கையில் கொடுத்தோம். அப்படியோ வென்று சொல்லி பூச்செண்டை வாங்கிக் கொண்டு ஒரு மாம்பழத்தைக் கையிலே யெடுத்து இது நன்றாய் இருக்குமா என்று கேட்டார். "இது மாம்பழம் அகாலத்திலே பழுத்தது, ஆகையினாலே யிது ருசி யாயிராது. மேற்காத்து திரும்பின பிறகு பழுக்கிற பழங்கள் ருசியாயிருக்கு," மென்று சொன்னோம். மெய்தானென்று அந்தப் பழத்தைத் திரும்பவும் தட்டிலே வைத்தார். அதன் பிறகு அந்தத் தட்டுகளை யெடுத்துக் கொண்டு உள்ளே போகச் சொன்னோம். யெடுத்துக் கொண்டு போகையில் துரை தடை சொல்லாமல் சும்மாயிருந்தார். அதன் பிறகு கந்தப்ப முதலி வந்தான். அவனுடனே முன்னாலே பட்டணத்திலே நடந்ததும் இப்போ நடக்கிறதுகளும் சீத்தாராம சோசியர் சொன்னதுகளும் இப்படி பேசிக் கொண்டிருக்கிறதை துரை பார்த்துக் கொண்டிருந்தார்.

இப்படி யிருக்கையிலே புகையிலைக் கிடங்கு பாப்புராயன் வந்து சின்ன துரை அழைச்சு வரச் சொன்னாரென்று சொன்னான். நல்ல

தென்று நாம் சின்ன துரை அண்டைக்கு வந்து கண்டவிடத்திலே, சின்ன துரை "வினாயகப் பிள்ளை வீட்டுக் கலியாணம் பார்க்க நீர் ஏன் போகவில்லை?" யென்று கேட்டார். அதுக்கு, "நாம் போகவில்லை. அவரும் நம்முடைய வீட்டுக் கலியாணத்துக்கு வரத் தேவையில்லை," யென்று சொன்னோம். அது எதினாலே யென்று கேட்டார். "இந்தப் புதுச்சேரியே பிரான்சுக் கொடி விழுந்த நாள் முதல் யெனக்கு முன்னேயும் இந்தக் குடுத்தியோர் உத்தியோகத்துக்கு மனுஷர் யிருந்தார்கள். எனக்குப் பிற்காலமும் மனுஷருண்டாவார்கள். யெனக்குப் பின்னே வருகிற பேர் யென்ன சொல்லுவார்களென்றால், யெனக்கு முன்னிருந்த பேர் இந்தப் பட்டணத்திலுள்ள செனங்கள் இந்த உத்தியோகத்துக்குண்டான மகிமை மரியாதை சகலமும் தப்பாமல் நடக்கும் படியாய் நடத்தி விச்சுக் கொண்டார்கள். யின்னார் நாளையிலே அந்த மகிமைக் கெல்லாம் தாழ்வு வந்து போச்சு தென்று சொல்லிக் கொள்வார்கள். யிப்போ வானால் மகத்தாயிருக்கிற பேரும் பெருங் காத்து அடிக்கிறபோது நாம் வெளியிலே பிறப்பட்டால் மோசம் வரும், யேதாகிலும் உபத்திரவம் வருமென்று நாம் காலத்தைப் பார்த்துக் கொண்டு, யிது பொல்லாத வேளை யென்று வெளியே பிறப்படலாகா தென்று என் வீட்டுக்குள்ளே நான் யிருக்கிறேன். தினம் துரை யண்டைக்குப் போறது, சலாம் பண்ணுகிறது, வீட்டுக்குப் போறது, யேதாகிலும் சேதிகளுண்டானால் உமக்குச் சொல்லி அனுப்பிவிக்கிறேன். நீங்கள் அழைப்பிச்சால் உங்களண்டைக்கு வருகுறேன். யிவ்வள வன்னியிலே மத்தப்படி நான் ஒருத்தர் வீட்டுக்கும் போறதில்லை," யென்று சொன்னேன். அதுக்கு நீர் முசே புலோ (பொயிலோ) வீட்டுக்குப் போறதில்லையா வென்று கேட்டார். அதுக்கு, "நீர் நன்றாய் விசாரியும். நானொருத்தர் வீட்டுக்கும் போறதில்லை," யென்று சொன்னேன். அதுக்கு வினாயகப் பிள்ளை தம்பிமார் வீட்டுக் கலியாணத்துக்கு வந்தழைத்த விடத்திலே நீர் பாக்கு வைத்திலை குடுக்கவில்லையாம்" யென்று கேட்டார். கலியாணத்துக்குப் பாக்குவைச்சு அழைக்குற பேருக்கு பாக்கு வெத்திலை குடுக்கிற சட்டமில்லை. பாப்புராயனைக் கேளுமென்று சொன்னேன். அதுக்கு பாப்புராயன் மெய்தானென்று சொல்லி (மேலும்) சொன்னது : "யிந்த ஊருக்குத் தமிழருக்கெல்லாம் நீங்கள் குவர்ணதோராயிருக்கிறது. நாங்கள் ஒரு வேளையிலே தப்பி தங்களாய் நடந்து, அறிஞ்சு அறியாமல் நடந்தோமென்று உங்கள் காலிலே விழுந்தால் நீங்கள் பொறுக்க வேண்டியதாமே," யென்று சொன்னார். அப்போது சின்ன துரை, "அப்படித் தமிழர்களுக் கெல்லாம் கோவர்ணதோரானதினாலே அவர்களறிந்து அறியாமல் நடந்து, மறுபடி உங்கள் காலிலே விழுந்தால் நீர் பொறுக்க வேண்டியது உமக்கு அழகு. யிப்போதும் வினாயகப் பிள்ளை வருகுறான்," என்று சொன்னார். அதுக்கு "நான் அவனோடே சரியாய் உங்கள் முன்பாக

உத்தாரஞ் சொல்லத் தக்கதில்லை. நீங்கள் அப்படியே சொல்லத் தேவையில்லை," யென்று சொன்னேன். நீர் ஆர் வீட்டுக்கும் போற–தில்லையா வென்று கேட்டார். "பாபு ராயனைக் கேளும். யிந்த ஊருக்குள்ளே ஒரு கூலிக்காரன் முதல்க் கொண்டு வர்த்தகர் பெரிய மனுஷாள் வரைக்கும் ஆர் வந்து யெங்களை வீட்டுக்கு வர வேணுமென்று அழைக்குறார்களோ அவர்கள் வீட்டுக்கெல்லாம் நான் போறது. அவர்கள் யெந்த மரியாதை நடத்த வேணுமோ அந்த மரியாதை நடப்பிப்பார்கள். மரியாதை நடவாத யிடங்களிலே லெக்ஷாந்திரம் வந்தாலும் நாமவன் வீட்டுக்குப் போறதில்லை," யென்று சொன்னதுக்கு, சின்ன துரை நியாயந்தானென்று சொன்னார்.

அதன் பேரிலே வினாயகன் வருகுறதாய் சாடைகண்டுது. உடனே நாமிருக்கிறதில்லை யென்று சின்ன துரையுடனே யெல்லா சேதியையும் பிறகு வந்து சொல்லிக் கொள்ளுகிறேனென்று அனுப்பிவிச்சுக் கொண்டு வருகுறதிலே, அவன் வந்து உன் காலிலே விழுந்து அழைச்சால் நீர் மானம் பொறுக்க வேண்டியது யென்று சொன்னார். அதுக்கு நல்லதென்று சொல்லாமல், கூடாதென்றும் சொல்லாமல் சாடையாயி பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

அங்கே திருவேம்பலச் செட்டியார் வந்து, "சின்ன துரைக்குப் பாக்கு வெத்திலை வைக்க வேணுமே, நீங்கள் கூட வரவேணு," மென்று அழைச்சார். "தேவையில்லை, சின்ன துரையுடனே சொல்லிப்போட்டு வந்திருக்குறோம். நீங்கள் போய் வைச்சுப்போட்டு வாருங்கோ," ளென்று அனுப்பிச்சோம். அந்தப்படிக்கி அவர்கள் கொண்டு போய் வைச்சார்கள். அப்போ சின்ன துரை யிருந்து, "துரை பாக்கு வெத்திலை எடுத்துக் கொண்டாரா?" யென்று கேட்டார். எடுத்துக் கொண்டாரென்று சொன்னார். அதுக்கு, "நீங்கள் பிள்ளைக்குப் பாக்கு வெத்திலை வைக்குறதுண்டோ?" வென்று கேட்டார். அதுக்கு கும்பினீர் வர்த்தகர் சொன்னது, "தமிழருக்கு யெல்லாம் அவர் கோவர்ணதோர். உங்களுக்கெப்படி வைக்குறோமோ அந்தப்படிக்கி அவர்களுக்குக் கொண்டு போய் பாக்கு வைப்போம். அவர்களும் தயவு பண்ணி கலியாணத்துக்கு வருவார்கள். வந்தவிடத்திலே நாங்கள் யெந்த மரியாதையாய் நடக்க வேணுமோ அந்த மரியாதை தப்பாமல் நடப்போம்," யென்று சொல்லிப் போட்டு, அவர்கள் வந்து நடந்த சேதி நம்முடனே சொன்னார்கள். அதன் பிறகு நாம் வீட்டுக்கு வந்தோம்.

சாயங்காலம் சின்ன துரை கிட்ட நடந்த சேதி யெல்லாம் முசே பொலே கேட்டு, அவர் துபாசியை நம் மண்டைக்கு அனுப்பிவிச்சார். அவன் வந்து சொன்ன சேதி : "யிந்த வினாயகன் முசே புலோவுக்கு பாக்கு வைக்குறதுக்கு ராமச்சந்திரராயன் முதலான பேரைக் கொண்டு

முசே புலோவுக்கு ராச வட்டம் (மற்ற செய்திகள்) பேசி வைச்சான். அதுக்கு முசே புலோ நம்மண்டைக்கு வரத் தேவையில்லை யென்று சொல்லி அனுப்பிவிட்டார். அதன் பேரிலே ஒரு நாளைக்கு அஞ்சு மணிக்கித் தானே வினாயகன், முசே புலோ (வெறும் மேல் சட்டையுடனே) உலாத்திக் கொண்டு யிருக்கையிலே, வாசல் திறக்கப் பார்த்து உள்ளே வந்து, பாக்கு வைச்சு, "ஆண்டவனே நான் உங்கள் அடுமை (அடிமை). யென் பேரிலே கோபம் பண்ணினாலெப்படி? தயவு பண்ணி வரவேணு," மென்று சொன்னான். அப்போ முசே புலோ சொன்னது : "நீயென்ன, உன் உத்தியோகமென்ன? உன் மட்டிலே நீ யிருக்க வேணும். கும்பினீர் உடமையைத் திருடினால் அடக்கமாய் வைச்சுக்கொண்டு நீ (பணிவோடு) யிருக்கவேணும் ... யெனக்கு அதிகாரம் வந்தால் அந்த நாழிகை யுன்னைக் கொண்டு போயி தூக்கிலே போடுவேன், போ," என்று பாக்கை யெடுத்துக் கொண்டு போகச் சொன்னார். அப்போ அவன் அந்தப் பாக்கு வெத்திலையை அம்மாள் கிட்ட குடுத்துவிட்டுப் போறே னென்று சொன்னான். அவளுக்கு புகையிலைக் கிடங்கிலே வேண வெத்திலை கிடக்குது யென்று போகச் சொன்னார்.

பிறகு சின்ன துரை வீட்டிலே நடந்த சேதி யென்ன வென்று கேட்டு வரச்சொன்னாரென்று (முசியே பொலோவின் துபாசி) சொன்னான். அப்போ நாம் அவனுடனே துரையவர்களுக்குப் பாக்கு வெத்திலை வைச்ச சேதியும், சின்ன துரைகிட்ட வினாயகன் நடந்த சேதியும் பிரஸ்தாபங்களும் யெல்லாம் வயணமாயிச் சொல்லி அனுப்பிவிச்சோம்.

இதெல்லாமல், (இன்று) கேழ்வியான சேதி: (இங்கு வந்துள்ள) நானா வைக்கீல் வந்து சொன்ன சேதி: மயிசூரிலே (ராசாவானவர்) தளவாயி நந்திராச வய்யன் (மகனான) நேத்துக் கொண்ட பிள்ளையையும் கூடக் கூட்டிக் கொண்டு, சத்தியமங்கலத்துக்கு ரெண்டாயிரம் குதிரையுடனே போயிருக்குறாரென்றும், அப்பால் பாலக்காடு சேரிக்குப் (பாலகட்சேரி) போறவராயிருக்கிறாரென்றும், நந்திராசாவானால் கெடியிலே காவல் பண்ணியிருந்த பிரதானி பண்டிதரை ஸ்ரீரங்கப்பட்டணம் கோட்டைக்குள்ளே வந்து போட்டுக் கொண்டு, நானா (கிட்டே) வந்தால் துரையையும் பிரதானி பண்டிதரை(யும்) யெல்லாரையும் வெட்டி யெறிஞ்சு போட்டுத் தானும் சாகிறேன் என்று யிருக்கிற தாகவும், நானா குதிரை நாற்பதினாயிரம் வந்து கோலாலம் (Kolala) வரைக்கும் சப்தி பண்ணினார் (பிடித்துக் கொண்டார்கள்) என்றும், நானா மயிசூர் செயம் பண்ணிக் கொண்டு ஆற்காட்டிலே யிந்த வருஷம் சாகுனி (முகாம்) பண்ணப் போறானென்றும் கேழ்க்கப்பட்டுது.

துரையின் பேரிலே துறையூரான் தாயாதிகள் தஞ்சாவூரிலே மனோசியப்பா முகாந்திரமாய் பெலன் சேர்த்துக் கொண்டு துரையின்

(துறையூரின்) பேரிலே வருகுறார்களென்கிற சேதி தொரை கேட்டு, ஸ்ரீரங்கம் கும்மாந்மாமுக்குத் தாக்கீதுகளாய்க் காயிதம் யெழுதி, இங்கிரேசுக்காரரும் தஞ்சாவூராரும் அந்த வழிப் போகாமல் (தடுக்க வேணுமென்று) யெழுதி அனுப்பிவிச்சதாய்க் கேழ்க்கப்பட்டுது.

யிதல்லாமல், உடையார்பாளையம், அரியலூர் பேஷுக்கார் (பேஷ்கஷ்) நிமித்தியம், துறையூர் வைக்கீல் கோனேரி நாயக்கரைப் பயணம் பண்ணி, அவர் பிறகே யிருபது பேர் பாறுக்காரரையும் கூட்டித் தொரை அவர்கள் அனுப்பி விச்சதாகவும், அவர் பரணி கார்த்திகை கழிச்ச உடனே பயணம் போறாரென்று கேழ்க்கப்பட்டுது.

இறைவாசநெல்லூர் மீர் சாயபு செத்துப் போன உடனே அவன் தம்பி இறைவாசநெல்லூரை விட்டு வேலூருக்கு போயிவிட்டதாகவும் இங்கிலீசுக்காரர் கொடி கொண்டு போய்ப் போட்டார்களென்றும், அதன் பேரிலே முசே தொத்தேல், முசே ஒம்மோ முதலான பேர் போயி அவர்கள் கொடியை வாங்கி வைச்சு, பிரான்சுக் கொடியைப் போடுவிச்சதாகவும், முசே தெவோ சவரிராயனுக்குச் சொல்லி சீமை சப்த்தி பண்ணுகிறார்களென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது.

வடக்கே நெல்லூர் சறுவபல்லியிலே அமுலிலே யிருக்கிற அன்வர்தி கான் வைப்பாட்டி மகன் நசிமுல்லா (நஜிபுல்லா) கானென்கிறவன், மமுதல்லி கானுக்கு அடங்காமல் பிரான்சுக்காரர் அங்கே யிருக்கிற பேர்களுக்கு யெழுதியனுப்பி பெலன் பண்ணிக் கொள்ளுகிறதாகவும், அந்தச் சேதி மமுதல்லி கான் கேட்டு அப்துல் பாபு (வகாபு) கானைப் பயணம் பண்ணி, அவன் பிறகே முன்னே (300) பேர் யிங்கிலீசுக்காரரையும் சிறிது பாறுக்காரர்களையும் பீரங்கி மருந்து குண்டும் (அனுப்பி) நிசிமுல்லா கான் பேரிலே சண்டைக்கு அனுப்பினதாகவும் சேதி கேழ்க்கப்பட்டுது.

முசே புசிக்கு பொப்பிலிக் கோட்டைச் சண்டையிலே குண்டுக் காயம் பட்டதாகவும், ஆராமல் (அது) உபத்திரவமாக யிருக்குதென்றும் கேழ்க்கப்பட்டுது.

கல்கத்தாவிலே யிருந்த மேஸ்தர் கிளேவிசுக்கும் பங்காளத்து நவாபுக்கும் திரும்ப ... சண்டை யாகுதென்றும், தொரைக்கு பங்காளத்திலே யிருந்து யெழுதி வந்தது. சென்னப்பட்டணத்திலே யிருந்து வந்த பேர் சொன்ன சேதியானால், சண்டை நடந்து இங்கிலேசுக்காரரை யெல்லாம் சாக அடிச்சுப் போட்டார்கள் யென்றும், மேஸ்தர் கிளேவிசு டில்லி பார்சா அண்டையிலே ஆவலாதி (புகார்) சொல்லப் போனானென்றும், யில்லை செத்துப் போனானென்றும் சொல்லுகுறார்கள்.

***1757 வருசம், அவ்றில் மாசம், தேதி 22; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 14; சுக்கிரவாரம்***

இத்தனாள் வெள்ளைக்காரர் மறு வேஷமாய் யேழெட்டு பேர் ஒபிசியால்மார் நிசி ராத்திரியிலே பிறப்பட்டு, வெள்ளக்கார வீதி யெல்லாம் துரும்பேத்து (trumpet) ஊதிக் கொண்டு, பெரிய துரை நடத்துகிறதும், சின்ன துரை நடத்துக்கிறதும், முசே தெவோ நடத்துகிறதும், கந்தப்ப முதலி நடத்துகிறதும் சவரிராயன் நடத்துகிறதும், பட்டணத்திலே நடத்துகிற அன்னியாயங்களும் சகலமும் துரும்பேத்துலே ஊதிக்கொண்டு ஒரு மாதமாக யிராத்தி யெல்லாம் திரிகுறார்கள்.

***1757 வருசம், அப்றில் மாசம், தேதி 23; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 15; சனிவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே தொரை அவர்களுக்குப் பேர் பண்டிகையான படியினாலே, அஞ்சு மணிக்கு யிருபத்தோரு பீரங்கி சுட்டு மூன்று தரம் வரிசை வைச்சு துப்பாக்கி சுட்டார்கள். மழையும் பேஞ்சு கொண்டிருந்தது. யிதிலே கொடியும் போட்டார்கள். தொரையும் உடுப்பும் மைத்தும் போட்டுக் கொண்டு காம்பிராவிலே யிருந்தார். அப்போது நாம் மெத்தை மேலே போய் தொரை காம்பிரா வண்டையிலே போகையிலே துரையும் வெளியே வந்தார். வுடனே காண்பிச்சுக் கொண்டு பூச்செண்டு குடுத்தோம். உடனே கோன்சேல்க்காரர் ஒபிசியால்மாரெல்லாரும் கூடப் போக, தொரை கோயிலுக்குப் போகையிலே போட்டிருந்த கொடி பாதியிலே கிழிஞ்சு விழுந்தது யென்று வந்து சொன்னார்கள். உடனே மறு கொடி போடச் சொல்லாமல் கிடக்கட்டு மென்று (சொல்லிப்) போட்டுக் கோயிலுக்குப் போனார். அப்போ கொடி போடுகிறவன் பாதி கிழிஞ்சு விழுந்ததை சுறுட்டி கீழே தட்டிலே[1] வைச்சு மேலே ஒட்டியிருந்த பாதியையும் யிறக்கி (அதன்) மேல் தட்டிலே தானே வைச்சுவைச்சான். அப்போது கந்தப்ப முதலி வந்து கொடி ஏன் போடயில்லை யென்று அவன் தமையன் மகனைக்[2] கேட்டான். அப்போது அவன், "கொடி கிழிஞ்சு விழுந்தது. அது கீழ் தட்டிலே பாதியும் மேல் தட்டிலே பாதியுமாய் வைச்சு யிருக்குது. அந்தச் சேதி தொரையுடனே சொன்னதுக்கு வேறே கொடி போடச் சொல்லயில்லை, கிடக்கட்டு மென்று சொன்னார்," என்று சொன்னான். அப்படியா வென்று வைச்சிருக்கிறதை கந்தப்ப முதலி பாத்தான். நாமும் பாத்தோம். அதன் பிறகு பூசை கேழ்க்கையிலே யிருபத்தோரு பீரங்கி வீதம் மூன்று தரம் போட்டு, மூன்று தரம் வரிசையும் சுட்டார்கள். அதன் பிறகு பூசைக் கேட்டு மெத்தை மேலே வந்தார். அப்போதைக் கப்போ

---

[1] 'தரையிலே' என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

[2] இவன்தான் கொடி போடும் பணியாள் போலும்.

நம்மைப் பாத்துக் கொண்டு குமுசெல்க்காரருடனே பேசிக் கொண்டுயிருந்தார்.

இப்படியிருக்கையிலே துறையூர் வைக்கீல் யிருபத்தோரு விராகன் நசர் வைச்சுக் கண்டார். அதன் பிறகு நயினார் யிருபத்தோரு ரூபாய் வைச்சான். அதன் பிறகு வினாயகப் பிள்ளை யிருபத்தோரு வராகன் வைச்சான். அதன் பிறகு டங்காசாலையார் யெப்போதும் ஒரு நகை வைச்சுக் காணுகுறதும், அப்பால் அந்த நகையைத் திரும்ப வாங்கிக் கொண்டு ரெண்டாயிரம் ரூபா கொடுக்கிறதும் (வழக்கம்). அப்படிக் கொத்த பேர் (இப்போ) சும்மாயிருந்தார்கள். அப்போ நாம் டங்காசாலை பாபுராயனுடனே, "நீங்களேன் வைக்கயில்லை?" யென்று கேட்டதுக்கு, ராமச்சந்திர ராயன் ரெண்டு வருஷமாய் ஒன்றுமில்லை, வைக்கத் தேவையில்லை யென்று சொன்னதாகச் சொன்னார். வைக்காமல்ப் போனால் நமக்கல்லவோ பேச்சு (பழி) வருமென்று சொன்னோம். அப்போ பாப்புராயன் மெய்தானென்று யிருபது விராகன் யிடையிலே ஒரு சறப்பள்ளி கொண்டு போய் வைச்சுக் கண்டார். அதன் பிறகு புகையிலைக் கிடங்கு பாப்பு ராயன் யிருபத்தோரு விராகன் வைச்சுக் கண்டான். அதன் பிறகு சிப்பாய்களுக்குக் கும்மாந்தாமாயிருக்கிற துக்கி (Dukki) என்குறவன் யெவ்வளவோ வைச்சுக் கண்டான். அதன் பிறகு சந்தா சாயபு மகன் ஒரு சீரொப்பா வைச்சுக் கண்டான். அப்போ அவனுக்கு யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அதன் பிறகு சோறுக் (சுகூர்) கான் மகன் ஒரு சீரொப்பாவை வைச்சுக் கண்டான்.[1] அதன் பிறகு சோறுக் கான் மகன் பதினோரு விராகன் நசர் வைச்சுக் கண்டான். நம்முடைய கையிலே போன வருஷம் சீமை யிருந்தபடியினாலே அன்னூறு விராகன் அப்பாவு கையிலே குடுத்து வைப்பிச்சோம். இந்த விசை நம்முட கையிலே சீமையில்லாததினாலே நாம் வைக்கயில்லை. முசே தெவோவும் சவுரிராயனும் என்ன வைப்பார்களோ தெரியாது. கும்பினீர் வர்த்தகர் போன வருஷம் அன்னுரு விராகன் வைச்சார்கள். அந்தப்படிக்கி யிந்த வருஷம் வந்து காணச் சொல்லி நேத்து உதய முதல் கும்பினீர் வர்த்தகர் கிட்ட மனுஷர் மேல் மனுஷர் அனுப்பிவைச்சு, யின்றைக்கு நாலு மணி முதல்க் கொண்டு மனுஷர்களை அனுப்பிவிச்சு அழைச்சு வரச் சொன்னதிலேயும், அதிலே பெரியவர்கள் அன்னியிலே யெல்லாரும் சிறு பிள்ளைகளாயிக்கூடின படியினாலே யுக்த்தா யுத்தம் (எது சரி, எது சரியல்ல எனத் தோணாமல்) பதினோருமணி வரைக்கும் நாம் மெத்தை மேலே மழையிலேயும் காத்திலேயும் வாதைப்பட்டுக் கொண்டு பாத்த விடத்திலே, கும்பினீர் வர்த்தகர் வராமல்ப் போனார்கள்.[2]

---

[1] சந்தா சாயபுவின் மகன் என்றும், இதற்கு 21 பீரங்கி போட்டார்கள் என்றும் ஆங்கிலத்தில் உள்ளது.

[2] அந்தக் காலத்திலேயே அரசியலாளர்கள் இதற்காகவே பிறந்த நாள் விழா கொண்டாடி இருக்கிறார்கள்!

*1757 வருசம், அப்றீல் மாசம், தேதி 25; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 17; சோமவாரம்*

இத்தனாள் சாயங்காலம் அஞ்சு மணிக்கு வினாயகன் துரையை வீட்டுக்கு விருந்துக்கு அழைப்பித்து வருகிற நிமித்தியம் மேளதாளங்கள் தாசிகள் பயிராக்கு (கொடிக் கம்புகள்) நிசான் யீட்டி கலியாணக் குடைகள் வகையிராக்களுடனேயும், நவப்பத்து சகல சன்னாகத்துடனே(யும்) கோட்டைக்குப் போய், துரையை அழைப்பித்துக் கொண்டு வீட்டுக்கு வந்து வாசல் பந்தலிலே சிங்காரம் பண்ணிவித்து, அதிலே துரை போயிருக்க, அவருடனே சின்ன துரை, முசியே கில்லியார், முசியே மீரா, முசியே தெவோ, முசியே லெனுவார் முதலான பேர்கள் வந்தார்கள். முசே புலோ, முசியே பொஷேத்து, முசியே திலார்ஷு மூணு பேரும் வரயில்லை. முசியே கில்லியார் வந்தவர் சத்து நேரம் யிருந்து போய்விட்டார். துரைக்கு ரெண்டாயிரம் விராகன் குடுத்ததாகவும், யிதல்லாமல் தீனிச் சிலவுகள் ஆயிரத்து முன்னூறு ரூபாயும், சாரயத்துக்கு வேறேயும் குடுத்ததாக(வும்)[1] கேழ்விப்பட்டுது. இதல்லாமல், துரைக்குப் பந்தலிலே குடுக்கிறதுக்கு நிராசி (விலையுயர்ந்த) சீரொப்பாவும், கூட வந்த பல்லக்குக் காரருக்கு யெல்லாம் பட்டு சுறுட்டிகளும், சின்ன துரைக்கு உடன்படிக்கை (பின்னால் கொடுப்பதாகவு உறுதிமொழிகள்) வேறேயும் பண்ணி யிருக்கிறதாகவும், அவருக்கு (அப்போது) ஒரு சீரொப்பா (மட்டும் கொடுத்ததாகவும் கேள்விப்பட்டேன்). கந்தப்ப முதலி, அவன் தமயன் பிள்ளை, மத்தும் துரையுடனே வந்த பேர்களுக்கு யெல்லாம் வஸ்திரங்களைத் தட்டிலே அமத்தி, கந்தப்ப முதலியை அழைத்துக் கொண்டு போய்க் காண்பிச்சதாகவும், அவன் நன்றாயிருக்கு தென்று சொல்ல, யிதுகளை யெல்லாம் எடுக்கிற (நேரத்) திலே (யாரோ) தும்மினதாகவும், அதன்பேரிலே வினாயகன் கந்தப்ப முதலியுடனே தும்மினது கொண்டு, வேறு வஸ்திரம் துரைக்குக் குடுக்கிறது யுக்த்த மன்று, அதினாலே ஆயிரம் ரூபா தட்டிலே போட்டு, அதன் பேரிலே சீரொப்பா வைச்சுக் குடுக்கிறதாய்ச் சொன்னதாகவும், அது கந்தப்ப முதலிக்குச் சமாதானம் அன்னிலே (சம்மதம் ஆகாமல், அவன்) வெளியிலே தமையன் மகனை யிருக்கச் சொல்லிப் போட்டு, சூரப்ப முதலி வீட்டுக்குப் போனதாகவும், அதன் பேரிலே துரையும் தீனி தின்று வெகுமதியும் வாங்கிக் கொண்டு பதினோரு மணிக்குச் சகல சம்பிரமத்துடனே கோட்டைக்குப் போனார்.

இதல்லாமல் ... வண்டியிலே கட்டியிருந்த ஒத்தைக் குதிரை, யிருந்தாப் போலே யிருந்து, நின்ற வண்ணத்திலே கீழே விழுந்து

---

[1] துரையின் விருந்துக்காகச் செலவு செய்த தொகைகள் இவை என்றிருக்க வேண்டும்.

உதைச்சுக் கொண்டுது. அதன் பேரிலே அவிழ்த்து விட்டும் அரை நாழிகை தேசகாலம் (கீழே) கிடந்து, அப்பால் எழுந்திருந்துது என்றும், துரை பிறப்படுகிற வேளையிலே நெட்டியாலே பண்ணின பூஞ்செடியிலே நெருப்பு பத்தி, கொடையிலேயும் பத்தித்து என்றும், அதைக் கண்டு உடனே அவிச்சுப் போட்டார்களென்றும் கேழ்விப்பட்டுது. துரை பண்டிகை தினம் கொடி அறுந்து விழுந்ததினாலேயும், பெகுமானம் யெடுக்கிறபோது தும்மின தினாலேயும், கொடையிலே நெருப்புப் பட்டபடியினாலேயும், இந்த அபசகுனத்தினாலே துரைத்தனத்துக்குப் பிலகீனங் காணும் போலேயும், வினாயகனுக்கு உபாதி வரும் போலேயும் தோணுது. இவன் கலியாண மெல்லாம் மழையாகத் தானே பேஞ்ச படியினாலே இனிமேல் வினாயகனுக்கு இப்படி நடவா தென்றும், யிக்கட்டுகள் வருமென்றும் தோணப்பட்டதை எழுதி வைத்தேன்.

*1757 வருசம், அப்றில் மாசம், தேதி 27; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 19; புதவாரம்*

இத்தனாள் காலமே பிறப்படுகையிலே துரை அழைக்கச் சொன்னாரென்று சேவுகன் வந்து அழைத்தான். உடனே பிறப்பட்டு துரை யண்டைக்குப் போனோம். துரை யேகதேசமாய்க் காம்பிராவிலே யிருக்கையிலே போய் காண்பிச்சுக் கொண்டோம். அப்போ துரை நமக்கு வர்த்தகர் பேட்டி யேன் பண்ணிவைக்கவில்லை யென்று கேட்டார். அதுக்கு நாலாம் நாள் வர்த்தகர் கூட நாம் கூட வந்திருந்தோம். அப்போ நீங்களுஞ் சின்ன துரை துரையும் ஏதோ கோபதாபமாய்ப் பேசியிருந்து காம்பிராவிலே போனீர்கள். யிந்த வேளையிலே பேட்டிக்குக் கூடாதென்று வர்த்தகர் வீட்டுக்குப் போனார்கள். முந்தாம் நாளும் நேத்தும் சீமா மூலம் கணக்குச் சம்மதி நிமித்தியம் முசியே லெனுவார் கிட்ட இரெண்டு நாளாய்ப் போய் கணக்குப் பார்கிறபடியினாலே வரயில்லை," என்று சொன்னதுக்கு, "இரெண்டு நாளாய் அங்கே போய் கணக்குப் பார்க்கிறீர்களா? நாமறியோம். என்ன, சீமா மூலக் கணக்கு இரெண்டு வருஷத்துக்கு முப்பது லக்ஷத்துக்குப் பதினாலு லக்ஷமெல்லாம் செலுத்தினாய். பதினாறு லக்ஷம் செல்லவில்லை. முசியே கொதே யானால் குத்தகைக் குடுத்தோம். பணமெல்லாம் தாராளமாய்ச் செல்லும் யென்று போயிருக்கிறார். நீயானால் செலுத்தாமல் பணத்தை யெல்லாம் சிலவு பண்ணிப் போட்டாய்," என்று கேட்டார். அதுக்கு "நானொன்றும் சிலவு பண்ணவில்லை, கெடுக்கவுமில்லை. முசே கொதே நான் வேண்டாமென்ற (போதே) யென் பேரிலே கட்டினார். நான் அவர் கட்டினதுக்குத் தாட்சி வராமலும் உபரியாகத் தானே அவரவர் கையிலே குத்தகையும் கட்டி, ரொக்க சாமீனும் வாங்கினேன். முத்தண்டல் கணக்குப் (படி பணம் செலுத்தும்போது) கலீல் சீர்மை முசுரா பாதிகள் (கிராமக் கணக்கர்

செலவுகள்) தள்ளிக் குடுக்கத் தேவையில்லையா? இதெல்லாம் தேவரீர் மனம் பொறுத்து, என் பேரிலே தயவு வைச்சு (ப் பார்க்க வேணும்). இது சீமா மூலக் கணக்கு, வர்த்தகர் கணக்கல்ல. ஆகையாலே கணக்கெல்லாம் வயணமாய்க் கேட்டால் ஒரு காசளவிலேயாகிலும் தபாபத்து வராது. அப்படி நான் தபாபத்து யெழுதத் தக்கதில்லை (எழுதக் கூடியவனல்ல)," யென்று சொன்னதுக்கு, "நீ நம்மை மெத்த மோசம் செய்தாய். அந்தப் பணம் நீ கொடுக்கவேணும். இப்போ முசியே தெவோ தினம் பதினாயிரம் ரூபா வீதம் கட்டுகிறான். இப்படி வருகிற பணத்தை நீ யெடுத்துக் கொண்டு சிலவு பண்ணினால் கும்பினீர் சிலவுக்கு நானெங்கே போவேன்? உன் கிட்டயிருக்கிற பிராமணி கெடுத்து உன்னை மோசம் பண்ணினான். இந்தப் பணம் நீ குடுத்துத் தீர வேணும்," யென்று சொன்னார். அதுக்கு, "நான் பணத்தைச் சிலவழிக்கவுமில்லை, ஒருத்தனைக் கெடுத்து மோசம் பண்ணினதும் யில்லை. எனக் காகாத பேர் சொல்லுகிற வார்த்தையைக் கேட்டு நீங்கள் சொல்லுகிறீர்கள். முதல் வருஷத்திலே ஆறு மாதம் பாப்பய்யப் பிள்ளையும், ரங்கப்ப முதலியும் அமுல் பண்ணினார்கள். அதன் பிறகு பதினேழு பதினெட்டு மாதம் நான் விசாரித்தேன். இதிலே வந்த பணம் செலுத்தி யிருக்கிறேன். நீங்களிப்படிச் சொன்னால் உங்களோடே நானெதிர்த்து யென்ன உத்தாரம் சொல்லப் போறேன்? தங்களுக்குச் சகல நியாயமாய்ச் செய்யவுந் தெரியும். மனம் பொறுத்து தயவு பண்ணி கணக்குப் பார்த்தால் யெனக்கு வரவேண்டியிருக்கும். அல்ல வென்று என் பேரிலே சுமந்தாலும் குடுக்கிறேன்," யென்று சொன்னதுக்கு, "நல்லது, படிக்குப் பாதி ஏழெட்டு லட்சமாகிலும் தள்ளுகிறேன். பதினாலு லட்சம் யென்னாலே தள்ளப் போமா?" வென்று சொன்னார். அதுக்கு நான், "தள்ளுவானேன்? கணக்குப் படிப் பார்த்துக் கொண்டால் உங்களுக்குத் தெரியவருகிறது. நான் குடுக்கிறதுக்கு என் கையிலே யென்ன யிருக்கு," தென்று சொன்னேன். அதுக்கு, "நல்லது, இந்த வருஷத்துக்குப் பதினேழு லட்சமாச்சுதே. இதுக்குப் பணம் எல்லாம் முசியே தெவோ செலுத்திப் போட்டார்," என்று சொன்னார். அதுக்கு, "இவ்வருஷம் யிருபது லக்ஷமாச்சுது," யென்று சொன்னேன். இல்லை பதினேழு லட்சந்தா னென்று இரெண்டு தரம் மூன்று தரம் சொன்னார். "இல்லை அய்யா, இருபது லட்சந்தான்," என்று ரொம்ப வணக்கத்தோடே சொன்னதுக்கு, உடனே எழுந்திருந்து உள்க் காம்பிராவிலே போய்க் கணக்கைப் பார்த்துக் கொண்டு திரும்ப வந்து பேசாமலிருந்து அப்பால் வர்தகரைப் பேட்டி பண்ணிவிச்சுப் போட்டுப் போவென்று சொன்னார். நல்லதென்று வெளியிலே வந்தேன்.

*1757 வருசம், அப்றீல் மாசம், தேதி 28; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 20; குருவாரம்*

இத்தனாள் முசே லெனுவார், "பங்காளத்திலே யிங்கிலேசுக்காரர் சண்டைக்கு வந்தார்கள். பங்காளத்து நபாபு பிரான்சுக்காரருக்கு ஒத்தாசை யாயிருந்த படியினாலே யிந்த வேளைக்குத் தப்பித்து யெனக்கு அவ்விடத்திலே வீடு யெண்ணாயிரம் ரூபாயும் ரொக்கம் பதினாலாயிரம் ரூபாயும், ஆக யிருபத்தீராயிரம் ரூபாயிக்கு யிருக்குது. அந்தப் பங்காளம் போய்விட்டால் யென் பெண் வாயிலேயும் பெண்டாட்டி வாயிலேயும் மண்ணு விழும். அப்பாலே குராரத்திக்குக் கலியாணம் முடியமாட்டாது. யிவ்விடத்திலே (யும் எனக்குச் சொத்து) பதினாயிரம் ரூபாய்க்கு (மட்டுமே), என்றும் தம்முடைய தாவந்தத்தைச் சொல்லிக் கொண்டார். அவர் சொல்ல வந்த சாடை சுய காரியம் நிமித்தியம் பேசுகிறாப் போலே கண்டுது. அதுக்கு நல்லது அதுக்களுக் கெல்லாம் தனிச்சு வந்து கண்டு பேசிக் கொள்ளுகிறேன் என்று நடிப்பு வார்த்தையாயி சொன்னேன்.

*1757 வருசம், அவ்றீல் மாசம், தேதி 29; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 21; சுக்கிரவாரம்*

இத்தனாள் ராத்திரி கேழ்வியான சேதி : பங்காளத்துலே பிரான்சுக் காரருடைய பெத்திரியை இங்கிலீசுக்காரருடைய சொலுதாதுகள் பிடிச்சுக் கொண்டதாய் லிங்கிச் செட்டி மனுஷன் சொன்னதாய்க் கேழ்விப்பட்டோம். யிதுவும் அல்லாமல், யின்று மத்தியானம் கோன்சேல் கூடியிருந்தார்கள். ஆனபடியினாலே யினிமேல் தாக்கீதாய் விசாரித்து யெழுத வேண்டியது. ஆனால் அந்தச் சண்டையிலே பிரான்சுக்காரருக்குள்ளே ஆறு பேர் கும்மாந்தாமாரும் பனிரெண்டு பேர் ஒப்பிசியால்மார்களும் விழுந்து போனார்களென்றும், சொலுதா(துகள் சிறைபிடிக்கப்பட்டார்கள்) யென்றும் கேழ்க்கப்பட்டுது.

*1757 வருசம், அப்றீல் மாசம், தேதி 30; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 22; சனிவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு முசே லெனுவார் வீட்டிலே கணக்குப் பார்க்கிற நிமித்தியம் போனவிடத்திலே, கணக்குப் பார்க்கிற போது அவர் மனோ உத்சாகமாக (இல்லை). கணக்குகளை யெடுத்து ரசீதை ஒத்துப் பார்த்துக் கொண்டு, அதின் பேரிலே தமக்கு ஒன்றுந் தோணவில்லை யென்று கணக்கை நிறுத்தினார். அப்போது பங்காளத்து சேதி, "யிங்கிரேசுக்காரர் பிரஞ்சுக்காரர் பெத்திரியைக் (கட்டிக் கொண்டு) கண்டுக் (பிடித்துக்) கொண்டதாகச் சென்னப்பட்டணத்திலே சொல்லிக்

கொள்கிறார்கள், ஆனால் அது நிசம் அல்லவென்று நாம் சொல்லி (விட்டோம்," என்று நான் சொன்னேன். அதுக்கு) முசே லெனுவார் சொன்னது, "இங்கிலீசுக்காரர் கும்பினி பணம் காசு சரக்கு முதலானதுகளை மாத்திரம் யெடுத்துக் கொள்ளுவார்கள், மைத்தப் பேர்—தொரை, கோன்சேலியேர்கள், மத்தும் சில்லரைக்காரர்—யிவர்களுதெல்லாம் குடுத்து விடுவார்கள். யெதுனாலே யென்றால் யெங்களிலே நடக்குற உடன்படிக்கை அப்படி," யென்று சொன்னார். அதினாலேயும் யிவர் மனோ விசாரத்தை அடைஞ்சுயிருக்கிறதினாலேயும், பங்காளத்திலே யிவர்கள் பெத்தோர் (பெத்திரி) யிங்கிரேசுக்காரர் கட்டிக் கொண்டது நிசந்தானென்றும் தெரியவந்தது.

அப்படி யிருக்கையிலே, முசே தெவோ வந்து யென்ன கணக்குப் பார்க்கிறீரா?" யென்று முசே (லெ)னுவாரைப் பார்த்துக் கேட்டார் : "யெனக்குக் கணக்குப் பார்க்கிறதிலே மனசாயிருக்கயில்லை," யென்று (அவர்) சொன்னதுக்கு, முசே தெவோயிருந்து, "அத்தனை பறப்பு யென்ன யிப்போ? அஞ்சாறு நாள் பொறுத்துப் பார்க்கிறதுதான். நன்றாயிப்படி யெல்லாம் தீரப்போற தாயிது? யினி சீமைக் குடியானவ ரெல்லாம் வர நாலு மாசமோ, ஆறு மாசமோ (ஆகும். அதுவரை) தீரப் போராது," யென்று சொல்லி அகுவாரிசியமாய், நான் விளம்பித்திலே(?) வைச்சுச் சொன்னார். அதன் பேரிலே முசே லெனுவார் யெல்லாத்துக்கும் திங்கள்கிழமை வாருங்கோளென்று (என்னைப்) போகச் சொல்லி, முசே தெவோவும் முசே லெனுவாரும் அப்பிறத்திலே போயி பேசப் போனார்கள். அதின் பேரிலே நாமும் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்து பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

இதெல்லாம் கேழ்வியான சேதி : எட்டு நாளைக்கு முன்னே வெங்கிட்டம்மாள்பேட்டையிலே ரங்காச்சாரியார் யென்கிற தத்துவாதி பிராமணன், பிச்சை நிமித்தியம் அந்தச் சீமையிலே, அமுல் பண்ணுகிற ஒகந்தாசியைப்[1] போய் பிச்சை கேட்டுக் கொண்டு வந்ததாகவும், அதுக்கு ஒகந்தாசி இல்லை யென்றும் உண்டென்றும் அலைக்கழிச்சுக் கொண்டு வந்ததாகவும், அப்படி யிருக்கையிலே இன்றைக் கெட்டு நாளைக்கு முன்னே சாயங்காலத்திலே ஏழு மணிக்கு அந்த பிராமணன் ஒகந்தாசி யண்டைக்குப் போகையிலே வாசலிலே கார்க்கிற பாராக்காரார் போகவாண்டா மென்று சொன்னதாகவும், நானென்ன கள்ளனா, எனக்கு உள்ள பிச்சை கேழ்க்கப் போறேன், தந்தால் வாங்கிக் கொள்ளுகிறேன், தராவிட்டால் பிராமண (னுக்குப் பிச்சை கொடாமல்) வாயடிச்சா னென்று

[1] முழுப்பெயர் உகந்தாச்சிப் பிள்ளை.

சொல்லிக் கொண்டு போகச் போறேன் என்று சொன்னதாகவும், அதின் பேரிலே பாராக்காரர் அவனை வச(வைத)தாகவும் அவனுங்கூட வசதாகவும், அதன்பேரிலே அந்த பிராமணன் பேரிலே பாராக்காரர் விழுந்து துப்பாக்கிகளாலே யிடிச்சு பிராமணனைக் கொன்று போட்டார்களென்றும், கச்சேரி வாசலிலே செத்தானென்றும், அதன் பேரிலே ஒகந்தாசி அந்தப் பிணத்தை எடுப்பிச்சு அவன் வீட்டிலே கொண்டு போய்ப் போடச் சொன்னானென்றும், அப்பால் அவர்களெடுத்து சுட்டுப் போட்டார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. இந்தச் சேதி ராமாஞ்சி பண்டிதருடனே சொல்லி யெழுதி விக்கச் சொன்னோம்.[1]

[1] இவர் போல் வேறு சிலரும் நாட்குறிப்பு எழுதுவதில் பிள்ளைக்கு உதவியதற்கு இது சான்று.

## மே 1757

*1757 வருசம், மாயு மாசம், தேதி 1; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 23; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனயிடத்திலே துரை அவர்கள் மெத்தை மேலே யிருந்தார்கள். நாமும் போயி காண்பிச்சுக் கொண்டு யிருக்கையிலே, துரையவர்கள் ரொம்ப விசாரத்துடனே யிருந்து கொண்டு நம்மைத் தானே பார்த்துப் பார்த்துக் கொண்டு யிருந்தார். யிதிலே ஒன்பது மணியாச்சுது. அதின்பேரிலே துரை காம்பிராவிலே போனார். நாமும் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தயிடத்திலே பங்காளத்திலே சண்டையான சேதியெல்லாம் பிரான்சிலே யெழுதின கடுதாசி ஒன்று வந்துது. அந்த கடுதாசியிலே யெழுதியிருந்த வயணம் :[1]

பங்காளத்திலே போயிருந்த மேஸ்திரி கிளேவிசு கொம்மாந்தாரிட வெள்ளைக்காரர் சட்டைக்காரர் காபிரிகள் ஆயிரத்திரநூறு பேரும் சிப்பாயிகள் யெண்ணாயிரம் பேரும் பங்காளத்து சிப்பாயிகள் அன்பதினாயிரம் பேரும் யிவர்களை யெல்லாம் சேகரிச்சுக் கொண்டு மேஸ்தர் கிளேவிசு 1757 ஆண்டு மார்ச்சு மாசம் 7 தேதி சந்திரநாகூர் என்கிற பேருடைய பிரான்சுக்காரர் பட்டணத்தின் சமீபத்திலே போயி யிறங்கி, யெட்டாந் தேதி தானே சந்திரசாநாகூர் பட்டிணத்தினுடைய சாரூப பன்னாவை (முகாம் சாமான்களை) அடிச்சுக் கட்டிக்கொண்டு, ஒன்பதாந் தேதி முதல் பதினோராந் தேதி வரைக்கும் பட்டணத்தைச் சுற்றிக் கொண்டு வெகு முத்திக்கை போட்டு ஒரு நாளைக்கு ஒரு நாள் மெத்த மெத்தவும் சண்டை பண்ணினார்கள். அப்போது நம்முடைய பிரான்சு பெத்திரிக்கு திரெக்குதோர் செனராலா யிருக்கிற முசே லறெனோ செம்று சொ்மென் (M. Renault de St Germain) என்கிறவர் வெகு சண்டை குடுத்து, நிறுவாக மில்லாமல் (சமாளிக்க முடியாமல்) யிங்கிலீசுக்காரருடனே ஒரு உடம்படிக்கை பேசி, அதின் பேரிலே கோட்டையையும் அதுக்குள்ளிருந்த சாமான்கள் தட்டு முட்டுகளையும் திரவியங்களையும் சரக்குகளையும் சகலமும் இங்கிலீசுக்காரர் கையிலே வெகு சங்கடத்தின் பேரிலே ஒப்புவிச்சார்கள். அதின் பேரிலே திரேக்கு தோர் செனராலாயிருந்தவரையும், சின்ன துரையாயிருந்தவர் முதல் யெல்லாரையும் சண்டைக் காவல் (Prisoners of War) வைச்சார்கள். மைத்தப்படியுள்ள ராணுக்கள், குடிகள், வர்த்தகர்கள் சகலரையும்

[1] இதனை அடுத்து ஆங்கிலேயரான கிளைவ் சந்திரநாகூரைப் பிடித்ததை விவரிக்கும் பிரெஞ்சுக் கடிதம் நகல் செய்யப்பட்டுள்ளது. அதன் வாசகம் அடுத்து தமிழில் கொடுக்கப்பட்டுள்ளதால், அது இத்தமிழ்ப் பதிப்பில் விடப்பட்டுள்ளது.

சண்டைக் காவலிலே வைச்சார்கள். இதுக்கு முன்னே சிறிது பெண்கள் குஞ்சுகள் பிறப்பட்டு தட்டு முட்டு யெடுத்துக் கொண்டு ஒலாந்தாப் பெத்திரியாகிய சின்சுராத்திலே (சின்சுராவிலே) போயி விட்டார்கள். மத்தப்பாடிக்கு சந்திரநாகூருக்கு யெதிரே துரையிலே சீனி (நங்கூரம்) போட்டிருந்த சீமைக் கப்பல் சேன் பிறியோர் (St. Priest) யென்கிற பேருடையதானதும், அதுக்குக் கொம்மாந்தாம் முசே லாவிஞ்சி சோர்னென்கிறவனும் (M. La Vigne Buisson) நாட்டுக்கப்பல் ஒன்றும், அதுக்குக் கொம்மாந்தாம் முசே சாம்பாஞ்சி (M. Champigny) யென்கிறவரும், யிந்த யிரண்டு கப்பித்தான் மாரும், யிங்கிலீசுக் கப்பலுடனே நல்ல சண்டை பண்ணி, யினி மேல் நிறுவாகமில்லை யென்கிறதை அறிஞ்சு, யிந்தக் கப்பலை யிங்கிலீசுக்காரர் கையிலே ஒப்பிக்கப்படாதென்று யோசனை பண்ணி, அந்த யிரெண்டு கப்பலிலே யிருந்த சாமான்களை யிறக்கி, தாங்களும் அதிலே யிருந்து கொண்டு அந்த ரெண்டு கப்பலையும் பின்னையும் 19 உருப்படி படகு வகையிரா, வர்த்தகத்தையும் சுட்டுப் போட்டுக் கெங்கை வழியாக வரச்சே, யிங்கிலீசுக் காரர் வளைச்சுக் கொண்டு சண்டை பண்ணினவிடத்திலே, எதிரிகள் கையிலேயும் அகப்படாமல் அந்தப் படகோடே கெங்கை ஆத்திலே முழுகிப் போனார்கள். இதுனாலே அங்கே யிருக்கப்பட்ட வர்த்தகர் வகையிராக்களுக்கு அவரவர் வருமானத்துக்குத் தக்கதாகச் சேதமாச்சுது. ஆனால் பங்காளம் தோணின நாள் முதல் யின்றைய வரைக்கும் யிப்படிப்பட்ட சண்டையும் வந்ததில்லை, யிப்படிப் பட்ட சேதங்களும் வந்ததில்லை. யிவ்விடத்து நிற்பாக்கியம் அவ்விடத்திலேயும் சம்பவிச்சது. வெள்ளைக்காரர் தங்கள் ராச்சியத்துத் திட்டமாய் கெங்கையிலே நெருப்பு மயமாய் சண்டை குடுத்ததைக் கண்டு, பிலகீனப்பட்ட துலுக்கர் யினிமேல் பெலக்குறதுமல்லாமல், தொப்பிப் போட்ட சாதியாருக்கு பங்காளத்திலே வர்த்தகம் பண்ணி ஒரு காசு ஆதாயம் பெறாமாட்டார்கள். தமிழரும் முழுதும் யிறங்கிப் போவார்கள். வர்த்தகமும் ஒன்றும் நடக்கத் தக்கதில்லை. சேதம் அதிகம் நடந்ததிலே முசே லெறி கோவர்ணதோருக்குப் போனது நூறு ஆயிரத்துக்குக் குறைச்சாலிருக்கும். முசே லெனுவாருக்கு 60,000, முசே லாசுக்கு முழுதும் சேதமாயிப் போயிவிட்டுது. மைத்த பேருக்குக் கொஞ்சம் நஞ்சம் போக, மத்தது தப்பித்தது. முசே றேனோ வுக்கு யிந்த சண்டையிலே செஞ்சிலை (பெரிய பீரங்கிக்) குண்டு காயம்பட்டு, கோட்டை பிடிப்பட்ட மூணாம் நாள் மரணத்தை அடைஞ்சார்.

இத்தனாள் சாயங்காலம் முசியே சொபினே வந்தவர், 100 பேர் சொலுதாதுகளைக் கூட்டிக் கொண்டு உடனே பிறப்பட்டுப் போனதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டுது. எந்த யிடத்துக்குப் போனார்களோ அறியவேணும்.

இதுவுமல்லாமல் யிந்தப் பங்காளத்துச் சண்டையிலே முசியே சம்பினீர்[1] முசியே றெனோ (Renault) முசியே பொஷேத்து மச்சினனும் மச்சினிச்சியும் ஒப்பிசியால்மார் கப்பித்தான்மார் வெகுபேர் செத்தார்கள்.

*1757 வருசம், மாயு மாசம், தேதி 3; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 25; செவ்வாய்கிழமை*

இத்தனாள் முசியே சொபினே வந்தவன் தினமானம் (தினந்தோறும்) யிறுநூறு, நூறுமாக வெள்ளைக்காரரும் சட்டைக்காரரும் யிப்படி அனுப்பி விக்கிறதாகவும், உடையார்பாளையம் கோட்டையின் பேரிலே போறார்களென்றும், கோனேரி நாயக்கன் உடையார் பாளையத்துக்குப் போனவர் உடையார் ரெண்டு லெட்சம் ரூபாய் குடுக்கச் சொல்லிக் கேழ்க்கிறதாகவும் கேழ்விப்பட்டுது. நமக்குப் பார்த்தால் பங்காளத்திலே சந்திரநாகூர் என்கிற பிரான்சுக்காரர் பட்டணத்தை யிங்கிலேசுக்காரர் கட்டிக் கொண்டதினாலே, யிப்போது தேவனாம்பட்டணத்திலே பிலனில்லாமலிருக்கிற தாகையாலே, யிந்த வேளையிலே யிவர்கள் போனால் தேவனாம்பட்டணம் யிவர்கள் கையிலே அகப்படும் யென்று யிவர்கள் உடையார்பாளையத்துக்குப் போறதாய்ப் போய் தேவனாம்பட்டணத்தின் பேரிலே வந்தாலும் வருவார்கள் யென்று யோசிச்சு வைச்சோம்.

யிதல்லாமல் நேத்தைய தினம் மயிசூர் வைக்கீல் வெங்கிட்டநாராணப்பய்யனை அழைப்பிச்சு, கந்தப்ப முதலி, கோபால கிருஷ்ணய்யன் முகாந்திரம், திரிச்சிராப்பள்ளிக் கோட்டையை யிருபது நாளையிலே இவர்கள் கட்டி மயிசூராருக்குக் குடுக்க, யிவர்களுக்கு மயிசூரார் யிருபது லக்ஷம் ரூபாயும், முன் குடுக்க வேண்டிய பாக்கி ரூபாயும் யிவர்களுக்குக் குடுக்கிறது யென்று பேசினதாகவும், அதுக்கு வெங்கிட்ட நாராயணப்பய்யன் சம்மதியாய்ப் பேசித் தீத்துக் கொண்டதாகவும், மனுஷரும் காகிதங்களும் மைசூருக்கு அனுப்பினதாகவும் கேழ்க்கப்பட்டுது. இறைவாசநெல்லூர் சீமைக்குத் தாண்டவராயர் பிள்ளை தம்பியை அனுப்பினதாகவும், அந்த சீமை ரெண்டு லெக்ஷம் பொன் எடுக்குமென்றும் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் செங்கல்ப்பட்டுலே யிருந்து பொன்னாச்சியும் கந்தப் பிள்ளையும் யிவ்விடத்துக்கு வருகிறபடியினாலே அவர்கள் வருகிறதுக்கு கெவுனி வாசலுக்குச் சீட்டு வாங்குகிற நிமித்தியம், முசே குப்பியைப் போய் சீட்டுக் கேட்ட விடத்திலே முசியே குப்பி சீட்டு குடுத்தான். அதன் பிறகு அவர்களை எதிர் கொண்டழைக்கப் போறவர்களுக்குச் சீட்டு வேணுமே என்று கேட்டேன். அதுக்கு முசே குப்பி யிங்கே யிருந்து

[1] முன்பு முசே சாம்பாஞ்சி

போற பேருக்கு யென்னாலே சீட்டுக் குடுக்கப்படாது. துரையைக் கேழ்க்க வேணுமென்று சொன்னான். அதன் பிறகு நம்முடைய மனுஷன் அப்படியாவென்று திரும்பி சத்தே (தூரம்) வருகையிலே, திரும்பவும் முசே குப்பி நம்முடைய மனுஷனை அழைச்சுக் கூடக்கூட்டிக் கொண்டு, தொரைக் கிட்டப்போய் தொரையுடனே, "யிப்படி வருகிற பேருக்குச் சீட்டு கேட்டான், சீட்டு குடுத்தேன். யிங்கே யிருந்து யெதிராகப் போற பேருக்குச் சீட்டு கேட்டான். நான் குடுக்கிறதில்லை யென்று சொன்னேன்," யென்று சொன்னான். அதுக்கு துரை, "அப்படி யேன் சொன்னாயி? அவர்கள் யெவர்கள் வேணுமோ அவர்கள் போகவும் வரவும் ஆம்," யென்று சொல்லி விட்டார். அதின் பேரிலே போற பேருக்குஞ் சீட்டுக் குடுத்தானென்று வந்து நம்முட மனுஷன் சொன்னான். ஆப்போது நாம் யோசனை பண்ணினது. தாது வருசம் கார்த்திகை மாசம் 13 தேதி (1756 நவம்பர் 24) யிந்த தொரை அவர்கள் தானே கெவுனி வாசல் காரனுக்குத் தடை பண்ணச் சொன்னார். யித்தனாள் அவர் தானே தடை தேவையில்லை யென்று சொன்னார். ஆகையாலே கார்த்திகை மாசம் தொரை தடை சொல்லுகிறதுக்கு நாமென்ன குத்தமாய் நடந்தோம், இன்றைக்குத் தடை வேண்டாமென்கிறதுக்கு நாமென்ன செய்தோம். ஆகையாலே யிதெல்லாம் யெந்த வேளையிலே யெப்படி நடக்க வேணுமோ அப்படி நடக்குமென்கிறதுக்கு அந்தந்த காலத்தினுடைய கெதி(ப்படியே) அல்லாமல் வேறில்லை யென்று நிச்சயம் பண்ணினோம்.

யிப்பால் யித்தனாள் நடந்த சேதி : சந்தா சாயபு குமாரனும் அல்லி நக்கி சாயபும் தக்கே சாயபு கிட்டயிருந்து வெகுமானம் வந்து யிருக்குதென்று சொல்லி அனுப்பினதாகவும், உடனே மதனாந்த பண்டிதர் தொரை அவர்கள் பல்லக்கும் மேளதாளத்துடனே வந்து பல்லக்கு மேலே சீரொப்பா மத்ததுகளையும் வைச்சுக் கொண்டு, அபலக் (வெள்ளை முகமும் கால்களும் கொண்ட) குதிரை ஒன்று கொண்டு சந்தா சாயபு குமாரன் கிட்ட யிருக்கிறவன் ஒரு துலுக்கனை தக்கே சாயபு அனுப்பின நவாபு யென்று பல்லக்கிலே வைச்சுக் கொண்டு கோட்டைக்குள்ளே போய் தொரை யிறங்கிற விடத்திலே போயி, துலுக்கன் பல்லக்கை விட்டிறங்கி மெத்தை மேலுக்குப் போனதாகவும், அப்போது தொரை யெதிராக வெகு தூரம் வந்து கட்டிக் கொண்டழைச்சுப் போயி வைச்சுக் கொண்டு பதினோரு பீரங்கியும் போடச் சொல்லிப் போட்டார்கள். அவன் அனுப்பினது அபலக் குதிரை யொன்று, சரிகை சீரொப்பா ஒன்று, சிறிது சுருட்டு, ஒரு சரப்பள்ளியும் பதக்கமும் துராயும் பாசிபந்தும். அதன்பிறகு அந்த துலுக்கன் தக்கே சாயபு அனுப்பிவிச்சானென்று காகிதமும் உபசாரமும் சொன்னதாகவும், அதுக்குத் தொரை யெத்தனை வயதுண்டு என்ற (கேட்டதாகவும், 70 என்று அவன் சொன்னதாகவும்) நமக்குப் பார்க்க வேணுமென்றும், யின்னம் ஒரு தரம் வருகுறோம் என்று (அவன்)

சொன்னானென்றும் சேதி வந்தது.

யிதல்லாமல் நானா காகிதம் சவுதாயி நிமித்தம் வந்திருந்ததுக்கு, நேத்து மறு காகிதம் யெழுதினார்களென்றும், அதிலே "நீர் சவுதாயி நிமித்தியம் யெழுதினீர். யெங்கள் கப்பல் பங்காளத்திலே யிருந்து ரெண்டு கப்பல் பிறப்பட்டு சூரத்துக்கு வந்து மோக்காவுக்குப் போகவேணுமென்று றவானா ஆனபோது, உம்முடைய மனுஷரும் சூரத்து நவாபும் அந்தக் கப்பலைப் பிடிச்சுக்கொண்டு அஞ்சு லக்ஷம் ரூபாயிக்குக் கையாடிக் கொண்டார்களாம். உமக்கும் நமக்கும் அனுகூலம் பண்ணித் தரவேணு மென்று எண்ணியிருக்க இப்படி உம்முடைய மனுஷர் நடந்ததினாலே சினேகம் யெப்படி நடக்கும்? யிப்போது அவர்களுக்கு யெழுதி அனுப்பிவிச்சு நம்முடைய கப்பலையும் தட்டுமுட்டு சாமான்களையும் சரக்குகளையும் குடுக்கப் பண்ண வேணும். யிவ்விடத்துச் சீமையெல்லாம் யிங்கிரேசுக்காரர் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். நம்முடைய கையிலே கொஞ்சம் சீமையாக்கும் யிருக்குது. யிப்போதும் நீர் யிங்கிரேசுக்காரருக்கு அதுக் கேத்தபடிக்குப் பண்ணிப் பணம் அழைப்பிச்சுக் கொள்ளவேணு," மென்று யிப்படி காயிதம் யெழுதினார்கள். நரசிங்க ராயரைக் கொண்டு யெழுதி அனுப்பிவிச்சு, நம்முடைய கப்பல் ரெண்டையும் திருப்பிக் குடுத்தால் உமக்கு நல்ல வெகுமதி பண்ணுகுறோமென்று சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது.

இதல்லாமல் சேத்துப்பட்டிலே யிருந்து வந்த கில்லேதாரன் யெலமான்சூர் (எலவானசூர்) போன சேதி கேட்டு, உடனே மமுதல்லி கானுக்கு யெழுதி அனுப்பிவிச்சு, கோட்டையிலே இங்கிரேசுக்காரர் கொடியைப் போட்டு அவர்களுக்கு விட்டுவிட்டதாயி பேரிட்டுக் கொண்டு, தான் அடக்கமாய் யிருக்கிறதாய்க் கேழ்விப்பட்டுது. இதல்லாமல் யெலமானசூர்[1] மீர் சாயபு பெண்டுகள் மைத்த பேரை பிடிச்சு வந்து நேத்துக் காவலிலே வைச்சதாகக் கேழ்விப்பட்டுது.

*1757 வருசம், மாயு மாசம், தேதி 4; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 26; புதவாரம்*

இத்தனாள் பிறப்பட்டு முசியே னுவார் (லெனுவார்) வீட்டுக்குப் போனவிடத்திலே அவர் குமுசல் கூடுகிற நிமித்தம் கோட்டைக்குப் போனாரென்று சொன்ன(ார்கள்). உடனே நாமும் கோட்டைக்கு(ப் போய்) மெத்தை மேலே வந்து துரையவர்களைக் காண்பிச்சுக் கொண்டு ஆசாரம் பண்ணினோம். அப்போது துரையவர்களும் நம்மைப் பார்த்து ஆசாரம்

---

[1] இந்த ஊரின் பெயரை எத்தனை விதமாகப் பிரதி எடுத்தவர்கள் எழுதியுள்ளனர் என்பதை வாசகர்கள் கவனிப்பார்கள். இறைவாச நெல்லூர் என்ற பழம் பெயரோடு, பேச்சு வழக்கில் கொச்சையாகவும் இவ்வூரின் பெயர் புழக்கத்திலிருந்தது.

பண்ணிப் போட்டு குமுசெல் வீட்டிலே (அறையிலே) போனார்கள். அப்போது குமுசலிலே யிருக்குற குமுசேலியோர்களும் சின்ன துரையும் கூடத்தானே போனார்கள். அதன் பேரிலே நாம் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம். பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

சாயங்காலம் அஞ்சு மணிக்கு சின்ன துரை அழைக்கிறாரென்று மனுஷன் வந்து அழைச்சதினாலே, ஆறு மணிக்குப் போன விடத்திலே அவர் சவாரி போயிருந்து ஏழு மணிக்க வந்தார். நாமுங் கண்ட உடனே அவர் சொன்ன சேதி : இங்கிலீசுக்காரருக்கும் நமக்கும் கலகம் அடுத்திருக்குதே வெளியே யேதாகிலும் (சீமைப்) பரபத்தியம் (பணம் வருமா?) அதுக்கேத்த (பணம் கொடுக்கக்கூடிய) பேர்களுண்டா?" வென்று கேட்டார். அதுக்கு, "அப்படி ஆரிருக்கிறார்கள்? ஆருமில்லை," யென்று சொல்லிப் போட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்த யிடத்திலே கேழ்வியான சேதி, கோன்சேலிலே யோசனை பண்ணி சண்டை பண்ணுகிறதாகத் தானே தீத்து, முசியே ஷெவிரோவைக் குமுசேராய் அனுப்பினதாகவும், யிவ்விடத்திலே யிருக்கிற வெள்ளைக்காரர் சட்டைக்காரர் சகலமான (பேரையும்) ஸ்ரீரங்கத்துக்குப் போகச் சொன்னதாகவும், கணக்கெழுதுகிற வெள்ளைக்காரரை யெல்லாம் சந்தினோர் அங்கங்கே நிற்கச் சொல்லி நேமிச்சதாகவும், குமுசேலியோர் களையும் சின்ன துரையையும் ஒவ்வொரு காரியம் ஒவ்வொருத்தர் விசாரிப்பாக நேமிச்சார் களென்றும், திரிச்சிராப்பள்ளி மேலே சண்டை என்றும் கேழ்விப்பட்டுது. ஆகையாலே பரபத்தியம் வாங்கிறதுக்குச் சின்ன துரையை நேமித்தாப் போலே கண்டுது.

நம்முடைய கோபாலசுவாமியைக் கண்டு (பேசலாம் என்று) அவர் வீட்டுக்குப் போ(னேன்). கோபால நாரணப்பய்யன் பிள்ளை சொன்ன சேதி (யாகக் கீழ்வருவதை அவர் சொன்னார்). "யிந்த வருஷத்துக்கு லட்சத்திப் பதினாயிரம் காணும் (விழுப்புரம் சீமையை) யென்பதினாயிரமாக குத்தகை தீந்திருக்கிறது. குறையும் பதினாயிரமும் அவரவர் சரிப்போன படிக்கு சித்தாயம் பண்ணி பஷிச்சார்கள் (செலவு எழுதிவிட்டார்கள்). அதினாலே நாளை ஒரு சங்கதி வந்தாலும் ருசுவுக்கு யிருக்க வேணுமென்று[1] நாங்களுஞ் சிறிது சிந்தாயம் பண்ணினோம். சவரிராயப் பிள்ளையுடனேயும் யிப்படி தாழ்த்தியாய்க் குடுத்தா லெப்படி யென்றும் கேட்டோம். அதுக்கு, "நமக்கென்ன? விழுந்த துண்டுக்கு வசறாத (வசாரத்) ராயர் (அதாவது நமது பிள்ளை) உத்திரவாதி" யென்று சொன்னார். அதுக்குத் தம்முடைய தகப்பனார் தம்முடனே யிவர்களிப்படிப்

[1] 'நாங்களும் உங்களுக்குத் தெரிவிக்கிறோம்' என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

பண்ணுகிறார்களென்றால் நல்லதாகட்டும், நாளை வசாறாத ராயர்[1] வழியிலே வந்தவுடனே நான் நடந்த சேதியும் சொல்லி சித்தாயங்களையும் வெளிப் பண்ணிக் ... (போடுவேன் நான்) என்று சொன்னதாகவும், யிதை நான் சொன்னேனென்று வசாராத ராயரிடம் சொல்லி வையுமென்று கோபால நாராயணப்பய்யன் பிள்ளை சொன்னானென்று கோபால சுவாமி நம்முடனே சொன்னார்.

*1757 வருசம், மாயு மாசம், தேதி 7; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 29; சனிவாரம்*

முன்னாலே உடையார்பாளையத்தார் நமக்குப் புவனகிரி சம்மதியிலேயும், அவன் காவல் சீமைகளிலேயும், கொள்ளை முதல் திருட்டு சம்மதிகளிலேயும் வெகுபணம் வரவேணும். யிதல்லாமல் செஞ்சி பாளையக்காரர் (கையிலிருந்தும்) பேஷக்கஷும், வேறு சம்மதியிலேயும் வெகுபணம் வரவேணும். யிதுக்கு நாம் வைக்கீல் வெங்கிட்ட நாராயணப்பய்யரை[2] அனுப்பிவிச்சு யெத்தனை விதமாய்க் கேட்டாலும் அவன் குடாமல் வண்டத்தனம் பண்ணிக் கொண்டு யிருக்கிறான் யென்று தொரை அவர்களுடனே (நான் சொன்னேன்). முசே மேசேன் ஸ்ரீரங்கத்திலே யிருக்கிறவருக்கு உடையார் பேரிலே தண்டு போயி யிறங்கிப் பணம் வாங்கி வரச் சொல்லி, தொரை காகிதம் யெழுதிவிச்சு அனுப்பிவிச்சதுக்கு, முசே மேசேன் அந்தப்படிக்கி உடையார் பேரிலே வந்திறங்கி(னார். ஆனால்) ராசாகாரியம் பண்ணி உடையார் கையிலே தம்முடைய சுயகாரியம் பாத்துக் கொண்டு, துரையவர்களுக்கு அதுக்குத் தக்கதாய் யெழுதி அனுப்பிவிச்சு, தாமும் புதுச்சேரிக்கு வந்து சேந்து போனார். ஆகையினாலே கும்பினீக்குப் பணம் வராமல் போச்சுது.

அதுக்கு இப்போது தொரை அவர்கள் துறையூர் வக்கீலாயி உத்தியோகத்துக்கு வந்திருந்த கோனேரி நாயக்கரை உடையார்பாளையத்துக்குப் போகச் சொல்லி, பின்னோடே இலவான்சூர் (?) மேலே போன தொத்தேல் தண்டையும் உடையார் பேரிலே போகச் சொல்லி யிங்கே யிருந்து வெள்ளைக்காரர், சட்டைக்காரர், சிப்பாயிகள், மருந்து குண்டு சாமான் சகலமும் உடையார் அனுப்பிவிச்சார்கள்.

வடக்கே மச்சிலிபந்தர் சீமையிலே சிறிது சீமையை இங்கிலீசுக்காரர் கட்டினதாகவும், மேஸ்தர் கிளேவிசு, பங்காளத்திலே பிரான்சுக்காரர் சந்திரநாகூர் பட்டணத்தைக் கட்டிக்கொண்டவர், சென்னப்பட்டணத்துக்கு வந்து, யிவ்விடத்திலே நம்முடவர்கள் கையிலே யிருக்கிற சீமையும் கட்ட வருகிறதாகவும், கூடலூரிலே (யிருக்கும்)

---

[1] வசாரத்–wazarat என்ற சொல்லை இரண்டு வரிகளில் இரண்டு விதமாகப் பொறுப்பின்றிப் பிரதி செய்திருப்பதைக் காண்க.

[2] வெங்கட்ட ராவ் என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

இங்கிலீசுக்காரர் (வந்து, நமது) குண்டு தாழை மட்டுக்கும் மெத்த சபுதலுப்பு (தொல்லை) பண்ணுகுறார்களென்றும் சேதி வருகிறது. அதினாலே யிவ்விடத்திலேயும் வெள்ளைக்காரர் ஆரார் யிருக்குறாங்களோ அவர்களை யெல்லாம் சேரப்பிடிச்சு, யெல்லார் கையிலேயும் துப்பாக்கிகள் குடுத்து, வழிகளிலேயும் வடக்கே நம்முடைய சத்திரமும், முரட்டாண்டி தண்ணீர்ப் பந்தல், வில்லியநெல்லூர், முந்தாசப் (முத்திருசப்) பிள்ளை சாவடி யிந்த அத்துக்கு நாலு வழிகளிலேயும் அங்கே அங்கே தாணயங்கிகளாக பத்துப்பேர் போயிருந்து, இருபது பேர் தத்தீத்தீயாக, பாராக்காரர்களாக, வைச்சு போக்கு வரத்துப் போறவர்களை வெகுசோதனை பண்ணி விடச் சொல்லியும் நேமிச்சார்கள்.

இதல்லாமல், ... யிந்தப் பட்டணம் தோணி யித்தனை நாளையிலே நடவாத காரியம் யிப்போது நடக்கிறது. அகம்படிச்சிகள் புருஷனில்லாதவர்களும், யில்லாமை யாயிருக்கிற பேர்களும் கூலிக்குக் குத்தியும் கூத்தரிசி வித்தும், அவரவர் கட்டப் பிடவையும் யில்லாதபடிக்கு ... வயறு வலித்துக் கொண்டு யிருக்கிறவர்களை, முக்காடு அன்னியிலே (இல்லாமல்) வெளியிலே பிறப்பட்டால் அம்பட்டப் பயல்களை நேமிச்சு, பெண்டுகளை வீதிக்கு வீதி பத்தி விழுத்து மார்(புப்) பிடவைகளைப் பிடுங்குறதும், தெருவிலே யிழுக்குறதும் அந்தப் பிடவையிலே மூணு முழம் கிழிச்சுக் கொண்டு அம்பட்டர்கள் கொண்டு போறதும், யிந்த அடுக்கிலே பட்டணத்திலே மெத்த அருசியங்களாயிருக்கிற காரியங்களெல்லாம் வினாயகப்பிள்ளை நடத்துகிறதும், நம்முடனே அவரவர் வந்து ஆவலாதி சொல்லிக் கொள்ளுகிறதும் காதிலே கேழ்க்கப் போகயில்லை. இதல்லாமல் நம்முடைய கையிலே சீமையிருக்கிறபோது நாம் ஒருத்தரையும் மறிக்கப் போகாது, ஒருத்தரையும் அடிக்கப் போகாது யென்று கட்டுப் பண்ணி (புகாரில்லாமல் நடத்தினோம். குற்றம் செய்தோரைத் தண்டித்தோம்). இன்றைய துரை அவர்களோ தம்முடனே யார் வந்து புகார் சொன்னாலும் தரம் தெண்டியாமல், கும்பினி பணத்துக்காகக் காவலிலே வைச்சிருந்தவர்களைக் கூட நமக்குச் சொல்லாமல் விட்டுவிட்ட துரையவர்கள், யிப்போது சவரிராயப் பிள்ளைக்கு யென்ன உத்தாரம் குடுத்தார்களோ தெரியாது, அவனிப்போது அமுல்தாரர் நாட்டார் குடிகள் யெல்லாரையும் அடிக்குற அடிகளும் தெண்டனைகளும் காதினாலே கேழ்க்கப் போகாது. யிப்படி பின்னையும் வெகு அபந்தரைகள் யெல்லாம் பட்டணத்திலே நடக்கிறது. யிது பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் பண்ணின பாவத்தினாலேயும் பட்டணம் தாழ்ந்து போற கன(ண)த்தினாலேயும் யிப்படி யெல்லாம் நடக்குறது யென்று யெண்ணிக் கொண்டோம்.

***1757 வருசம், மாயு மாசம், தேதி 8; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 30; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி : பாளையங்கோட்டையின் பேரிலே சண்டைக்குப் போனவிடத்திலே பாளையம்கோட்டை(க்கு) வெளியே பிறப்பட்டு சண்டை பண்ணி யிவர்களிலே சிறிது பேர் சேதப்பட்டுப் போனதாகவும், சிறிது பேர் காயம் பட்டுக் குத்து உயிரா யிருக்கிறவர்களுக்கு உபதேசம் பண்ணுகிறதுக்குப் பாதிரியை அனுப்பிவிக்கச் சொல்லி எழுதி வந்ததாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1757 வருசம், மாயு மாசம், தேதி 9; ஈசுவர வருசம், சித்திரை மாசம், தேதி 31; சோமவாரம்***

இத்தனாள் காலமே கேழ்வியான சேதி : வினாயகப் பிள்ளை(யும்) முசே தொத்தே(லும்) பாளையத்துக்குப்[1] போனதாகவும், பாளையம் பெண்ணாடகம் விட்டு உடையார் எட்டுக்குப் போயி வாடியைச் (ஊர் வேலியைச்) சுட்டு உள்ளாகப் போயி ரெண்டு ஊரைச் சுட்டார்கள் யென்றும் கேழ்விப்பட்டுது.

இதுக்கு முன்னாலே சுப்பா சோசியர் யிந்தப் பட்டணத்துக்கு தாரித்திரம் பிடிக்குற தென்றும், ... புத வர்க்கங்களுக் (புதன் கிரகத்தின் பிடியில் இருப்போர்) கெல்லாம் பிலகீனம் வருமென்று, தென்மேல் மூலையிலே கலகம் யெழும்பும் யென்றும் சொல்லியிருந்தார். அதுக்கு அப்படித்தானே உடையார்பாளையத்து மேலேயும் பாளையம்கோட்டை மேலேயும் (சண்டை) யெழும்பித்தே பட்டணத்துக்கு என்ன காணுமோ யென்று யிருந்ததுக்கு, யிப்போது துரை அவர்களும் கோன்சேல்க்காரரும் யோசிச்சு, பட்டணத்திலே மேனீ (சாதி) வரி வாங்கத் தக்கதாயி திட்டம் பண்ணினபடியினாலே பட்டணத்துக்குத் தாரித்திரம் பிடிக்குற யோகம் வந்துதென்று யெண்ணிக் கொண்டோம். புத வர்க்கங்கள் அடிபடுகுறது மாத்திரம் அறிய வேணும்.

யிதல்லாமல் கேழ்வியான சேதி : குண்டூர் பாலி செட்டியைக் கோட்டைக்குள்ளே வரத் தேவையில்லை யென்று யிருபத்தஞ்சு நாளைக்கு முன்னே தொரை அவர்கள் கோபம் பண்ணிச் சொல்லி யிருந்ததுக்கு, யித்தனாள் குண்டூர் பாலி செட்டி கந்தப்பனுக்கு யென்ன சமாதானம் பண்ணினானோ, கந்தப்பன் உப்பாத்து சாம்பய்யன் விவகார நிமித்தியம் கணக்குக் கொண்டு பாலிசெட்டியைக் கோட்டைக்குள்ளே வரச் சொன்னதாகவும் பாலி செட்டி கணக்குக் கொண்டு கோட்டைக்குள்ளே

---

[1] இது உடையார்பாளையம் என்று ஆங்கிலத்தில் உள்ளது. உடையார்பாளையத்துக்குச் செல்லும் வழியில் பாளையங் கோட்டை என்ற ஊர் உள்ளது.

போனதாகவும், பாலி செட்டியை மெத்தைக் கீழாகத் தானேயிருக்கச் சொல்லிக் கணக்குச் சம்மதி பேசினார்களென்று கேழ்க்கப்பட்டுது.

யித்தனாள் கந்தப்பன் கிடாக்குமாரனையும் சந்திமதிபிள்ளை[1] யையும் யெல்லாப் பிள்ளையையும் கூட்டி வரச்சொல்லி குண்டுக் கிராமத்திலே காணி ஒன்றுக்கு யிருபத்திரெண்டு (விராகன்) வீதம் அறுவாகிற நிலத்திலே, மூன்று காணி நிலம் காணி ஒன்றுக்கு யேழு விராகன் யெட்டு விராகனாகத் தீத்து, அஞ்சு வருஷத்துக்கு குத்தகைக்காரருடனே யெழுதி கந்தப்பன் வாங்கிக் கொண்டதாகவும் கேழ்க்கப்பட்டுது.

இதல்லாமல் பாளையத்திலே போயிருக்கிற முசே ஷெவிரோவும் முசே சொபினேயும் யோசனை பண்ணி, "வினாயகன் கும்பினியிலே பணம் வாங்கிக் கொண்டு, தண்டுக்குச் சிலவு வாங்கிப் போடுகிறதிலே ஒன்றுக்கு ரெண்டா யெழுதிவிச்சு ஆதாயம் தான் சுத்திக் கொண்டு போனான். நான் சண்டையிலே கிடந்து சாகிறதென்ன? நடுவே யிவன் ஆதாயம் சுத்திக் கொண்டு போரதென்ன?" என்று ரெண்டு பேர் செட்டிகளைச் சேகரிச்சுக் கொண்டு தொரைக்கு யெழுதி அனுப்பிவிச்சு, தொரை உத்தாரம் அழைப்பிச்சுக் கொண்டு அந்தச் செட்டிகள் முகாந்திரமாய்த் தாங்கள் தானே சிலவு வாங்கி போட்டுக் கொள்ளவும், அதிலே வினாயகன் கொண்டு போற ஆதாயத்தைத் தாங்கள் ரெண்டு பேரும் கொண்டு போறதாய் யோசனை பண்ணிக் கொண்டு தொரைக்கு யெழுதி அனுப்புகிறதிலே யிருக்குறார்களென்று கேழ்க்கப்பட்டுது. யிப்படி நடந்தால் வினாயகன் காரியம் யிதோடே எடுபட்டுப்போம்.

### *1757 வருசம், மாயு மாசம், தேதி 10; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 1; செவ்வாய்*

இத்தனாள் சாயங்காலம் வெள்ளைக்காரன் எழுதின காகிதங்களை ராமாசி பண்டிதர் கையிலே குடுத்து முசே புலோ அண்டைக்கு அனுப்பிவிச்சோம். அவர் கொண்டு போய் முசே புலோ கையிலே குடுத்த யிடத்திலே, அவர் யிதை யெல்லாம் பாத்துக் கொண்டு யிங்கிறேசுக்காரர் பண்ணுகிற கலாபங்களும் சண்டைகளும் யெழுதயில்லை, அதுவும் எழுதிப் போடுங்கோளென்று சொல்லி காகிதத் தஸ்திரத்தை ராமாசி பண்டிதர் கையிலே குடுத்து, சென்னப்பட்டணம் கூடலூர் ஆற்காடு யிவ்விடங்களுக்கும் மனுஷரை அனுப்பி அடிக்கடி கபுறு

[1] கடாக்குமாரன், சந்திரமதிப் பிள்ளை.

அழைப்பிகிறீர்களோ யில்லையோ வென்று கேட்டதாகவும், அதுக்கு "ராமாஞ்சி பண்டிதர் அதெப்படி கபுறு அழைப்பிக்கிறது? தொரையவர்கள் சொல்லவுமில்லை. முகம் பார்த்துப் பேசவுமில்லை. நம்மை மோசம் பண்ணினிரென்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கையிலே, நாம் யெப்படி மனுஷர் அனுப்பிவிச்சு விசாரிக்கிறது?" யென்று சொன்னதுக்கு, முசே புலோ சொன்னது, "அதென்ன பேச்சு? மனுஷர் அனுப்பிவிச்சு கபுறுகள் அழைப்பிக்கச் சொல்," லென்று சொன்னதாகவும் ராமாசி[1] பண்டிதர் சொன்னார். அதுக்கு, "முசே புலோ தெரியாமல் சொல்லுகுறார். முன்னாலே தொரை தானே ஆற்காடு சென்னப்பட்டணம் கூடலூர் கபுறு அழைப்பிக்கச் சொல்லிச் சொன்னார். அந்தப்படிக்கு அழைப்பிக்கு மிடத்திலே சிறிது நாளைக்குப் பிறகு ஒரு நாள், "நீங்கள் யிங்கிரேசுக்காருக்கும் மமுதல்லி கானுக்கும் கபுறு அனுப்புறீரா?" என்று கேட்டார். அதேது, முன்னாலே நீர் கபுறு அழைப்பிவிக்கச் சொல்லிச் சொன்னதினாலே, நான் மனுஷர் அனுப்பினேன். அப்படி யிருக்க யிப்போ பழிபோடுகிறீர். அப்படிக் கொடுத்த மனுஷர் வேறே யென்று சொல்லு தப்பிவிச்சுக் கொள்ளுகிறது பிரயாசமாச்சுது. நமக்(கு ஏன் அந்தப்) பழி" யென்று சொன்னோம்.

அதன் பிறகு சின்னதுரை பட்டணத்திலே யிருக்கிற வீடுகளும் அவரவர் உத்தியோகங்களும் ஆஸ்திகளும் யெழுதிக் கொண்டு வரச் சொல்லி தொரை சொன்னாரென்று சொன்னதினாலே, நயினார் கணக்குப் பிள்ளைகளை அழைப்பிச்சுப் பட்டணத்து வரிக் கணக்கு கொண்டு வரச்சொல்லி, அதைப் பிடிச்சுக் கொண்டு தெரு தெரு வீடு வீடு வரிசையாய் அவரவர் பேர்களும் வீடுகளும் சுமாராயி அவரவர் தொழிலும் அவரவர் ஆஸ்திகளும் எழுதச் சொல்லி, கோபல சுவாமியையும் கூட வைச்சுப் பாளையக்காரன், நயினார், கணக்குப்பிள்ளைகள் எழுதிக் குடுக்கிற கணக்குப் படிக்கி ராயசம் வெங்கிடாசலய்யனையும் பெருமாள் அய்யனையும் வெங்கிட்ட நரசய்யனையும் கூடவைச்சுக் கொண்டு காயிதத்திலே யெழுதிவிக்கச் சொல்லி நேமிச்சோம். அந்தப்படிக்கு அவர்கள் ராத்திரி பனிரெண்டு மணி வரைக்கும் எழுதினார்கள்.

***1757 வருசம், மாயு மாசம், தேதி 14; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 5; சனிவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே தொரையவர்கள் ஆரையும் மெத்தை மேலே விடத் தேவையில்லை யென்றும், தரம் அழைச்ச பேர் வரட்டு மென்றும் வாசல்க்காரனுக்குச்

---

[1] ராமாசி என்று ராமாஞ்சிக்குப் பதிலாக இப்பத்தி முழுவதும் எழுதப் பட்டுள்ளது. ஆங்கிலப்பதிப்பிலும் கூட.

சொல்லி காம்பிராவிலே தானே யிருக்குறாரென்று சேதி சொன்னதினாலே, அப்படியிருக்க நாம் யேன் போகவேணும் என்று பிறப்பட்டுப் பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம். அங்கே வந்தபிறகு கேழ்வியான சேதி: ... (கப்பல்) கும்மாந்தாமாய் வருகுற முசே சேன் சோருலு St. George) என்கிறவர் மயேயிலே யிறங்கின உடனே ஒரு கடுதாசி கையிலே குடுத்து அனுப்பிவிச்சபடியினாலே, அதுக்கு மறு சேதி யெழுதுகிற நிமித்தியம் (துரை) உள்ளே யிருக்கிறார் யென்றும், மயேயிக்குச் சிலவுக்கு அனுப்புகுறதுக்கு முசே தெவோ ரெண்டாயிரம் விராகன் கொண்டு தொரை கிட்டப் போனதாகவும், போனவிடத்திலே அவர் பணத்து நிமித்தியம் யென்ன சொன்னாரோ, முசே தெவோ வெளியிலே போறதிலே முகம் வாட்டமாய்ப் போனாரென்றும் கேழ்விப்பட்டுது. சுத்துக் கோட்டை (கொத்தளம்) மேலே போட்டிருக்கிற சின்ன பீரங்கிகளை யெல்லாம் யெறக்கி பெரிய பெரிய பீரங்கிகளை யேத்தச் சொன்னதாக யேத்தினானார்கள்.

உடையார்பாளையத்துக்கு(த் தண்டுகளோடு) போன முசே தொத்தேல் முதலான பேர்கள் சுயகாரியங்களைப் பார்த்துக் கொண்டு கோனேரி நாயக்கரை உடையார் கிட்ட அனுப்பிப்போட்டு, ஊட்டத்தூருக்குப் போயி அங்கே ரெண்டு நாள் முகாம் பண்ணி, அப்பால் ஸ்ரீரங்கம் போனதாகவும், அரும்பாத்தை வினாயகம் பேரிலே முசே தொத்தேல் முதலானவர்கள் கோபம் பண்ணி அவன் மனுஷன் சரவனை (சரவணன்?) முதலான பேரை அடிச்சு, அப்பால் உடையார் காட்டை விட்டு ஸ்ரீரங்கத்துக்குப் பயணம் போனதினாலே யிங்கே தொரை கோபம் பண்ணி அனுப்பிவிச்ச வினாயகன் துருசாய் அவர்கள் கிட்டப்போகப் பயந்து, விருத்தாசலத்துக்குப் போயி அங்கே யிருந்து தண்டுக்கு ஸ்ரீரங்கத்துக்குப் போற சாமான் பிறகே கூடப் போறதாகவும் கேழ்விப்பட்டுது. முசே தெவோ யினி மேல் சீமைப்பணம் வருகிறது செவ்வை யாயி வரமாட்டாதென்று யோசித்து, துரை கிட்டப் போயி தங்கள் மேல் குத்தங்களை மறைக்க வேண்டிய வேறே யெடுப்பு யெடுத்து சீமையிலே இங்கிரேசுக்காரர் கலகம் வருமென்றும், யிவ்விடத்திலே யிருந்து பெரிய மனுஷர் (பிரெஞ்சு அதிகாரிகள்) ஆனி மாசத்திலே (சீமைகள் எல்லாம் இங்கிலீசுக்காரர் வசமாகுமென்றும்) யெழுதி அனுப்புகிறதினாலே யினி மேல் சீமைப் பணங்கள் வருகுறது பிரயாசமாயிருக்குதென்றும் பொய்யைப் போய்ச் சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது.

வந்தவாசித் தக்கே (Taqi Sahib) சாயபுக்கு வெகுமானம் அனுப்பின வயணம் :

முதல்தரம் சிகப்பு சகலாத்து சிப்பம் 4 க்கு கெசம் 67. சிகப்பு சகலாத்து துண்டுக்கு கெசம் 6. வெள்ளிப்பிடி போட்ட சூர்கத்தி 6. முத்துச் சிப்பி வெள்ளி வேலை செய்த பிடி போட்ட சூர்கத்தி 6 திஷ்ட்டிக்கோலி 1. பங்காளம் வெள்ளை மொழுகுத் திரி பெட்டி 1 க்கு ராத்தல் 136. சிகப்பு தமாசு சுருட்டி 2. மெல்லீசு துப்பாக்கி 1. மெல்லீசு பிஸ்தோல் சோடு 1.

***1757 வருசம், மாயு மாசம், தேதி 15; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 6; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போனவிடத்திலே தொரை அவர்கள் நாலஞ்சு பேருடனே கோயிலுக்குப் பூசை கேழ்க்கப் போகையிலே நாம் போயி காண்பிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம். சின்ன துரையும் சிறிது கோன்சேல்மார்களும் பெரம்பைக்குப் போனவிடத்திலே அங்கே யிருபத்தோரு வேட்டுப் போட்டார்கள்.

தக்கே சாயபு மனுஷர் முன்னாலே தக்கே சாயபுக்கு அனுப்புவிக்கிறதுக்கு தொரைக்கிட்ட எழுதிக் குடுத்த டாப்புப் படிக்கி யெழுதியிருக்குறோமே அந்தப்படிக்கி அனுப்பாமல், யிந்த (புதிய) டாப்புப் படிக்கி வயணம் யெழுதி அனுப்பிவிச்சார்கள்.

சீமா மூலங்களுக்குக் கட்டில்களும் ரஸ்தும் நெய்யும் அனுப்பச் சொல்லியெழுதி அனுப்பி விச்சார்கள்.

யிதல்லாமல், யிலமாஞ்சூரிலே (எலவானசூர்) யிருந்து செத்துப்போன மீர் சாயபு பெண்டுகள் தம்பி முதலான பேரைப் பிடிச்சுவந்து சாவடியிலே காவல் பண்ணி யிருக்கிறவர்கள் கிட்ட வலியவே கந்தப்ப முதலி வந்து, உங்களைக் காவல் விட்டு விடுகுறோம் யென்ன குடுக்கிறீர்கள் யென்று அந்தரங்கமாய்ப் பேசினதாகவும், அதுக்கு அவர்கள், “தங்கள் கொள்ளை முதலும் குடுத்து, காவலும் விட்டு, யெலமாஞ்சூர் சீமையும் யெங்கள் கையிலே குடுத்தால், சவரிராயப் பிள்ளை யேத்துக் கொண்டதுக்கு ரெட்டிப்பு நாங்கள் யேத்துக் கொண்டு பணம் குடுக்கிறோம். பெண்டுகள் பிள்ளைகள் யிங்கே தானே யிருக்கிறோம்,” என்று பேசினதாகவும், சுயகாரியங்கள் யென்ன பேசினார்களோ தெரியாதென்றும் கேழ்க்கப்பட்டுது.

[1] ஆங்கிலப்பதிப்பு சிறிது மாறுபடுகிறது.

யின்றைக்கும் மெத்தைமேலே ஆரையும் விடத்தேவையில்லை யென்று முசே தெவோவும் தொரை அவர்களும் யேகாந்த யோசனையிலே யிருக்கிறதாகக் கேழ்க்கப்பட்டுது. கந்தப்பனும் மதனாந்த பண்டிதனும் மாத்திரம் மெத்தைமேலே போகலாமென்று உத்தாரம் குடுத்ததாகக் கேழ்க்கப்பட்டுது.

*1757 வருசம், மாயு மாசம், தேதி 20; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 11; சுக்கிரவாரம்*

இத்தனாள் சாயங்காலம் ஆறு மணிக்கு சண்டை வரி எழுதுகிற நிமித்தியம் வெள்ளைக்காரர் வீடுகள் கூட எழுதினதினாலே வெள்ளைக்காரர் கூடிக்கூடி யோசனை பண்ணுகுறார்களென்று கேழ்க்கப்பட்டுது. ஸ்ரீரங்கத்துக்குப் போன வெள்ளைக்காரரும் சிப்பாயிகளும் காவேரிக்கு அப்பாலே போய் உறையூர் கொள்ளையடிச்சதாகவும், உய்யக் கொண்டான் திருமலையைப் பிடிச்சதாகவும் யிங்கிரேசுக்காரர் கட்டிக் கொண்டிருக்கிற காவேரி தீர சீர்மையைச் சப்த்தி பண்ணினார்களென்றும், கோட்டைக்கிட்டே போயிச் சேர்ந்தார்களென்றும், பத்தாந்தேதி பதினோராந்தேதி கோட்டையிலே லெக்கை ஏறப்போறதாகவும் கேழ்க்கப்பட்டுது. சென்னப்பட்டணத்திலே நாற்பது உருப்படி மேலே[1] பீரங்கி மருந்து குண்டு சண்டை முஸ்தீத்துகளை யேத்துகிறார்களென்று கேழ்க்கப்பட்டுது. முசியே புசி தண்டெல்லாம் பங்காளத்துக்குப் போறதாகவும், வடக்கே போறதிலே ஒரு பாளையக்காரன் பெலத்தவன் வந்து விழுந்து தண்டு முழுகி (பெருஞ் சேதப்பட்டு) முசே புசியும் ஸ்ரீகாகுளம் வந்து சேர்ந்ததாகவும் கேழ்க்கப்பட்டுது.

*1757 வருசம், மாயு மாசம், தேதி 21; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 12; சனிவாரம்*

இத்தனாள் மயிசூரிலே வந்திருந்த நானா தண்டும் நானாவும் சண்டை நிறுத்தி, சமாதானம் ஆயி வடக்கே நானா திரும்பி தண்டுடனே கூடப் பயணம் போனதாயும், நந்திராசா கோட்டையிலே யிருக்குற பேரை ஆரையும் வெளியே விடாமல் பத்து நாளாய் வாசலைச் சாத்திக் கொண்டு யிருக்கிறதாகவும், உள்ளே யென்ன நடக்குறதோ தெரியாது யென்றும் சொன்னார்கள். இதல்லாமல் வேலூரிலே மிறுத்தசல்லிக்கான் (Murtaza-Ali-Khan) குமாரத்தியைக் கலியாணம் நிலவரம் பண்ணியிருந்த நவாபு சப்தரல்லிகான் (Nawab-Safdar Ali Khan) யிளைய குமாரனுக்கு ஸ்புடங் (பெரியம்மை) கண்டு விழுந்துபோன தாகவும், அவன் விழு முன்னே அனேகம் பேர் துலுக்கருக்கு ரெவ்வெண்டு தரம் வபறு

போறதும், உடனே சாகிறதும் ஆக வெகு பேர்கள் செத்தார்கள் (என்றும்), அவன் விழுந்து போன பிறகு அப்பால் ஒருத்தரும் வயறு போய் சாகவில்லை, அவன் செத்து எட்டு நாளாச்சு தென்றும் கேள்விப்பட்டுது.

***1757 வருசம், மாயு மாசம், தேதி 22; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 13; ஆதிவாரம்***

இத்தனாள் சாயங்காலம் கேழ்வியான சேதி யென்ன யென்றால், ஸ்ரீரங்கத்திலே பிரான்சுக்காரர்களுக்கும் திருச்சிராப்பள்ளி கோட்டையார்களுக்கும் ஒரு நாள் சண்டை நடந்து, இதிலே அஞ்சாறு பேரும் செத்தார்கள். அதன் பேரிலே கோட்டையாருக்குப் பெலனாய் தஞ்சாவூரார், மறவன் தொண்டமான் வகையராக்கள் வருகுறதாயும், பிரான்சுக்காரர் அங்கே யிருக்குற பேர் கோட்டை பிடிக்குறதுக்கு யேணிகள் நீளம் போறாதென்று இவ்விடத்துக்கு யெழுதி அனுப்பினதாகவும், அதன் பேரிலே துறையூரிலே உண்டான மூங்கிலை யெல்லாம் கொண்டு வரச்சொல்லி முஸ்தீப்பு பண்ணி அனுப்பிவிக்கப் போறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1757 வருசம், மாயு மாசம், தேதி 23; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 14; சோமவாரம்***

இத்தனாள் மயிசூர் சேதி அவ்விடத்திலிருந்து யெழுதி வந்தபடிக்கி தெலுங்கிலே யிதின் கீழே யெழுதியிருக்குது.[1]

***1757 வருசம், மாயு மாசம், தேதி 25; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 16; புதவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி நேத்து உத்திர மேநெல்லூர் சீமையின் பேரிலே யிங்கிரேசுக்காரர் வந்து விழுந்து உத்திரமநெல்லூரையும் கட்டிக் கொண்டு, சீர்மை சப்த்தி பண்ணினார்களென்று சேதி வந்தபடியினாலே யித்தனாள் நூறு நூத்தன்பது பேர் குதிரைக்காரரையும் யிருநூறு பேர் பாறுக்காரர்களையும் லாவணம் (திரட்டி) வைச்சு திரும்பி, உத்திரமநெல்லூருக்குப் போயி சண்டை பண்ணச் சொல்லி அனுப்பினதாகவும், சோறு (சுகூர்) பகதூரைத்தானே பெலப்படுத்திக் கொண்டு யிருக்கச் சொல்லி அனுப்பினதாகவும் சேதி கேழ்க்கப்பட்டுது.

---

[1] அது எழுதப்படாமல் இடம் காலியாக உள்ளது.

*1757 வருசம், மாயு மாசம், தேதி 27; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 18; சுக்கிறவாரம்*

யித்தனாள் கேழ்வியான சேதி, சொலுதாதுக் ளெல்லாம் புது துப்பாக்கி குடுத்து வாசல்படியிலே கோன்சேலியோர் களிருக்கத் தக்கதாக நேமிச்சார்கள் யென்றும் நாளை முதல் அந்தப்படிக்கு நடக்குமென்றும் கேழ்க்கப்பட்டுது. யிதுவுமல்லாமல் ஸ்ரீரங்கத்திலே யிருக்கிற முசே தொத்தேலுக்கு திருச்சிராப்பள்ளிக் கோட்டையை சாதிக்கலாம் போலே யிருந்தால் யிருக்கவும், இல்லாமல்ப் போனால் தண்டோடே பிறப்பட்டு வந்து விடவுமென்று தொரையவர்கள் எழுதி அனுப்பினதாகவும் கேழ்க்கப்பட்டுது. யிதுவுமல்லாமல்[1] நாலஞ்சு நாளைக்கு முன்னே மசுக்கரையிலே யிருந்து சுலுப்பு வந்துதே, அதிலே வந்த சேதி : சீர்மையிலிருந்து பதினாரு கப்பல் வந்ததாகவும், மசுக்கரையிலே யேழு கப்பலிருந்ததாகவும் அதையும் சேத்துக் கொண்டு ஆக 23 கப்பல் வகுதுதென்றும், சின்ன துரை வீட்டுவாசல், முசியே கில்லியார் வீட்டு வாசல், முசியே தெவோ வீட்டுவாசல், முசியே நுவார் (தவறு. லெனுவார்) வீட்டுவாசல், யிவர்கள் வீட்டுவாசல்களிலே தங்கள் தங்கள் தொரைகள் சொல்லிக் கொண்டதாகவும், அந்தசேதியை அவரவர் துபாசிகள் வெளியிலே அவரவருடனே சொல்லிக் கொண்டதாய்க் கேழ்க்கப்பட்டுது.

[1] இச்சொல் எத்தனை முறை பயன்படுத்தப்பட்டுள்ளது!

## ஜூன் 1757

*1757 வருசம், சூன் மாசம், தேதி 1; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 23; புதவாரம்*

இத்தனாள் காலமே யெட்டு மணிக்கி முசே லெறி குவர்ணதோரவர்கள் அழைச்சனுப்பிப் போனவிடத்திலே யிங்கிரேசுக்காரருக்கும் நமக்குஞ் சண்டை துவக்கின படியினாலே உன்னுடைய மாரிபத்தாய் சிறிது சிப்பாயிகளை அழைப்பியென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் பின்னையுஞ் சிறது சேதிகள் சொன்னார். அதுக்கு நாமும் பதிலுத்தரவு சொல்லிப் போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து பனியிரண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 2; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 24; குருவாரம்*

இத்தனாள் நடந்த சேதி, நாணு வைக்குற (சேர்க்கிற) காரியத்துக்கு சுத்திலே யிருக்கிற பாளையக்காரர் நயினாருக்கு பெந்து (பந்து) வாயிரு(க்கிறார்கள்). அவர்களை அழைப்பிச்சு வைச்சால் நம்பிக்கையாயிருக்கும் யென்று நான் துரையுடனே சொன்னதுக்கு, தொரை சீமா மூலம் பணத்திலே யெழுதியிருக்கிற பேரை நான் சொன்னதாய் யெண்ணி, சீமா மூலம் (வரவு) அலைஞ்சு போ மென்று சொன்னார். சீமா மூலம் அல்ல, வழுதாவூர் வில்லியநெல்லூர் குண்டு கிராமம் அதிலே யிருக்கிற பேரையாக்கும் நான் சொன்னது யென்று சொன்னதுக்கு, ஆனாலவர்களை அழைப்பி யென்று சொல்லி, முப்பத்தாறு மாடு செத்து (அல்ல. பிடித்து) ஆலம்புரவைக்குப் போற தண்டின் பிறகே அனுப்ப வேணுமென்று அதுக்குக் காகிதம் ஒன்று குடுத்தார். அதை வாங்கிக் கொண்டு வெளியிலே வந்து, அதைத் தமிழ்ப்படுத்தி, கும்பினி சேர் வைக்காரனை அழைச்சு அவன் கையிலே குடுத்து அந்தப்படிக்கி ஊரிலே யிருக்கிற மாடுகளை யெல்லாம் தயாரு பண்ணி அனுப்பச் சொல்லிப் போட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம்.

அப்பால் பாளையக்கார நயினாரையே அழைப்பிச்சு, உங்கள் உறைமுறையாரிருக்கிற பேருக்குச் சொல்லி அனுப்பி செனங்களை அழைப்பி யென்று சொன்னதுக்கு, சொன்னபடிக்கு அழைப்பிக்குறேன், யிருநூறு பேருக்குக் குறையாமல் முன்னூறு பேர் மட்டுக்கும் அழைப்பிக்குறேன், யிங்கே யானால் வெள்ளைக்காரர் துப்பாக்கி குடுத்து வரிசை திருப்பச் சொல்லி அடிக்கிறார்கள். தலைக்குத் தலையாய் நாயமாயிருக்குது. ஆகையாலே செனங்கள் வரப்பயப்படுகிறார்கள்.

மைத்தப்படிக்கி நம்பிக்கையான மனுஷர் வெள்ளைக்காரர் உபத்திரவ மில்லாம லிருந்ததானால் அழைப்பிக்குறேனென்று சொன்னான். நல்லது உன்னைத் தானே தனி பண்ணி விக்குறோம்,[1] வெள்ளைக்காரர் உபாதி அன்றியிலே (இல்லாமல்) பண்ணிவிக்குறேமென்று சொல்லிப்போட்டு பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 3; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 25; சுக்கிறவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போறதுக்கு ஆயத்தமாயிருக்கிறத்திலே கும்பினி சேவுகன் வந்து தொரை அழைக்கச் சொன்னாரென்று வந்து அழைச்சான்.[2] உடனே பிறப்பட்டு தொரை அண்டைக்குப் போயி மெத்தைமேலே காண்பிச்சுக் கொண்டவிடத்திலே தொரையிருந்து கொண்டு நகைப்பு முகத்துடனே மாடு அனுப்பிவிக்கிறதுக்குத் திட்டம் பண்ணியாயென்று கேட்டார். "மாட்டுக் காரியமும் திட்டம் பண்ணினேன். நயினாரையும் அழைப்பிச்சு செனங்களை அழைப்பிச்சுக் கொண்டு வரச் சொன்னதுக்கு, வெள்ளைக்காரர் வாதையினாலே வரிசை திருப்புகிறதுக்கு அவர்களாலே ஆகாதே யென்று பயந்து சொன்னான். நான் துணைக்குத் (நீ பயப்படத்) தேவையில்லை. அந்த ராணுவுக்கு உன்னைத்தானே தனிப் பண்ணுகுறோம். நம்பிக்கையுள்ள செனமாய் அழைப்பி யென்று திட்டம் பண்ணியிருக்கிறேன். ஆகையினாலே அவன் ராணு நம்பிக்கையுள்ள (வர்கள்). ஆனதினாலே அவர்களைக் கொத்தளங்களை கார்க்கத் தக்கதாய்ப் போட்டு விச்சு, கொத்தளம் கார்க்கிற பாராக்கரரை யெங்கே வேணுமானால் அனுப்பலாம்," என்று சொன்னதுக்கு, சிரிச்சுக் கொண்டு மெய்தான், அப்படித்தானே நடத்துவோம் யென்று சொன்னார்.

அப்படி யிருக்கையிலே தலங்கம்பாடி கோன்சேலியேர் (ஒருவன்), வடக்கே போறவன், தொரையுடனே ஒரு நாழிகை பேசி யிருந்து போனவுடனே, முசே தெவோ முகமெல்லாம் வாடி தொரை அண்டைக்கு வந்து யிரண்டு பேரும் உள்ளே பேசப் போனார்கள். நாம் தென்பிற சாலையிலே வந்திருந்தோம். அப்படியிருக்கையிலே ஒரு நாழிகை மட்டும் முசே தெவோ பேசியிருந்து கீழே யிறங்கி பிடவை பிடவை பார்க்கிற சாலையிலே போறார். பின்னோடே தொரை அழைக்கிறாரென்று சோபுதாரர் போயி அழைச்சவுடனே முகத்திலே மெத்த வாட்டங் கண்டு கைகால் ஆடிப்போயி நடைகுடாமல் மெள்ள மெள்ள துரை அண்டைக்குப்

[1] 'உன்னிடம் தானே பொறுப்பை விட்டிருக்கிறோம்'.

[2] இதுவரை சுயகாரியம்–பணம் சேகரித்தல்–மட்டுமே இருந்தது. அதற்குத் தன் துபாசி கந்தப்ப முதலியைப் பயன்படுத்திக்கொண்டார் லெறி. இப்போது சண்டை மூண்டு விட்டதால் பிள்ளையை நாடவேண்டியது அவசியமானது.

போனபடியினாலே, யித்தனை அசதி வருவானேனென்று யோசனை பண்(ணினேன்).

நேத்து ராத்திரி தாண்டவராயப் பிள்ளை நூறு பேர் கூட்டத்துடனே பெருமாள் கோயிலுக்குப் போயி வருகிற வழியிலே மேலுகிரி செட்டியைக் கண்(டார்). கூட வருகிற பேரை யெல்லாம் நிறுத்திப்போட்டு, மேலுகிரி செட்டியைக் கூட்டிக் கொண்டு தூர யேகதேசமாயிப் போயி, தாண்டவராயப் பிள்ளை சொன்ன சேதி: "நான் பிள்ளை அவர்களுக்கு உறைமுறையான். ஆதியிலே அவர்களை நாடி யிந்த ஊருக்கு வந்தேன். யெனக்கு பாவீன மன்றியிலே (மரியாதை இல்லாமல்) போச்சுது. யிப்போவும் நான் அவர்கள் காரியத்திலே தப்பிதமாய் நடந்தவனல்ல. யென்னிடத்தில் தயவுவைச்சு நடப்பிச்சுக் கொள்ள வேண்டியது. நானும் கண்டெடுத்த காசுக்குக் கூட கணக்கு யெழுதி யிருக்கிறேன். அவர்கள் எப்போ கணக்கு கேட்டாலப்போ கணக்கு குடுத்துவிடுகுறேன் யென் பேரிலே தெயவு வைச்சு நடந்தவேணு," மென்று சொன்னதாகவும், அதுக்கு மேலுகிரி செட்டி "பிள்ளை அவர்களும் (உம்மை) நீர் மெத்த சமர்த்தகர், புலமறிஞ்சவர், பணமெல்லாம் மகா உபாயமாய்த் தானே அறுவிட்டாரென்று உம்முடைய யிடத்திலே துயவாய்ச் சொல்லிக் கொண்டு யிருக்குறாரே," யென்று சொன்னதுக்கு, "மெய் தான். யித்தனை நாளும் உபாயமாய்த் தானே அறுவு பண்ணினேன். யிப்போ பதினஞ்சு நாளாய் யென் உபாயம் ஓடயில்லை. சீமையிலிருந்து ஒரு காசு வருகுறது மில்லை. சீமை கலாபிச்சு நெல்லு விலை ஒசந்து போச்சு. ஆகையாலே யென் உபாயம் நடக்கயில்லை," யென்று சொன்(னாராம்). மேலுகிரி செட்டி (இதையெல்லாம்) நம்முடனே வந்து சொன்னான். ஆகையாலே சீமா மூலம் பணம் வராததினாலே தொரை முசியே தேவோவைக் கண்டிச்சிருக்க வேணும். அவன் போயி சவரிராயனைக் கண்டிச்சிருக்க வேணும். அதினாலே தாண்டவ ராயப்பிள்ளையும் அப்படிச் சொன்னான். முசே தெவோவும் யித்தனை அசதியாய் அசந்து போறான் யென்று யெண்ணிக் கொண்டோம். அதின் பேரிலே பூந்தோட்டக் கச்சேரியிலே போயிருந்து வீட்டுக்கு வந்தோம்.

***1757 வருசம், சூன் மாசம், தேதி 4; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 26;***

இத்தனாள் சனிவாரம் நமக்கு ஒடம்பு சொஸ்தமில்லாத படியினாலே வெளியே போகயில்லை. முசே லெறி கோர்ணதோர் மயிசூர் நந்திராசாவுக்கு யெழுதின (பதில்) காகிதத்துக்கு நக்கல் தெலுங்கிலே யிதின் கீழே எழுதி யிருக்குது.[1]

---

[1] அது எழுதப்படாமல் வெற்றிடமே உள்ளது.

ஸ்ரீரங்கத்துக்குப் போயிருந்த தண்டு யித்தனாள் மேடு வந்து சேர்ந்தது.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 5; ஈசுவர வருசம், வைகாசி மாசம், தேதி 27; ஆதிவாரம்*

இத்தனாள் கஞ்சாம் பீர் மகம்மது ஷாயிபியுடனே (சாகிபுடனே) உத்திராதி யிலிருந்து (வடக்கில் டச்சுத்துறையான) பாலைக்கோலுலே (பாலக் கொல்லு—Palakollu) யிருந்து உலாந்தாக்காரர் துரையின் சோடாக்காரர் நாகப்பட்டணத்துக்குப் போனவர்ககள் சொன்ன சேதி விபரமாவது.

கோல்க்கொண்டையிலே யிருந்து முசே புசி பவுன்சுடனே ஸ்ரீக்காக்கோல், ராசமகேந்திரம், வேலூர் (எல்லூர்) வகையரா யிடங்களுக்கு வருகிறபோது, முசே லாசைக் கூட (M. Law) அழைச்சுப்போய், முசே புசி முசே லாசுக்கு வேலூர் (எல்லூர்), ராசமகேந்திரம் வாரத்துக்கு (வகையராவுக்கு) நவாபு கிரி குடுத்து வைத்தபடியினாலே, அவர் அவ்விடத்துக்கு அதிகாரம் பண்ணிக் கொண்டிருந்தார். அப்படியிருக்க, யிங்கிரேசுக்காரர் வடக்கே பங்காளத்திலே மேஸ்தர் கிளேசு யிங்கிரேசுக்காரர் ... கொம்மாந்தாம் ஆகப் போயிருக்கிறவன், பிரான்சுக்காரரைப் பகைச்சுக் கொண்டு மோசம் பண்ணிக் கொண்டு, யிவர்களுடைய கொட்டடி சந்திரநாகூரை வாங்கிக் கொண்ட சேதி முசே புசிக்கு வந்தது. அவர் முசே லாசை யிங்கிரேசுக்காரருடைய ரேவுகளை வாங்கிப் போடச் சொல்லி யெழுதின சேதி முசே லாசுக்கு வந்து, அப்பாலவர் வேலூர் (எல்லூர்), ராசமகேந்திரம் வாரத்துக்கு (?) சமீபமாயிருக்கிற யிங்கிரேசுக் காரருடைய ரேவுகளாகிய விசாகப்பட்டணம், மேலப் பள்ளி, காபுல்பாளையம் (Kapulpalayam), கோபகிரி, பெண்டமூர்லங்கை (Bandemurlanka) (இது) கோதாவரி முகத்துவாரத் தண்டையிலிருக்குது—யிந்த ரேவுகளை செயிச்சு வாங்கி நம்முடைய பிராஞ்சுக்காரர்களுடைய வெள்ளைக் கொடி (போடுமாறு அதில் எழுதியிருந்தது). ரெட்டி போலவரம் ராசா—பெத்தாவரம் ஜெகபதி ராசா மங்கபதி (வெங்கட்ட ராசா—தேவுனுவுகுடு சகபதிராசா[1] வகையரா சமீன்தாரர்களையும் அவர்களுடைய பாரி (பெரிய) பவுன்சுகளையும் அவ(ர்களுடைய) வெள்ளைக்காரப் பவுன்சு, தோப்புக்கானா வகையரா சண்டை சரஞ்சாமுகளையும் ... முஸ்தீது பண்ணிக் கொண்டு சண்டைக்குப் பிறப்பட்டுப் போயி, யேனத்துச் சமீபமாய் யிறங்கி, அவ்விடத்துக்குக் கிழக்கு மேலே யெழுதப்பட்ட இங்கிரேசுக்காரருடைய

[1] ரெட்டி போலவரம் ராஜா, மங்களபதி தேவு, நூவுகிடு அப்பாராவ், மொகல்தூற்று வெங்கடபதி ராஜா, பெத்தாவாரம் ஜெகபதிராஜா.

மேலப்பள்ளி, காபுல்பாளையம் யென்கிற பெத்திரிகளின் பேரிலே பவுன்சை அனுப்பிவிச்சு, அதுகளைப் பத்தேப் பண்ணி(னார்). அப்பால் பேனத்துக்குத் தெற்கு நாற்காத வழியிலிருக்கிற ரேவு கெடியிலே மேஸ்தர் ஆந்திரீசு (Mr. Andrews) யென்கிற இங்கிரேசுக்கார கப்பித்தான் சிறிது பவுன்சுடனே யிருந்தானாம். அதன் பேரிலேயும் பவுன்சை அனுப்பிவிச்ச மாத்திரத்திலே அந்தக் கப்பித்தான் ஒரு நாள் சண்டை பண்ணி ஓடிப் போயிவிட்டானாம். நம்முடையவர்கள் அந்தக் கொடியும் வாங்கிக் கொண்டு வெள்ளைக் கொடி போட்டுக் கொண்டிருந்தார்கள். அதுக்கு வடக்கே விசாகப்பட்டணமாகிய யிங்கிரீசுக்காரருடைய ரேவின் பேரிலே முசே புசி சண்டைக்கு வருகுறதாய், முசே லாசையும் பவுன்சுடனே அவ்விடத்துக்கு வரச்சொல்லி ஒடுதி கொடுத்திருக்கிறபடிக்கி, யிவர்களும் விசாகப்பட்டணத்தின் பேரிலே சண்டைக்குப் போறவர்களா யிருக்கிறார்கள் யென்கிற சேதி தஸ்திசீக்கு(?) சேதியாய் சோடாக்காரர் வந்து சொன்னதாய் பீர் மகம்மது சொன்னான்.

ஆனால் பென்னுடைய சோதிட சாஸ்திர சித்தாந்தப்படிக்கு யிந்த ஈசுவர வருசம் முதல் சத்துருக்களாகிய இங்கிரேசுக்காரர்களுடைய றேவுகள் பிரான்சுக்காரருடைய ஆதீனமாயி, யிவர்கள் வெள்ளை சண்டாக்கள் போடவேண்டிய காலமானபடியினாலே, அதுக்கு யேஷியம் ஆரம்பமாய் அவர்களுடைய கோட்டைத் தலங்களும் றேவுகளும் பிரான்சுக்காரருடைய ஆதீனமாயிக் கொண்டு வருகுது. இனிக் கொஞ்ச நாளையிலே யேரோப்பு ராச்சியத்திலே இங்கிலீசுத்தோர் (இங்கிலாந்து) முதல் இந்தியாவில் சென்னப்பட்டணம், தேவனாம்பட்டணம் வரைக்கும் ஸ்தலங்களெல்லாம் நம்முடைய பிரான்சுக்காரர்களுடைய ஆதீனமா மென்று சகல செனங்களும் மெய்யாய் யெண்ண வேண்டியது. யிந்த சித்தாந்தம் தப்பாது யென்று நிஷ்கருஷையா (நிச்சயமா) யெண்ணியிருக்குறேன்...

***1757 வருசம், சூன் மாசம், தேதி 6; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 28; சோமவாரம்***

இதல்லாமல் ஆற்காட்டிலே யிருந்து இங்கிலீசுக்காரர் பவுன்சும் அப்துல் பாபு (வகாபு) பவுன்சும் பிறப்பட்டு வந்தவாசியின் பேரிலே சண்டை பண்ணுகிறதாயும், அய்யண்ண சாஸ்திரி சாரப்பணாக் (கோட்டைக்) குள்ளே போயிருக்கிறதாயும், சாரப்பணாவை அவர்கள் சுத்திக் கொண்டிருக்கிறதாயும், யிந்தச் சேதி சவரிராயனுக்கு வந்து முசே தெவோ, மோன்சீயோர் கோவர்ணதோருக்குக் கபுறு சொன்னதாயும் கேழ்வியாச்சுது. முன்னாலே வந்தவாசி தக்கே சாயபுக்கு (ஒரு) சாகீர் விட்டுக் குடுத்ததுக்கு சவரி ராயனுக் பெகுமதி பண்ணினார்களே (அது போலே) யிந்தநாள் முசே தெவொ அல்லி நக்கி (அலி நக்கீ சாயபு)

வீட்டுக்கு வந்து, "சத்துருக்கள் வந்து யிறங்கி யிருக்குறார்களே, அவர்களை அடிச்சு செயம் பண்ணத் தேவையில்லையா? நாங்களும் மத்தத்துப் பண்ணுகுறோம். நீங்களும் யெழுதி யனுப்பி செயம் வரத்தக்கதாகப் பாருங்கோள்," என்று சொன்னதுக்கு, அவர்கள் நல்லதென்று சொல்லி, சாகீர் விட்டுக் குடுத்ததுக்கு முசே தெவோவுக்குச் சீரொப்பாவும் பின்னையும் யென்னமோ குடுத்து அனுப்பினதாயும் கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் ஆலம்பிரவை (ஆலம்பறை) பேரிலேயும் யிங்கிரேசுக்காரர் சண்டைக்கு வருகிறதாக முசே லெறி கோவர்ணதோருக்கு யெழுதிவந்ததாய்ச் சேதி கேழ்க்கப்பட்டுது.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 7; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 29; செவ்வாய்வாரம்*

இத்தனாள் பெரியபிள்ளை[1] அவர்கள் திதியானபடியினாலே வெளியே போகயில்லை. யிந்தனாள் கேழ்வியான சேதி, வந்தவாசிக்கு நேத்து ராத்திரியே மேட்டு மேலே யிறங்கி யிருந்த தண்டிலே பாதியும் முசே சொபினேயும் போனதாய்க் கேழ்வியாச்சுது.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 9; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 31; குருவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே முசே தெவோவும் மொன்சியோர் கோவர்ணதோரும் பேசி யிருந்து கோவர்ணதோர் யிருக்கிற காம்பிராவே நுழைஞ்சார்கள். அப்பால் நான் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கே வந்தேன்.

ஒன்பது மணிக்கு முசே தெவோவுடனே பேசினவர் பனிரெண்டு மணி அடிச்சும் பேசினார்களென்றும், வந்தவாசிக் கோட்டையின் பேரிலே யிங்கிலீசுக்காரர் மோர்சா போட்டு சண்டை பண்ணினதிலே, அந்தப் படைக்குக் கொம்மாந்தாமாயி வந்த இங்கிரேசிக்காரன் செத்துப்போயி விட்டானென்றும், பின்னையும் செனங்கள் சேதப்பட்டதன் பேரிலே வாங்கிப் போய் விட்டார்களென்றும் இந்த சந்தோஷக் கபுறு அய்யண்ண சாஸ்திரி மனுஷர் வந்து சவரிராயனுக்குச் சொன்னதாயும், அவர்களை அழைத்துக் கொண்டு பனிரெண்டு மணி வேளைக்கி முசே தெவோவும் தொரை அண்டையிலே யிருக்கிற(போது) கபுறு சொல்லிப் போட்டு அவன் வீட்டுக்குப் போனானென்றும், முத்துமல்லா ரெட்டியும் அய்யண்ண சாஸ்திரி வக்கீல் புசங்கராயனும் அல்லி நக்கி அண்டைக்கு வந்து சந்தோஷக் கபுறு சொன்னவுடனே, அல்லி நக்கி(யும்) தக்கே சாயபு மகனும் ரசா சாயபும் முத்துமல்லா ரெட்டிக்குப் பதினஞ்சு ரூபா பெறுமான சாலுவை ஒன்றும், புசங்க ராயனுக்கு ரெண்டு விராகன் சீட்டிப் பாகையும்,

---

[1] நம் பிள்ளையின் தகப்பனார்.

வந்த மூணு பேருக்கும் பதினஞ்சு ரூபாயும் குடுத்து, முசே தெவோவுக்கு சலாம் சொல்லச் சொல்லி அனுப்பினதாயும் சேதி சொன்னார்கள். முசே சொபினே (உடனே) நம்முடைய அறமாது (துருப்புகள்) போறவர்களை காஞ்சீபுரம் மட்டுக்கும் கட்டச் சொல்லி யெழுதி யனுப்பினதாயும் அவர்களும் நாளை வந்தவாசி போய்ச் சேருவார்களென்றும் சொன்னார்கள்.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 10; ஈசுவர வருசம், வையாசி மாசம், தேதி 32; சுக்கிறவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : முசே சொபினேயை வந்தவாசிக்கு அப்பால் யிறங்கி யிருக்கிற யிங்கிரேசுக்காரருடைய பவுன்சு அங்கே யிருந்தால் போகச் சொல்லியும், அவர்கள் அப்பால் போய் விட்டால் கருங்குழிப்பாளையம் கோட்டையை வாங்கச் சொல்லியும் முசே லெறி அனுப்பிவிச்சதாய்ச் சேதி கேழ்விப்பட்டது.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 11; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 1; சனிவாரம்*

இத்தனாள் காலமே யேழரை மணிக்கு முசே லெகிரி (Le Gris), முசே ஷர்பெந்தியோர், முசே சொல்மினியாக்கு வகையரா நாலஞ்சு பேர் வந்தார்கள். அப்பால் பங்காளத்து கோன்சேலியேர் முசே கொலே (Colle) யென்கிறவன் வந்தான். அப்பால் முசே தெவோவும் சவரிராயனும் நூறு யிரநூறு பேர் சிப்பாயிகளை அழைத்துக்கொண்டு துப்பாக்கி வாங்கிக் குடுக்க வந்து கண்டு பேசினார்கள். பெண்ணாத்தூர் சாமாராயன் அவன் யெம்மாத்திரமோ செனங்களை அழைச்சுக் கொண்டு வந்து காண்பிச்சுப் பேசினான். அப்பால் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன். யினிமேல் விந்தைகள் கேழ்விப்பட்டால் அறிஞ்சு யெழுத வேண்டியது.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 14; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 4; செவ்வாய்*

இத்தனாள் காலமே கேட்ட சேதியை யெழுதிவைத்தேன். சோசியர் இந்த ஆனி மாசம் 4 தேதி ராத்திரி (முதல்) கேத்தி பேதிக்குற படியினாலே[1] அஞ்சாந்தேதி கோன்சேல் கூடுவார்கள், அதிலே நம்முடய பிரஸ்தாபம் நடக்குமென்று சொல்லியிருந்தபடிக்கு கோன்சேல்[2] கூடினார்கள். என் பிரசங்கம் நடந்ததும் நடவாததும் அறியவேண்டியது.

கோன்சேல் யெது நிமித்தியம் கூடினார்களோ அதுவும் அறியவேண்டியது. ஆனாலிது முதல் கொண்டு யெனக்கு சுபமாய்

---

[1] கிரகங்கள் மாறுகிறபடியினாலே.

[2] 5ஆம் தேதி கவுன்சில் கூடியது என்று உள்ளதால், இக்குறிப்பு அன்று எழுதப்பட்டதாக இருக்கலாம். ஆங்கிலத்தில் 15ஆம் தேதி கூடும் என்றுள்ளது.

நடக்கவேணுமென்று சோசியர் சொன்னது மாத்திரம் அல்ல, யெனக்கு முன் நடந்தபடிக்கு அனுபவம் (அனுபவப்படி) சரிப்பட வேணும். யென்ன நடக்கப்போகுதோ அது சித்தமாய் நடந்து தீரும்.

இங்கிரேசுக்காரருக்கும் பிரான்சுக்காரருக்கும் சண்டை வந்ததைப் பார்த்தாயா யென்று (துரை) சொன்னதுக்கு, அவர்கள் முன் சண்டையிலே நம்முட கப்பலை முன்னுதாய்ப் பிடிச்சார்கள். அதினாலே சென்னப்பட்டணம் போய்விட்டது. அந்தப்படிக்கு சோசியாள் சொல்லியிருந்ததை முசே துப்பிளேயிக்சுடனே சொல்லியிருந்தேன். யிப்போ அவர்கள் பங்காளம் பிடிச்சபடியினாலே யினிமேல் யிங்கிரேசுக்காரருடைய பெத்திரிகள் யெல்லாம் பிரான்சுக்காரர் வசம் ஆகும் யென்று யிப்போ சோசியாள் சொல்லியிருக்கிறபடிக்கி நடந்து தீருமென்று சொல்லிப்போட்டு, அனுப்பிவிச்சுக் கொண்டு சவரிராயப் பிள்ளை வீட்டுக்குக் கால் நாட்டுகிறதுக்குப் போயங்கே யிருந்து வீட்டுக்கு வந்தோம்.

### *1757 வருசம், சூன் மாசம், தேதி 16; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 6; குருவாரம்*

அங்கே யிரண்டொரு வெள்ளைக்காரர் சொன்னது : முசே சொபினேவுக்கும் யிவருக்கும் (தொத்தேலுக்கும்) பேச்சு நடந்தது. அந்தச் சேதி கோவர்ணதோருக்கு யெழுதி வந்து, அவர் (தொத்தேலை) வரச் சொல்லி யெழுதி (அவர்) வந்தாரென்றும், முசே சொபினே உத்திரம நெல்லூரண்டையிலே யிருக்கிறாரென்று இங்கிரேசுக்காரர்களும் அங்கங்கே பவுன்சு (சேர்க்கிறார்கள் என்றும்), மமுதல்லி கான் ஆயிரத்தன்னூறு பாறு மட்டும் வைத்(திருக்கா) னென்றும், சிப்பாய்களும் (சேர்கிறானென்றும்) ... சேதி கேழ்க்கப்பட்டுது. யெப்படியும் ஆவணி மாசம் பிறட்டாசி மாசத்தையிலே (ஆகஸ்ட் – அக்டோபர்) யிங்கிரேசுக்காரர்களும் மமுதல்லிக் கானும் அடிபட்டுப் போவார்கள். அதுக்குள்ளாக தலை விசுறுவார்கள் (திமிராய் அலைவார்கள்). மனம் பொறுத்து அடிக்க வேண்டியது.

### *1757 வருசம், சூன் மாசம், தேதி 17; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 7; சுக்கிரவாரம்*

இத்தனாள் கோவர்ணதோர் மாளிகையிலேயும் கோட்டையிலேயும் வராமலிருக்கிறவன் வெள்ளைக்காரருக்குள்ளே முசே தொத்தேல் ஒருத்தன் (தான்). யிவன் திரிச்சிராப்பள்ளிக்குப் போனவிடத்திலே துரோகமாய் திருச்சிராப்பள்ளிக் கோட்டை லக்கே யேறி வாங்காமல் போனாலும், திருச்சினாப்பள்ளிக் கோட்டை கொம்மாந்தாம் மேஸ்தர் கலியோ (Mr. Cailland) யென்கிறவன் யிவர்கள் பார்த்திருக்க, இருநூறு

முன்னூறு சிப்பாயிகளும் நூறு வெள்ளைக்காரருடனே கோட்டையிலே நுழைஞ்சதுக்கு சும்மாயிருந்தார்களென்று (கோபித்து) கோவர்னதோர் முசே ஷெறி கோட்டைக்கும் நம்மண்டைக்கும் வரத்தேவையில்லை யென்று (அவரிடம்) சொன்னாரென்று வெள்ளைக்காரர்கள் சொன்னார்கள்.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 18; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 8; சனிவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி : பதினேழு கப்பல் வருகிறதாயும் அதிலே சீனாவிலே[1] தொரைத்தனம் பண்ணினவன் யிவ்விடத்துக்கு தொரைத்தனமாய் வருகுறாரென்றும் யிந்தப்படிக்கி சூரத்திலே யிருந்து வெள்ளைக்காரருக்கு யெழுதி வந்ததாய் ஒரு வெள்ளைக்காரன் பேர் விளங்கன் சொன்னதை எழுதிவைத்தேன்.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 19; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 9; ஆதிவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி : யிவ்விடத்திலே யிருந்து முசே சொபினே தண்டு காஞ்சிபுரத்துக்குப் போயி, அவ்விடத்திலே நல்ல கொள்ளையிட்டுக் கொண்டு உத்திரமநெல்லூர் வந்து சேர்ந்ததாய் கேழ்வியாச்சுது.

*1757 வருசம், சூன் மாசம், தேதி 24; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 14; சுக்கிரவாரம்*

இத்தனாள் காலமே வந்தவாசி சமீபத்திலே யிறங்கியிருக்கிற முசே சொபினே தக்கே சாயபு தனக்கு விசேஷிச்சு நன்கொடை குடுக்கயில்லை (என்று) பீறங்கிகள் வந்தவாசிக் கோட்டையின் பேரிலே யெடுத்துக் கட்டி சுட்டாப் போலேயும் அதிலே சின்ன பொம்பு குண்டு கோட்டையிலே விழுந்தாப் போலேயும், அதின் பேரிலே கோட்டையிலே யிருக்கிறவர்கள் யெல்லாரும் காபிராப்பட்டு, அவர்களும் பீறங்கிகளை பிரான்சு பவுன்சின் பேரிலே யெடுத்துக் கட்டினாப் போலேயும், அதிலே அய்யண்ண சாஸ்திரி ஆயிரம் ரூபா தக்கா சாயபு (வைக்) குடுக்கச் சொன்னானென்று கொண்டு வந்து குடுத்து சமாதானம் பண்ணினானென்று நேத்து முசே தெவோவுக்கு அய்யண்ண சாஸ்திரி யெழுதி அனுப்பினானென்றும், இங்கிரேசுக்காரர் பவுன்சு சேகரிக்குறார்களென்றும் யெழுதி அனுப்பினானென்றும் சொன்னார்கள்.

---

[1] சான்டனில் ஒரு பிரெஞ்சுக் கொட்டடி இருந்தது.

***1757 வருசம், சூன் மாசம், தேதி 25; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 15; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசே சொபினே அறமாதிலே (army) யிருந்து நூறு சொலுதாதுகள் ஓடிப்போய் விட்டார்களென்று சொன்னார்கள். மெய்யோ பொய்யோ அறிய வேண்டியது. ஆனாலும் வெள்ளைக்காரர் ஒப்பிசியால்மார் வாயினாலே கேழ்க்கப்பட்ட படியினாலே காகிதத்திலே யெழுதி வைத்தேன். யித்தனாள் முசே சொபினே அண்டையிலிருந்து சாறணி சுவார் (குதிரைச் சாரணர்) வந்தபடியினாலே யிங்கிரேசுக்காரர் பவுன்சு வாங்கிப் போனதும், மறுபடி (பலம்) சேகரிச்சு (திரும்ப வருகிற சேதி கிடைத்ததால்) சாறணி சுவார் அவசரமாய்க் காகிதம் கொண்டு வாறேன் என்று (சொன்னானாம்). இதனால் தான் துரை யவர்கள் விசாரத்தை அடைஞ்சு யிருக்கிறாரென்று யோசனை பண்ண வேண்டி(யிருக்குது). கிறமேணா (போகப்போக) அறியலாம்.[1]

---

[1] இதன் பின் ஆங்கிலப்பதிப்பில் 1576 செப்டம்பர் 7 அன்று பிள்ளை அவர்கள் முசே போயலோவுக்கு வரைந்த பிரெஞ்சுக் கடிதம் இணைப்பாகத் தரப்பட்டுள்ளது. அதில் தம்மால் கொம்மந்தாம்களின் தொல்லையால் குத்தகைப் பணம் வசூலிக்கப்படாமல் போனதையும், ஆறு பிரெஞ்சுக் கொம்மாந்தாம்கள் எவ்வளவு தொகையை ஆதாயமாக அடைந்தனர் என்ற விவரங்களையும், ஆளுநர் லெறியிடம் இவற்றை யெல்லாம் தாம் பலமுறை எடுத்துக் கூறியும் பலனில்லை என்பதையும் பிள்ளை ஒரு மனு போல விளக்குகிறார்.

